# சங்க இலக்கியத்தில் புராணக்கூறுகள்

முனைவர் பட்டத்திற்காக பெரியார் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் ஆய்வேடு

**ஆய்வாளர்**

**த.பிரேமா,எம்.ஏ.,பி.எட்.,**

முனைவர்பட்ட ஆய்வாளர் (பகுதி நேரம்),

தமிழ்த்துறை,

அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி),

சேலம் - 636 007.

**நெறியாளர்**

**முனைவர் இரா.அச்சுதன்,எம்.ஏ.,எம்.ஃ.பில்.,பிஎச்.டி.,**

உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,

அரசு கலைக்கல்லூரி(தன்னாட்சி),

சேலம் - 636 007




**தமிழ்த்துறை**

**அரசு கலைக்கல்லூரி(தன்னாட்சி),**

**சேலம் - 636 007.**

**ஆகஸ்ட் – 2020**

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் இரா.அச்சுதன்,** எம்.ஏ., எம்.ஃ.பில்., பிஎச்.டி.,
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
அரசு கலைக்கல்லூரி(தன்னாட்சி),
சேலம் - 636 007.

**"சங்க இலக்கியத்தில் புராணக்கூறுகள்"** என்னும் தலைப்பு கொண்ட இவ்வாய்வேடு, அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி), சேலம்-7, தமிழ்த்துறையில் முனைவர் பட்டம் (பிஎச்.டி) பெறுவதற்காக **திருமதி த.பிரேமா** என்பவரால் என் மேற்பார்வையின் கீழ் 2016-2020 ஆம் ஆண்டுகளில் பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வு நிகழ்த்தி எழுதப் பெற்றதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்தப்பட்டத்திற்கோ, ஆய்விற்கோ, பயன்படுத்தப்படவில்லை என்றும் இவரின் சொந்த முயற்சியால் உருவானது என்றும் உறுதியளிக்கிறேன்.

**இடம் : சேலம்-7** **நெறியாளர் கையொப்பம்**

**நாள் :**

**(இரா.அச்சுதன்)**

**தமிழ்த்துறைத் தலைவர்**

# ஆய்வாளர் உறுதிமொழி

**த.பிரேமா,எம்.ஏ.,பி.எட்.,**
முனைவர்பட்ட ஆய்வாளர் (பகுதி நேரம்),
தமிழ்த்துறை,
அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி),
சேலம் - 636 007.

**"சங்க இலக்கியத்தில் புராணக்கூறுகள்"** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக (பிஎச்.டி) அரசு கலைக்கல்லூரி(தன்னாட்சி), சேலம்-7, தமிழ் உதவிப்பேராசிரியர் **முனைவர் இரா.அச்சுதன்** அவர்களின் மேற்பார்வையில் 2016-2020 ஆம் ஆண்டுகளில் நிகழ்த்தப்பட்ட இந்த ஆய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானதாகும். இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என உறுதியளிக்கிறேன்.

**இடம் : சேலம்-7** **ஆய்வாளர் கையொப்பம்**

**நாள் :**

**(த.பிரேமா)**

# நன்றியுரை

**“சங்க இலக்கியத்தில் புராணக்கூறுகள்”** என்னும் தலைப்பில் பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வினைச் செய்ய எனக்கு அனுமதி அளித்த பெரியார் பல்கலைக் கழகத்திற்கும், சேலம்-7, அரசு கலைக் கல்லூரி (தன்னாட்சி), **முதல்வர் எஸ்.கலைச்செல்வன்** ஐயா அவர்களுக்கும், தமிழ்த்துறைத் தலைவர் **இரா.சாந்தி** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த ஆய்வேடு செம்மையுற பல வகையிலும் உறுதுணையாக நின்று ஊக்கமளித்து என்னை நெறிப்படுத்திய எனது நெறியாளர் **முனைவர்.இரா.அச்சுதன்** அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னுடைய முனைவர் பட்ட ஆய்வு சிறப்புற அமைவதற்கு உதவிய எனது தோழியான **மு.லதா** அவர்களுக்கும், எனது கணவர் **எ.செல்வராஜ்,** மகன் **எஸ்.தினேஷ்குமார்,** மகள் **எஸ்.திவ்யபிரியா** அவர்களுக்கும், என்னுடன் பிறந்த சகோதரிகளான **டி.இந்திராணி, டி.யசோதா** ஆகியவர்களுக்கும் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தேவையான நூல்களை வழங்கிய தமிழ்த்துறை நூலகப் பொறுப்பாளர் **இரா.அச்சுதன்** அவர்களுக்கும், **கல்லூரி நூலகத்தாருக்கும், சேலம் மாவட்ட மைய நூலகத்தார்க்கும், தஞ்சை தமிழ் பல்கலைக்கழக நூலகத்திற்கும், திருச்சி ஜமால் கல்லூரி நூலகத்தார்க்கும்** எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**(த.பிரேமா)**

Urkund

## Document Information

| | |
|---|---|
| **Analyzed document** | T.Prema Tamil.pdf (D75554325) |
| **Submitted** | 6/24/2020 12:42:00 PM |
| **Submitted by** | C Murugan |
| **Submitter email** | muruganchinnaraj@gmail.com |
| **Similarity** | 0% |
| **Analysis address** | muruganchinnaraj.periyar@analysis.urkund.com |

## Sources included in the report

| | | |
|---|---|---|
| W | URL: https://alagappauniversity.ac.in/modules/DDE/uploads/books/sem-3/B.litt/10731-samy ...<br>Fetched: 6/24/2020 12:45:00 PM | 1 |
| W | URL: https://pdfslide.net/documents/nkyepiy-kjyhk-mzl-uzl-kjpgngz-tpdhtpil-1-thojj-jkpo ...<br>Fetched: 6/24/2020 12:45:00 PM | 3 |
| W | URL: https://sites.google.com/site/quraninkural/home-1<br>Fetched: 6/24/2020 12:45:00 PM | 1 |

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| அகத் | - அகத்திணையியல் |
| அகம் | - அகநானூறு |
| இ.நா, | - இனியவை நாற்பது |
| ஐங் | - ஐங்குறுநூறு |
| கலி | - கலித்தொகை |
| குறுந் | - குறுந்தொகை |
| குறள் | - திருக்குறள் |
| சி.பா | - சிலப்பதிகாரம் |
| தொல் | - தொல்காப்பியம் |
| நற் | - நற்றிணை |
| நெ.வா. | - நெடுநல்வாடை |
| பரி | - பரிபாடல் |
| ப | - பக்கம் |
| பா | - பக்கங்கள் |
| புறம் | - புறநானூறு |
| புறத் | - புறத்திணையியல் |
| பெ.பா. | - பெரும்பாணாற்றுப்படை |
| பொரு | - பொருநறாற்றுப்படை |
| மலை.ப. | - மலைபடுகடாம் |
| மது.கா | - மதுரைக்காஞ்சி |
| ம.மேகலை | - மணிமேகலை |
| மு.பாட்டு | - முல்லைப்பாட்டு |

# பொருளடக்கம்

# முன்னுரை

பண்டைய மக்களின் வாழ்க்கைமுறையினையும் பண்பாட்டுக் கூறுகளையும், நாகரிக மேம்பாட்டினையும் அறிவதற்குப் பெரிதும் துணையாக நிற்பன சங்க இலக்கியங்கள் எனலாம். இதனை "சங்கப்பாடல் தமிழ் இலக்கியப் பேழை அழியாத கற்பனைக் கருவூலம். கருத்து வளமும். கற்பனைச் சிறப்பும் பொருந்திய அழகானப் பாடல்கள் பலவற்றைப் பெற்று மிளிர்வன. ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னே தமிழர் வாழ்ந்த வாழ்க்கையின் பெற்றினை விளக்கி நிற்பன வாழையடி வாழையாகத் தமிழ் மக்கள் பலமுறைப் பயின்று படித்துப் பயன்பெறும் வற்றாத செல்வம்" என்கிறார் கே.கே.பிள்ளை.

தமிழர் தம் வாழ்க்கை முறையினை அகவாழ்வு என்றும். புறவாழ்வு என்றும் பகுத்துக் கொண்டனர். இதில் "அகம்" சார்ந்த பாடல்கள் உணர்வுக்கும். கற்பனைக்கும். "புறம்" சார்ந்த பாடல்கள் உண்மைக்கும், காட்சிக்கும் வடிவம் தந்துள்ளன. சங்கப்பாடல்களில் பெரும் விருப்பம் கொண்ட மு.வ.அவர்கள் "பழந்தமிழிலக்கியம் எனப்படும் சங்க நூல்கள் தமிழகத்திற்கும் தமிழர்களுக்கும் பெருமை தருவனவாகும். கற்போர்க்கு என்றும் கலை விருந்தும் புத்துணர்ச்சியும் நல்குவனவாக உள்ளன" என்கிறார். எனவே இக்காலத்தை "தமிழ் இலக்கிய வரலாற்றின் பொற்காலம்" என்பர்.

புராணம் என்ற சொல்லுக்கு "மிகப்பழமையானது" என்பது பொருள். வேதங்களில் உள்ள கருத்துக்களை உணர்த்துவதால் "புராணம்" என்பர். புராணம் என்ற வடசொல்லுக்கு தமிழாக்கமாக. இன்று "தொன்மம்" என்ற சொல் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. முப்புராணங்கள். பதினெண் புராணங்கள் பற்றிச் சிறப்பாக கூறுகின்றன.

இதிகாசம் என்பதற்கு "உள்ளதை உள்ளபடி கூறுவது" என்பதே பொருள். அதாவது, உண்மையாக நடந்த கதை என்பதாக அமைவதே இதிகாசங்களாகும். இதிகாசம் எனப்படுவது கடவுள், கடவுள் அவதாரம் அல்லது பெரும் வீரர்கள் நிகழ்த்திய அரும்பெரும் வீரச்செயல்களையும்

நீதிநெறிகளையும் விவரிக்கும் புராண வரலாறு என்று பொருள் கொள்வர். இதிகாசங்களாக இராமாயணமும், மகாபாரதமும் இடம் பெறுகின்றன.

தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய நூல்கள் சங்க காலத்தில் தோன்றியவை எனக் கருதப்பட்டாலும், எட்டுத்தொகையும் பத்துப்பாட்டுமாகிய தொகுப்பு நூல்களையே "சங்க இலக்கியங்கள்" என அழைக்கின்றனர். பாடல்களைப் பகுத்து தொகுப்பதற்கு அடியளவு. யாப்பு, தொழில். எண்ணிக்கை ஆகியவை அடிப்படையாகக் கொள்ளப்பட்டுள்ளன. அவ்வாறு தொகுக்கப்பட்ட இதனை பதினெண்மேற்கணக்கு நூல்கள் என்றும் அழைப்பர். இவற்றில் புராண விளக்கம். இதிகாசம் பற்றிய விளக்கம் இவை இலக்கியங்களில் பயின்றுவரும் பாங்கு ஆகியனவற்றை ஆராய்வதோடு புராண இதிகாச கருத்துகளையும் தொகுத்து ஆராய்வதாக இவ்வாய்வு அமைகிறது.

## ஆய்வுப்பொருள்

சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள புராண இதிகாசக் கருத்துக்கள் குறித்த உண்மைகளையும் அவை பண்டைய மக்களிடம் பண்பாட்டுக் கூறாய் திகழ்வதையும் அதில் உள்ள கருத்துக்களையும் இச்சமுகத்திற்கு எடுத்துக் காட்டுவது ஆய்வின் பொருளாக அமைகிறது.

## ஆய்வு தலைப்பு

**"சங்க இலக்கியத்தில் புராணக்கூறுகள்"** என்பது ஆய்வின் தலைப்பாக அமைகிறது.

## ஆய்வு நோக்கம்

1. பண்டைய கால மக்கள் கடைபிடித்து வரும் புராணங்களில் அவர்கள் வணங்கும் தெய்வங்களின் நிலையினை விளக்குவது.
2. சங்க இலக்கியத்தில் காணப்படும் புராண இதிகாசக் கருத்துக்களின் வாயிலாக இன்றைய மக்களுக்கு அறநெறிகளை வலியுறுத்துவதே ஆய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியத்தில், எட்டுத்தொகைநூல்கள் மட்டும் ஆய்வு எல்லையாக அமைகிறது.

## முதன்மை ஆதாரம்

சங்க இலக்கியமான எட்டுத்தொகையும். பத்துப்பாட்டும். முதன்மை ஆதாரமாக அமைகின்றன.

## துணைமை ஆதாரம்

இலக்கண இலக்கியங்கள், ஆய்வுக்குத் தொடர்பான பிற நூல்கள், ஆய்வேடுகள் கட்டுரைகள் ஆகியன துணைமை ஆதாரங்களாக அமைகின்றன.

### ஆய்வுக் கருதுகோள்

சங்க இலக்கியத்தின் வாயிலாக புராண இதிகாசக் கருத்துக்களை தொகுப்பது. இன்றைய சூழலில் புராண இதிகாசக் கருத்துக்களின் வாயிலாக மக்கள் தீய எண்ணங்களிலிருந்து விடுபடவும், தவறு செய்யாமல் இருக்கவும் வலியுறுத்துவது இவ்வாய்வின் கருதுகோள் ஆகும்.

## ஆய்வு முன்னோடிகள்

1. சங்க இலக்கியத்தில் சமயம் -சாமி சிதம்பரனார்.
2. சங்க இலக்கியத்தில் கடவுள் கோட்பாடு – சு.சுமதி,
3. தேவாரத்தில் தொன்மம் - வே.சேதுராமன் போன்ற நூல்களும் ஆய்வேடுகளும் இவ்வாய்வின் முன்னோடிகளாக உள்ளன.

## ஆய்வு அணுகுமுறை

இந்த ஆய்வு 1. தொகுப்பு முறை, 2.பகுப்பு முறை. 3.விளக்கமுறை. 4.ஒப்பீட்டு முறை ஆய்வாக ஆராயப்பட்டு உள்ளது.

## இயல் பகுப்பு

**“சங்க இலக்கியத்தில் புராணக்கூறுகள்”** என்னும் தலைப்பில் அமைந்த இந்த ஆய்வேடு முன்னுரை முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன.

**இயல் -1 – சங்க இலக்கியம் - தொகுப்பும் புராண விளக்கமும்**

**இயல் - 2 – அக இலக்கியங்களில் புராண இதிகாசக் கருத்துக்கள்**

**இயல் - 3 – புற இலக்கியங்களில் புராண இதிகாசக் கருத்துக்கள்**

**இயல் - 4 – சங்க இலக்கியத்தில் கடவுள்கள்**

மேற்கண்டவாறு அமைந்துள்ள ஒவ்வொரு இயலிலும் கண்டறிந்த ஆய்வு முடிவுகளை தொகுத்துத் தொகுப்புரையாகத் தரப்பட்டுள்ளன. முடிவில் முடிவுரை, துணைநூற்பட்டியல் ஆகியவை இடம் பெற்றுள்ளன.

## இயல் -1 சங்க இலக்கியம் - தொகுப்பும் புராண விளக்கமும்

சங்க இலக்கியங்கள் தனியொருவர் முயற்சியினால் அல்லாமல் பல சான்றோர்களின் முயற்சியால் தொகுக்கப்பட்டுள்ளது. காலத்தால் மிகப் பழைமையானது சங்க இலக்கியம். இவை அகம். புறம். எனும் இருபெரும் பிரிவுகள் சார்ந்த பாடல்கள் இடம் பெற்றுள்ளன. ஆசிரியப்பா, கலிப்பா என்னும் “பா” வடிவங்களைக் கொண்டு சிறப்புற்று விளங்குகிறது.

தலைவன் தலைவியை சந்திக்கப் புன்னை மர நிழலிலிருந்து பேசலாம் எனும்போது தாயானவள் உன்னைவிட உனது தங்கையானவள் நல்லவள் என புன்னை மரத்தை கண்டு வெட்கப்பட்டுக் கூறும்போது இயற்கையையும் உயிருள்ளதாகக் கருதிய உணர்வினையும், மெய்ப்பாட்டு உணர்வினையும் நற்றிணைப் பாடல் உணர்த்துகிறது. “நும்மினும் சிறந்தது நுவ்வை ஆகுமென்று அன்னை கூறினள். புன்னையது சிறப்பே” (நற்-பா-172)

குறுந்தொகையில் “செம்புலப்பெயல்நீர் போல”(குறுந்.பா.40) என்றுகூறும் போது உறவினரல்லாத ஓர் ஆணும் பெண்ணும் அன்பினால் ஒன்றுபடுதலை செம்மண்ணில் பெய்த மழை இரண்டறக் கலந்துள்ளதை உவமையாகக் கூறப்பட்டுள்ளதை அறியலாம்

அகநானூற்றில் இதிகாசச் செய்திகளாக இராமன் சீதையை இலங்கையிலிருந்து மீட்டு வரும்போது வானர சேனைகளுடன் தனுஷ்கோடியில் ஓர் பெரிய ஆலமரத்தின் கீழ் அமர்ந்து ஆலோசனை நடத்தும் போது அம்மரக்கிளையில் தங்கி இருந்த பறவை இனங்கள் ஒன்றோடொன்று

சண்டையிட்டுக் கூச்சலிடுவது மந்திரலோசனைக்குத் தடை ஏற்பட்டதாக இராமன் தனது கையினை குவித்து அப்பறவைகளின் ஒலியினை அடக்கியதை,

"வெவ்வெல் கவுரியர் தொன்முதுகோடி
முழக்கு இரும்பௌவம் இரங்கு முன்துறை
வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த
பலவீழ் ஆலம் போல (அகம் பாடல் 70:13:16)

என்று உவமைநயம்பட கூறப்பட்டுள்ளன.

விலங்குகளின் வாழ்வியல் நுட்பங்களை "தன்பார்ப்புத் தின்னும் அன்பு இல் முதலை" (ஐங்குறு மருத பா-41) என்று முதலைகள் தன் குட்டிகளைத் தானே தின்னும் நிலையினையும் காதல் வாழ்வின் நுட்பங்களை மிக அழகாக ஓர் ஆடையைப் பகுத்து உடுத்தி வாழும் கொடிய வறுமை நிலையிலும் மனம் ஒன்றி வாழும் வாழ்க்கையையும் "ஒன்றன் கூறாடை உடுப்பவராயினும் ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை" (கலி.பா.187) என சங்ககால மக்களின் வாழ்வின் நுட்பங்களை வெளிப்படுத்துகிறது.

புறநானூறு தமிழரின் பொற்கால நாகரிகத்தை அறிந்து கொள்ளும் பெட்டகமாக உள்ளது. மூவேந்தர்கள், கடையெழு வள்ளல்களின் போர் செய்திகள். வெற்றிகள், கொடைத்தன்மை ஆகியவற்றை விளக்குகிறது.

பரிபாடல் அகமும் புறமும் சார்ந்தவை. இந்நூலில் முருகன். திருமால். வையை பற்றிய பாடல்கள் மிகச்சிறப்பு வாய்ந்ததாக உள்ளது. பரிபாடலில் இடம் பெற்றுள்ள பாடல் ஒன்று பொருளையோ. போகத்தையோ கேட்காமல் அன்பையும். அருளையும் அறனையும் கடவுளிடம் வேண்டுவதை "யாவும் இரப்பவை பொன்னும் பொருளும் போகமும் அல்ல, நின்பால் அன்பும், அறனும், அருளும் மூன்றும் உருள் இணர்க் கடம்பின் ஒலிதாராயே" (பரி-57) என்கிறது.

பத்துப்பாட்டில் ஆற்றுப்படை நூல்கள் மிகச்சிறப்பு வாய்ந்ததாக உள்ளது. பொருளை எவரிடத்தில் வேண்டுமானாலும் பெறமுடியும். ஆனால் அருள் உள்ளம் என்பது கடவுளால் மட்டுமே அருளப்படுவது அதை பெறுவதே

இன்மைக்கு மட்டுமன்றி மறுமை வாழ்வுக்கும் சிறந்தது என்ற உயர்ந்த நோக்கத்துடன் கூறுவதாக திருமுருகாற்றுப்படை அமைகிறது.

பத்துப்பாட்டில் பட்டினப்பாலையும், மதுரைக்காஞ்சியும் வஞ்சியடி கலந்த ஆசிரியப்பா, மற்ற எட்டும் ஆசிரியப்பாவினால் ஆனது. இதில் அகநூலாக இருந்தும் புறசெய்திகளை மிகுதியாகக் கூறும் நூல் பட்டினப்பாலை என அறியலாம்.

குறிஞ்சிப்பாட்டில் ஆரிய அரசன் பிரகத்தனுக்கு தமிழ் கற்பிப்பதற்கு கபிலர் பாடியது தமிழ் அறிவித்தல் என்பது தமிழர்க்கே உரிய அகத்திணைப் பண்பாட்டை உணர்த்துவதாகிறது.

முல்லைப்பாட்டு பத்துப்பாட்டு நூல்களில் மிகச் சிறியது. இது அடியளவில் மிகச்சிறியதே தவிர மிக நுட்பமானது. “மன்னவன்” ஒருகை பள்ளி ஒற்றி ஒருகை முடியொடு கடகம் சேர்த்திநெடிது நினைந்து” மு.பா(75-76) என இருக்கும் காட்சி அவனுடைய கடமையுணர்ச்சியைச் சுட்டுகிறது.

பெரும்பாணாற்றுப் படையில் எயினர்கள் வாழும் இயல்பை ஈத்திலையும் ஊகம் புல்லும் வேய்ந்த எய்ப்புறக்குரம்பை (பெரும்பா 88) என்றும், உழவர் தம் குடியிருப்புகளை ‘கருவை வேய்ந்த கவின்குடிச்சீறூர் (191) எனவும், ‘புதுவை வேய்ந்த கவின் குடில் முன்றில் (225) எனவும், வைக்கோல் வேய்ந்த தன்மையைச் சுட்டிக்காட்டுகிறார் உருத்திரங் கண்ணனார். இதற்கு “பாணாறு” என்ற பெயரும் உண்டு.

எனவே எட்டுத்தொகை, பத்துப் பாட்டின் நிலைபாடுகள் இவ்வியலில் தொகுத்தும் பகுத்தும் விளக்கப்பட்டுள்ளன.

## இயல் 2: அக இலக்கியங்களில் புராண இதிகாச கருத்துக்கள்

கலித்தொகை அகப்பொருள் பற்றிகூறுவதற்கு ஏற்ற நூலாக அமைகிறது. தமிழரது மணமுறை, கடவுள் வழிபாட்டு முறைகள், இல்லற இன்பம். ஏறுதழுவுதல், தைந்நீராடல் என்று தமிழர்க்கே உரிய வரலாறு சமூகச் செய்திகளைத் தக்க ஆதாரங்களோடு இவ்வியலில் பகுத்து ஆராயப்பட்டு உள்ளன.

புராண மரபு கதைகள் பிற நூல்களை விட மிகுதியாகக் கலித்தொகையில் காணமுடிகிறது. கலித்தொகையும் பரிபாடலும் சங்கஇலக்கியத்தில் காலத்தால் பிற்பட்டதெனக் கருத முடிகிறது. சங்ககாலத்தில் ஆடவர் முன்னிலையில் பெண்கள் பேசக்கூடாது என்ற மரபை மாற்றி கலித்தொகைப் பாடல்களில் தலைவனொடு சொல்லெதிர் சாற்றும். அளவிற்கு உயர்ந்த தலைவியாக இந்நூலில் அறிய முடிகிறது. கலிப்பாவை "இசைப்பாட்டு" என்பார் மு.சண்முகப் பிள்ளை.

கலித்தொகை முல்லைக்கலியில் காளையின் கூரிய கொம்பினால் ஆயனை சாகும் அளவுக்கு குத்திகுலைக்கும் காட்சியானது திரௌபதி கூந்தலைப்பற்றி இழுத்த துச்சாதனனின் நெஞ்சைப் பிளந்து தன் பழியை தீர்த்த வீமனைப் போல

"பொதுவனை சாக்குத்தி கோட்டிடை

கொண்டு குலைப்பதன் தோற்றம் காண்" (மு.க:101:18-20) என்கிறது.

மேலும் உருத்திரனின் வீரம், (மு.க:101:24-26) துரோணரைக் கொன்ற சிகண்டிகை (மு.க.101:27-32), கண்ணன் கம்சனை அழித்தல் (மு.க:103:50-55) போன்ற புராணக் கருத்துக்களைப் பற்றியும் இவ்வியலில் ஆராய்ந்து கூறப்பட்டுள்ளது.

பாலைக்கலியில் அரக்கு மாளிகைக்கு தீ இட்டது, துரியோதனன் அரக்கினால் பொய்யாக ஓர் மாளிகை அமைத்து அம்மாளிகைக்குப் பாண்டவர்களை அழைத்து இருக்கச் செய்தது பாண்டவர்கள் இரவில் தங்கி உறங்கி கொண்டு இருக்கும் நேரத்தில் அவன் அந்த அரக்கு மாளிகைக்கு தீ இட்டது போன்ற புராணச் செய்திகள் பகுத்தாராயப்பட்டுள்ளது. மேலும்

"வயக்குறு மண்டலம் வடமொழிப்பெயர் பெற்ற

முகத்தவன் மக்களுள் முதியவன் புணர்ப்பினால்

அய்வர் என்று உலகேத்தும் அரசர்கள் அகத்தராக

கைபுனை அரக்கில்லைக்கதழ் எரி சூழ்ந்தாங்கு" (பா-25:1-4)

அரக்கு மாளிகை தீப்பற்றி எரியும் போது பாண்டவர்கள் ஐவரும் நன்கு உறங்கி கொண்டு இருந்தார்கள் என்றும், அதுசமயம் விழித்துக் கொண்ட

பீமன் அந்த நால்வரையும் தோளில் துாக்கிப் போட்டுக் கொண்டு சுரங்கத்தின் வழியாக வெளியேறி காப்பாற்றினான் என்றும் கூறப்படுகிறது.

குறிஞ்சிக்கலியில் இராவணன் கைலை மலையைப் பெயர்த்த செய்தியான 'சிவபெருமான் உமாதேவியுடன் கைலை மலையில் வீற்றிருக்கும் போது பத்து தலைகளையுடைய அரக்கனான இராவணன் தனது வலிமைமிக்கக் கைகளால் அம் மலையினை எடுக்கத் தலைப்பட்டான் என்றும் அதுகண்டு சிவபெருமான் தனது கட்டைவிரல் நுனியினால் அம்மலையினை அழுத்த அதனுள் அகப்பட்டு இராவணன் வருந்தினான் என்பதையும்

"இமைய வில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்

ஊமையமர்ந்து உயர்மலை இருந்தனன் ஆக

தொடிப்பொலி தடக்கையின் கீழ்ப்புகுத்து அம்மலை

எடுத்தல் செல்லாது உழப்பவன் போல (கலி.பா-38)

என்றும் போர்க்களத்தில் துரியோதனன் தொடையினை பீமன் அறுக்கும் நிலை (பாடல் 52:2-3) ஆகியன உவமை நயம்பட கூறப்பட்டுள்ளது.

அகநானூற்றில் பரசுராமன் "இம்மண்ணுலகிலேயே ஷத்திரிய அரச தரப்பினர் ஒருவர் கூட இல்லாமல் பூண்டோடு ஒழிப்பேன்" என்று சபதம் செய்து மிக்க முயற்சியோடு ஓர் பெரிய வேள்வியை செய்து முடித்தான் என்பதை,

"மன்மருந்கருத்த மழுவாள் நெடியோன்

அருங்கடி நெடு துாண் போல "(அகம் 220:5-8)

பற்றிக் கூறப்பட்டுள்ளது. கிருஷ்ணன் ஆயர் பெண்களின் ஆடையை மறைத்தல் திலோத்தமை கதை. சூரபதுமன் போர் பற்றியும் ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளது.

## இயல்:3 புற இலக்கியங்களில் புராண இதிகாசக் கருத்துக்கள்

சங்க இலக்கியத்தில் ஒன்றான புறநானூறு தமிழரின் பழைமையையும், பெருமையையும் விளக்குவதோடு வரலாற்றுக் களஞ்சியமாகவும், பண்பாட்டு ஆவணமாகவும் அமைகின்றது. ஒருவனது உயர்வு அவன் ஈட்டும் பொருளில்லாமல் அவனுடைய ஒழுக்கத்தில் தான் உள்ளது என்பதைப் பற்றி

வெளிப்படுத்துகிறது. சங்ககால வேந்தர்கள் வீரத்தில் மட்டுமல்லாது கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினார்கள் என்பதையும், மண்ணில் வாழும் மனிதர்கள் எத்தனை இடர்பாடுகள் ஏற்பட்டாலும் கல்வி கற்காமல் இருக்கக்கூடாது என்ற உண்மையை வலியுறுத்துகிறது. கடவுள்களுக்கு ஏற்படும் இடர்பாடுகளை தம் நினைவில் கொண்டு மக்கள் தன்னம்பிக்கை விடாமுயற்சியோடு செயல்பட வேண்டும் என்பதை இவை உணர்த்துகிறது. அக்காலப் புலவர்கள் அரசனைப் புகழ்ந்து பாடுபவர்களாக இல்லாமல் தவறு கண்ட போது இடித்துரைபவர்களாகவும், தன்மானம் மிக்கவர்களாகவும் வாழ்ந்து உள்ளனர் என்பதை அறியலாம். இவ்வியலில் மன்னர்களின் அறம் பற்றிய கருத்துக்கள். புராண இதிகாச கருத்தான புறநானூற்றுப் பாடல் ஒன்று “இராமனும் சீதையும் காட்டில் வாழ்ந்து கொண்டு இருக்கும் போது இலங்கை வேந்தனான இராவணன். சீதையை இராமன் அறியாவண்ணம் தூக்கிச் சென்றான் என்றும், அப்போது சீதையானவள் தன்னுடைய ஆபரணங்களை ஒவ்வொன்றாகக் கழற்றி வழிநெடுகப் போட்டுக் கொண்டே போனாள் என்றும். இதை கண்ட குரங்கு கூட்டங்கள் அந்த ஒளிமிக்க ஆபரணங்களைக் எடுத்து அணிந்து வியந்தன என்பதை,

“கடதெறல் ராமன் உடன்புணர் சீதையை
வுலித்தகை அரக்கன் வவவிய கொன்றை
நிலம் சேர் மதன் அணிகண்ட குரங்கின்
செம்முகப் பொருங்கினை – (புறம்.பா 378)

என கூறப்பட்டுள்ளது. அதியமான, பாரி ஆகிய வள்ளல்களின் வீரம், போர், அறம, கொடைத்தன்மை ஆகியவைப்பற்றி அறிந்து கொள்ள உதவுகிறது. புறநானூற்றுப் பாடல்களில் ஏராளமான வரலாற்றுக் குறிப்புகள் உள்ளன. பண்டையப் போர்க்களங்கலான வெண்ணிப்பறந்தலை, வாகைப்பறந்தலை. கழுமலம், தலையாலங்கானம் தகடூர் போன்றவை இதில் சிறப்பாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

புறநானூற்றில் நடைமுறைக் கோட்பாடுகள் பற்றி எடுத்துக் கூறப்பட்டுள்ளது. தமிழரின் பண்பாட்டு நிலைகள், சங்ககால பெண்களின் வீரம். அவர்களின் நிலைபற்றியும் இந்நூல் வாயிலாக ஆராய முடிகிறது.

பதிற்றுப்பத்தில் புலவர்கள் பற்றிய செய்திகள் எடுத்துக்கூறப்படுகின்றன. இதில் சேரர்களின் வீரம். கொடைத்திறம் ஆட்சிமுறை. சமூகச் செய்திகள் உவமைகள் வாயிலாக உணர்த்தப்படுகின்றன. உலக வீரயுகப் பாடல்களுக்கு இணையாகப் போற்றப்படுகின்ற பாடல்கள் புறநானூறு, பதிற்றுப்பத்துப் பாடல்களாகும்.

ஆரிய மயமான சூழலில் முருகனின் பிறப்புக்கதைப் பேசப்படுகிறது. பரிபாடலிலும், திருமுருகாற்றுப்படையிலும் முருகன் பிறப்பு பற்றிய கதை பேசப்படுகிறது. முருகன் கார்த்திகை மகளிரிடத்தே தோன்றியவன் என்பதை பரிபாடல் உணர்த்துகிறது. திருமுருகாற்றுப்படையில் கல்லால் மரத்தின் கீழ் எழுந்தருளிய சிவபெருமானின் மகனும். பெருமையுடைய இமயமலை அரசனின் மகளாகிய உமையம்மையின் மகனும் முருகனே எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

முருகன் மக்களுக்கு அச்சத்தை போக்கும் கடவுளாகவும், பகைவருக்கு அச்சத்தை தோற்றுவிக்கும் கடவுளாகவும் கருதப்படுகிறான். வெல்ல முடியாத ஆற்றலும். மனித சக்திக்கு அப்பாற்பட்ட மலைவாழ் மக்களின் தலைவனான சூரனை முருகன் வெற்றி கொண்டு அழித்ததைப் புராணக் கதைகள் மூலம் அறிய முடிகிறது. இன்றும் முருகன் கோவில்களில் சூரசம்ஹார நிகழ்ச்சி நிகழ்ந்து வருவது இப்புராணக் கதையை வலியுறுத்துவதாக அமைந்துள்ளதை இவ்வியல் ஒப்பிட்டு ஆராய்கின்றது.

## இயல் - 4 சங்க இலக்கியத்தில் கடவுள்கள்

“சங்க இலக்கியத்தில் கடவுள்கள்” என்னும் இவ்வியலில் முல்லை நிலத் தெய்வமான திருமால் நிரை மேய்த்தலுக்கு நீரைத்தரும் தலைவனாகக் காணப்படுகின்றான். மேகம் என்ற பொருளில் “மால்” என அழைக்கப்படுகிறான். திருமால் முல்லை நிலத்துக்குரியவனாக கருதப்பட்டாலும் திருமால நில எல்லைகள் கடந்து திருவேங்கடம் அழகர்மலை என்னும் குறிஞ்சி நிலங்களிலும் வணங்கப்படுகின்றான். மேலும் இயற்கை வழிபாடு தோன்றிய

காலத்திலேயே கடவுள்கள் குறித்த கருத்துக்களும். ஐம்புலன்களுடன் தொடர்புப்படுத்தப்பட்டு புலனறிவால் இறைவனைக் காணும் முயற்சியும் மக்களால் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றது.

குறிஞ்சி நிலக்கடவுளான முருக வழிபாடு தொடக்கத்தில் “வேல்” என்னும் அடையாளக் குறியை வைத்தே வணங்கப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. தமிழ்ச்சங்கத்தில் அங்கத்தினராக இருந்தமையாலும், தந்தையான சிவனுக்கு உபதேசம் செய்தமையாலும் “தமிழ்க்கடவுள்” என அழைக்கப்படுகிறான்.

முருகனுக்குக் குறிஞ்சி நிலம் மட்டுமல்லாமல் நெய்தல் நிலமான திருச்செந்தூரிலும் உறைவிடம் கொண்டு அருள்பாலிக்கும் இறைவனாகக் காணப்படுகின்றான். வேந்தன் என்னும் தமிழ்த்தெய்வம் ஆரியக் களப்பிற்கு பிறகு இந்திரன் என்கிற பெயரினைப் பெறுகின்றான்.

வருணன் ஆரியக் கடவுள் எனத் துணிய இயலவில்லை. வேத கால வருணன் தேவர்களின் தலைவனாக வானத்து அதிபதியாகக் காணப்படுகின்றான். வருணன் கடல் தெய்வமாகக் காணப்படுகின்றான். கொற்றவை வழிபாடு தாய் தெய்வ வழிபாட்டின் தொடக்கமாகக் காணமுடிகின்றது. குறிஞ்சி நிலத்திற்கு முருகனன்றி கொற்றவையும் கடவுளாகக் கருதப்படுவதைக்காணலாம்.

தமிழர்களின் வழிபாடுகளில் சிவ வழிபாடு மிகவும் தொன்மையானதாகும். சிந்துவெளியில் காணப்படும் சிவனும். சங்க இலக்கிய சிவனும் ஒன்றாகவேக் காணப்படுகின்றனர். தமிழர் வணங்கும் வளமைக்குரியவன். வேத கால சிவன் உருத்திரன் என அழைக்கப்பட்டான். இவன் அழிவிற்குரியவனாதலால் பிற்காலத்தில் இருவரும் ஒருவராய் இணைந்து காணப்படுகின்றனர்.

காமன் குறித்த செய்திகள் யாவும் புராணம் தாங்கிய நிலையே காணப்படுகின்றது. காமன் மறைகாவலனாகவும். திருமால் மகனாகவும் காணப்படுகின்றான். உமைசிவனின் துணைவியாகக் காணப்படுகின்றாள். திருமகள், திருமால் மார்பில் உறைபவள் செல்வம் தரும் தாயாகக் காணப்படுகின்றாள்.

இயற்கை வழிப்பாட்டுக் கூறுகளை இன்றையத் தமிழ்ச் சமூகம் பின்பற்றி வருதலை அன்றாட வாழ்வில் நாம் கண்கூடாகக் காண்கிறோம். சிறுமண்ணாலான உருண்டைகள், சாண வடிவங்கள், செங்கல், அருகம்புல், குங்குமம் போன்ற இறை குறித்த அடையாளங்களாகப் பயன்பட்டு வருவதை ஒப்பிட்டு ஆராய முடிகிறது.

## முடிவுரை

சங்க இலக்கியங்கள் தனியொருவர் முயற்சியினால் அன்றி பல சான்றோர்களின் முயற்சியால் தொகுப்புப்பணி மேற்கொண்டது தெளிவாகிறது. சங்க இலக்கியங்களில் தொன்மை, புராண இதிகாச கருத்துக்களை கையாண்டு இவற்றின் மூலம் மக்களின் நன்னெறிக்கு வழிவகுக்கும் பாங்கில் பகுத்தும் தொகுத்தும் ஆராயப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்களில் காலந்தோறும் குறித்தச் சிந்தனைகள் மேம்பட்டு வருவதை இன்றைய மக்களுக்கு உணர்த்தும் வகையில் ஒப்பிட்டு ஆராய்ந்து கூறப்பட்டுள்ளது. மக்களுக்கு ஏற்படும் துன்பங்களை கடவுள்களின் பெயரிட்டு நீக்கும் மனப்பக்குவம் உளவியல் ரீதியாக உணரமுடிகிறது.

## துணை நூற்பட்டியல்

ஆய்வுக்குப் பயன்படுத்தப்பட்ட முதன்மை நூல்கள். துணை நூல்கள். கலைக்களஞ்சியங்கள். அகராதிகள் போன்றவற்றை அகர வரிசைப்படுத்தப்பட்டு துணை நூற்பட்டியலில் தரப்பட்டுள்ளன.

## பின்னிணைப்புகள்

1) ஏறு தழுவுதல் “சூரபதுமன், போர்” சம்மந்தமான ஒளிப்படங்கள்

2) சங்க இலக்கியக் கடவுள்கள் பற்றிய திருவுருவ ஒளிப்படங்கள்

ஆகியன பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளன.

# இயல் - 1

## சங்க இலக்கியம் - தொகுப்பும் புராண விளக்கமும்

உலகின் மூத்த மொழிகளுள் ஒன்றாக விளங்குகின்ற மொழி தமிழ் மொழியாகும். "கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளொடு முன்தோன்றி மூத்தக்குடி" என்று புறப்பொருள் வெண்பா மாலை கூறுவதைக் கொண்டு தமிழின் பழைமையை அறியலாம்.

தொடக்கக் காலத்தில் தமிழ் எந்த பகுதியில் பேசப்பட்டது என்பதைத் தொல்காப்பியம் என்ற பழம் பெரும் இலக்கண நூல் கூறுகிறது. தொல்காப்பியத்திற்குப் பாயிரம் எழுதிய பனம்பாரனார் என்பவர்,

**" வடவேங்கடம் தென் குமரிஆயிடைத்**

**தமிழ் கூறும் நல்லுலகம்"**[1]

என்று தமிழ்நாட்டின் எல்லையைக் கூறுகின்றார். எனவே வடக்கே வேங்கடமலை முதல் தெற்கே குமரி வரை தமிழ் பேசப்பட்டதாக நாம் இதன் மூலம் அறிகிறோம்.

தமிழ் நாட்டைச் சேர,சோழ,பாண்டியர் என்ற மூவேந்தர்களும் பல குறுநில மன்னர்களும் ஆண்டதை சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

மூவேந்தர்களில் பாண்டிய மன்னர்கள் தமிழ் மொழியைப் போற்றி வளர்க்கும் வண்ணம் சங்கங்கள் வைத்து நடத்தியதாக பல்வேறு சான்றுகள் கிடைக்கின்றன.

அச்சங்கங்களில் தமிழ்ப் புலவர்கள் இருந்து தமிழ் ஆய்வு செய்ததாகவும், தமிழில் பல்வேறு செய்யுள்களை இயற்றியதாகவும் சங்க இலக்கியங்கள், இறையனார் களவியல் உரை போன்ற நூல்களால் அறியலாம்.

‘தமிழ்’ என்ற சொல் இனிமை என்ற பொருளை உடையது. இனிமையும், நீர்மையும் தமிழ் எனலாகும் என்று “பிங்கல நிகண்டு” கூறுகின்றது. மதுரமான மொழி என வால்மீகி இராமாயணம் கூறுகின்றது.

சமணத்துறவிகள் சங்கம் என்ற சொல்லைப் பயன்படுத்திச் சமயத் தொண்டாற்றினர். அந்த சொல்லைத் தான் பிற்கால ஆசிரியர்கள் கி.பி.200க்கு முன் தோன்றிய இலக்கியங்களை சங்க இலக்கியங்கள் என்று அழைத்தனர். மதுரையில் சங்கம் போன்ற அமைப்பு ஒன்று இருந்ததை தமிழ் இலக்கியங்கள் பல்வேறு பெயர்களில் சுட்டுகின்றன. பத்துப்பாட்டில் ஒன்றான சிறுபாணாற்றுப்படை,

**“ தமிழ் நிலை பெற்ற தாங்கரு மரபின்**

**மகிழ்நனை மறுகின் மதுரை”[2] (66.67)**

என்று கூறுகிறது. மதுரையில் தமிழ்ச்சங்கம் நிலை பெற்றிருந்தது என்பது புலனாகிறது. மதுரைக் காஞ்சி எனும் இலக்கியம்.

**“ தொல்லாணை நல்லாசிரியர்**

**புனர் கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின்**

**நிலந்தரு திருவின் நெடியோன்”[3] (761-763)**

என்று கூறுவதைக் காணும் போது நிலந்தரு திருவின் நெடியோன் என்ற பாண்டியன் அவையில் புலவர்கள் ஒருங்கிணைந்து செய்யுள் இயற்றினர் எனப் புலனாகிறது. புறநானூற்றில் ,

**“ ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி**

**மாங்குடி மருதன் தலைவனாக**

**உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்**

**புலவன் பாடாது வரைக என்நிலவரை”[4] (புறம்,பா -72)**

என்று கூறுகிறது. சங்கத்துத் தலைவராக மாங்குடி மருதன் என்னும் புலவர் இருந்ததும், புலவர்கள் செய்யுள் பாடியதும் கூறப்பட்டுள்ளது.

காப்பிய இலக்கியமாகிய சிலப்பதிகாரம் **“தென்தமிழ் நாட்டுத் தீதுதீர் மதுரை”**[5] **என்றும்,மணிமேகலை “தமிழ் மதுரைச் செழுங்கலைப் பாவாய்”**[6] என்றும் கூறுகிறது.

திருநாவுக்கரசர் சிவபெருமானைச் சங்கத்தோடு இணைத்து போற்றிப் பாடுகிறார். தருமி என்னும் ஏழைப் புலவனுக்குக் “கொங்குதேர் வாழ்க்கை”[7]என்ற குறுந்தொகை பாடலை எழுதிக் கொடுத்தார் என்பதை ,

**“ நன் பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி**

**நற்கனகக்கிழி தருமிக்கு அருளினோன்காண் ”**[8] **(6.7,6.3)**

என்று கூறுகின்றார்.

பண்டைய மக்களின் வாழ்க்கை முறையினையும், பண்பாட்டுக் கூறுகளையும், நாகரிக மேம்பாட்டினையும் அறிவதற்கு நமக்குப் பெரிதும் துணையாக நிற்பன சங்க இலக்கியங்கள். “சங்கப் பாடல் தமிழ் இலக்கியப் பேழை அழியாத கற்பனைக் கருவூலம் கருத்து வளமும், கற்பனை சிறப்பும் பொருந்திய அழகான பாடல்கள் பலவற்றைப் பெற்று மிளிர்வன. ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னே தமிழர் வாழ்ந்த வாழ்க்கைப் பேற்றினை விளக்கி நிற்பன. வாழையடி வாழையாகத் தமிழ் மக்கள் பலமுறை பயின்று படித்துப் பயன் பெறும் வற்றாத செல்வம்”[9] என்கிறார், கே.கே.பிள்ளை.

## சங்க இலக்கியத்தின் சிறப்புப் பிரிவுகள்:

சங்க இலக்கியங்களை அகம், புறம் எனப் பிரிப்பர்.காதலைப் பற்றிப் பாடும் பாடல்களை “அகம்” என்றும், காதல் தவிர பிற செய்திகளைப் பாடும் பாடல்களைப் “புறம்” என்றும் கூறுவர். அகப்பாடல்களில் கற்பனையான தலைவன், தலைவியின் காதலைப் பற்றி விளக்கி உரைக்கின்றன.

புறப்பாடல்கள் நாட்டை ஆளும் அரசனின் வீரம், கொடை, சமூகத்திற்கு அரசன் ஆற்ற வேண்டிய கடமைகள், கல்வியின் சிறப்பு போன்றவற்றை கூறுகின்றன.

## அகப்பாடல்கள்:

ஒருவனும் ஒருத்தியும் தமக்குள்ளே கண்டு காதலிப்பது. காதலை தோழி மூலம் செவிலித்தாய், நற்றாய் ஆகியோருக்கு மெல்லத் தெரியப்படுத்துவதும் வழக்கத்தில் இருந்துள்ளன. அக்காலத்தில் காதலித்த பெண்ணை மணந்து அவளோடு இன்பத்துடன் வாழ்ந்து வரும் தலைமகன் வேறு பெண்களை நாடி செல்வதும் வழக்கமாக இருந்தது. அகப்பாடல்கள் பெரும்பாலும் கற்பனைப் பாடல்களாக இருந்தாலும், அக்கால மக்களின் காதல் வாழ்க்கையை முழுமையாகவே வெளிப்படுத்துகின்றன.

## புறப்பாடல்கள்:

புறப்பாடல்கள் பெரும்பாலும் கற்பனையாகப் பாடப்படவில்லை. இரு அரசர்களிடையே போர் ஏற்படும் போதுபுலவர்கள் தலையிட்டுப் போரைத் தடுத்துள்ளனர். அரசன் மக்களிடம் அளவுக்கதிகமாக வரி வாங்கும் நேரத்தில் புலவர்கள் தலையிட்டு அரசனுக்கு அறிவுரை கூறியுள்ளனர். இந்நிகழ்வுகள் புறப்பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

புறப்பாடல்களில் இயற்கைக்கு மீறிய செய்திகள் கூறப்படவில்லை. சங்க கால வரலாற்றைத் தொகுப்பதற்கு சங்கப் புறப்பாடல்கள் ஓரளவுக்கு துணையாக நிற்கின்றன. அரசர்கள் தமக்குள் போரிட்டுக் கொண்டாலும் புலவர்களைப் பெரிதும் மதித்துள்ளனர். யாருமே தொட அஞ்சும் முரசு கட்டிலில் ஏறிப்படுத்து உறங்கிய மோசிகீரனார் என்னும் புலவரை தண்டிக்காது. அவர் தூங்கி எழுகின்றவரை கவரி வீசிக்கொண்டு இருந்தார். சேரமன்னன் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும் பொறை என புறநானூறு கூறுகிறது.

## சங்க இலக்கியத்தில் யாப்பு:

சங்க இலக்கியப் பாடல்கள் தனிப் பாடல்களாக அமைந்துள்ளவை. இவற்றைத் தன்னுணர்ச்சிப் பாடல்கள் என்பர். எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்று அழைக்கப்படும் இப்பதினெண்மேற்கணக்கு நூல்கள், மூவகைப் பாவகைகளில் அமைந்துள்ளன. அகவற்பா, வஞ்சிப்பா, கலிப்பா என்னும் பாவகைகளில் பெரும்பாலான சங்கப் பாடல்கள் ஆசிரியப்பா வடிவிலேயே பாடப்பட்டுள்ளன. ஆசிரியப்பா என்றாலும் அகவற்பா என்றாலும் ஒன்றே ஆகும். இப்பாடல் இசையுடன் பாடவும் ஏற்ற வகையாகும். ஆசிரியர்கள் மிகச் சிறப்பாக எடுத்துச் சொல்லும் சிறப்புப் பெற்றதால் இது ஆசிரியப்பா ஆயிற்று எனவும் கூறுவர்.

ஆசிரியப்பாவை அடுத்து வஞ்சிப்பா இசையோடு பாடுவதற்கு ஏற்றதாக அமைந்துள்ளது. பட்டினப்பாலை ஆசிரியப்பாவும், வஞ்சிப்பாவும் இணைந்து பாடப்பெற்ற பாடலாகும். 301 அடிகளை உடைய இப்பாவில் 163 அடிகள் வஞ்சிப்பா அடிகளாகவும்,138 அடிகள் ஆசிரியப்பா அடிகளாகவும் உள்ளன. புறநூனூற்றில் 2ஆம் பாடலில் உள்ள,

**“ மண்டிணிந்த நிலனும்**

**நிலனேந்திய விசும்பும்**

**விசும்பு தைவரு வளியும்**

**வளித் தலைஇய தீயும்**

**தீ முரணிய நீரும்..”[10]…. (புறம்-2)**

என்னும் அடிகள் வஞ்சிப்பா வகையைச் சார்ந்தவை. கலிப்பாவில் அமைந்த சங்க இலக்கியம் கலித்தொகையாகும். கலித்தொகையில் உள்ள 150 பாடல்களும் கலிப்பாவிலேயே அமைந்தவை. நாடக முறையில் அகப்பொருளை பாடுவதற்கு இப்பாடல் வகை பயன்பட்டது.

## சங்க இலக்கிய உவமைகள்

சங்க இலக்கியங்கள் உவமையால் சிறப்புற்ற இலக்கியங்களாகும். சங்க காலத்தில் தோன்றிய தொல்காப்பியத்திலும் உவமைகள் உண்டு. சங்க இலக்கியத்தில் அக இலக்கியங்களிலும், புற இலக்கியங்களிலும் பெரும்பாலான பாடல்கள் உவமைகளோடு மட்டுமே விளங்குகின்றன. எளிய உவமைகளால் மிகச் சிறந்த பொருளை விளங்க வைப்பது சங்க இலக்கியங்களின் சிறப்பியல்புகளுள் ஒன்று. சோழன் கோப்பெருநற்கிள்ளி போாக்களத்தில் விரைவாக வாளைச் சுழற்றிப் போரிடுகிறான். அவன் போர்க்களத்தில் எவ்வாறு வாளைச் சுழற்றுவான். என்பதற்கு சாத்தந்தையார் என்ற புலவர்,

**“ சாறுதலைக் கொண்டெனப் பெண்ணீற்று உற்றெனப்**

**பட்ட மாரி ஞான்றை ஞாயிற்றுக்**

**கட்டின் நினைக்கும் இழிசினன் கையது**

**போழ்தூண்டு ஊசியின் விரைந்தன்று மாதோ ”[11] (புறம் -82)**

என்று உவமை கூறுகிறாா். அதாவது ஊரிலே விழா நடைபெற உள்ளது. அவ்விழாவிற்கு உதவ போக வேண்டும். மனைவிக்குப் பிள்ளைப் பேறு மழை பெய்து கொண்டிருக்கிறது. பிறக்கும் குழந்தையைப் தரையில் போட முடியாது. அதற்காகக் கட்டில் பின்னுக்கின்றான் ஓா் ஏழைத் தொழிலாளி இவ்வளவு செயல்களையும் ஒன்றாக செய்ய மனம் விழையும் நேரத்தில் கை எவ்வளவு வேகமாக கட்டில் பின்ன முடியுமோ அதே வேகத்தில் சோழன் வாளை சுழற்றுகின்றான் என்கிறாா் புலவர்,

கலித்தொகையில் ஓா் உவமை. பாலை நிலத்தின் கொடுமையைக் கூற வந்த பாலை பாடிய பெருங்கடுங்கோ என்னும் புலவர்,

**“ வறியவன் இளமைபோல் வாடிய சினையவாய்ச்**

**சிறியவன் செல்வம்போல் சேர்ந்தார்க்கு நிழல் இன்றி**

**யார்கண்ணும் இகந்து செய்து இசை கெட்டான் இறுதிபோல்**

**வேரொடு மரம் வெப்ப, விரிகதிர் தெறுதலின் ”[12] (கலி -10)**

எனப் பாடியுள்ளார். இளமையிலேயே வறுமையுற்றவன் போல தளிர்கள் வாடிய கொம்புகளை உடையனவாக மரங்கள் நின்றன. கொடுத்தற்கு மனம் இல்லாதவனுடைய (சிறுமனம் கொண்டகருமி) செல்வம், தன்னைச் சேர்ந்தார்க்கு பயன்படாதவாறு இருப்பது போல தன்னைச் சேர்ந்தவர்களுக்கு நிழலின்றி இருந்தன. யாவரிடத்தும் ஒழுக்கத்தைக் கடந்து தீங்கு செய்பவனின் புகழ்கெட்டு, இறுதிகாலத்தே அவன் சுற்றத்தார் மட்டுமின்றி அவனும் கெடுவான். அதுபோல் கதிரவனின் கதிர்கள் சுடுவதினால் கிளைகள் மட்டுமின்றி மரங்கள் வேரோடே வெம்பி நின்றன என சிறந்த உவமையால் விளக்குகிறார்.

## சங்ககாலம் பொற்காலம்

1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்க காலம் பொற்காலம் எனப் போற்றப்படுகிறது. ஏனெனில் அக்கால மக்களின் வாழ்க்கை முறை, அரசியல், தமிழ் மொழி ஆட்சி, இலக்கிய வளம், புலமைப்போற்றல், பண்பாடு, நாகரிகம் ஆகியன மிகச் சிறப்பாக இருந்துள்ளன.

ஊர்ப்புறங்களில் தலைவர்கள் குடவோலைத் தேர்தல் முறையிலும், அரசர்கள் வாரிசு அடிப்படையிலும் தேர்ந்தெடுக்கப்பட்டனர், பூசலும் பெரிதாக பாதிக்கவில்லை. மக்கள் அமைதியான வாழ்க்கை வாழ்ந்து வந்தனர். ஒரு நாட்டு புலவரும், வாணிகரும் வேறு நாட்டுக்கு செல்லக்கூடாது என்ற தடை விதிக்கப்படாததால் மக்களிடையே எவ்வித பிரச்சனையுமின்றி வாழ்க்கை நடத்தி வந்தனர். மக்கள் கருத்துக்களை அவர்கள் சார்பாக புலவர்கள் மன்னரிடம் எடுத்துக் கூறுவதால் நல்லாட்சி நடந்தது.

தமிழ்நாட்டைத் தமிழர்களே ஆண்டகாலம் சங்ககாலம். இதுவே ஆட்சி மொழியாய் இருந்தது. சங்க காலத்தில் இலக்கியம் வளர்ச்சியடைய காரணம் அக்கால அரசனும் நல்லாட்சியுமே காரணம். சிறந்த இலக்கியம் தோன்றும் காலம் ஒரு நாட்டிற்கு நற்காலம் எனலாம்.

**“ அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும் ”[13] (வெ.வே.39)**

என அறிவாளிகளின் மேன்மையை அரசனே அறிவிக்கிறான். இனம், குலம் ஆகிய வேற்றுமைக்கு அப்பாற்பட்டதாகக் கல்வி போற்றப்பட்டது.

**“ கற்கை நன்றே கற்கை நன்றே**

**பிச்சை புகினும் கற்கை நன்றே ”[14] (வெ.வே.35)**

எனச் செல்வத்தினும் கல்வியே பெருமை சேர்ப்பது என அக்காலத்தார் கருதினர்.

**“ அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்**

**அஃ.தறி கல்லா தவர் ”[15] (குறள்.27)**

என வள்ளுவர் சொல் பொய்யன்று. அறிவார்ந்த சமுதாயம் அறிஞர்களைப் போற்றியது.

சங்க காலம் சமுதாயம் பண்பாட்டிலும் நாகரிகத்திலும் மேம்பட்டு விளங்கியது. சங்க கால மக்கள் உடல்சார் வாழ்க்கையை விட உள்ளஞ்சார்ந்த வாழ்க்கைக்குச் சிறப்பிடம் கொடுத்தனர். அதனால் அன்பு, அருள், வாய்மை, நட்பு போன்ற நற்பண்புகளைப் பெற்று விளங்கினர். சாதி மத பூசல்கள் சங்க காலத்தில் இல்லை. சாதிக் கொடுமை ஆகியவை இல்லை. நீதி, நேர்மை அனைவருக்கும் பொதுவாய் இருந்தன.

உழவு, நெசவு போன்ற அடிப்படைத் தொழில்கள் மேலோங்கி இருந்தன. தமிழ் அரசர்கள் பலர் பாசன ஏரிகளை ஏற்படுத்தி நீர்வளம் பெருகச் செய்தனர்.

## எட்டுத்தொகை நூல்கள்

சங்க இலக்கியம் 'பாட்டும் தொகையுமே' எனக் கூறப்படும். சங்க இலக்கியங்களில் முதலில் தொகுக்கப் பெற்றது எட்டுத் தொகை நூல்களேயாகும். இத்தொகை நூல்களின் பெயர்கள் பற்றிக் குறிப்பிடும் பழம்பாடல்,

**" நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு**
**ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்**
**கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு அகம் புறமென்று**
**இத்திறத்த எட்டுத்தொகை "**[16]

எனக் குறிப்பிடுகின்றது. இப்பட்டியலில் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு என்பன அகப்பொருள் சார்ந்தவையாகும். புறநானூறு,பதிற்றுப்பத்து என இவ்விரு நூற்களும் புறப்பொருள் சார்ந்தவையாகும். பரிபாடல் அகப்பொருளும், புறப்பொருளும் சார்ந்த நூலாகத் திகழ்கின்றது.

பதினென் மேற்கணக்கு என்னும் பெயர். பதினெட்டு நூல்களைக் குறிக்கும் ஒரு தொகைப் பெயராகும். இந்த பெயருக்குள் பதினெட்டு நூல்கள் அடங்கியுள்ளன. 'கணக்கு' என்றால் 'நூல்' என்று பொருள். அடியளவால் குறைவான பாடல்களையுடைய பதினெட்டு நூல்கள் பதினென்மேற்கணக்கு என அழைக்கப்படுகிறது. 'அடியளவால் குறைவான பாடல்களை உடைய பதினெட்டு நூல்கள் பதினென் கீழ்க்கணக்கு என அழைக்கப்படுகின்றது. பத்துப்பாட்டு எனப்படும் பத்து நூல்களும், எட்டுத்தொகை எனப்படும் எட்டு நூல்களும் ஆகிய பதினெட்டு நூல்கள் பதினெண் மேற்கணக்கு என்னும் பட்டியலில் அடங்கும்.

## நற்றிணை:

இதனை நற்றிணை நானூறு என்றும் அழைப்பர். நல்+திணை : நற்றிணை என்பது நல்ல ஒழுகலாறு என்பது இதன் பொருள். 9 முதல் 12 அடி வரையிலான அகப்பொருட்பாடல்களின் தொகுப்பே நற்றிணை. “சான்றோர் வருந்திய வருத்தமும்” எனத் தொடங்கும் இறையனார் களவியலுரை 234 ஆம் பாடல் என்பர். பாரதம் பாடிய பெருந்தேவனார் திருமால் வாழ்த்தாகிய கடவுள் வாழ்த்து நீங்கலாக 400 பாடல்களைக் கொண்டு விளங்குகிறது நற்றிணை. **“சங்கத் தொகை நூல்களுள் நற்றிணை, குறுந்தொகை பாடிய உரை இல்லாதனவாகும்.”**[17]

## நற்றிணை பாடிய புலவர்கள்:

நற்றிணை பாடிய புலவர்களின் எண்ணிக்கை 175. பெயர் தெரியாத புலவர்களுக்கு அவர்கள் பாடிய பாடல்களில் அமைந்துள்ள சிறந்த தொடர்களால் பெயர் சூட்டியுள்ளனர் வண்ணப் புறக்கந்தரத்தனார், மலையனார், தனிமகனார், விழிக்கட் பேதை பெருங்கண்ணனார், தும்பிசேர்கீரனார், தேய்புரிப் பழங்கயிற்றினார், மடல்பாடிய மாதங்கீரனார், எனத் தொடர் பெயராலும் தொடர்பெயரை அடையாளம் பெற்ற இயற்பெயராலும் ஒன்பது புலவர்கள் சுட்டப்பெற்றனர். அறிவுடைநம்பி, உக்கிர பெருவழுதி, பாலைப்பாடிய பெருங்கடுங்கோ போன்ற அரசர்களும் நற்றிணைப் பாடல்களைப் பாடியுள்ளனர்.

அதியமான் அஞ்சி, அழிசி, ஆய் அண்டிரன், உதியன், ஓரி, காரி, குட்டுவன், சேந்தன், நன்னன், தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன், ஆகிய வேந்தர்களும் குறுநிலமன்னர்களும் நற்றிணையில் குறிப்பிடப் பெற்றுள்ளனர்.

## நற்றிணையின் சிறப்புகள்:

**உண்மை காதல் பிறவிதொறும் தொடரும் என்பதனை,**

**“ சாதல் அஞ்சேன், அஞ்சுவல் சாவில்**

**பிறப்புப் பிறிதாகுவ தாயின்**

**மறக்கு வென் கொல் என் காதலன் ”[18] (397)**

என்னும் அடிகள் காட்டுகின்றன. செல்வக் குடும்பத்தில் பிறந்த தலைவியை மணந்தவன் குடி வறுமையுற்றது அந்நிலையிலும் தலைவி தன் செல்வத் தந்தையின் உதவியை எதிர்பாராமல், எளிய உணவினை வேளை தவறி உண்டு வாழ்கிறாள். என்பதை,

**“ கொண்ட கொழுநன் குடிவறன் உற்றனெனக்**

**கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உண்ணாள்**

**பொழுது மறுத்து உண்ணும் சிறுமதுகையளே ”[19] (110)**

என்ற பகுதி இதனைக் காட்டுகிறது. ஒருவனுக்கு உண்மையான செல்வம் என்பது தன்னை நம்பியோரின் துன்பம் கண்டு மனம் நெகிழ்ந்து அவர்களின் துயரை துடைக்கும் கருணை உள்ளமே என்கிறார் இன்னொரு புலவர்.

**“ சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்**

**புன்கண் அஞ்சும் பண்பின்**

**மென் கண் செல்வம் செல்வம் என்பதுவே”[20] (210)**

தலைவன் தன் காதலியை அவன் வீட்டுக்கு அருகில் உள்ள ஒரு புன்னை மரத்தடியில் சந்தித்தான். நாங்கள் விளையாடுகிற பொழுது மறந்து போட்ட புன்னை விதையிலிருந்து வளர்ந்தது. பிறகு பாலும் தேனும் ஊற்றி வளர்த்தோம். அப்போதெல்லாம் எங்கள் தாய் உங்களை விட உங்கள்

தங்கையான புன்னை மிக நல்லவள். அவள் பிடிவாதம் செய்யமாட்டாள் என பாராட்டுவாள். எனவே என் உடன் பிறப்பாக நினைத்து இப்புன்னை நிழலில் உங்களுடன் நின்று பேச கூச்சமாக இருக்கிறது. ஆகையால் வேறு இடத்திற்கு போய் பேசிக் கொண்டு இருக்கலாம் என்கிறாள். இயற்கையையும் உயிருள்ளதாக நினைத்து வெட்கப்படும் இந்நுட்பமான உணர்வு நிலையினை,

**“ விளையாட்டு ஆயமொடு வெண்மணல் அழுத்தி**

**மறந்தனம் துறந்த காழ்முளை சிகைய**

**நெய்பெய் தீம்பால் பெய்தினிது வளர்ப்ப**

**நும்மினும் சிறந்தது நுவ்வை ஆகுமென்று**

**அன்னை கூறினள், புன்னையது சிறப்பே**

**அம்ம நாணுதும் நும்மொடு நகையே….”[21] (172)**

பெரியோர் நன்கு ஆராய்ந்து ஒருவரோடு நட்புக் கொள்வர் என்றும் மாறாக நட்ட பின்னர் பொருத்தத்தை ஆராயர் என்பதை,

**“ நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்**

**வீழல்லை நட்பாள் பவர்க்கு ”[22] (கு.791)**

**“ முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்**

**நஞ்சும் உண்பர் நனி நாகரிகர் ”[23] (355)**

என்று கூறுவது,

**“ பெயக் கண்டும் நஞ்சுண்டு அமைவர் நயத்தக்க**

**நாகரிகம் வேண்டு பவர் ”[24] (கு.580)**

எனும் திருக்குறளை நினைவூட்டுகிறது.

## குறுந்தொகை:

சங்க இலக்கியங்களில் ஒன்றான குறுந்தொகை 'நல்ல' என்ற அடைமொழியோடு அழைக்கப்படும் சிறப்பைப் பெற்றது. குறுந்தொகையில் அகப்பொருள் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. சமுதாயச் செய்திகள், வரலாற்றுச் செய்திகள் பற்றிய குறிப்புகளையும் இந்நூலில் காணலாம்.

## நூலின் அமைப்பு:

குறுந்தொகை நான்கடி சிற்றெல்லையும் எட்டடி பேரெல்லையும் கொண்டது. குறுகிய பாடல்களில் பெயர் பெற்றது. இந்நூல் அகப்பொருள் பற்றிய செய்திகளைக் கூறுகின்றது. ஆசிரியப்பாவால் 400 பாடல்களை கொண்டு உள்ளது.

## புலவர்கள்:

கடவுள் வாழ்த்தைப் பாடிய பெருந்தேவனார் பெயரை நீக்கி விட்டால் 205 புலவர்கள் பெயரே காணப்படுகின்றன. ஒவ்வொரு செய்யுளின் இறுதியிலும், அச்செய்யுளைப் பாடியவர் பெயர் காணப்படுகின்றது. குறுந்தொகை புலவர்களின் பெயர்களிலே பல பெயர்கள் உண்மைப்பெயர்கள் அல்ல. அவர் பாடிய பாடல்களில் உள்ள சொற்றொடர்களே இப்புலவர்களுக்குப் பெயர்களாக அமைந்துள்ளன. தொடரால் பெயர் பெற்ற புலவர்கள் 19 பேர்கள் ஆவர். இவர்களில் சில பெயர்களாவன : அணிலாடு முன்றிலார், செம்புலப் பெயல் நீரார், குப்பைக் கோழியார், காக்கைப் பாடினியார், விட்ட குதிரையார், மீனெறி தூண்டிலார் போன்ற பெயர்கள் உவமையால் வருபவை. உருத்திரன், உரோடகத்துக்காரன், உலோச்சன், சண்டிலியன் பவுத்திரன், மாத்திரதன், பிரமந்தன் முதலிய புலவர் பெயர்கள் அன்றே வடமொழிப்பெயர்கள் தவழ்ந்த தமிழ் பெயர்கள் ஆகும்.கரிகால் வளவன், குட்டுவன், பொறையன், பாண்டியன், பாரி, ஓரி, நன்னன் போன்ற அரசர்களைப் பற்றிய செய்திகள் குறுந்தொகையில் காணப்படுகின்றன.

குறிப்பாக பரணர் பாடல்களில் வரலாற்றுச் செய்திகள் மிகுதியாக காணப்படுகின்றன.

தமிழ்நாட்டில் வழங்கப்படுகின்ற சிவபெருமான் சார்ந்த புராணக் கதைகளில் ஒன்றான தருமிக்கு உதவிய கதைக்கு அடிப்படையாக அமைந்துள்ள பாடல் குறுந்தொகையில்,

" **கொங்கு தேர் வாழ்க்கை** "[25] பாடியவர் பெயரும் இறையனார் என்று கூறுகிறது.

ஒரு பெண் ஊரார் பேசும் பழிச்சொல்லால் தன் உள்ளம் நைவதற்கு உவமையாக யானையால் மிதிக்கப்பட்ட நன்கு முதிர்ந்த அத்திப் பழத்தைக் குறிப்பிடுகிறாள் என்பதனை,

" **ஆற்றய லெழுந்த வெண்கோட்ட தவத்**

**தெழுகளிறு மிதித்த வொரு பழம் போலக்**

**குழையக் கொடியோர் நாவே**

**காதல ரகலக் கல்லென் றவ்வே.** "[26] (24)

மற்றொரு தலைவி தனக்கும் ஆகாது தன் காதலனுக்கும் பயன்படாது வீணாகும் தன் பெண்மை நலத்துக்கு கன்றும் உண்ணாமல், பாத்திரத்திலும் கறக்கப்படாமல் மண்ணில் வீழ்ந்து பாழாகும் நல்ல ஆவின் பாலை நல்ல உவமையாக இப்பாடலில் கூறுகிறார்.

" **கன்று முண்ணாது கலத்தினும் படாது**

**நல்லான் றீம்பா னிலத்துக் காஅங்**

**கெனக்கு மாகா தென்னைக்கு முதவாது**

**பசலை யுணீஇயர் வேண்டும்** "[27] (27)

. தாய்வழியிலும், தந்தை வழியிலும் உறவினராகாத ஓர் பெண்ணும் அன்பினால் ஒன்றுபடுதலுக்குச் செம்மண் நிலத்திலே பெய்த மழையை உவமை கூறினார். செம்புலப் பெயல் நீரார் அவரது வரிகளில்,

**“ செம்புலப் பெயல் நீர் போல**

**அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே ”[28] (40)**

எனக் கூறப்பட்டுள்ளது. தலைமகள் தோழியிடம் தலைவன் அன்புடைமையை வற்புறுத்தும் சூழல் ஒன்று வருகிறது. அவள் அக்காதல் நிலத்தை விடப் பரந்ததாக வானை விட உயர்ந்ததாக நீரை விட ஆழமானதாக விளங்குவதைக் கூறுகிறது. இப்பாடலில்,

**“ நிலத்திலும் பெரிதே வானினும் உயர்ந்தன்று**

**நீரினும் ஆரள வின்றே சாரல்**

**கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு**

**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே ”[29] (3)**

என புனைந்துரைக்கப்பட்டுள்ளது. பிரிந்த தலைவன் உரிய காலத்தே திரும்பினானில்லை. அதனால் தலைவி சோகமே வடிவாயினள். உள்ளங்குமைந்தாள். வீட்டினுள் இருந்து முற்றத்து வழியாகப் பறவைகள் மாலை நேரத்தில் கூடு நோக்கி பறந்துப் போவதைப் பார்க்கிறாள். அது அவளது கவலையை அதிகரிக்க செய்கிறது. இதைபோல தன் தலைவனும் வீடு நோக்கி வரவில்லையே என அவள் நெஞ்சம் நினைத்து அழுகிறது. அவ்வாறு வெளிப்படச் சொல்லாமல் குறிப்பாக சொல்வதனாலேயே தம் நெஞ்சத்தில் அவலவுணர்வு இருமடங்காகி பெருகுகிறது என்பதை,

**" ஞாயிறு பட்ட அகல்வாய் வானத்து**

**அளிய தாமே கொடுஞ்சிறைப் பறவை**

**இறையுற ஓங்கிய நெறிஅயல் மராஅத்த**

**பிள்ளை உள்வாய்ச் செரீஇய**

**இரை கொண் டமையின் விரையுமாற் செலவே "[30] (9)**

என பாடலில் விளக்கி கூறப்பட்டுள்ளது. ஆடவனுக்குக் கடமையே உயிர்; வீட்டிலிருந்து இல்லறம் செய்யும் பெண்களுக்கு தம் ஆடவரே உயிர், என்பதை ஒரு செய்யுள்,

**" வினையே ஆடவர்க்கு உயிரே வாள்நுதல்**

**மனை உறை மகளிர்க்கு ஆடவர் உயிர் "[31] (135)**

எனக் கூறப்பட்டுள்ளது.

கணவன் மனைவி இருவருக்கும் இடையில் ஊடல் வெளியே சென்று விட்டு இல்லம் திரும்பும் தலைவன் தலைவியிடம் எதுவும் கூறாமல் கட்டிலிலே படுத்து உறங்கும் மகனை அணைத்துக் கொண்டு படுத்துவிட்டான். இதனைக் கண்ட மனைவி தானும் கட்டிலில் அவர்களுடன் சேர்ந்து தன் கணவனின் முதுகைத் தழுவிக் கொண்டு படுத்து விட்டாள்.

**"....................**

**மாலை விரிந்த பசு வெண்ணிலவில்**

**குறும்கால் கட்டில் நறும்பூம் சேக்கைப்**

**பள்ளி யானையின் உயிரா அசைஇப்**

**புதல்வன் தழீகனன் விறலவன்**

**புதல்வன்தாய் அவன்புறம் கவைஇயினளே"[32] (359)**

## குறுந்தொகையின் சிறப்புகள்:

* குறுந்தொகை நூலானது அதிகமாக பதிப்பு மற்றும் மேற்கோள் உடையது. அதிகமானோர் உரை கண்டது.

* குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு ஆகிய மூன்றும் ஆசிரியப்பாவினால் ஆனது.

* குறுந்தொகைப் பாடல்களைப் பாடிய புலவர்கள் வேறு வேறு காலத்தைச் சேர்ந்தவர்கள்.

* குறுந்தொகையிலுள்ள செய்யுள் ஒவ்வொன்றும் தோன்றிய காலத்தை வரையறுத்தாலும் இயலாத காரியமே. சில செய்யுட்களில் வந்துள்ள அருந்தொடர்களே பெயராக வந்துள்ளது.

* பேராசிரியர் குறுந்தொகையின் காலம் கி.பி.2ம் நூற்றாண்டு என்று கூறுகிறார்; இதை அனைவரும் ஏற்றுக் கொண்டு உள்ளனர்.

* குறுந்தொகைக்கு என்று தனியான இடம் உண்டு. அதற்கு 'கொங்கு தேர் வாழ்க்கை' எனத் தொடங்கும் பாடலே காரணம். இதை எழுதியவர் 'இறையனார் எனப்படும் சிவபெருமான்' என குறிப்பிடப்படுகிறது.

* குறுந்தொகையைப் தொகுத்த பூரிக்கோவும், அகநானூற்றை தொகுத்த உருத்திரசன்மனாரும், தந்தையும் மகனும் ஆவார் என்பார் வையாபுரிபிள்ளை.

* பரணர், கபிலர், காக்கைப் பாடினியர், கொல்லிக் கண்ணன், மிளைக்காந்தன் போன்றோர் பாடல்களில் வரலாற்றுச் செய்திகள், அதிகம் காணப்படுகின்றன.

* 29 உரையாசிரியர்கள் 236 பாடல்களை மேற்கோளாக எடுத்துக்கொண்ட பெருமை குறுந்தொகையைச் சாரும்.

## அகநானூறு:

ஆசிரியப்பாவால் அமைந்த அகப்பொருள் பாடல்கள் நானூறும் தொகுக்கப்பட்டு அகநானூறு என்ற பெயரால் குறிக்கப்பட்டன. பாண்டியன் உக்கிரப்பெருவழுதி என்ற மன்னனின் வேண்டுகோளுக்கிணங்க உப்பூரிகுடிகிழார் மகனார் உருத்திரசன்மன் என்ற புலவர் இந்நூலைத் தொகுத்துள்ளார். 145புலவர்கள் இந்நானூறு பாடல்களையும் பாடியுள்ளனர். இந்நூல் அகப்பாட்டு, பெருந்தொகைநானூறு, நெடுந்தொகை எனவும் அழைக்கப்படுகின்றது. 13 அடி முதல் 31 அடி வரையிலான 400 நெடிய பாடல்களைப் பெற்றிருக்கிறது. சிவனைக் குறிக்கும் பாரதம் பாடிய பெருந்தேவனார் இயற்றியப் பாடல் இதன் கடவுள் வாழ்த்தாக அமைகிறது. களிற்றியானை நிரை, மணிமிடைப்பவளம், நித்திலக் கோவை என்று மூன்று பிரிவுகளைக் கொண்டது. இந்நூல் களவு, கற்பு என்ற இரு ஒழுக்கத்திலும் அமைந்த குறிஞ்சி, பாலை, மருதம், முல்லை, நெய்தல் ஆகிய திணைப்பாடல்களைக் கொண்டது.

## முப்பகுப்பு:

அகநானூறு மூன்று பெரும்பகுப்புகளை உடையது. இப்பகுப்பு ஐங்குறுநூறு போலத் திணையையும், பாடல்களின் எண்ணிக்கையையும் கொண்டு பகுக்கப் பட்டதல்ல. பாடல்களின் நடைமுறை அமைப்பைக் கொண்டு பகுக்கப்பட்டதாகும். இதுவும் இந்நூலுக்குரிய தனிச்சிறப்பாகும்.

அகநானூற்றில் ஒன்று முதல் நூற்றுஇருபது பாடல்கள் களிற்றியானை நிரை என்றும், 120 முதல் 300 வரையிலானப் பாடல்களை மணிமிடைப்பவளம் என்றும், இறுதி 100 பாடல்கள் நித்திலக் கோவை என்றும் பகுக்கப்பட்டுள்ளன.

## முறைவைப்பு:

1,3,5,7,........ என வரும் ஒற்றைப் பாடல்கள் பாலைத் திணை - 200

2,8,12,18,...... என வரும் பாடல்கள் குறிஞ்சித் திணை - 80

4,14,....... என வரும் பாடல்கள் முல்லைத் திணை - 40

6,16,....... என வரும் பாடல்கள் மருதத்திணை - 40

10,20,....... என வரும் பாடல்கள் நெய்தல் திணை - 40

இதுவே அகநானூற்றில் காணப்படும் முறைவைப்பாகும். இச்சிறப்பு வேறு எந்த நூலிலும் காணப்படவில்லை.

இறையனார் அகப்பொருள் உரையில் இந்நூல் 'நெடுந்தொகை நானூறு' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் **"நெடுந்தொகை முதலாகிய யெட்டும் என்றவாறு"**[33] என்னும் பேராசிரியர் உரைப்பகுதியாலும் **"அவை நெடுந்தொகை முதலிய தொகை எட்டுமாம்"**[34] என்னும் நச்சினார்க்கினியரின் உரையாலும் அகநானூற்றிற்கு நெடுந்தொகை என்னும் வழக்கு இருந்தமையை அறிய முடிகின்றது. இவ்வழக்கானது தொல்காப்பிய உவம இயலுக்கு உரை செய்த பேராசிரியர் **"அவையிற்றை எவ்வாறு கோடுமெனின் அவைகள் தாம் அகத்துள்ளும் பிற சான்றோர் செய்யுள்ளும் வருதலிற் குற்றமாக…"**[35] என்னும் சான்றிலிருந்து மாற்றம் கொண்டு உள்ளதைக் காண முடிகின்றது.

அகநானூறு அகப்பாட்டு என நச்சினார்கினியரால் கையாளப்பட்டு உள்ளது. தொல்காப்பிய அகத்திணையியலில் **"புணருதல், பிரிதல், இருத்தல், இரங்கல் எனத் தொடங்கும் நூற்பாவில்"**[36] அகநானூறு பாடலைத்தந்து அதற்கு, **"இவ்வகைப் பாட்டு நெய்தல், இரங்கல், உரிப்பொருட்டாயிற்று" என்னும் சொல் கணக்கிடப்படுவதைத் தெளிவுறுத்துகிறார்.**[37]

## அகநானூற்று ஆசிரியர்கள்:

அகநானூற்றின் இறுதியில் உள்ள பாயிரப் பாடலை அடுத்திருக்கிற உரைநடைப்பகுதியில் "நெடுந்தொகை நானூறு கருத்தினோடு முடிந்தன. இவை பாடின கவிகள் நூற்று நாற்பத்தைவர்" என்ற செய்தி தெரிவிக்கப்பட்டுள்ளது. நெடுந்தொகை நானூறு கருத்தினோடு முடிந்தன. இவை பாடின கவிகள் நூற்று நாற்பத்தைவர்" என்ற செய்தி தெரிவிக்கப்பட்டுள்ளது. நெடுந்தொகைப் பாடல்களை நானூறு என்றும், இந்த நானூற்றையும் ஒருவரோ (அ) 145 புலவர்கள் பாடினார்கள் என்றும் தெளிவாகக் கூறுகிறது. சில புலவர்கள் பல பாடல்கள் பாடி உள்ளனர். இந்த 145களுள் மிகுதியான எண்ணிக்கையில் பாடல்கள் பாடியுள்ள புலவர் பத்து பேர்கள் ஆவர். பத்து பேர்களும் பாடல் எண்ணிக்கையும் கீழே இடம் பெறுகின்றன.

| புலவர்கள் | - | பாடல்கள் எண்ணிக்கை |
|---|---|---|
| 1. பரணர் | - | 34 |
| 2. மாமூலனார் | - | 27 |
| 3. மதுரை மருதனின் நாகனார் | - | 23 |
| 4. கபிலர் | - | 18 |
| 5. நக்கீரர் | - | 17 |
| 6. கயமனார் | - | 12 |
| 7. பாலைப் பாடிய பெருங்கடுங்கோ | - | 12 |
| 8. குடவாயிற் கீரத்தனார் | - | 10 |
| 9. எயினந்தை மகனார் இளங்கீரனார் | - | 9 |
| 10. உலோச்சனார் | - | 8 |

## பிற சிறப்புகள்:

அகநானூற்றில் இடம் பெற்றுள்ள உள்ளுறை, உரிப்பொருள், போன்றவை அகநானூற்றின் சிறப்புக்கூறுகளாக அமைந்துள்ளன. இதில் இடம் பெற்றுள்ள வரலாற்றுச் செய்திகளும் சிறப்புக் கூறுகளாக அமைந்துள்ளன.

## உள்ளுறைச் சிறப்பு:

உள்ளுறையைப் பயன்படுத்திய அகநூல்களில் அகநானூறு நான்காவது இடத்தில் உள்ளது. மொத்தம் 51 பாடல்களில் உள்ளுறை அமைந்துள்ளது. குறிஞ்சித்திணையில் 22 பாடல்களும், மருதத்திணையில் 14 பாடல்களும், நெய்தல் திணையில் 11 பாடல்களும், பாலைத்திணையில் 4 பாடல்களும் ஆக 51 பாடல்களில் உள்ளுறை இடம் பெற்றுள்ளது. முல்லைத்திணைப்பாடல்களில் உள்ளுறை இடம் பெறவில்லை என அறியலாம்.

## உரிப்பொருள் சிறப்பு

தொல்காப்பிய அகத்திணை இயலில் ஐந்து திணைகளின் உரிப்பொருளுக்குச் சான்று காட்டியுள்ள உரையாசிரியர்கள் அகநானூற்றுப் பாடல்களை மட்டுமே காட்டி உள்ளது. இந்நூலுக்கு கிடைத்த சிறப்பு எனலாம்.

## வரலாற்றுச் சிறப்பு:

இந்நூலில் மிகுதியான அளவில் வரலாற்றுச் செய்திகள் இடம் பெற்றுள்ளன.மேலும் 116 பாடல்களில் ஏறத்தாழ 87 அரசர்கள் மற்றும் படைத்தலைவர்கள் பற்றிய குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. ஒரே பாடலில் ஒன்பது அரசர்கள் இடம் பெற்றுள்ளனர். என்று அறியமுடிகிறது. இதுவும் இந்நூலுக்குரிய சிறப்பாகும்.

**“ சுள்ளியம் பேரியாற்று வெண்நுரை கலங்க**

**யவனர் தந்த வினைமான் நன்கலம்**

**பொன்னொடு வந்து கறியொடு பெயரும் ”[38] (49)**

என்ற பாடலில் யவனரின் கப்பல்கள் முசிறிதுறை முகத்திற்குப் பொன்னொடு வந்து மிளகொடு திரும்பியதாக ஒரு செய்யுள் குறிப்பிட்டுள்ளது.

ஒரு கன்னிப் பெண்ணின் மனதைக் கவர்ந்து, ‘அவளைத் தெரியாது என்று வாதிட்ட அறம் அற்ற ஒருவனுக்கு கள்ளூர் அவையினர் தண்டனையளித்த செய்தியும்,

**“ திருநுதற் குறுமகள் அணிநலம் வவ்விய**

**ஆறனி லாளன், ‘அறியேன்’ என்ற**

**திறன்இல் வெஞ்சூள் அறிகரி கடாஅய்**

**முறி ஆர் பெருங்கிளை செறியப் பற்றி**

**நீறு தலைப் பெய்த ஞான்றை ”[39] (256)**

என்ற பாடலில் கூறப்பட்டுள்ளது. வெண்ணிப் போரில் புண்பட்ட பெருஞ்சேரலாதன் வடக்கிலிருந்து உயிர் துறந்தான் என்ற செய்தியினை,

**“ மன்னுயிர் மடிந்த பானாட் கங்குல்**

**காடுதேர் வேட்டத்து விளவு இடம் பெறாஅது ”[40] (58)**

என்ற பாடலில் கூறப்பட்டுள்ளது. மக்கட்பேற்றின் சிறப்பினை,

**“ இம்மை உலகத்து இசையொடும் விளங்கி**

**மறுமை உலகமும் மறுவின்றி எய்துப**

**செறுதரும் விழையும் செயிர்தீர் காட்சி**

**சிறுவர்ப் பயந்த செம்மலோர்”[41] (66)**

இப்பாடல் சிந்தரிக்கப்பட்டுள்ளது.

## ஐங்குறுநூறு:

எட்டுத்தொகை இலக்கியங்களுள் மூன்றாவதாக இடம் பெற்றுள்ள அக இலக்கியம் ஐங்குறுநூறு. இது அடியளவால் மிகவும் சிறிய பாடல்களைக் கொண்டது. (3அடி முதல் 6அடி வரை) இந்நூலில் ஐந்நூறு பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இந்த ஐந்நூறு பாடல்களையும் திணைக்கு நூறு பாடல்கள் வீதம் ஐந்து புலவர்கள் பாடியுள்ளனர். ஐந்திணை ஒழுக்கங்களை நூறுநூறு பாடல்களில் தனித்தனி தலைப்பின் கீழ் தொகுக்கப்பட்டுள்ளது. தலைப்பானது செய்யுளில் பயின்று வரும் சொற்களாலோ அல்லது பொருளாலோ அமைகின்றது.

## புலவர்கள்:

மருதத்திணை - ஓரம்போகியார்

நெய்தல்திணை - அம்மூவனார்

குறிஞ்சித்திணை - கபிலர்

பாலைத்திணை - ஓதலாந்தையார்

முல்லைத்திணை - பேயனார்

யானை கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறையின் விருப்பத்தால் கூடலூர்கிழார் என்னும் புலவர் ஐங்குறுநூற்றைத் தொகுத்து வழங்கியுள்ளார். இந்நூல் சங்க கால தமிழரின் திணை சார்ந்த வாழ்வியல், காதல் வாழ்க்கை, சமூக நோக்கு, பழக்கவழக்கங்கள், அறம், அருள் என அனைத்தையும் எளிய இனிய வடிவில் பதியச் செய்துள்ளது. ஐங்குறுநூற்றைத் தொகுத்தவர்

புலத்துறை முற்றிய கூடலூர்கிழார். 129,130 ஆகிய இருபாடல்களும் கிழவற் குரைத்த பத்தில் இடம் பெற்றுள்ளன. இவ்விரண்டும் கிடைக்கப் பெறவில்லை எனக் குறிப்பிடுகின்றார்.

## சிறப்புகள்:

சங்க இலக்கியத் தொகை நூல்களுள் பல சிறப்புகளைப் பெற்றது ஐங்குறுநூறு சங்க இலக்கியங்களுள் மூன்றடியிலும் பாடல்கள் இடம் பெற்றுள்ள நூல் இதுவாகும். இந்நூலைத் தவிர வேறு எந்த நூலிலும் மருதத்திணைப் பாடல்கள் முதலாவதாக வைக்கப்படவில்லை. இந்திரவிழா, பற்றிய செய்தியைக் கொண்டுள்ள பழைய இலக்கியம் இதுவாகும். தாவரங்கள், விலங்குகள், பறவைகள் பற்றிய செய்திகளும், அவற்றின் பெயரால் பாடல்களும் இடம் பெற்றுள்ளன. விலங்குகள் போன்றவற்றின் வாழ்வியல் நுட்பங்களும் படம்பிடித்துக் காட்டப்படுள்ளன. குறுந்தொகையைப் போன்றே சிறந்த உவமைகளைக் கொண்டுள்ள நூல் ஐங்குறுநூறு எனலாம்.

உலகில் அனைத்து தீய செயல்களுக்கும், காரணமாக அமைவது வறுமையே ஆகும்; பசிக்கும், பிணிக்கும் மூலகாரணமாக அது அமைகிறது. வறுமையைப் போக்கவே மக்கள் தீய செயல்களில் ஈடுபடுகின்றனர். ஆகவே, ஒரு நாடு சிறந்தோங்க பசி,பிணி இல்லாது ஆக்க வேண்டும் என்ற சிந்தனையை

**“ பசியில் ஆகுக பிணிசேர் நீங்குக ”**[42] **(5)**

என்று வெளிப்படுத்துகிறது. ஐங்குறுநூற்றில் வேளாண் சிந்தனைகள் காணக்கிடக்கின்றன. வயல் நிறைய விளைய வேண்டும் என்று எண்ணுகின்றனர். என்பதல்ல, இரவலர்களுக்குக் கொடுக்க வேண்டும் என்ற உயர்ந்த சிந்தனையை,

**“ விளைக வயலே வருக இரவலர் ”**[43] **(2)**

**“ நெற்பல பொலிக பொன் பெரிது சிறக்க ”**[44] **(1)**

என்ற ஐங்குறுநூற்று அடிகளில் காணலாம்.

இயற்கையிலிருந்து விலகாமலும், அதேவேளையில் நவீனத்துவத்தைப் பயன்படுத்தியும் பயன் கண்டனர். நம் முன்னோர் வேளாண் துறையிலும் கூட நவீனக் கருவிகளைப் பயன்படுத்திய உண்மையைச் சில அடிகள் நமக்கு படம் பிடித்துக் காட்டுகின்றன.

**“ கரும்பின் எந்திரம் களிற்றெதிர் பிளிற்றும் ”[45] (55)**

கரும்பைப் பிழிந்து சாறு எடுப்பதற்கு நவீன கருவிகளைப் பயன்படுத்திய உண்மையை இவ்வடி உணர்த்துகிறது. எந்த ஒரு பிரச்சனைக்கும் தீர்வு பகைமை பாராட்டுதலிலோ அல்லது போர் புரிவதோ இல்லை. பகைமை மறத்தலிலும் நட்பை பாராட்டுதலிலுமே உள்ளது. போர்கள் போற்றப்பட்ட சூழலில் வேந்தர்கள் பகை கொள்ள வேண்டாம் என்கிறது ஐங்குறுநூறு.

**“ வேந்து பகை தணிக யாண்டு பல நந்துக ”[46]**

புறத்திற்கென்று தனியே இலக்கியம் படைத்து. விழுப்புண் படுதலே வீரம் என்ற மரபை வளர்த்து வந்த சமுதாயச் சூழலில் பகையே வேண்டாம் என்று ஒருவர் சிந்தித்திருப்பது வியக்கத்தக்கது.

ஒரு நாட்டின் வாழ்விற்கும் வளர்ச்சிக்கும், வன்மைக்கும் உற்ற துணையாக விளங்குவது அந்நாட்டின் அரசாங்கம் என்பது துணிவு. அந்த அரசாங்கம் முறை செய்து மக்களைக் காப்பாற்ற வேண்டும்; நாட்டில் களவு இல்லாது ஒழிய வேண்டும். இச்செயல்பாடுடைய அரசே நல்லரசாக விளங்க முடியும். இதை,

**“அரசு முறை செய்க களவில்லாகுக”[47] (8)**

என்ற ஐங்குறுநாற்றின் அடி நமக்கு தெளிவாக்குகிறது.

அன்பும், அறனும், பண்பும் மிகுந்த ஒரு காலகட்டத்தில் இயற்கையோடு மனிதன் இயைந்து வாழ்ந்த ஒரு காலகட்டத்தில்

அறச்சிந்தனைகள் நாட்டில் தலைத்தோங்க வேண்டும் என்று சிந்திப்பதும் அச்சிந்தனை உலகெங்கும் சிறந்தோங்க வேண்டும் என்று ஆசை கொள்வதும் நாம் பெருமைப்படக் கூடிய ஒன்றே இவ்வகைச் சிந்தனை,

**“ அறம்நனி சிறக்க வல்லது கெடுக ”[48] (7)**

என்று வெளிப்படுத்துகிறது. ஐங்குறுநூறு,

அறச்சிந்தனை எங்களுக்கு வாய்க்கப்பெற்றது போல, உலகம் அனைத்தும் பரவித் தழைத்தோங்க வேண்டும் அதன் மூலம் தீய செயல்கள் அழிந்து விட வேண்டும் என்ற இத்தொலை நோக்குச் சிந்தனை இன்றும்,என்றும் ஏற்புடையது. அறச்சிந்தனை வலுப்பெற்றால் என்ன நடக்கும்? தீமைகள் எல்லாம் விலகியோடும், எங்கும் நன்றே தீமை இல்லை. துன்பமின்றி இன்பம் பெறும். இந்த உண்மையை ஐங்குறுநூறு,

**“தாய் சா பிறக்கும் பிள்ளை**

**நன்று பெரிது சிறக்க தீதில் ஆகுக ”[49] (9)**

என்ற அடி நமக்கு வலியுறுத்துகிறது.

உயிரியல் அறிவும் ஐங்குறுநூற்றில் காணக்கிடக்கின்றன. நண்டுகள் பிறக்கும் போதே அதன் தாய் இறந்து விடுகிறது என்பதையும், முதலைகள் தன்குட்டிகளை தானே தின்னும் என்பதையும் ஐங்குறுநூற்றில்

**“ தன்பார்ப்புத் தின்னும் அன்புஇல் முதலை ”[50] (41)**

என்ற பாடலில் விளக்கப்பட்டுள்ளது.

## கலித்தொகை:

இதனை ‘கற்றறிந்தார் ஏத்தும் கலி’ என்றும், ‘கல்வி வலார் கண்ட கலி’ என்றும் அழைக்கப்படுகிறது. இதனை உரையாசிரியர்கள் இசைப்பாட்டு என அழைப்பர். கலித்தொகையை ‘ இயற்கை இன்பக் காலம்’ என திரு.வி.க.

கூறுவதாக மு.முனீஸ்மூர்த்தி கூறுகின்றார். பாவகையால் இந்நூல் சிறப்புப் பெற்றமையைத் தொல்காப்பியர்,

**" நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்**

**பாடல் சான்ற புலனெறி வழக்கம்**

**கலியே பரிபாட்டு ஆயிரு பாவினும்**

**உரியதாகும் என்மனார் புலவர் "**[51]

எனக் குறிப்பிடுகின்றார்.

இறையனார் அகப்பொருள் கலித்தொகையை 'நூற்றைம்பது கலி' எனக் குறிப்பிடுகின்றது. கடைச்சங்க நூல் பட்டியலில் இதனைக் குறித்துத் தொகை நூல்களில் ஏழாவதாகக் குறிப்பிடுகின்றது. உரையாசிரியரான பேராசிரியர், **"தரவின்றாகித் தாழிசைப் பெற்றும் "**[52] என்னும் நூற்பாவிற்கு தரும் விளக்கத்தில் **"இனி நூற்றைம்பது கலியும்"**[53] எனக் குறிப்பிடுவதிலிருந்தும்,

**" ஒத்தாழிசைக்கலி "**[54] என தொல்காப்பிய செய்யுளியலில் நச்சினார்கினியர் தரும் உரைக்குறிப்பும் கலித்தொகையினை, 'கலி' என அழைக்கும் வழக்கம் பண்டைய இலக்கிய வரலாற்றில் இருந்ததை குறிப்பிடுகின்றது.

மேலும் **" கலிப்பா "**[55] **" கலிப்பாட்டு "**[56] எனவும் கலித்தொகை அழைக்கப்பட்டதைக் காணமுடிகின்றது.

## தொகுத்தவர்கள்:

கலித்தொகைப் பாடல்களில் பாலைத்திணைப் பற்றி 35 பாடல்களைப் பாடிய பெருங்கடுங்கோவும், குறிஞ்சித் திணைப் பற்றி 29 பாடல்களைப் கபிலரும், மருதத் திணைப் பற்றி 35 பாடல்களை மருதனில

நாகனாரும், முல்லைத் திணைப் பற்றி 17 பாடல்களைச் சோழன் நல்லுருத்திரனும் நெய்தல் திணைக்குரிய 33 பாடல்களை நல்லந்துவனாரும் பாடியுள்ளனர். இதனை,

**“ பெருங்கடுங்கோன் பாலைகபிலன் குறிஞ்சி**

**மருதளின நாகன் மருதம் - அருஞ்சோழன்**

**நல்லுருத்தின் முல்லை நல்லந்துவன் நெய்தல்**

**கல்வி வலார் கண்ட கலி ”**[57]

எனும் பழம்பாடல் இதனை தெளிவுப்படுத்துகிறது.

கலித்தொகையைப் பாடியவர்கள் பலர் எனும் கூற்றை சிலர் மறுக்கின்றனர். **“சி.வை.தாமோதரப் பிள்ளை, கே.என். சிவராசப்பிள்ளை, எஸ்.வையாபுரிப் பிள்ளை, வே.வேங்கடராசலுரெட்டியார் முதலிய தமிழறிஞர்கள் கலித்தொகையைப் பாடியவர் ஒருவரே எனக் கூறுகின்றனர்”**[58].

கலித்தொகை முழுதும் பாடியவர் நல்லந்துவனார் என்ற கருத்தும் நிலவுகிறது. காதல் வாழ்வின் நுட்பங்களை மிக அழகாகக் கூறுவது கலித்தொகை. இதன் உவமைகள் அழகு மிகுந்தன, ஓசை இனிமை மிக்கது எண்ணங்கள் மிக உயர்ந்தன என்பதையும். இருக்கின்ற ஓரே ஆடையைப் பகுத்து உடுத்தி வாழும் கொடிய வறுமை நிலையில் மனம் ஒன்றி வாழும் வாழ்க்கையே சிறந்த இல்லற வாழ்க்கை என்பதனை,

**“ ஒன்றன் கூறாடை உடுப்பவரே ஆயினும்**

**ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை ”**[59] **(18)**

காதலன் துன்பத்தில் பங்கு ஏற்றலை விடக் காதலிக்குப் பெரிய இன்பம் இல்லை என்று கூறுகிறாள் ஒரு தலைவி.

**" அன்பறச் சூழாதே ஆற்றிடை நும்மொடு**

**துன்பம் துணையாக நாடின் அதுவல்லது**

**இன்பமும் உண்டோ நமக்கு "[60] (38)**

மனதில் வருத்தம் உண்டாகும் படி பிரிந்து செல்வதைப் பற்றி எண்ணாமல் உன்னுடன் வந்து வழியில் ஏற்படும் துன்பங்களைப் பகிர்ந்து கொள்வதை விட வேறு இன்பம் எங்களுக்கு எதுவுமில்லை என்கிறது.

## புறநானூறு:

புறநானூறுக்கு புறம், புறப்பாட்டு, புறம்பு நானூறு என்னும் வேறு பெயர்களும் உண்டு. இந்நூல் அகவற்பாவினால் ஆனது. சில பாடல்களில் வஞ்சி அடிகள் வந்துள்ளன. 'நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் என்னும் நூற்பாவிற்கு உரை தரும் நச்சினார்க்கினியர் புறநானூற்றை 'புறம்' எனக் குறிப்பிடுகின்றார். மேலும் புறநானூற்றை 'புறத்திணை மருங்கின் பொருந்தின் அல்லது என்னும் நூற்பாவிற்கு உரை தரும் நச்சினார்க்கினியர் 'புறம்பாட்டு' எனக் குறிப்பிடுகின்றார். 4 முதல் 40 அடி வரையிலான அடியளவு கொண்ட பாடல்கள் உள்ளன. மொத்தப் பாடல்கள் 400. பாரதம் பாடிய பெருந்தேவனாரின் சிவன் பற்றி கடவுள் வாழ்த்தாக முகப்பில் இடம் பெற்றுள்ளது. ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் திணை, துறை, பாடினோர், பாடப்பட்டோர், சூழல் போன்ற குறிப்புகள் காணப்படுகின்றன. தொகுத்தோர், தொகுப்பித்தோர் பெயர்கள் தெரியவில்லை.

## புலவர்கள்:

புறநானூற்றுப் புலவர்களின் எண்ணிக்கை 158. இவர்களில் பத்துபேருக்கு மேல் பெண்பாற் புலவர்கள். சில அரசர்களை இடித்துரைத்து திருத்துபவர்களாகப் புலவர்கள் விளங்கினர். அரசனை அவன் என்றும், தனியொரு புலவரை அவர் என்றும் குறிப்பிடுகின்றனர். அரசனை விட

புலவரையே பெரிதும் மதித்தனர் என்பது புலனாகும். தொடித்தலை விழுந்தண்டினார், இரும்பிடத்தலையார், ஊன் பொதி பசுங்குடையார் போன்றவை சிறப்புத் தொடரால் அமைந்த புலவர்களின் பெயர்களாகும். பண்டைய வேந்தரின் படைத்திறம், போர்முறை, கடையெழு வள்ளல்களின் கொடை, குமணன் போன்றோரின் வள்ளன்மை, கபிலர் - பாரி, ஔவை - அதியமான், பிசிராந்தையார் - கோப்பெருஞ்சோழன் ஆகியோரின் நட்பு, பாணர், பொருநர், விறலியர், கூத்தர் முதலியோரின் கலைத்திறம், அவரைப் புரந்த வள்ளல்களின் மாண்பு போன்ற வரலாற்றுச் செய்திகள் விரித்துரைக்கப்பட்டு உள்ளன.

கணவனை இழந்த பெண்கள் தம் கூந்தலையும், வளையலையும், பிற அணிகளையும் களைதல், உடன்கட்டை ஏறி உயிர்விடல், இறந்தவரை தாழியில் இட்டுப் புதைத்தல், தீமூட்டி எரித்தல், வீரர்களுக்கு நடுகல் நட்டு வழிபடுதல், நோய் கொண்டு இறந்த அரச குடும்பத்தார் உடலைவாளால் கீறிப் புதைத்தல், கணவனை இழந்த பெண்டிகைம்மை நோன்பு மேற்கொள்ளுதல் முதலான தமிழர் பண்பாட்டு நிலைகளை இந்நூல் சுட்டுகிறது.

தமிழர் கையாண்ட இசைக்கருவிகளைப் பற்றியும், இருப்பத்தொரு இசைத் துறைகளைப் பற்றியும் பன்னெடுங் காலத்திற்கு முன்பே தமிழர் வானியல் அறிவில் மேம்பட்டிருந்தனர் என்பது பற்றியும் இந்நூலில் காணலாம்.

**“ உள்ளாற்றுக் கவலை புள்ளி, நீழல்**

**...................**

**...................**

**பலரால் அத்தை நின்குறி இருந்தோரே ”[61] (219)**

என்ற பாடலில் மானம் அழிய வந்த பொழுது வடக்கு நோக்கியிருந்து இறத்தலைப் பற்றிக் கூறுகிறது. நீர் இன்றி வாழாது உடல். அவ்வுடலுக்கு உணவு கொடுத்து உயிர் கொடுத்தவர் மக்கள் என்பதை,

**“ மண்திணி ஞாலத்து வாழ்வோர்க்கெல்லாம்**

**உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோரே ”[62] (18)**

என பாடலில் கூறப்பட்டுள்ளது.

பொருள் மொழி காஞ்சித் துறையில் நக்கீரனார் பாடிய புறப்பாடல் ஒன்று ஈகையின் சிறப்பைப் புதிய சிந்தனையோடு வற்புறுத்துகிறது. ஒருவர் எவ்வளவு தேடினாலும் அவருடைய அடிப்படைத் தேவைக்களுக்கென்று பயன்படுவன சிலவாகும். செல்வத்தை பகிர்ந்து கொடுத்து இன்பம் பெறலே அதனாற் பெறக்கூடிய பயனாகும் என்பதை பற்றி கூறப்பட்டுள்ளது.

**“ தெண்கடல் வளாகம் பொதுமை இன்றி**

**..................**

**உண்பது நாழி உடுப்பவை இரண்டே**

**பிறவும் எல்லாம் ஓரொக்கும்மே**

**செல்வத்துப் பயனே ஈதல் ”[63] (189)**

இவ்வாறு நிலைத்த உண்மைகளை கூறுவனவும் அன்றைய சமுதாயத்தை வெளி காட்டுவனவுமாகிய பாடல்களைக் கொண்ட புறநானூறு தமிழர்க்கு கிடைத்த பெருங்கருவூலம் எனில் மிகையாகாது.

உலகம் உள்ள அளவும் நினைத்திருக்கத் தக்க உயர்ந்த அறநெறிகளின் அரங்கமாக இந்நூல் விளங்குகின்றது.

**“ யாதும் ஊரே யாவரும் கேளீர்**

**தீதும் நன்றும் பிறர் தரவாரா ”[64] (192)**

**“ நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்**

**அல்லது செய்தல் ஓம்புமின் ”[65] (195)**

போன்ற கருத்துக்கள் இன்றும் உலகிற்கு உணர்த்துகின்றனவாகும்.

## பதிற்றுப்பத்து:

பத்துப் பாடல்களைக் கொண்ட பத்தும் பதிற்றுப்பத்தாகும். இந்நூல் மொத்தம் நூறு பாடல்களைக் கொண்டது. பதிற்றுப்பத்து நூலில் முதல் மற்றும் இறுதிப் பத்துகள் கிடைக்கவில்லை. தற்பொழுது இரண்டாம் பத்து முதல் ஒன்பதாம் பத்துவரை உள்ள எட்டு பத்துக்கள் தான் கிடைக்கின்றன.

புற இலக்கிய வகையைச் சேர்ந்தது. இந்நூல் பதிற்றுப்பத்து முழுவதும் சேர அரசர்களைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு அமைக்கப்பட்டது. ஒவ்வொரு பத்திலும் சேர அரசர்கள் புகழப்படுகிறார்கள். ஒவ்வொரு பத்தும் ஒவ்வொரு புலவர்களால் பாடப்பட்டுள்ளன.

ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் இடம் பெற்றுள்ள பதிகம் என்னும் பகுதி முக்கியமானது. அப்பதிகத்தில் சேர அரசனுடைய பெருமையும் வரலாறும் குறிப்பிடப்பட்டு உள்ளது.

## புலவர்களும் பாடப்பட்ட அரசர்களும்:

பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்து குமட்டூர் கண்ணனார் என்னும் புலவரால் பாடப்பெற்றது. சேரமன்னன் இமயவரம்பன் நெடும் சேரலாதன் என்பவனே இதன் பாட்டுடைத் தலைவன். இதைப் பாடியதற்காக இப்புலவருக்கு நிலக்கொடை வழங்கப்பட்டதாகவும், நிலவருவாயில் ஒரு பகுதி வழங்கப்பட்டதாகவும் பதிகம்குறிப்பிடுகிறது. பாலை கௌதமனார் என்னும் புலவர் மூன்றாம் பத்தினை பாடியுள்ளார். பல்யானை செல்கெழுகுட்டுவன் என்னும் அரசன் பாட்டுடைத் தலைவன்ஆவான்.

நான்காம் பத்தினை காப்பியாற்றுக் காப்பியனார் என்னும் புலவர் பாடியுள்ளார். களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் என்னும் சேர அரசனைப் புகழ்ந்து பாடப்பட்டுள்ளது.

ஐந்தாம் பத்தினைப் பரணர் என்னும் புலவர் பாடியுள்ளார். இதன் தலைவன் கடல் பிறகோட்டிய செங்குட்டுவன். சங்க காலப் புலவரான கபிலர்

போல பரணரும் சிறந்த புலவராவார். "கபில பரணர்" என்னும் சொற்றொடர் தமிழ் மரபில் உண்டு. பரணர் பாடிய பாடல்களாக குறுந்தொகையில் பதினாறு பாடல்களும், அகநானூற்றில் முப்பத்து நான்கு பாடல்களும், நற்றிணையில் பன்னிரண்டு பாடல்களும், புறநானூற்றில் பதிமூன்று பாடல்களும் இடம் பெற்றுள்ளன.

ஆறாம் பத்தினைப் பெண்பாற் புலவர் ஒருவர் பாடியுள்ளார். அவர் பெயர் காக்கைப் பாடினி எனும் நச்செள்ளையார். இதன் பாட்டுடைத் தலைவன் ஆடு கோட்பாட்டுச் சேரலாதன். இப்புலவர் பாடிய பாடல் குறுந்தொகையில் ஒன்றும், புறநானூற்றில் ஒன்றும் இடம் பெற்றுள்ளது.

குறிஞ்சி பாடுவதில் புகழ் பெற்றவரான கபிலர் ஏழாம் பத்தினைப் பாடியுள்ளார். செல்வக் கடுங்கோ வாழியாதனை பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடியுள்ளார்.

எட்டாம் பத்தினை அரிசில்கிழார் என்னும் புலவர் பாடியுள்ளார். பெருஞ்சேரல் இரும்பொறை என்னும் சேரமன்னன் இதன் பாட்டுடைத் தலைவன் ஆவான்.

அரிசில்கிழார் பாடிய பாடல்கள் குறுந்தொகையில் ஒன்றும் புறநானூற்றில் ஏழும் காணப்படுகின்றன.

பெருங்குன்றூர் கிழார் என்னும் புலவரால் ஒன்பதாம் பத்து பாடப்பட்டுள்ளது. இளஞ்சேரல் இரும்பொறை என்னும் சேர மன்னனின் பெருமை இதில் பாடப்பட்டுள்ளது.

பதிற்றுப்பத்து பாடிய ஒவ்வொரு புலவர்களும் அந்தந்த அரசர்களால் பல்வேறு வெகுமதிகளால் சிறப்பு செய்யப்பட்டனர். ஏழாம் பத்தினைப் பாடியதற்காக கபிலருக்கு சேர மன்னன் நன்றா எனும் குன்றின் மேல் ஏறி நின்று கண்ணுக் கெட்டிய தூரம் வரையில் உள்ள நிலங்களை வழங்கினான் என்று தெரிகிறது.

ஒவ்வொரு பாட்டுக்கும் திணை, துறை, வண்ணம், தூக்கு என்பன காணப்படுகின்றன. இவை இசையுடன் பாடப்பட்டன. நான்காம் பத்து அந்தாதித் தொடையால் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. சேர வேந்தர்களின் வீரமும். கொடையும், அவர்தம் தேவியரின் அழகும், சிறப்பும் கற்பு மேம்பாடும் இப்பாடல்களில் நன்கு விளக்கப்பட்டுள்ளன. பந்தர், கொடுமணம் என்ற இரண்டு ஊர்களின் செல்வ வளமும் இவ்விடங்களில் சேரரின் பண்டகச் சாலைகள் இருந்தமையும் அறியத்தக்கன.

நன்மக்கள் வேண்டி வேள்வி செய்தல் உண்டு என்பதனை இந்நூலால் அறிகின்றோம். அந்தணரின் ஆறு கடமைகள் இன்னன்னவென்று செய்யுள் கூறுகின்றது. அறநெறிப்படி ஆளப்படும் அரசுக்கு தடையாக அமைவன இன்னவை என இந்நூல் கூறுகின்றது.

**“ சினனே காமம் கழிகண்ணோட்டம்**

**அச்சம் பொய்ச்சொல் அன்பு மிக உடைமை**

**தெறல் கடுமையொடு பிறவும் இவ்வுலகத்து**

**அறம் தெரி திகிரிக்கு வழியடையாகும் ”**[66] **(22)**

என்று கூறப்பட்டுள்ளது.

## பரிபாடல்

‘பரிபாட்டு’, ‘ஓங்கு பரிபாடல்’ எனச் சிறப்பிக்கப்படும்.

பரிந்து செல்லும் ஓசையையுடைய பரிபாட்டால் ஆனமையால் இந்நூல் பரிபாடல் எனப் பெயர் பெறுகின்றது. தரவு, எருத்தம், அராகம், கொச்சம், அடக்கியல், வாரம் என்ற உறுப்புகளுடன் எண்ணும் கலந்து வருவது பரிபாடலாகும். 25 முதல் 400 அடி வரையிலான அடி எண்ணிக்கை பெறும் என்பார் தொல்காப்பியர். இந்நூல் அகப்பொருளையும், புறப்பொருளையும்

கொண்டுள்ளமையால் அகத்திற்கும், புறத்திற்கும் பொதுவான நூலாக விளங்குகிறது.

இந்நூல் இறையனார் அகப்பொருளுரையில் எழுபது பாடல்கள் எனக் குறிக்கப் பெறுகிறது. இதற்குப் பழைய வெண்பாவும்,

**“ திருமாற் இருநான்கு,செவ்வேட்டுமுப்பத்**

**தொருபாட்டு, காடுகிழட்கு ஒன்று - மருவினிய**

**வையையிரு பத்தாறு மாமதுரை; நான்கென்ப**

**செய்ய பரிபாடற் றிறம் ”**[67]

எனச் சான்று பகரும். திருமாலுக்கு 8, முருகனுக்கு 31, கொற்றவைக்கு 1, வையைக்கு 26, மதுரை 4, என எண்ணிக்கை பெற்றிருந்த பரிபாடல். இன்று திருமாலுக்கு 6 முருகனுக்கு 8, வையைக்கு 8, என 22 பாடல்களையே கொண்டுள்ளது. புறத்திரட்டில் காணப்படும் இரண்டு பரிபாடல்களையும் சேர்த்து 24 பாடல்கள் இதன் கண் உள்ளது என்பர்.

## புலவர்கள்

பரிபாடலைப் பாடிய புலவர்களாக கீரந்தையார், கடுவன் இளவெயினார், நல்லந்துவனார், மையோடக்கோவனார், குன்றம்பூதனார், கரும்பிள்ளை நப்பூதனார், நல்லழுதியார், கேசவனார், இளம்பெருவழுதியார், நல்லழுசியார், நப்பண்ணனார், நல்லச்சுதனார் ஆகியோர் குறிப்பிடப்படுகிறார்கள்.

## சிறப்பு

பரிபாடலில் சமயம் சார்ந்த கருத்துக்கள் பெருமளவில் இடம் பெற்றுள்ளன. திருமால், முருகன், பரமசிவன் போன்ற தெய்வங்கள் பற்றிய செய்திகள் அழகர் மலையாகிய இருந்தையூர், திருப்பரங்குன்றம், வைகை

ஆறு போன்ற திருத்தலங்களின் சிறப்புகள் பரிபாடலில் எடுத்துக் கூறப்படுகின்றன.

கடவுளிடம் கேட்கும் வேண்டுதல்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவிதமாக பரிபாடலில் இடம் பெற்றுள்ளன. பாடலில் பொருளையோ, பொன்னையோ, போகத்தையோ கேட்காமல் அருளையும், அன்பையும், அறனையும் கடவுளிடம் வேண்டுவதை,

**“ யா அம் இரப்பவை**

**பொருளும், பொன்னும், போகமும் அல்ல, நின்பால்**

**அருளும், அன்பும், அறனும் மூன்றும்**

**உருள் இணர்கடம்பின் ஒலிதாராயே ”[68] (5:78.81)**

என இப்பாடலில் கூறப்பட்டுள்ளது. வையையில் நீராடும் அழகும், காதற்காட்சிகளும் கண் கொள்ளத்தக்கையவாகும். ஆற்றில் மெலியவர் துறையோரமாக கரையில் நின்றுகுளிக்க வலியவர் புனலுள் மூழ்கித் திளைத்து நீராடி மகிழ்கிறார்கள். வெள்ளத்தை கண்டு மக்கள் மருள்கிறார்கள் என்பதை,

**“ வலியவர் அல்லோர் துறைதுறை அயர**

**மெலியர் அல்லோர் விருந்து புனல்அயர**

**சாறும் சோறும் நெய்யும் மலரும்**

**நாறுபு திகழும் யாறு வரலாறு ”[69] (6)**

என்பதை இப்பாடலில் காணலாம்.

## பத்துப்பாட்டு

சங்க இலக்கியங்களில் தொடர் பாடலடிகளைக் கொண்டதாக பத்துப்பாட்டு விளங்குகின்றது. இந்த வகையில் பத்துப் பாடல்கள் இருந்தது என்பதை முதன்முதலாக தெரிவித்தவர் நச்சினார்க்கினியரே ஆவார். இவரது தொல்காப்பிய உரை இல்லையென்றால் பத்துப்பாட்டு என்ற ஒரு கட்டமைப்பு இருந்தது என்ற செய்தி வெளிப்பட்டு இருக்காது.

'பாட்டும் தொகையும்' எனும்போது பாட்டு என்பது பத்துப்பாட்டைக் குறிக்கும். இங்கு பாட்டு முன் கூறப்படும் பெருமை பெற்றது. மூத்தோர்கள் பாடியதில் பத்துப்பாட்டும் எட்டுத் தொகையும் என்று தமிழ்விடுதூது இதனைப் புகழும் பத்துப்பாட்டிலுள்ள பாடல்களைப் 'பா', 'பாட்டு' என்றும் கூறுவர்.

பத்துப்பாட்டுக்களாவன திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்பதனை,

**" முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை**
**பெருக வளமதுரைக் காஞ்சி - மருவினிய**
**கோல நெடுநல்வாடை கோல்குறிஞ்சிப் பட்டினப்**
**பாலை கடாத்தொடும் பத்து"**[70]

என்னும் பழம்பாடல் நிறுவுகின்றது.

"தீயின் அன்ன ஒண் செங்காந்தள்" என மலைபடு கடாத்துள் வரும் அடிக்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையால் சங்க புலவர்களே இதனைத் தொகுத்தவர் என அறியமுடிகின்றது. பத்துப்பாட்டு எனும் தொகுப்பு 12ம் நூற்றாண்டின் பின்னரே தோன்றி இருக்க வேண்டும் என்றக் கருத்தும் நிலவுகிறது.

பத்துப்பாட்டில் அகப்பொருளில் அமைவன 3.அவை முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை. புறப்பொருளானவை 6. மதுரைக் காஞ்சியை தவிர்த்து பிற ஐந்தும் ஆற்றுப்படை பாடல்கள், மதுரைக் காஞ்சி நிலையாமையை அறிவுறுத்தும் பாடல்களாகும். நெடுநல் வாடை அகப்புறம் எனக் கூறப்படுகிறது.

பத்துப்பாட்டில் பாடப்பட்டுள்ளோரைப் பற்றி,

**“ முருகாறு செவ்வேள் : பொருநாறு பாலை**

**கரிகால் நெடுஞ்செழியன் காஞ்சி - இருபாணும்**

**நல்லியக் கோடன்;இளந்திரையன்; நன்னன்கடாம்**

**கல்வித் தலைவர் கருது ”**[71]

என்னும் பழம்பாடல் தெளிவுறுத்துகின்றது.

## திருமுருகாற்றுப்படை

இந்நூலின் பாட்டுடைத் தலைவன் (பாடப் பெறுபவன்) முருகக் கடவுள் இருக்கின்ற இடங்கள், வழிபடும் முறைகள் ஆகியவற்றைக் கூறி முருகக் கடவுளின் அருளைப் பெறுவதற்கான வழிகள் இப்பாட்டில் கூறப்பட்டுள்ளன. எனவே அரசன் அல்லது வள்ளலிடம் பொருள்களைப் பெறுவதற்கு உரிய வழிகளைக் கூறுவது போல, முருகக் கடவுளின் அருளைப் பெறுவதற்கு உரிய வழிகளை இப்பாடல் கூறுவதால் இதற்கு திருமுருகாற்றுப்படை என்னும் பெயர் வழங்கலாயிற்று. இந்நூலுக்குப் புலவராற்றுப்படை என்னும் பெயரும் உண்டு.

திருமுருகாற்றுப்படையில் முருகு என்பது ஆற்றுப்படை, வழிப்படுத்துவது எனலாம். அதாவது அழகிய முருகனிடம் செல்வதற்கு ஆற்றுப்படுத்துவது எனப் பொருள்படும்.

**“வீடு பெறுவதற்கு சமைந்தானோர் இரவலனை வீடு பெற்றான் ஒருவன்முருகனிடத்தே ஆற்றுப்படுத்துவது ”**[72] என்று திருமுருகாற்றுப்படைக்கு பொருள் கூறுவார் நச்சினார்க்கினியர்.

**“திருமுருகாற்றுப்படை என்பதற்கு முத்தியைப் பெற்றானொருவன் பெறுவதற்குப் பக்குவனாகிய ஓர் இரவலனைப் பெறும் பொருட்டுப் சுப்ரமணியசுவாமியிடத்தே வழிப்படுத்தலையுடைய பிரபந்தமெனப பொருள்”**[73] என்று ஆறுமுக நாவலர் குறிப்பிடுகிறார்.

புலவனைப் பார்த்து முருகனின் ஆறுபடை வீடுகளுக்கும் சென்று அவனைப் போற்றி புகழ்ந்து பாடியவராதலும் பெற்றுக் கொள்ள முடியாதநிலையிலும் மேலான பரிசாகிய வீடுபேறு பெற்றுக் கொள்வதற்கு வழிப்படுத்தும் காரணத்தாலேயே புலவராற்றுப்படை என்ற பெயரும் கொண்டு அழைக்கப்படுகிறது.

## திருமுருகாற்றுப்படையின் உள்ளடக்கம்

திருமுருகாற்றுப்படை முருகக்கடவுள் எழுந்தருளியிருக்கும் ஆறுபடை வீடுகளான திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருச்செந்தூர், திருஆவினன்குடி (பழனி) திருவேரகம் (சுவாமிமலை) திருத்தணி (குன்றுதோடல்), பழமுதிர்சோலை ஆகியவை பற்றிகூறுகின்றது.

திருப்பரங்குன்றம் என்ற முதலாவது பகுதியில் முருகனின் உருவச்சிறப்பான ஆறுமுகங்களைக் கொண்டவன். முருகனின் மேனி நிறம் போன்றே அவன் அணிந்துள்ள ஆடை, மாலை முதலியன செம்பிழம்பாய் காட்சியளிக்கின்றன.

முருகன் அணிந்து உள்ள ஆடையினை **“நலம் பொது கலிங்கம்”**[74] எனவும் **“வெண்டுகில்”**[75] எனவும் அறிய முடிகிறது. சூரமகளிர் செயல்கள், முருகன் சூரனைச் சங்காரம் செய்யும்திறன், மதுரையின் பெருமை, திருப்பரங்குன்றத்தின் அழகான இடத்தில் முருகன் கடவுள்களெல்லாம்

வணங்கும் கடவுளாக காணப்படுகின்றான். திருப்பரங்குன்றத்தில் உறைவிடம் கொண்டு பக்தர்களுக்கு அருள் தருகின்றான். திருப்பரங்குன்றம் **“ இன்றுள்ள மதுரைக்குத் தென்மேற்கில் ஏறத்தாழ ஐந்து கல் தொலைவில் உள்ளது ”**[76] என்பர்.

**“ திருவீற் றிருந்த தீது நீர் நியமத்து**

**மாடம் மலி மருங்கின் கூடற் குடற்வயின்**

**குன்று அமர்ந்து உறைதலும் உரியன் அதா அன்று ”**[77]

மதுரைக்கும் திருப்பரங்குன்றத்துக்கும் இடையே வயல்கள் மிகுதி உண்டு. வயலில் உள்ள தாமரை மலரில் தங்கிய வண்டுகள் வைகறை பொழுதில் தேன் உண்டு ஞாயிறு தோன்றியதும் பரங்குன்று சுனைப்பூவில் ஆரவாரிக்கும் வளங்கொண்ட மலைக்கு உரியவன் முருகன் என்பதால் இவனது திருமுகம் காண திருமால், சிவன், பிரம்மன், இந்திரன் உள்ளிட்ட தேவர் கூட்டம் பரங்குன்றம் வந்து தங்கினர். அதனால் பரங்குன்றம் இமயமலையை ஒத்து காணப்படுவதாய் பாடல் பொருள் விளக்கம் தருகின்றது.

திருச்சீரலைவாய் என்ற இரண்டாம் பகுதியில் முருகன் அடியார்க்கு அருள் புரிய எழுந்தருளியிருக்கும் யானையின் இயல்பு திருச்செந்தூர் என அழைக்கப்படும். இவ்வூர் செந்தி, செந்தில் செந்தூர் என மரூஉப் பெயர்களைக் கொண்டு விளங்குகின்றது. இது கடலலைகள் மோதும் கரையோரத்தில் அமைந்துள்ளதால் **“அலைவாய் ”**[78] என அழைக்கப்படுகிறது. இவ்வுண்மையினை ஆறுமுகங்கள் கொண்டு முருகன் பக்தர்களுக்கு காட்சி கொடுக்கும் போது,

**“ அந்தரப் பல்லியம் கறங்க, திண்காழ்**

**வயிர் எழுத்து இசைப்ப, வால்வளை குரல,**

**உரம் தலைக் கொண்ட உரும்இடி முரசமொடு**

**பல்பொறி மஞ்ஞை வெல்கொடி அகல**

**விசும்பு ஆறுஆக விரைசெல்ல முன்னி,**

**உலகம் புகழ்ந்த ஓங்கு உயர் விழுச்சீர்**

**அலைவாய் சேறலும் நிலைஇய பண்பே, அதாஅன்று "**[79]

தேவதூந்துபி முழங்கவும், கொம்புகள் மிக்க ஒலிக்கவும் வெள்ளிய சங்குகள் முழங்கவும், இடியை ஒப்ப முழங்கும் முரசுடன் வெல் கொடியிலிருந்து மயில் அகவும் ஆன்றோர்களால் பலகாலம் புகழப்படும் தாமனுதலைவாய் எனும் தெய்வப் பதியில் அனைவருக்கும் அருள் பாலிக்கின்றான். பன்னிரு கரங்கள் ஆற்றும் செயல்களான முருகனின் தோள்கள் பரந்து காணப் பெற்றன. ஒளி மிகுந்த பொன்மாலை முருகனின் அழகிய மார்பிடத்து கிடந்தது. வேற்படையை எறிந்து பகைவர் உடலை பிளப்பவனாகவும், பிளந்தபின்னே மீண்டும் அதை வாங்கி கொள்ளும் ஆற்றல் பெற்றனவாகவும் முருகப் பெருமானின் தோள்கள் விளங்கின.

வீட்டுலகத்துச் செல்லும் முறைமையினையுடையத் துறவிகளுக்கு பாதுகாவலனாக ஏந்தியது ஒரு கை. அதற்கு இணையாகிய மற்றொருகை இடையில் வைக்கப்பட்டது.

ஒருகை செம்மை நிறமுடைய ஆடைஅணிந்த காலின் மேலே கிடந்தது. அதற்கு இணையாகிய மற்ற கை அங்குசத்தைச் செலுத்தியது.

ஏனைய இரண்டு திருக்கைகளில் ஒன்று அழகிய கேடயத்தை ஏந்தியது. மற்றொன்று வேற்படையும் வலமாகச் சுழற்றியது. ஒருகை முனிவர்களுக்கு எஞ்சிய பொருளை ஏமுற நாடி உணர்த்துமாறு மார்போடு விளங்கியது. அதற்கு இணைந்த கை மார்பின் மாலையோடு சேர்த்து அழகு பெற்றது.. ஒருகை களவேள்விக்கு முத்திரை காட்டியது. அதற்கு இணையான கை இனிய ஓசையுடைய மணியை ஒலித்துத் தன் மங்கல வரவினை உலகிற்குக் காட்டியது. ஒருகை உலகில் மிக்க மழையைப் பெய்யச் செய்தது.

அதற்கிணையான மற்ற கை தெய்வ மகளிர்க்கு மணமாலை சூட்டியது. இவ்வாறு முருகப் பெருமானின் பன்னிரு கரங்களும் அருமையான தொழில்களைச் செய்து மக்களைக் காத்து வந்தன என்பன பற்றிச் சொல்லப்படுகிறது.

திருஆவினன் குடி என்ற மூன்றாம் பகுதியில் முனிவர்களின் உடலும் உள்ளமும் அருள் நிரம்பியது.அவர்கள் காவிஆடை உடுத்தி வலம்புரிச் சங்கையொத்த அழகிய நரைமுடியை உடையவர்கள் முனிவர்கள் தேவருடன் முருகனை வழிபடவரும் மகளிர் வனப்பும் ஏனையவர்கள் பற்றிய செய்திகளும் உள்ளன.

திருவேரகம் என்ற நான்காம் பகுதியில் அந்தணர்களின் இயல்பும், அவர்கள் முருகனை வழிபடும் முறைமையையும் கூறப்பட்டுள்ளன. குன்று தோறாடல் என்ற ஐந்தாம் பகுதியில் குன்றக்குரவை நிகழ்ச்சி, முருகனை வணங்க வரும் பாடு மகளிர், ஆடுமகளிர் மாண்புகள் அவர்களின் சிறப்புகள் ஆகியனவும், பழமுதிர்ச்சோலை என்ற ஆறாம் பகுதியில் முருகன் எழுந்தருளியிருக்கும் இடங்கள் அதற்கு ஆற்றுப்படுத்தும் முறை முருகனின் அருள் பெறும் வழி அவன் அருள்புரியும் வகை பழமுதிர்ச்சோலையில் உள்ள அருவியின் சிறப்பு ஆகியன விரித்துரைக்கப்படுகின்றன.

## முருகனின் தோற்றப்பொலிவு

முருகனின் ஆறுபடை வீடுகளில் முதலாவது படைவீடாக அமைவது திருப்பரங்குன்றம் இது 'கூடல்நகர்' என்று சொல்லப்படுகின்ற மதுரையில் அமைந்திருக்கிறது.

**"மந்தியும் அறியாமரன் பயில் அடுக்கத்து "[80] (முருகு.42)**

என்ற வரிகள் ஊடாக மந்திகளும் அறியமாட்டாத மரங்கள் அடர்ந்து செழித்துப் பூக்களால் தொடுத்த மாலையை உடையவனாக முருகன் விளங்குகின்றான்.

அழகான இயற்கை வனப்பின் மத்தியில் அமைந்து இருக்கும் முருகனின் தோற்றப்பொலிவு பற்றிக் கூறும்போது, கற்புமிக்க தெய்வயானையின் கணவன் என்றும், கடம்பமாலை புரளும் மார்பினன் என வர்ணிக்கப்படுகிறது. குறிஞ்சி நிலத்தெய்வமான முருகனின் அடையாள மாலை கடம்பமாலை. கடம்பமரம் அவன் விரும்பி உறையும் மரமாகக் குறிப்பிடப்படுகிறது. திருப்பரங்குன்றத்தில் அமர்ந்திருக்கும் முருகனுக்குரியப் பூ காந்தள் பூ.அதனாலேயே காந்தள் கண்ணி சூடியவன் என்றும் பாடப்படுகிறது.

## முருகனின் அருட்சிறப்பும், வீரமும்

இறைவனின் அருள் பற்றிய செய்திகளில் தீவினை புரிவோரை அழிக்கும் செயல் சொல்லப்படுகிறது. இறையருளால் மழைபொழிதலும் தவமும் அறிவும் மிகுதல் இயல்பு. இதனாலேயே வள்ளுவர் கடவுள் வாழ்த்தை அடுத்து வான்சிறப்பைக் கூறுவார். நக்கீரரும்,

**“ கார்க்கோண்முகந்த கமஞ்சூன் மாமழை ”[81](முருகு.7)**

என்ற அடிகள் இதனைப் புலப்படுத்துகின்றன.

திருப்பரங்குன்றத்தில் அமர்ந்திருக்கும் முருகனின் சிறப்பு பற்றி சொல்லப்படும் போது குறிப்பாக சூரனின்போர்த்தொழில், சூரனை வதம் செய்த புராணக் கதை நினைவுபடுத்தப்படுகிறது. திருப்பரங்குன்றத்தில் அமர்ந்திருக்கும் கூடல்நகரில்,

**“ செருப் புகன்று எடுத்த சேண் உயிர் நெடுங்கொடி**

**வரிப்புனை பந்தொடு பாவை தூங்க**

**பொருநர்த் தேய்ந்த போர் அருவாயில் ”[82] (முருகு.67.69)**

என்ற வரிகள் ஊடாக போர்த்தொழில் இல்லாத படியால் தூக்கிக் கட்டப்பட்ட கொடிகளும், பந்து பாவைகளும் அறுப்பார் இன்றி அசைந்து கொண்டிருந்தன என்று சொல்லப்படுகிறது.

**“ செறுநர்த் தேய்த்த செல்உறழ் தடக்கை”[83](முருகு.5)**

என பகைவர்களாகிய அசுரர்களை அழித்த இடியினைப் போன்ற ஆற்றல் பெற்ற கையினை உடையவன் முருகன் என அவனின் வீரம் எடுத்துரைக்கப்படுகிறது. முருகன் சூரனை வேலால் எறிந்து கொன்றதையும், சூரன் கடலின்நடுவே மாமரமாக தோற்றங் கொண்டு தலைகீழாக மாயவித்தை காட்டும்போது அம்மாமரத்தை வெட்டிய வெற்றியும்,

**“ கவிழ் இணர்**

**மா முதல் தடிந்த மறுவில் கொற்றத்**

**தெய்யா நல்லிசை ”[84] (திருமுருகு.59.61)**

என்ற அடிகளில் வெளிப்படுகிறது. பிரணவ மந்திரத்தின் பொருள் தெரியாமையால் படைத்தற் கடவுளாகிய பிரம்மனை சிறையில் அடைத்த புராணக் கதை திருஆவினன் குடியில் சொல்லப்படுகிறது. அதனால் ஏனைய இருகடவுளரும் தத்தமது தொழிலை ஆற்றமுடியாமல் திருஆவினன் குடி நோக்கி வருகின்றனர். அதனோடு தேவர்களுக்குத் தீங்கு விளைவித்த மூன்று அசுரருடைய முப்புரங்களையும் எரித்த சிவனின் கதையும்,கௌதம முனிவரால் சாபம் பெற்ற இந்திரனின் கதையும் சொல்லப்படுகின்றது.

## பொருநராற்றுப்படை

இதன் அடிகள் 248 வஞ்சிஅடி இடைமடுத்த ஆசிரியப்பாவால் ஆனது. பரிசல் பெறபோகும் பொருநனை பரிசல் பெற்று வந்த பொருநன் ஆற்றுப்படுத்துவதாக அமைந்ததால் “பொருநராற்றுப்படை” எனப்பட்டது.

1.ஏர்க்களம்பாடுவோர்: ஏர் உழும்வயல்,வேளாண்மை பற்றிப் பாடுதல்.

2.போர்க்களம்பாடுவார்: மன்னர் போர்புரியும் போர்க்களத்தை நேரில் சென்று கண்டு பாடுதல்.

3.பரணிபாடுவோர்: ஆயிரக்கணக்கான யானைகளைக் கொன்ற வீரனின் வெற்றியைப் பாடுதல்

கரிகாற் பெருவளத்தானைப் புரவலனாகக் கொண்டு முடத்தாமக் கண்ணியார் பாடிய ஆற்றுப்படை. தம் காலத்திறனைக் காட்டிய திருவிழா முடிந்ததும் வேற்றூர் நாடிப் பொருநர் செல்வதாக இப்பாடல் தொடங்குகிறது. கரிகாலனின் வீரம்,கொடை, நாட்டுவளம், காவிரியின் சிறப்பு ஆகியவை போற்றப்பட்டுள்ளன. கரிகாலன் தாய் வயிற்றிலிருந்து தாயம் எய்தல், கன்னிப்போரில் சேரர் பாண்டியரை வென்றமை போன்ற வரலாற்றுச் செய்திகள் இதில் இடம் பெறுகின்றன. கரிகாலனின் வலிமை, "வெண்ணித் தாங்கிய வெருவருநோன்றாள்" எனச் சிறப்பிக்கப்படும் பொன்னியின் புதுப்புனல் வரவு, விறலியர் பொன்னரி மாலையைப் பரிசாகப் பெறல், செல்வச்செருக்கு, வறுமையின் வாட்டம் போன்றன விளக்கப் பெற்றுள்ளன.

பாலையாழை மீட்டிப் பாலைப்பண் பாடுவர். அவர் துயரச்சுவை நிரம்பிய இசை கல்லையும் உருக்கும் அந்த இசையின் ஆற்றலைப் பாடலில்,

**" ஆறலை கள்வர் படைவிட அருளின்**

**மாறுதலைப் பெயர்க்கும் மறுஇன் பாலை "[85] (21-22)**

வழிப்பறி செய்யும் கள்வர்கள் வழியில் நடந்து செல்பவரைக் கொல்வதற்காக கையில்,வில்,வேல் முதலிய கொலைக் கருவிகள் வைத்திருப்பர். பாலைப் பண்ணை கேட்டால் அவர்களின் மனம் உருகி இக்கொலைக் கருவிகள் கையிலிருந்து தாமாக நழுவி கீழே விழுந்து விடுமாம். அந்த கொலை வெறியும் அவர்கள் நெஞ்சை விட்டு ஓடி விடுமாம் என்பதை பாடலின் கருத்தாக கூறப்பட்டுள்ளது.

**" முதியோர்**

**அவைபுகு பொழுதில் தம்பகை முரண் செலவும் "[86] (187)**

என நரை முடித்து செய்த வரலாறு கூறப்படுகிறது.சோழ மன்னனின் நானில வளம் திணை மயக்கமாக இப்பாடலில் கூறப்படும் அழகு கருதத்தக்கது. பாலையாழைப் பற்றிய வருணனை மிகசிறப்பாக உள்ளது அந்த யாழின் முழுத்தோற்றம் "திருமணம் செய்த புதுப்பெண்ணை நீராட்டியது போல் இருக்கிறது என்று கூறும் உவமை அழகானது,

**" மணம் கமழ் மாதரை மண்ணி அன்னகாட்சி "[87] (20)**

இப்பாடலில் காணலாம். கரிகாலனின் விருந்தோம்பல் சிறப்பைப் பொருநன் கூறும் பகுதிகள் இனிய சொல்விருந்தாக அமைந்துள்ளது.

சென்ற நாள்தொட்டுப் பகலும் இரவும் மூச்சுக் காற்றுக்கு கூட உள்ளே இடமின்றி கொழுப்புடைய கறியையே உண்டனர். அதனால் பொருநனுக்கும் அவன் கூட்டத்தார்க்கும் பற்கள் தேய்ந்து போயினவாம்,

**" பல்லே கொல்லை உழுகொழு ஏய்ப்ப**

**எல்லையும் இரவும் ஊன்தின்று மழுங்கி "[88] (117.118)**

(கொல்லை நிலம். உழுகொடு உழுகின்ற ஏர்முனைக்கொழு. எல்லை பகல். ஊன் கறிமாமிசம்)

தின்று, தின்று பற்கள் தேய்ந்து போயின என அழகான உவமை கொண்டு விளக்குகிறார்.

பொருநன் அணிந்திருந்த பழைய ஆடையில் "ஈரும்பேனும் இருந்து அரசாள்கின்றது போல இருந்தது. அது வேர்வையில் நனைந்து அழுக்கில் திரண்டு கிழிசல்களை மீண்டும் மீண்டும் தைத்ததால் வேறு நூல் நுழைந்தகந்தலாகி விட்டது. அதனால் துணி நெய்தது போல் இல்லாமல் தைத்ததுபோல் இருக்கிறது. இந்த பழையத்துணியை நீக்கி விட்டு உடுத்திக் கொள்ள கரிகாலன் கொடுத்த ஆடையானது நூல் இழை ஒடிய வழி தெரியாமல் கண் பார்வையால் கண்டு பிடிக்க முடியாத அளவுக்கு பூ

வேலைப்பாடு கனிந்து இருக்கிறதை பாம்பு உரித்த தோல் போல் மென்மையாய் உள்ளதை,

**“ நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து**

**அரவுரி அன்ன அறுவை நல்கி…”[89] (82.83)**

இப்பாடல் கூறுகிறது.

## சிறுபாணாற்றுப்படை

இதன் அடிகள் 269. பாடியவர் இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தணார். பரிசு பெற்ற பாணன், பரிசில் பெறவிருக்கும் பாணனை ஒய்மாநாட்டு நல்லியக்கோடனிடம் ஆற்றுப்படுத்துவதாக அமைந்தது. இப்பாடல் ஆசிரியப்பாவால் ஆனது. இதனை “சிறப்புடைத்தான சிறுபாணாற்றுப்படை” எனத் தக்கயாகப் பரணி குறிப்பிடும்.

சிறுபாணரை ஆற்றுப்படுத்துவதாக அமைந்து அடியளவில் சிறுமையுடைத்தாதல் ‘இன்குரற்சீறியாழ் இடவயிற்றழீஇ’ என்ற அடியை கொண்டிருத்தல், சிறுபாண் குடியினரை ஆற்றுப்படுத்தல், சில பண்ணறிந்தமை ஆகியவை காரணமாக இப்பாடல் சிறுபாணாற்றுப்படை எனப்பெயர் பெற்றது. பொருநாற்றுப்படையை அடுத்து சிறுபாணாற்றுப்படை தொகுக்கப்பட்டுள்ளது. பாணர்கள் மூவகைப்படுவர். அவரை,

1. இசைப்பாணர், 2. யாழ்ப்பாணர், மண்டைப்பாணர்

(இரந்துண்டு வாழ்பவர்) என வகைப்படுத்துவர். இவருள் யாழ்ப்பாணர் என்பவர்

1. சீறியாழ்ப்பாணர் (சிறியயாழைக் கையில் வைத்திருப்பவர்)
2. பேரியாழ்ப்பாணர்(பெரியயாழை வைத்திருப்பவர்)

என இருவகைப்படுத்துவர்.

## நல்லியக்கோடனின் பண்புகள்

நல்லியக்கோடன் உயர்பண்புகள் அனைத்தும் கொண்டவனாக இருந்திருக்கிறான். செய்ந்நன்றி அறிதல், சிற்றினம் சேராமை, இனிய முகமலர்ச்சியுடன் எப்போதும் இருத்தல் இவனது சிறப்புகள் சிறந்த அறிவுடையோர் மட்டுமே இவனைச் சுற்றி இருப்பார்கள். அந்த உயர்ந்தோர் புகழும் செயல்களை மட்டுமே செய்வான்.தன்னைப் பணிந்தவர்கள் மீது மாறாத அன்பு கொண்டவன். கொடிய சினம் இல்லாதவன் ஆண்மை மிக்க பகைவர் கூட்டத்தில் புகுந்து சிதைக்கும் வீரமும் ஆற்றலும் மிக்கவன். தன்படை தளரும் இடத்தில் தான் சென்று அதைத் தாங்கும் உறுதி மிக்கவன். வாள் வீரர்கள் புகழும் வலிமை மிக்கவன். எண்ணியதை அப்படியே நிறைவேற்றும் திண்மை உடையவன். பெண்களை அன்பால் ஆதரிப்பவன். தன்னை போல் அறிவுடையவர்கள் நடுவே அறிவால் உயர்ந்து விளங்குபவன். அறிவில்லாதவர் இடமெனில் தானும் அறியாமை உடையவன் போல் நடந்து கொள்பவன். சிறந்த மன்னனுக்குத் திருக்குறள் வகுக்கும் எல்லாத் தகுதிகளையும் கொண்டு விளங்கியவன்.

கலைஞர்களின் திறன் அறிந்து பரிசில் வழங்கும் தன்மையாகிய வரிசை அறிதலில் வல்லவன். திறமை இல்லாதவர்க்கும் இல்லை என்று சொல்லாமல் ஈகை செய்யும் பண்பாளன் என்பதை,

**“ பிடிக்கணம் சிதறும் பெயல் மழைத் தடக்கைப்**

**பல்லியக் கோடியர் புரவலன்…”[90] (124-125)**

“பெண் யானைக் கூட்டத்தைப் பரிசலாக மழைத்துளிகள் போல் சிதறி வழங்கும் பெரிய கையை உடையவன்.பல இசைக்கருவிகளையும் இசைக்கும் கலைஞர்களின் புரவலன்” என்று இந்நூல் இவனைப் பாராட்டுகிறது. “யானைகளை மழைத்துளிகள் போல் சிதறும் கை” என்னும் அழகிய கற்பனையாக கூறுகிறார்.

நடைத் துயரத்தாலும் வெயிலின் காய்ந்த கூர்மையான கல்முனைகளாலும் விறலியின் மெல்லிய சிறுகாலடிகளின் கொப்புளங்கள் தோன்றி உள்ளன. இந்த சிறிய காலடி, ‘ஓடி இளைத்து வருந்தும் நாயின் நாக்குப் போல்’ இருப்பதாக நத்தத்தனார் உவமிக்கிறார்.சிவப்பு நிறம் கொண்ட வேர்வை சொட்டுவது கொப்புளங்கள் கொண்டதாகிய இந்த இயல்புகளின் ஒற்றுமையாலும் வடிவ ஒப்புமையாலும் இந்த அரிய உவமை சிறப்பும் பொருத்தமும் உடையதாக அமைந்துள்ளதை,

**“ சா அய்**

**உயங்குநாய் நாவின் நல்எழில் அசைஇ**

**வயங்குஇழை உலறிய அடி… ”[91](16-18)**

என பாடலில் நாய் ஒரு குறிக்கோள் இல்லாமல் அங்கும் இங்கும் ஓடும்.பின் ஒரிடத்தில் இருந்து இளைக்கும். இந்த பாணனும் குழுவினரும் தங்களை ஆதரிக்கும் சிறந்த வள்ளலைத் தேடி நாடெங்கும் வீணாக அலைந்து திரிந்து களைத்து இங்கே அமர்ந்திருக்கின்றனர் என்பதை இவ்உவமை உணர்த்துகிறது.

கூரையில் சுவர்களில் காளான் பூத்திருந்தது. உண்பதற்கு எந்த உணவுப் பொருளும் இல்லாததால் பாணனின் மனைவி குப்பையிலிருக்கும் குப்பைக் கீரையைப் பறித்து வந்தாள். அதை உப்பின்றி வேகவைத்துத் தன்கூட்டத்துடன் உண்கிறான் பாணன். இங்கே ஓர் இழிவான நிலை தனக்கு நேர்ந்ததை நினைத்து வருந்துகிறான்.

உணவு உண்ணும் போது தங்கள் வீட்டின் கதவுகளை திறந்து வைத்து சேர்ந்து உண்ண யாராவது வருகிறீர்களா? என்று அழைத்த பின் உண்ணுவதே அன்றைய நாள் தமிழரின் வாழ்வியல் நடைமுறையாக இருந்தது. அந்த செயலை தான் செய்ய நேர்ந்ததே என பாணன் வருந்துகிறான். ஏனெனில் கதவை அடைத்து உப்பின்றி வெந்த கீரையை

உண்டதற்கு காரணம் யாரும் பங்குக்கு வந்து விடக்கூடாதே என்று இல்லாமல் வாழ்வில் வறுமை அடைவது எல்லார்க்கும் இயல்பு தான் என்பதை உணராத மக்கள் இழிவாக பேசுவார்கள் என்று சொல்கிறான் பாணன்.

**“ மடவோர் காட்சி நாணிக்கடை அடைத்து**

**இரும்பேர் ஒக்கலொடு ஒருங்கு உடன் மிகையும்....”[92](138-139)**

என்ற பாடலில் வறுமை எல்லாம் போய் ஒழியும் படி பொருளை வாரிக் கொடுத்தான் வள்ளல் நல்லியக்கோடன் என்று வாழ்த்தினான்.

## பெரும்பாணாற்றுப்படை

இதன் அடிகள் 500. “பாணாறு” என்ற பெயரும் இதற்குண்டு. இதன் ஆசிரியர் கடியலூர் உருத்திரங் கண்ணனார் ஆவார். பரிசில் பெறவிருக்கும் பெரும்பாணனைப் பரிசில் பெற்ற பாணன், தொண்டைமான் இளந்திரையனிடம் செல்ல வழிப்படுத்துவதாகும். சோழமன்னனுக்கும் பீலிவளை எனும் நாக கன்னிக்கும் பிறந்தவனே இளந்திரையன் என மணிமேகலை கூறுகிறது. இவனது தலைநகர் காஞ்சி. மிக்க அடிகளைப் பெற்றிருப்பதாலும், பெரும்பாண்குடியினரை ஆற்றுப்படுத்தியதாலும் இது பெரும்பாணாற்றுப்படை எனப்பட்டது.

## இளந்திரையனின் ஆட்சி சிறப்பு

வெற்றி வீரர்கள் பலர் நல்லாட்சி வழங்கும் ஆட்சியாளர்களாகச் சிறப்பு பெற்றதில்லை. ஆனால் இளந்திரையன் ஆட்சி புரிவதில் திறமை வாய்ந்தனவாக விளங்கி இருக்கிறான். இவனது பாதுகாப்பு மிக்க அகன்ற பெரியநாட்டில் ஆறலைக் கள்வர் எனப்படும் வழிப்பறித் திருடர்கள் இல்லை. இடியும் கூட ஓசை எழுப்பி எவருக்கும் அச்சம் உண்டாக்காது. பாம்புகளும் மக்களைக் கடித்ததில்லை. புலி போன்ற காட்டு விலங்குகளும் யாருக்கும் துன்பம் செய்வதில்லை. அதனால் களைத்த போது காட்டில் அச்சமின்றி

இளைப்பாறி தங்கிப்போக விருப்பம் இருந்தால் தங்கிச் செல்வாயாக என்று பாணன் கூறுகிறான்.

**“ அத்தம் செல்வோர் அலறத் தாக்கி**

**கைப் பொருள் வெளவும் களவு ஏர் வாழ்க்கைக்**

**கொடியோர் இன்று அவன் கடியுடை வியன்புலம்**

**உருமும் உரறாது அரவும் தப்பா**

**காட்டு மாவும் உறுகண் செய்யா வேட்டாங்கு**

**அசைவுழி அசைஇ நசைவுழித்தங்கிச்**

**சென்மோ இரவல…..”[93] (39.46)**

இப்பாடலின் மூலம் விளக்கப்பட்டுள்ளது.

சிறந்த வருணனைகளையும், உவமைகளையும் இந்நூலில் காணலாம்.

முயல் காது சொல்லால் வரைந்த ஒரு கோட்டு ஓவியம் போல அழகாக வருணிக்கப்படுகிறது என்பதை,

**“ முள்அரைத் தாமரைப் புல்இதழ் புரையும்**

**நெடுஞ் செவிக் குறுமுயல்….”[94](114.15)**

என்ற பாடலில் “தாமரைப் பூவின் இதழைப் போன்ற நீண்ட செவியை உடைய குட்டை முயல்” என வர்ணிக்கப்பட்டுள்ளது.

வேதம் ஓதும் ‘பார்ப்பனர் இல்லங்களில் வளர்க்கும் கிளியும் வேதம் ஓதும்’ என்ற செய்தி கூறப்படுகிறது. மற்ற நில மக்கள் தங்கள் சிறப்பு உணவைத் தந்து பாணனை விருந்தோம்புவது போல் அந்தணர் வீடுகளில்

பருப்புச் சோறும் பால் சோறும் வழங்குவர் என்ற செய்தி தரப்படுகின்றது. மாவடு ஊறுகாய் பற்றிய தகவலும் சொல்லப்படுகிறது.

## பொலியும் பொலி

வளமான வயலில் விளைந்த நெல்லை மேல் காற்றில் தூற்றிக் களத்தில் குவியலாக இட்டு வைத்துள்ளனர். இது பொலி எனப்படும். இந்த பொலியின் பொலிவை விளக்க அழகான உவமையாக **"உயரம், நிறம்,மதிப்பு இவற்றால் இந்தப் பொலி வடக்கே உள்ள பொன்மலை ஆகிய மேருமலை போல் காட்சி அளிக்கிறது என்று கூறுகிறது"[95](240.41).**

## முல்லைப்பாட்டு

**"பெரும்பாணாற்றுப்படையை அடுத்து முல்லைப்பாட்டானது தொகுக்கப் பட்டுள்ளது. நெடுநல்வாடையை அடுத்து முல்லைப்பாட்டு தோன்றியிருக்க வேண்டும்"[96]** என எஸ். வையாபுரிப்பிள்ளை கூறுகின்றார். பத்துப்பாட்டில் மிகச் சிறியது. இதன் அடிகள் 103 ஆசிரியப்பாவினால் ஆனது. நப்பூதனார் பாடியது. முல்லைப்பாட்டில் தலைவி நெஞ்சை ஆற்றுப்படுத்தி நிற்பதால் "நெஞ்சாற்றுப்படை" என்று பெயர் பெறுகின்றது. பத்துப்பாட்டில் இதற்கு மட்டும் பாட்டுடைத் தலைவர் பெயர் குறிப்பிடப்படவில்லை. சிலர் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனைத் தலைவனாகக் கொள்வர். முல்லைத்திணைப் பாடல்களில் நுட்பமும் நயமும் கொண்டது. இவ்வகைப்பாடல் முல்லைக்கு புறம்பான வஞ்சியையும் இணைத்துக் கூறும், போர் மேற்சென்ற தலைவன் திரும்பும் வரை தலைவி காத்திருப்பதை கூறுவதால் இது காத்திருத்தலாகிய முல்லை உரிப்பொருளைக் குறிப்பதாக இருக்கிறது.

முல்லைப்பாட்டில் முதல் 23 அடிகளில் தலைவியின் பூப்போன்ற உண்கண் புலம்பு முத்துறைக்கும் பிரிவுத்துயரைக் காண்கிறோம். பாசறையில் தலைவனிருப்பை அடுத்த 55 அடிகள் சித்திரம் தீட்டுகின்றன. இம்மன்னவன்

ஒருகை முடியொடு கடகம் சேர்த்தி நெடிது நினைந்து இருக்கும் காட்சி அவனது கடமையுணர்ச்சியைக் காட்டுகிறது. அடுத்த 10 அடிகளில் தலைவியின் அவலநிலை சுட்டிக்காட்டப்படுகிறது.

**“ நெஞ்சாற்றுப்படுத்த நிறைதபு புலம்பொடு**

**நீடுநினைந்தாற்றியும் ஓடுவன திருத்தியும் ”[97](81-82)**

தலைவியின் ‘அஞ்செவிநிறைய ஆலின’ எனக்கூறி எவை ஆவின என்ற கேள்வியை நம் நெஞ்சில் எழுப்புகிறார். ஆசிரியர் பாட்டு முடியும் வரையில் 23 அடிகளில் தலைவன் நிலை கூறப்பட்டு கார்காலத்திற்குப் பிறகு கூதிர் காலத்திற்கு அவன் திரும்பும் போது அவனது தேரில் பூட்டிய குதிரைகள் கழுத்து மணிகளே அவ்வாறொலித்தன என்பதும் உணர்த்தப்படுகின்றன.

## மதுரைக் காஞ்சி

முல்லைப்பாட்டுக்கு அடுத்து மதுரைக் காஞ்சி தொகுக்கப் பட்டிருக்கின்றது. பத்துப்பாட்டில் மிகப் பெரியது. இதன் அடிகள் 782. வஞ்சியடி விரவிய ஆசிரியப்பாவினால் ஆனது நிலையாமை கூறி அரசனை உயர்நெறிக் கண் செலுத்துவதாகப் பாடல் இயற்றப்பட்டுள்ளது.

“பெருகு வளமதுரைக்காஞ்சி” எனச் சிறப்பிக்கப்படும் இப்பாட்டு, “கூடற்றமிழ்” என்னும் ‘காஞ்சிப்பாட்டு’ என்றும் சிறப்புப் பெயர்களைப் பெறும். இது காஞ்சித்திணை என்பது புறப்பொருள் வெண்பா மாலைப் பொருளைக் குறிப்பிடும். பாடியவர் மாங்குடி மருதனார். நிலையாமை அறிவுறுத்தப்பட்டோன் பாண்டியன் நெடுஞ்செழியன் நாட்டைக் காக்க பாசறைச் சென்று போர்ப் பணிகளில் ஈடுபட்டு இருந்த மன்னனை முல்லைப்பாட்டில் காட்டியதை அடுத்து இவ்வாறெல்லாம் காயம்படவும், படை விலங்குகள் போரில் துன்புறவும் என அரும்பாடுபட்டுப் போரிட்டு வெற்றிப் பெற்றாலும் தனது வெற்றிச்சிறப்பால் மதுரையைப் போன்று அழகிய நாட்டை உருவாக்கி எத்தனைச் சிறப்புடன் வாழ்ந்தாலும் நில்லா உலகம் புல்லிய தெறித்தே

என்னும் பான்மையில் இவ்வுலக இன்பங்கள் நில்லாமல் போய்விடும். எனவே அறங்களை செய்ய வேண்டும் என்னும் கருத்துத் தொடர்ச்சியில் முல்லைப்பாட்டை அடுத்து மதுரைக்காஞ்சி வைக்கப்பட்டுள்ளது. மதுரை மாநகரைப் பாட்டின் நடுவண் பகுதியில் வைத்து,

**" பொற்பு விளங்கும் புகழ் அவை நிற்புகழ்ந்து ஏத்த**

**இலங்கு இழை மகளிர் பொலங் கலத்து ஏந்தி**

**மணங் கமழ் தேறல் மடுப்ப,நாளும்**

**மகிழ்ந்தினிது உறைமதி பெருக!**

**வரைந்து நீ பெற்ற நல்லூழியையே "[98] (778-782)**

என உணர்த்துகிறது. இப்பாடலை, 'மாநகர்பாட்டு' என்றே சுட்டலாம். பெரும்பாணாற்றுப்படை நாட்டினை மட்டும் புனைகிறது. மேலும் நிலையாமையை உணர்த்துவதில் தேறல் உண்டு மகிழ்ந்து வாழ்க என்பதால் துறவியர் காட்டிற் சென்று செய்யும் கடுந்தவத்தையோ வற்புறுத்தாத இப்பாட்டு வைதிக,சமண,பௌத்த மதக்கருத்துக்களின் தாக்கத்திற்கு உட்படாதது எனலாம்.

## குறிஞ்சிப்பாட்டு

இதன் அடிகள் 261 நச்சினார்க்கினியரும், பரிமேலழகரும் இதனைப் "பெருங்குறிஞ்சி" எனக் குறிப்பிடுவர். தலைவியின் பொருட்டு தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல் என்னும் அகத்துறையைச் சார்ந்த பாடல் நூலாகும்.

ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழின் பெருமையை கூறுவதற்காக கபிலர் இப்பாடலைப் பாடினார்.

குறிஞ்சித் திணைக்குரிய முதல், கரு,உரிப் பொருள்களை இப்பாடல் முறையாகக் குறிப்பிடும். செங்காந்தள் மலர் முதல் மலையெருக்கு பூ வரை 99 பூக்கள் ஒரே இடத்தில் 35 வரிகளில் தொகுத்துக் கூறியிருப்பதை அறிய முடிகின்றது. நெடுநெல்வாடைக்குப் பின் குறிஞ்சிப்பாட்டு தொகுக்கப்பட்டு உள்ளது. ஆரிய அரசன் பிரகத்தனுக்கு தமிழ் அறிவிக்கும் பொருட்டு குறிஞ்சிப்பாட்டை பாடியுள்ளார்.

**“குறிஞ்சிப்பாட்டு பாடப்பட்டோர் வரலாறு என்ற தலைப்பில் ஆரிய அரசன் பிரகத்தன் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் குறிஞ்சிப்பாட்டில் அவ்வரசர் பாடப்பெறவில்லை என்பது இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.”**[99] வீர வாழ்க்கையிலும் இறைவனை நாடும் வாழ்க்கை நிலையிலும் சிறந்திருக்கும் தமிழ் மக்கள் அகப்பண்பாடுகளிலும் பாங்குடன் திகழ்ந்தனர் என்பதை உணர்த்த முல்லைப் பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை என்னும் நூல்களில் குறிஞ்சிப்பாட்டை தொகுப்பு முறையில் வைத்துள்ளது பொருத்தமாக அமைகின்றது.

## நெடுநல்வாடை

மதுரைக்காஞ்சியை அடுத்து நெடுநல்வாடை உள்ளது. இதன் அடிகள் 188 அகவற்பாவினால் ஆனது. நக்கீரர் பாடியது.

வேம்பு தலையாத்த நோன்காழ் எ.்.கம் எனப் பாண்டியனின் அடையாள மாலை வருவதால் இது நெடுஞ்செழியனைக் குறித்த பாடல் எனக் கொண்டு நச்சினார்க்கினியர் இதனைப் புறப் பாடலாகக் கொள்வர். பண்டிதமணி கதிரேசன் செட்டியார் இதனை அகப்பாட்டு என நிறுவி உள்ளார். பகைமேற் சென்ற தலைவனின் பிரிவால் வருந்தும் தலைவியின் துயர் தீர வேண்டி அரசவைப் பெண்டிர் கொற்றவையை வழிபடுவது இப்பாடலின் துறை ஆகும். துயருறும் தலைவிக்கு நெடுவாடையாகவும், போரில் வெற்றி பெறும் தலைவனுக்கு நல்வாடையாகவும், வாடைக்காற்று விளங்குதலைக் கூறுவதால் நெடுநல்வாடை எனப் பெயர் பெற்றது.

நிலையாமை என்னும் காஞ்சியைப் பேசும் மதுரைக்காஞ்சியின் முன்னும் பின்னும் போர்க்காட்சிகளைக் காட்டும் முல்லைப் பாட்டையும், நெடுநல்வாடையையும் வைத்திருப்பது முடியுடை மன்னராயினும் முடிவில் பிடி சாம்பல் ஆவர் என்னும் கருத்தினை வலியுறுத்தித் தொகுப்பு முறையில் கொடுக்கப்பட்டுள்ளதை அறிய முடிகின்றது.

## பட்டினப்பாலை

இதன் அடிகள் 301. இவை அகப்பொருட் பாலைத்திணைக்குரியது. பெரிதும் வஞ்சியடிகளைப்பெற்று நின்று இறுதியில் ஆசிரியப்பாவால் முடிகிறது. எனவே இதனை “வஞ்சி நெடும் பாட்டு” என்றும் அழைப்பர். “பாலைப்பாட்டு” என இதனை அழைத்தலும் உண்டு. தலைவியைப் பொருள் வயிற் பிரியக் கருதி தலைவன் செலவழுங்குதல் என்னும் அகத்துறையைச் சார்ந்தது. நெய்தல் நிலமான காவிரிப்பூம்பட்டினத்தை இந்நூல் நெடுகப் பாடுகின்றது. நெய்தல் நிலமாக இருப்பினும் பிரிவு எனும் ஒழுக்கப் பண்பை பாடுவதால் பாலை என அமைகின்றது.

இப்பாடற்காக கடியலூர் உருத்திரங் கண்ணனார் கரிகாலனிடம் “பதினாறு நூறாயிரம் பொன் பரிசாகப் பெற்றார் ” எனக் கலிங்கத்துப்பரணியும், சங்கர சோழன் உலாவும் தெரிவிக்கிறது. அரசனீந்த பதினாறுகால் மண்டபம் ஆயிரம் ஆண்டிற்கு மேல் இருந்ததாகக் கூறலாம். இப்பாட்டால் உணரலாகும் தமிழர் வாழ்வு முறை, பழக்க வழக்கம் பலவாகும் என்பதை,

**“ தமவும் பிறவும் ஒப்ப நாடி**

**கொள்வதூஉம் மிகை கொளாது**

**கொடுப்பதூஉம் குறைகொடாது**

**பல்பண்டம்பகிர்ந்து வீசும் ”[100] (208.211)**

கடியலூர் உருத்திரங்கண்ணனார் இப்பாட்டுக்காக சோழனிடம் பதினாறு நூறாயிரம் பரிசாகப் பெற்றார்.

## மலைப்படுகடாம் (அ) கூத்தராற்றுப்படை

பட்டினப்பாலையை அடுத்து மலைப்படுகடாம் இடம் பிடிக்கின்றது. ஆற்றுப்படைகளுள் மிகப்பெரியது. இதன் அடிகள் 583 ஆசிரியப்பாவினால் ஆனது. "கூத்தராற்றுப்படை" எனவும் பெயர் பெறும். பாடியவர் பெருங்கௌசிகனார்.பரிசில் பெற்ற கூத்தனொருவன் பரிசு பெறவிருக்கும் கூத்தனைப் பல்குன்றக் கோட்டத்துச் செங்கண் மாத்து வேள் நன்னன் சேய் நன்னனிடம் ஆற்றுப்படுத்துவதாக இந்நூல் அமைகிறது. இது யானைக்கு மலையை உவமையாக,

**"மலைப்படுகடாஅம் மாத்திரத்து இயம்ப"**[101] (348)

யானை பொழியும் மதநீரின் ஒசையை மலையில் தோன்றும் பல வகை ஒசையை கேட்பதால் மலைப்படுகடாம் என்ற தொடரை கையாண்டமையால் இப்பாடல் மலைப்படுகடாம் எனப்பெயர் பெற்றது.

கூத்தர் பல வகை வாத்தியங்களுடன் செல்லுதல், பேரியாழின் வருணனை,நன்னனின் பண்பு நலன் ஆகியன கூறப்படுகின்றன. வழியின் வளம், விருந்து வழியின் அருமைகள் காரியுண்டிக் கடவுளாகிய சிவனைத்தொழுது செல்லுதல், வழிகள் பற்றிய எச்சரிக்கைகள், மலையில் தோன்றும் பல்வேறு ஒசைகள், அரிய வழியிற் செல்லும் முறை, புதியவர்களுக்காக புல்லை முடிந்து கொண்டே போகும் முறை, மலைவாழ் மக்கள் உபசரித்தல், நன்னன் மூதூரை அடைதல் அவனது கொடைச் சிறப்பு ஆகியன இப்பாட்டிற் கூறப்படுகின்றன.

ஆற்றுப்படைக் குறித்து மா.இராசமாணிக்கனார் கூறும் பொழுது, "கூத்தன் ஒருவன் மற்றொரு கூத்தனை ஆற்றுப்படுத்துதல் 'கூத்தராற்றுப்படை'"

எனப்படும். பாணன் ஒருவன் மற்றொரு பாணனை ஆற்றுப்படுத்துதல் 'பாணாற்றுப்படை' எனப்படும்.

## புராணங்கள்

தமிழிலக்கிய வரலாற்றில் புராண இலக்கியம் பெரும் பகுதியாகும். இது அளவால் மிக விரிந்தது பொருளால் மிக ஆழமானது. தமிழ் புராண இலக்கியங்கள் வடமொழி நூல்களைத் தழுவி இயற்றப் பெற்றுள்ளன.

## புராணம் - விளக்கம்

**"புராணம் என்ற வடசொல் புரா – நவ என்ற இரு வேர்ச் சொற்களிலிருந்து பிறக்கும். இதன் பொருள் பழமைக்கும் பழமையாய், புதுமைக்கும் புதுமையாய் உள்ளது என்பர். பழமையான எந்த வரலாறுகள் இன்னும் கூட மக்களிடையே சொல்லப் பெற்று வழங்குகின்றனவோ அவை புராணம் "**[103] என்று மு.அருணாசலம் கூறுகின்றார்.

புராணம் என்ற இச்சொல் தொடக்கக்காலத்தில் செய்தி, மொழி, உபதேசம் என்ற பொருள்களிலும் பின்னர் நிகழ்ச்சி, வரலாறு, என்பனவற்றையும் விளக்க பயன்படுத்தப்பட்டது பழமை, பழங்கதை என்ற பொருளிலும் விளக்கப்பட்டது.

**"புராணம் என்றால் பழமை என்று பொருள். புராணம் என்ற வடசொல் இதற்கு இணையான தமிழ்ச் சொல் பழங்கதை என்பதாகும் தொன்மம் என்றும் தமிழில் புராணத்தைக் குறிக்கின்றனர். புராணம் என்பது பழமை வரலாறு எனப் பொருள்படும்"**[104] என்று கிருஷ்ணசாமி அய்யங்கார் கூறுவதாக சொ. சுடலி கூறுகிறார்.

"அம்மை யழகு தோலே
விருந்தே யியையே புலனே இழையென"

என்று தொல்காப்பியர் கூறும் நூற்பாவில் குறிக்கப்பட்டு உள்ள தொன்மை என்னும் வனப்பு நூல் புராணம் என்பதாகும். தொன்மை எனும் சொல் பழங்கதை என்பதையும் குறிக்கும்.

**“புராணம் என்ற சொல்லுக்கு பல நூல்கள் பழமை பழங்கதை என்றே பொருள் கூறுகின்றன. இதனையே தமிழ் வழக்கினும், “புராணம் பழமை பழங்கதை அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று. வியாச முனிவரால் இயற்றப்பட்டதும் ஆன பழைய நூல் வகை”**[106] என்று விளக்கம் அளிக்கிறது.

**“புராணம் என்பது ஒருவகையில் அறிவியல் கண்டுபிடிப்புகளின் கற்பனையான முன்னோடி”**[107] எனலாம். புராணங்கள் திசை காட்டும் கருவி போல்வன. அவை மக்கள் தங்கள் வாழ்வில் கடைபிடிக்க வேண்டிய பாதைகளைக் காட்டுவதோடு தெய்வக் கொள்கைகளால் மக்கள் கடைபிடிக்க வேண்டிய நெறிகளையும், அதை அளவிற்கு மேம்பட்டு போகாமல் தடுக்கத்தக்க அரும் பொருளாகவும் அமைந்து மக்கள் வாழ்வோடு ஒன்றிக் கலந்து வளர்ந்தன” என்று தந்திவத புராணம் கூறுகிறது.

**“புராணம் என்ற சொல் புராதனம் என்ற சொல்லிலிருந்து மருவி வந்ததாகும். இது வேதத்தின் நுண்ணிய பொருளை விளக்கியுரைக்கக் கூடியதாகும்”**[108] என்று புராணத்திற்கு விளக்கம் அளிக்கிறார் கி.வா. ஜகந்நாதன்.

**“எது தொன்று தொட்டு இன்று வரை பரவியுள்ளதோ அதுவே புராணம்”**[109] என வாயு புராணம் கூறுகிறது. **“மேலும் புராணங்கள் என்பவை உலகோடிக் கதைகள். உலகம் முழுவதும் வெவ்வேறு வடிவில் இவை வழங்கி வருகின்றன.”**[110] என்பார் தெ.பொ.மீனாட்சி சுந்தரனார்.

புராணங்கள் பொருளடக்கமாக கூறப்படுவன யாகங்கள், வழிபாடுகள் போன்றவற்றை வேதத்தில் கூறியபடியே புரிந்து கொண்டு கடைபிடிப்பது எல்லோருக்கும் எளிதல்ல. வேதம் பயிலாதவர்களும் மேல்நிலையை

அடைவதற்கு எளிதாகச் சில வழிமுறைகளை கூறும் பொருட்டு புராணங்கள் இயற்றப்பட்டன. உலகம் தோன்றிய வரலாறு, புராதன மகான்களின் வாழ்க்கை வரலாறுகள், புகழ்மிக்க அரசர்களின் வரலாறுகள், கடவுளரின் அவதாரங்கள், கடவுளரின் லீலைகள் ஆகியவற்றை சிறிது கற்பனையுடன் கலந்து மக்களுக்குப் பயன்படும் வகையில் கூறுவனவாகப் புராணங்கள் அமைக்கப்பட்டுள்ளன. மனித வாழ்க்கைக்குத் தேவையான வாழ்வியல் நெறிகளை வழிபாடுகள், விரதங்கள், பிராயச்சித்தங்கள், சடங்குகள், கடவுளை அடையும் மார்க்கங்கள் ஆகியவை புராணங்களில் விளக்கப்படுகின்றன. புராணங்கள் பன்நெடுங்காலமாக வாய்மொழியாக வழங்கிய கதைகளை உள்ளடக்கியவை ஆகும். இப்புராணங்கள் கருத்தை உயிராகவும், கதைகளை உடலாகவும் கொண்டுள்ளது. கதைகளை மட்டும் கொண்டிருக்காமல் வரலாற்று செய்திகளையும் சுட்டுகிறது. புராணங்கள் அதர்வண வேத காலத்தில் சிறப்பிடம் கொண்டு இருந்தன.

புராணங்கள் பெரும்பாலும் இயற்கை சார்ந்த பொருள்களில் பெரும்பங்குவகிக்கின்றன. அவற்றுள் சூரியன், சந்திரன், அக்கினி, காற்று, மழை, இடி, நடசத்திரங்கள் போன்றவை இடம் பெறுகின்றன. இவை பகவான்களாக அல்லது கடவுள்களாக எண்ணப்படுகின்றன. கடவுள்கள் உண்மையில் வரலாற்று மாந்தர்களாக இருப்பார்கள் என ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

கடவுள் பற்றிய நம்பிக்கையை ஏற்படுத்தவும், கடவுளின் பெருமையை மனிதர்களின் மனதில் நிலைநாட்டவும் புராண மரபு கதைகள் தோன்றலாயின. நம்பிக்கை இழந்த சமுதாயத்திற்கு ஆறுதலும், ஊக்கமும் எழுச்சியும் ஊட்டுவனவாக அவை செயல்படுகின்றன**.**

**“இந்தியப் புராணங்கள் வளமானவை. பொருள் பொதிந்தவை. அவை கனவுகட்கும் கற்பனைக்கும் வடிவம் தந்து பொருள் பொதிந்த கற்பனை புனைந்து நிறையழகுடனும் புகழ் பெற்ற எண்ணங்களுடனும் திகழ்பவை”**[111] என நேரு கூறியுள்ளார். இவ்வாறு அறிஞர் பெருமக்கள் புராணம் குறித்து

விளக்கங்களை அளித்துள்ளனர். இதன்மூலம் புராணங்கள் பொருள் உள்ளவை என்பதையும், அது மக்களுக்கு வீடுபேறு அளிக்கக் கூடிய கருவியாகவும் விளங்கி வந்துள்ளமையை அறிந்து கொள்ள முடிகிறது.

## புராணத்தின் காலம்:

இதிகாச, புராணங்கள் ஐந்தாவதுவேதம் என்று சிறப்பிக்கபடுவனவாகும். **“புராணங்கள் வாய்மொழிக் கதைகளாக வழங்கிய பின்னரே புராண இலக்கியங்களாக உருவெடுத்தன. புராணங்களில் ஆதி புராணங்கள் புத்தர் காலத்திற்கு முன்பும், ஏனைய புராணங்கள் அவர் காலத்திற்கு பின்பும் ஆக்கப்பட்டவை என்ற கருத்து உள்ளது. வேத காலத்திற்கு முன் புராணங்கள் பழைய கதைகளாக வழங்கி வந்தனவேயன்றி நூல்களாக இருக்கவில்லை என்று கலைக்களஞ்சியத்தில் கூறப்பட்டுள்ளது. புராணம் என்ற சொல் உபநிடதங்களிலும், சாஸ்திரங்களிலும் காணப்படுகின்றன. அதர்வன வேத காலத்திலேயே புராணங்கள் சிறந்த இலக்கியங்களாகக் கருதப்பட்டு இருக்கின்றன”**[112] என்று பெரிய புராணத்தில் புராண மரபுக் கதைகள் என்னும் நூல் கூறுகிறது.

இந்திய மொழியில் இடம் பெற்ற புராண இலக்கியங்களை வடமொழியில் புராண இலக்கியம், தமிழ்மொழியில் புராண இலக்கியம் என இரண்டாகப் பகுப்பர்.

## புராணங்களின் வகைகள்

வடமொழிப் புராணங்கள் அனைத்தும் மூன்று வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவை : 1. மகா புராணங்கள் 2.உப புராணங்கள் 3.அதி புராணங்கள் என்பவையாகும். இவை ஒவ்வொன்றிலும் பதினெட்டு புராணங்கள் அமைந்து உள்ளது. இவற்றுள் மகா புராணங்கள் பதினெட்டும் சமயத்தைப் பேசக்கூடியதாகவும், உப புராணங்கள் பதினெட்டும் தனித்தனி

தெய்வங்களைப் புகழ்வதென்றும் எழுந்தவையாகும் அதி புராணங்கள் பிற்காலத்தில் விரதம், தீர்த்தம், தலம் போன்றவற்றைப் பேசுபவையாகும்.

இக்கருத்தின் வழியே வடமொழிப் புராணங்களின் வகைகளை நம்மால் உணர முடிகிறது. இவற்றில் மகா புராணங்கள் பதினெட்டில் சிவப் புராணங்கள் பத்தும், விஷ்ணு புராணங்கள் நான்கும் பிரம்ம புராணங்கள் இரண்டும் என உட்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இதனுள் சிவ புராணங்கள் மொத்தம் பத்துள்ளதாகக் கூறப்பட்டுள்ளது. இப்பத்தியில் ‘ஸ்கந்த புராணம்’ என்னும் மகா புராணமும் ஒன்று. இதுவே தமிழில் ‘கந்த புராணம்’ எனத் தோன்றியது என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

தமிழ் மொழியில் புராணம் என்ற சொல்லை முதன்முதலில் மணிமேகலையில் காண முடிகிறது.

**“காதல் கொண்டு கடல்வணன் புராணம் ஓதினான்”**[113]

என்று சமயக் கணக்கர் தந்திரம் கேட்ட காதையில் ‘புராணம்’ என்னும் சொல் கையாளப்பட்டுள்ளது. அதன் பிறகு புராணம் என்ற சொல்லை நாவுக்கரசர் தன் தேவாரத்தில்

**“அமையா வருநெஞ்சம் ஆர்த்தாய் போற்றி**

**ஆதி புராணனாய் நின்றாய் போற்றி ”**[114]

எனப் போற்றி தாண்டகத்தில் கூறியிருப்பதை காண முடிகிறது. இதில் சிவபெருமான் பழமையுடையவன் என்னும் பொருளில் புராணத்திற்குக் காரணமானவன் எனக் கூறப்பட்டுள்ளது.

மாணிக்க வாசகரின் திருவாசகத்தின் முதல் பாடல் ‘சிவ புராணம்’ என்றே அழைக்கப்படுகிறது. அதில்,

**“போற்றி போற்றி புராண காரண**

**போற்றி போற்றி சயசய போற்றி ”**[115]

பொருளுக்குக் காரணமானவன் சிவன் எனக் கொண்டு ‘புராணக் காரணப் போற்றி’ எனப் புகழ்கிறார்.

இதில் ‘புராணம்’ என்னும் சொல் வழக்கை மட்டும் நாம் காண முடிகிறது. ஆனால் புராணக் கதைகள் தொடர்பான பொருளில் கூறப்படவில்லை. ஆயினும் இப்புராணக் கதைக் கூறுகளை பண்டைய நூல்களில் பலவற்றில் காண முடிகிறது.

## இதிகாசம்

இதி - ஆஸம் என்று இதனைப் பிரிப்பர். இதி ஆஸம் என்பதற்கு இப்படி நடந்தது என்றும், ‘ஹ’ என்பதற்கு நிச்சயமாக என்பது பொருள். கொஞ்சம் கூடப்பொய் கலக்காமல், உள்ளதை உள்ளபடியே எழுதியதே இதிகாசம் என்பர்.

இதிகாசம் எனப்படுவது கடவுள் அவதாரம் அல்லது பெரும் வீரர்கள் நிகழ்த்திய அரும் பெரும் வீரச் செயல்களை விவரிக்கும் புராண வரலாறாகும்.

நில உடமை சமுதாயம் ஒருகாலக்கட்டம் வரை இருந்து அடுத்தக் கட்டத்திற்கு மாறி செல்லும் போது அதன் பரிணாமங்கள், நிகழ்வுகள், மாறுதல்கள், அனைத்தும் வாய்மொழியாக ஒருகாலக்கட்டம் வரையிலும் குருவின் மூலமாக சீடர்களுக்கு சொல்லி வைக்கப்பட்டு செவி வழிச் செய்தியாக சில காலம் வரையிலும் இருந்து சமுதாய பரிணாம வளர்ச்சியை தனதாக்கிக் கொண்ட பல ஆயிரம் ஆண்டுகள் கால ஓட்டத்தையும் அதன் சமூக நியதிகளை இதிலிருந்து எடுத்து மேற்கோள்கள் காட்டிடவும், நீதி சொல்லவும் சமுதாயச் சட்டங்களாகவும் காலத்தைக் கடந்தும், தெளிவாகவும், எளிமையாகவும், சிக்கலான, நெருடலான, மனித குலச் சிந்தனைகளை உள்வாங்கிய உயர்ந்து நிற்கிற வரலாற்றுப் பெட்டகமே இதிகாசமாகும். இதிகாசங்கள் இராமாயணமும், மகாபாரதமுமே ஆகும்.

## தொன்மம் விளக்கம்

தொன்மம் என்ற சொல் புராணவியலைக் குறிக்கும் இதனை ஆங்கிலத்தில் MY - Thology என வழங்குவர். புராணக்கதையை ஆங்கிலத்தில் Myth என்பர்; புராணம் என்பது வடசொல்லாக இருப்பதால் அதற்கு இணையாக தொன்மம் என்ற சொல் பயன்படுத்தப்பட்டு வருகிறது. தொன்மை தானே உரையொடு புணர்ந்த பழமை மேற்றே எனச் செய்யுளியல் நூற்பாவில் தொல்காப்பியம் குறிப்பிடும் தொன்மையின் பரிணாம நிலையே தொன்மம்.

தொன்மம் என்பதன் மூலம் நம் முன்னோர் எண்ணங்களின் வரலாற்றை தெரிந்து கொள்கிறோம் என்பர் கதிர் மகாதேவன். ஒவ்வொரு புராணமும் ஏதோ ஓர் உண்மையைக் கூற விழைகிறது. அது அடுக்கடுக்காக அமைந்த பல்வேறு செய்திகளால் மறைக்கப்பட்டுக் கிடக்கிறது வேண்டாத செய்திகளை எல்லாம் அகற்றிக் கொண்டே வந்தால் வேண்டிய செய்திகளாகிய உண்மை இறுதியில் நிலைத்துவிடும் என்பார் மார்க்சுமுல்லர்.

## தொகுப்புரை:

பண்டையத் தமிழர்களின் வாழ்க்கை முறையினையும் பண்பாட்டுக் கூறுகளையும் என்றைக்கும் எவரும் அறியும் வகையில் சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன என்பதைக் காண முடிகின்றது.

இவ்வியலில் ஆய்ந்தறிந்த செய்திகளாவன தமிழின் பழமையினை அறியும் பொழுது இதிகாச காலங்களுக்கு முற்பட்டதாய் காண முடிகின்றது. சங்க இலக்கியங்கள் தொகுப்பு தனியொருவர் சாதனையன்று என்பதை ஆய்வு உணர்த்துகிறது. அகம் சார்ந்த நூல்களின் சிறப்புகளையும், புறம் சார்ந்த நூல்களின் சிறப்புகளையும் இந்த ஆய்வு அறிகிறது. சங்க இலக்கியங்கள் தொகுப்புகள் பிற்கால இலக்கிய வளர்ச்சிக்கு துணை செய்பனவாக உள்ளதை புராணம், இதிகாசம், தொன்மம் என சங்க இலக்கியங்களில் இடம் பெறுவது தொகுக்கப்பட்டுள்ளன.

# சான்றெண் விளக்கம்

1. தொல் சிறப்புப் பாயிரம், ப – 1
2. சிறுபாண்,அடிகள். 66 -67
3. மதுரைக்காஞ்சி,அடிகள். 761 -63
4. புறம்,பா – 72
5. சிலம்பு
6. மணிமேகலை, 25 – 26
7. குறுந், பா – 1
8. மேலது, பா.6.
9. கே.கே.பிள்ளை, தமிழக வரலாறும், பண்பாடும், ப – 73
10. புறம், பா – 2
11. மேலது,பா – 82
12. கலி,பா -10
13. வெற்றி வேற்கை,பா -39
14. மேலது,பா – 35
15. குறள், எண் -427
16. தமிழண்ணல், தமிழ் இலக்கிய வரலாறு,ப -99
17. .இரா.அறவேந்தன், குறுந்தொகை பதிப்பு வரலாறு,ப -21
18. நற்றிணை,பா -397
19. மேலது,பா – 10
20. மேலது,பா – 210
21. மேலது,பா – 172
22. குறள் எண் -791
23. நற்றிணை,பா -355
24. குறள் - 580
25. குறுந், பா -2

26. மேலது,பா – 24
27. மேலது,பா – 27
28. மேலது,பா – 40
29. மேலது,பா – 3
30. மேலது,பா – 9
31. மேலது,பா – 135
32. மேலது,பா – 359
33. தொல்.செய்யு.நூ -40
34. மேலது,நச்சர். உரை – 236
35. மேலது, பேரா.உரை -236
36. தொல்.அகத்.நூ -14
37. மேலது. புறத்.நூ -5
38. அகம்.பா – 149
39. மேலது,பா – 256
40. மேலது,பா – 58
41. மேலது,பா – 66
42. ஐங்குறு. பா -5
43. ஐங்.கு.நூறு,பா -2
44. மேலது,பா – 1
45. மேலது,பா – 55
46. மேலது,பா – 46
47. மேலது,பா – 8
48. மேலது,பா –7
49. மேலது,பா – 9
50. மேலது,பா – 41
51. தொல்.அகத்.நூ -53
52. மேலது. செய்யு.நூ -149

53. மேலது, நூ -148
54. மேலது, நூ -10
55. புலவர்.சுந்தர சண்முகனார்,தமிழ் நூல்,தொகுப்பு, ப - 351
56. மேலது,பா – 352
57. மேலது,பா – 354
58. மேலது,பா – 35
59. ச.வே.சுப்ரமணியன் கலித்தொகை,ப-60
60. மேலது,பா – 38
61. புறநானூறு மூலமும் உரையும்,பா-219
62. மேலது,பா – 18
63. மேலது,பா – 189
64. மேலது,பா – 192
65. மேலது,பா – 195
66. பதிற்றுப், மூலமும் உரையும்,பா-22
67. தமிழ் இலக்கியம் வரலாறு,ப -42
68. பரிபாடல்,ப – 53
69. மேலது,பா – 6
70. தமிழ் இலக்கிய வரலாறு,ப -51
71. முனைவர், பாக்கியமேரி.வெற்றிநோக்கில் இலக்கணம் இலக்கிய வரலாறு.மொழித்திறன்.ப- 319
72. பத்துப்பாட்டு மூலமும் உரையும்,ப-2
73. திருமுருகா, அடி -6
74. பரி.அடி -19
75. முருகு.அடி -109
76. கலி.பா -105
77. மா.இராச மாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி,ப -221
78. முருகு.அடி -70-71
79. ரா.பி..சேதுப்பிள்ளை,தமிழின்பம்,ப-46

80. முருகு.அடி -119 -125

81. மேலது,அடி – 42

82. மேலது,அடி – 7

83. பத்துப்பாட்டு மூலமும் உரையும்,ப -8

84. மேலது,அடி – 6

85. மேலது,அடி– 58-61

86. பொருனாரா,அடி - 21-22

87. மேலது,அடி – 187

88. மேலது,அடி – 20

89. மேலது,அடி – 117-118

90. மேலது,அடி – 82-83

91. சிறுபாணா,அடி – 124-125

92. மேலது,அடி – 16-18

93. மேலது,அடி – 138-139

94. பெரும்பாணா.அடி -39-46

95. மேலது,அடி – 114-115

96. மேலது,அடி – 240 -41

97. எஸ்.வையாபுரிப்பிள்ளை,இலக்கியச்சிந்தனைகள்,ப-23

98. முல்லைப்பா.அடி -81-82

99. மதுரைக்கா,அடி 778-782

100. புலவர்.சுந்தர சண்முகனார்,தமிழ் நூல்,தொகுப்பு, ப - 38

101. பட்டினப்பா, அடி-208-211

102. மலைபடுகடாம், அடி -384

103. மா.இராச மாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராயச்சி,ப -57

104. மு.அருணாச்சலம், தமிழ் இலக்கிய வரலாறு, முதற்பாகம்,ப-6

105. சோ.சுடலி-பெரிய புராணத்தின் மரபுக்கதைகள்,ப-5

106. ச.வே..சுப்ரமணியன்(உ.,ஆ) தொல்காப்பியம்,ப -506

107. encylopaedia Americana,vol,19,p.6.75(a)

108. கி.வா.ஜகந்நாதன்,கந்தவேள் கதையமுதம்,முன்னுரை,ப-9

109. கலைக் களஞ்சியம்,தொகுதி -7,ப-436

110. தெ.பொ.மீனாட்சிசுந்தரம்,நீங்களும் சுவையுங்கள்,ப-88

111. Micrea Ellisa's Myth and Reality,p-5

112. சோ.சுடலி,முநூ,ப-9

113. மணிமேகலை,சமயக் கணக்கர் தந்திரம் கேட்டக் காதை

114. நாவுக்கரசர்,தேவாரம்,போற்றி திருத்தாண்டகம்

115. மாணிக்கவாசகர்,திருவாசகம்,

# இயல்-2

# அக இலக்கியங்களில் புராண இதிகாசக் கருத்துக்கள்

# இயல் - 2

# அக இலக்கியங்களில் புராண இதிகாச கருத்துக்கள்

## கலித்தொகை

### கலித்தொகையில் இதிகாச கருத்துக்கள்

சங்க இலக்கியங்களுள் பா வகையால் சிறப்புப் பெற்ற கலித்தொகை அகப்பாடல்களில் ஒன்றாகும். கலிப்பாவின் இனிமையைத் தமிழ் சான்றோர்க்கு உணர்த்துதற் பொருட்டு ஐம்பெரும் புலவர், ஐவகை திணைகளைத் தழுவி செம்மையுறப் பாடியுள்ளனர். எட்டுத்தொகை நூல்களுள் கலித்தொகை பெறும் சிறப்பையும் புராண இதிகாச கருத்துக்களையும் ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

கலித்தொதையின் முறை வைப்பு, இலக்கணம், கலிப்பாவிற்குரிய ஓசை நாட்டுப்புறபாடல்களைப் போல கலிப்பாவின் உறுப்புகளை பெற்று வருதல், கலித்தொகை உணர்த்தும் புராண இதிகாச கருத்துக்கள், உரையாசிரியர்கள், அறிஞர்களின் கருத்துக்கள் மற்ற தொகை நூல்களில் காணப்படாத செய்திகள், கலிப்பாவில் அமைந்ததற்கான காரணங்கள் போன்றவை இவ்வியலில் ஆராயப்பட உள்ளன.

### கலித்தொகை முறை வைப்பு

ஐந்திணை வரிசை முறை மாறியும் அமையலாம் என்பதற்கு நச்சினார்கினியர் கூறிய இறுதி உரைப்பகுதி சான்றாக அமைகின்றது. இது குறித்து நச்சினார்க்கினியர் கூறும் விளக்கத்தைப் பற்றி பொ.வே. சோமசுந்தரனார் எழுதும் போது,

**“முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தலெனச் சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே என்புழிச் சொல்லாத முறையில் சொல்லாக முறையில் சொல்லவும் படும்.” என்றதன் இத்தொகையைப் பாலை, குறிஞ்சி, மருதம்,**

**முல்லை, நெய்தல் என இம்முறையே கோத்தார் என்று நல்லந்துவனார் கூறியுள்ளார்.”**[1]

கலித்தொகைப் பாடல்கள் பாலைக்கலி, குறிஞ்சிக்கலி, மருதக்கலி, முல்லைக்கலி, நெய்தற்கலி எனத் திணைப் பிரிவின் பெயர்களால் வழங்கப்பட்டு வருகின்றன. நூலின் முதலில் கடவுள் வாழ்த்துப்பாடலும், அடுத்து பாலை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் வரிசையில் உரிய பாடல்களும் அமைக்கப்பட்டு உள்ளன. ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் அந்தப் பாடல் எதனைப் பற்றியது என்பதனை அறிவிக்கும் துறையும் கூறப்பட்டு உள்ளது. மேலும்,

**“சொற்களும், திசைச் சொற்களும் மிகுதியாக கலந்து வருவதும, உலக வழக்கு இலக்கணத் திரிபுகளை காண முடிவதும் தொன்மை எனப்படும். புராண மரபுக் கதைகளைப் பிற தொகை நூல்களை விட மிகுதியாகப் பெற்று வருவதும், கைக்கிளை, பெருந்திணை போன்ற இன்ப நிலைகளை வெளிப்படையாகப் பாடும் போக்கு இதில் காண முடிகின்றது. இவ்வாறு வருவது நாட்டுப்புற வாழ்க்கையைச் சார்ந்தவை என்பதனை மெய்ப்பிக்கும்.”** [2]

என்பது இராம. பெரிய கருப்பனின் கருத்து குறிப்பிடத்தக்கது.

## சிறப்புகள்

கலிப்பா வடிவமும் இதற்கு ஒரு சான்று. ஆடலுடன் கூடிய பாடலென்பதைத் தரவு, தாழிசை, உரையாடல், தனிச்சொல், சுரிதகம் போன்ற அதன் உறுப்புகளால் அறியலாம். தாழிசை ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வருவது, இது நாட்டுப்புறப்பாடல் அமைப்பே ஆகும். இன்றைய தாலாட்டு, ஒப்பாரி, போன்ற பாடல்களில் எல்லாம் ஒரு பொருள் மேல் பல அடுக்கி வருவதனைக் காண முடிகிறது.

கலிப்பாடல்களில் புராணச் செய்திகளைத் தவிர புறச் செய்திகளைப் புகுத்திப் பாடும் செயற்கைப் பாங்கு சிறிதும் காணப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

அகப்பொருளைப் பாடுவதற்கு மிகப் பொருத்தமான பாக்கள் பரிபாடலும், கலிப்பாவும் என்பது தொல்காப்பியரின் கருத்து. அக்கருத்திற்கேற்ப அகப்பொருளை எடுத்துக் கூறிக் கலிப்பாவினால் அமைந்தது கலித்தொகையாகும்.

கலிப்பாக்கள் இசை நயம் மிக்கன. ‘ஒலி’ என்னும் சொல்லிற்கு ‘இசை’ என்று பொருள் உண்டு. கலிப்பா செய்யுள் முழுவதும் தழுவிய ஓசையுடன் இல்லாமல், கன்று துள்ளுதல் போல இடையிடையே துள்ளி வரும் ஓசையினை உடையது. இவ்வோசையினைத் துள்ளல் ஓசை என்பர்.

**“இன்பம் பற்றிய மன எழுச்சியைக் கூறுவதற்கு துள்ளல் இசைப் பொருத்தம் உடையதாக இருக்கலாம்.”**[3]

என்று இராமநாதன் செட்டியார் கூறுகின்றார்.

மேலும் தலைவன், தலைவி, தோழி, முதலானோர் தமக்குள் ஒன்றுபட்டும் வேறுபட்டும் தம்தம் கருத்துக்களை ஒருவருக்கொருவர் விரிவாக வெளிப்படுத்துவதற்கென்று இக்கலிப்பா பல வகை உறுப்புகள் கொண்ட அமைப்புடன் இருப்பது குறிப்பிடத்தக்கது. அகப்பொருள் பற்றி கூறுவதற்கு ஏற்பதாய் அமைந்துள்ளது.

தலைமக்களின் காதல், ஒழுக்கம், அடியவர், வினைவலர் இவர் தம் செய்திகள் முதலியன இந்நூலில் பேசப்படுகிறது. காதல் பற்றிய பல பாக்கள் உரையாடல் முறையில் அமைந்துள்ளன. இதிகாசச் செய்திகள் சில பாடல்களில் உவமைகளாகி வருகின்றன. தமிழரது மணமுறை, இல்லற இன்பம் ஆகியன இந்நூற்பாடல்களில் எடுத்துக்காட்டப்படுகின்றன.

கவண்கல் வீசுந்திறம், தினைப்புனைக்காவல், ஏறுதழுவல், தைந்நீராடுதல், கடவுள் வழிபாட்டுமுறை முதலிய தமிழ்நாட்டுச் செய்திகள் பலவற்றை கலித்தொகையில் காண முடிகின்றது.

**“கற்றறிந்தோர் ஏத்தும் கலி.” கல்வி வலார் கண்ட கலி என்று புகழப்படும் இக்கலித்தொகை கற்பதற்கு மிகவும் சுவையானது. இதன் பாடல்களை உரையாசிரியர்கள் மிகுதியாக எடுத்தாண்டுள்ளனர். நச்சினார்க்கினியர் ஐம்பதுக்கும் மேற்பட்ட இடங்களில் கலித்தொகைப் பாடல்களை தம் பிற உரைகளில் எடுத்தாண்டுள்ளார்,”**[5]

எனச் சுந்தர சண்முகனார் கூறுவதை ஒப்பிட்டு அறிய முடிகிறது.

## எட்டுத் தொகையில் கலித்தொகை பெறும் இடம்

கலித்தொகைப் பாடல்கள் பா, திணை, அடி எண்ணிக்கை போன்றவற்றின் அடிப்படையில் தொகுக்கப்பட்டுள்ளன. எட்டுத்தொகை நூல்களுள் இந்நூல் மட்டும் பாவகையில் வேறுபட்டுக் கலிப்பாவில் பாடப்பட்டுள்ளது. இப்பாவகையானது நீண்ட உரையாடல் முறைக்கு ஏற்புடையதாக அமைந்துள்ளது. அதனால் இந்நூல் நாடகப் பாங்கில் பெரும்பாலான பாடல்கள் காணப்படுவது தனித்தன்மை எனலாம்.

மேலும் இந்நூலில் வைதீக சார்புடைய கடவுள்களும், கதைகளும் மிகுதியாக இடம் பெற்று உள்ளன. பிற்காலத்தில் இந்நூல் இயற்றப்பட்டதால் அதிக அளவிலான வைதீகத் தாக்கம் இந்நூலில் காணப்படுகிறது.

பாண்டியர்களின் செல்வாக்கு பிற சங்க நூல்களைக் காட்டிலும் இந்நூலில் அதிகளவில் காணப்படுகிறது. இந்நூலை தொகுப்பித்தோர் யார் என்ற தகவல் அறியப்படவில்லை. ஒரு வேளை இந்நூலை தொகுப்பித்தவன், பாண்டிய மன்னனாகவும் இருக்கலாம் என்ற கருத்தும் உள்ளது.

## பாடல்களின் எண்ணிக்கையும் ஆசிரியரும்

கலித்தொகை நூற்றைம்பது பாடல்களைக் கொண்டது. தொல்காப்பிய செய்யுளியலில் உள்ள,

**"ஒத்தாழிசைக் கலி...."**

**"அவற்றுள் ஒத்தாழிசைக் கலி இரு வகைத்தாகும்"**

**" ஒரு பொருள் நுதலிய....."**

**" பா நிலை வகையே..."**

**" கலி வெண்பாட்டே..."**

**பேராசிரியர் எழுதிய உரையில் கலித்தொகை நூற்றைம்பது பாடல்களைக் கொண்டுள்ளது."[6]**

என்ற செய்தியும் காணப்படுகிறது. மேற்சொன்ன கருத்துக்கு வலுசேர்க்கும் வண்ணம் பின் வரும் கருத்து அமைகின்றது.

**"கடவுள் வாழ்த்து உட்பட நூற்றைம்பது கலிப்பாக்களின் தொகுப்பே கலித்தொகையாகும்."[7]**

என்கிறார் சுந்தர சண்முகனார். அதாவது முதல் பாடல் கடவுள் வாழ்த்துப் பாடல் முதலில் குறிக்கப்பட்டுள்ள பாலைத்திணை முப்பத்தைந்து பாடல்களைக் கொண்டது. இரண்டாவதாக குறிஞ்சிக்கலி இருபத்தொன்பது, அடுத்து மருதம் முப்பத்தைந்தும் நான்காவது முல்லை பதினேழும் இறுதியில் உள்ள நெய்தல் முப்பத்து மூன்றும் ஆக மொத்தம் நூற்றைம்பது பாடல்களைக் கொண்டுள்ளது. இதனை,

**" இறை வாழ்த்தொன் றேழைந்து பாலைநா லேழொன்**

**நிறைகுறிஞ்சி யின்மருத மேழைந் துறைமுல்லை**

**ஈரெட்டொன் றாநெய்தல் எண்ணான்கொன் றைங்கலியாச்**

**சேரெண்ணோ மூவைம்பதே.''[8]**

என்னும் பழம் பாடலில் அறியலாம்.

கடவுள் வாழ்த்துப் பாடியவர் நல்லந்துவனார் என்று சொல்லப்படுகின்றார். பாலைக் கலியை பாலைப் பாடிய பெருங்கடுங்கோவும் குறிஞ்சிக் கலியைக் கபிலரும், மருதக்கலியை மருதனிளநாகனாரும், முல்லைக்கலியைச் சோழன் நல்லுருத்திரனும் நெய்தல்கலியை நல்லந்துவனாரும் இயற்றியுள்ளனர். இந்தத் திணையமைப்பு முறை வைப்பினையும், ஒவ்வொரு திணைக்கும் உரிய ஆசிரியர் இவர், என்பதனையும்,

**''போக்கெல்லாம் பாலை புணர்தல் நறுங்குறிஞ்சி**

**ஆக்கமளி ஊடல் அணிமருதம் - நோக்கொன்று**

**இல்லிருத்தல் முல்லை இரங்கியபோக்கோ் நெய்தல்**

**புல்லும் கலிமுறை கோப்பு.''**

என்றும்,

**'' பெருங்கடுங்கோன் பாலை கபிலன் குறிஞ்சி**

**மருதனிள நாகன் மருத - மருஞ்சோழன்**

**நல்லுருத்திரன் முல்லை நல்லந் துவனெய்தல்**

**கல்வி வலார் கண்ட கலி. ''[9]**

என்னும் பழம்பாடல்கள் அறிவிக்கின்றன.

## கலித்தொகையின் வேறு பெயர்கள்

கலித்தொகைக்கு வேறு சிலபெயர்களும் வழங்கி வந்துள்ளன. அவை கலிப்பா, கலிப்பாட்டு என்பனவாகும். இதனை தொல்காப்பிய செய்யுளியலில் பேராசிரியர் எழுதிய உரையில்,

**"அரிதாயவறன் என்னும் கலிப்பாவினுள் எனவும் அரிதாயவறனெய்தி என்னும் கலிப்பாட்டுத் தலைவன் அன்புறதக்கலி கூறக்கேட்ட தலைவி."**[10]

எனவும் கூறும் பகுதிகளில் காணலாம்.

## தொகுத்தவர்

கலித்தொகையினைத் தொகுப்பித்தவர் யார் எனத் தெரியவில்லை. தொகுத்தவர் நல்லந்துவனார் ஆவார். கலித்தொகை நூல் முழுமைக்கும் நச்சினார்க்கினியர் உரையெழுதியுள்ளார். அவர் எழுதிய உரையின் முகப்பிலும், இறுதியிலும் கலித்தொகையை தொகுத்தவர் நல்லந்துவனார் என்பதை பொ.வே.சோமசுந்தரனார் எழுதிய உரையின் வாயிலாக அறியலாம்.

**"...ஆதலான் ஈண்டு பாலைத் திணையையும் திணையாக ஆசிரியர் நல்லந்துவனார் கோத்தாரென்று உறுதி என்றும் இறுதிப் பகுதியில்,**

**இத்தொகையைப் பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என இம்முறையை கோத்தார் நல்லந்துவனார்."**[11]

என்கிறது. மேலும்,

**" நாடும் பொருள் சான்ற நல்லந் துவனாசான்**
**சூடு பிறைச் சொக்கன் துணைப் புலவோர் - தேடுவார்**
**கூட்டுணவே வாழ்த்தொடு கொங்காங் கலியினையே**
**கூட்டினான் ஞாலத்தோர்க்கு."** [12]

என்ற பாடலின் மூலமும் அறியலாம்.

## தொகுப்பு முறை

கலித்தொகையின் ஐந்து கலியுள் நெய்தல் கலியைப் பாடியவர் நல்லந்துவனார் என்பதனை நச்சினார்க்கினியர் உரை விளக்கம் தரும் என்பர் பொ.வே. சோமசுந்தரனார்,

**"சொல்லொடும் குறிப்பொடும் முடிவு கொள் இயற்கை புல்லிய கிளவியெச்சம் ஆகும் என்பதனாற் சொல் எச்சமுங் குறிப்பெச்சமுமாகத் தம் பேரறிவு தோன்ற ஆசிரியர் நல்லந்துவனார் செய்வின் செய்தார்."**[13] என்கிறார்.

நல்லந்துவனார் தாம் பாடிய நெய்தல் கலியை இறுதியில் அமைத்துக் கலித்தொகையை உருவாக்கியுள்ளார். கலித்தொகையில் காணப்படும் பாடல்களின் எண்ணிக்கையை நோக்குமிடத்து, எப்படியாவது நூற்றைம்பது என்னும் எண்ணிக்கை அமைய வேண்டும் என நல்லந்துவனார் திட்டமிட்டு செய்திருப்பதாகத் தெரிகிறது. மற்ற நால்வரும் நான்கு திணைகள் பற்றி பாடியுள்ள கலிப்பாக்களுள் சிறந்தன, சிலவற்றைக் தேர்ந்தெடுத்துக் கொண்டிருக்க வேண்டும் அல்லது மற்ற நால்வரும் கலித்தொகையில் தற்போது உள்ள பாடல்களை மட்டுமே பாடியிருக்கக் கூடும்.

அந்தப் பாடல்களுக்கு முன்னால் கடவுள் வாழ்த்து ஒன்றினையும் சேர்த்து நூற்றைம்பது என்னும் எண்ணிக்கையை உருவாக்க வேண்டும் என எண்ணி இருக்கலாம்.

மேலும் நல்லந்துவனார் பாடல்கள் அகநானூறு, நற்றிணை, பரிபாடல், ஆகியவற்றிலும் இருப்பதால், இவர் மற்ற தொகை நூல்களைப் போலவே கலித்தொகையினையும் சங்க காலத்திலேயே தொகுத்து விட்டார் என்பது புலனாகிறது.

## நூல் அமைப்பும் முறைவைப்பும்

கலித்தொகையில் முதலில் கடவுள் வாழ்த்துப் பாடலும் அடுத்து பாலை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் வரிசையில் அவ்வவ் திணைக்கு உரிய பாடல்களும் தொகுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் துறை விளக்கம் கூறப்பட்டுள்ளது. உரையாசிரியர் நச்சினார்க்கினியரால் இயற்றப்பட்டு இருக்கலாம் என்றொரு கருத்தும் உண்டு.

ஐந்திணைகள் எந்த வரிசையிலும் இருக்கலாம் என்னும் செய்தி நச்சினார்க்கினியர் உரையின் மூலம் விளக்கப்பட்டுள்ளது. இதனால் திணைகளின் முறைவைப்பு எப்படியும் இருக்கலாம் என்பது தெளிவாகின்றது.

## திணைப்பெயர் வழக்கு

கலித்தொகைப் பாடல்கள் பாலைக்கலி, குறிஞ்சிக்கலி, மருதக்கலி, முல்லைக்கலி, நெய்தல்கலி, எனத் திணைப் பிரிவினைப் பெயர்களால் வழங்கப்பட்டு உள்ளன. திணைப்பெயர் வழக்கை மிகுதியாகக் கொண்டு இருப்பவர் நச்சினார்க்கினியர் என்ற கருத்தும் உண்டு. இது வரை கூறியவற்றில் இருந்து கலித்தொகையின் எண்ணிக்கை, ஆசிரியர் பற்றிய கருத்து, அதன் தனித்தன்மை பற்றியும் அறியஇயலுகிறது.

## பாடுபொருள்

சங்க இலக்கியத்தில் கலித்தொகையும் பரிபாடலும் காலத்தால் பிற்பட்டதெனக் கருதப்படுகின்றன. இதனை சங்க காலத்தின் இறுதியில் இயற்றப்பட்டதெனக் கொள்வதும் உண்டு. எனவே இவ்விரு தொகை நூல்களும் பிற சங்க இலக்கியங்களை விட பாடுபொருளில் வேறுபட்டுக் காணப்படுவதை பகுத்துணர முடிகிறது.

## கலித்தொகையில் அகப்பொருள் மாற்றங்கள்

அன்பின் ஐந்திணையைப் பற்றிய செய்யுட்களே அன்றிக் கைக்கிளை, பெருந்திணை ஆகிய திணைகளைப் பற்றிய செய்யுட்களும் அடியவர்,

வினைவலர் ஆகியோர் ஒழுக்கங்களைப் பற்றிய செய்யுட்களும் இந்நூலில் உள்ளன. இவற்றிற்கு இலக்கணம் தொல்காப்பியத்தில் காணப்பட்டாலும் இத்தகைய செய்யுட்கள் இந்நூலில் அன்றி பிற தொகை நூல்களில் இல்லை.

செய்யுட்கள், உரையாடல் முறையிலும் சிறுகதை போலவும், நாடகக் காட்சிகள் போலவும் காணப் பெறுகின்றன. குறிஞ்சிக்கலியில் உள்ள

**"சுடர்த்தொடீஇ கேளாய்"**[14] என்று தொடங்கும் பாடல் சிறுகதை அமைப்பில் அமைந்துள்ளதை அறியலாம்.

ஒருவர் கூற்றாக அமையும் அமைப்பு இங்கு சிறிதே மாற்றமடைந்து, இருவர் உரையாடலில் அமையும் நிலை ஏற்பட்டுள்ளது, உயர்ந்தோரிடத்தே நிகழும் அதன் ஐந்திணை காதலையே பிற அகத் தொகைகள் காட்ட கலித்தொகை கூறும் குறளுமான ஏவல் மக்களின் பெருந்திணைக் கூட்டத்தினையும், தலைவனின் கைக்கிளை குறிப்பினையும் தருவது புதுமையாகும்.

பொதுவாக அகத்திணையில் முல்லைப் பாடல்கள் வினைமேற் சென்ற தலைவனையும், ஆற்றியிருக்கும் தலைவியையும் சித்தரிக்க முல்லைக்கலி ஆயர் வாழ்வில் காதல் காட்சிகளைத் தருகின்றது. ஏறுதழுவுதலில் வெற்றி பெறுவதால் பெண்ணொருத்தியை வாழ்க்கைத் துணையாக அடையும் மணநெறியைக் கூறுவது குறிப்பிடத்தக்கது.

அகப்பாடலில் புறக்குறிப்பாக அரசியல் செய்திகள் இணைவதை உவமைகளால் பல தொகை நூல்களும் குறிப்பிடப்படுகின்றன. கலித்தொகை மிகுதியாக பாண்டிய மன்னர் பற்றிய குறிப்புகளைத் தருவதும் மன்னர் வாழ்த்துடன் முடிவமைப்பதும் கலிப்பாடலின் தனித்தன்மையாக அமைகிறது. இவ்வாறு அகப்பாடலில் புறக்குறிப்புகள் வரும் பாங்கு காலத்தால் பிற்பட்டதெனவும், தூய அகப்பாடல் நிலை முற்பட்டதெனவும் ஆய்வறிஞர் கருதுவர்.[15]

## கலிப்பாவில் உரையாடல் வடிவம்

தொல்காப்பியர் கலிப்பாவின் இலக்கணம் கூறுகையில் 'உரையாடல்' பற்றி குறிப்பிடுகின்றார். உரையாடல் வடிவான கலிப்பாவை உறழ்கலி என்கிறார். ஒருவர் பேச்சுக்கு மறு பேச்சு எழும் போது தான் உரையாடல் உருவாகின்றது, இதனை,

**" கூற்றும் மாற்றமும் இடையிடை மிடைந்தும்**

**போக்கின் றாகல் உறழ்கலிக்கு இயல்பே."**[16]

என்ற நூற்பாவில் விளக்குகின்றார். எனவே உரையாடல் வடிவம் மிகத் தொன்மையானது என்பது தெரியவருகின்றது.

ஒருவர் கூற்றாகவே மாந்தர் உணர்ச்சியைப் புலப்படுத்த வேண்டும் என்னும் வரையறையை ஒட்டி சங்க காலத்தில் பாடல்கள் எழுந்தன. இக்கட்டுப்பாட்டை ஓரளவிற்குக் கலித்தொகை மாற்றுகின்றது. இருவர் பேசும் உரையாடல் காட்சி கலித்தொகையில் இடம் பெறுகின்றது. தலைவனொடு சொல்லெதிர் சாற்றும் அளவிற்கு உயர்ந்த தலைவியை இக்கலித்தொகையில் காணலாம்.

## முல்லைக்கலியில் அகப்பொருள் மாற்றங்கள்

முல்லைக்கலிப் பாடல்கள் முல்லைத்திணை, ஒழுக்கத்திற்கு முரண்பட்டு அமைகின்றன. இருத்தல் என்னும் ஒழுக்கம் இம்முல்லைக் கலிப்பாடல்களில் காணப்படவில்லை. 'புணர்தல் ஒழுக்கம்' பற்றியே இக்கலிப்பாடல்கள் புனைந்துரைக்கின்றன. களவுக் காலத்தில் தலைவனுடன் தலைவி பேசுதல் அரிது என்று இளவழகனார் கூறுகின்றார்.[17]

இந்த மரபிற்கு மாறாக கலித்தொகையில் களவுநிலைப் பாடல்களில் தலைவன் தலைவி உரையாடும் புது மரபினைக் காணமுடிகின்றது. தலைவன்,

தலைவி உரையாடுவதாக அமைந்துள்ள ஆறு பாடல்கள் முல்லைக்கலியில் காணப்படுகின்றன.

அறிந்தோர் இருவர், அறியாதவர் போல உரையாடி மகிழும் நாடகப்பாங்கினை முல்லைக்கலியில் காண முடிகின்றது. இதனை,

**“தலைவனும் தலைவியும் தங்களை ஒருவருக்கு ஒருவர் அறிமுகம் செய்து கொள்வது போல் உரையாடல் உள்ளது.”**[19]

**“ யார் எல்லா நின்னை அறிந்ததூஉம் இல்வழி”**[20]

**என்கிறார் தலைவி.**

**“ …..பகையஞ்சாப்**

**புல்லினத்து ஆயர் மகனேன் மாற்றியான்.”**[21]

என்று விடையளிக்கிறான் தலைவன். இதேபோல் கையில் இருப்பது என்ன என்று கேட்கும் தலைவனிடம்,

**“சேரிக் கிழவன் மகளேன் யான்.”**[22]

எனத் தலைவி தன்னை அறிமுகப்படுத்திக் கொள்கிறாள்.

எனவே உயர்ந்த அன்பால் உருவான காதலைப் பாடும் சங்க அக இலக்கிய மரபு கலித்தொகையில் அறவே கூற முடியாது என்றும் நாடக நலம் கருதியே நயமான உரையாடல் உள்ள இத்தகு முல்லைக் காட்சிகளைப் புலவர்கள் உருவாக்கியுள்ளனர் என்றும் அமிர்த கௌரி குறிப்பிடுகின்றார்.[23]

## முல்லைக்கலியில் ஏறுதழுவல்

தமிழர்களின் வீர சிறப்பினையும் காளைகளின் வகைகளையும் முல்லைக்கலியில் காணலாம். குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு,

ஐங்குறுநூறு போன்ற அகநூல்களில் முல்லைத் திணைப் பாடல்கள் ஆயர்கள் ஏறுதழுவுதல் பாட்டுடைத் தலைவர்களாக இருப்பதும் இல்லை.

முல்லைக்கலியில் தான் இவை புதிதாக வந்துள்ளன.

**“ஆயர்களின் வீரத்தையும், அஞ்சாமையையும் எடுத்துரைக்கும் ஏறுதழுவுதல் என்னும் வழக்கத்தை முல்லைக்கலி மட்டுமே விளக்கமாகக் கூறுகின்றது. மற்ற சங்க நூல்கள் கூறவில்லை.”**[24] என்று நா.ஆறுமுகம் கூறுவதை அறியலாம்.

முல்லைக்கலியில் ஆயர்மகள் தலைவியாக வருகிறாள். காளைமாட்டை அணைந்தவனை ஆயமகள் மணந்ததாகப் புதிய தகவல் கூறப்படுகின்றது. இதனால் மற்ற சங்க நூல்களைக் காட்டிலும் முல்லைக்கலி புதுமையான வீரப் பண்பினை உணர்த்துகிறது.

முல்லைக்கலியில் உள்ள பதினேழு பாடல்களுள் முதல் ஏழு பாடல்கள் ஏறுதழுவுதலைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. ஆய மைந்தர் ஏறு தழுவி இடைச் சிறுமியரை கவரும் முறைமை கூறப்படுகின்றது.

**“மணம் எட்டனுள் ஏறுதழுவுதல் அசுரத்தின் பாற்படும் என்றும் அசுரமானது கொல்லேறு கொண்டான் இவளை எய்தும் மாலை சூடப்பட்டான் இவளை எய்தும் வில்லேற்றினான் இவளை எய்தும் இன்னதொரு பொருள் தந்தான் இவளையெய்தும் என இவ்வாறு சொல்லிக் கொடுப்பது.”**[25]

என்று நடேச சர்மா கூறுவது குறிப்பிடத்தக்கது.

முல்லைக்கலி நேர்முகப் புனைவுப் பாடல்கள், இன்றைய நேர்முகப் புனைவுக்குரிய அடிப்படைப் பண்புகளை சீருறக் காட்டுகின்றன.

**“ஏறுதழுவற் பாடல்கள் நாடகம் போன்று இருவர் உரையாடலாய் நேர்முக வருணனையாய் அமைகின்றன.”**[26]

எனக் குறிப்பிடுகின்றார் அமிர்தகௌரி, இவ்வாறாக முல்லைக்கலியில் அகப்பொருள் மாற்றங்கள் காணப்படுகின்றன.

## ஏறுதழுவுதல்

ஏறுதழுவுதல் என்ற வீரவிளையாட்டு முல்லை நில (ஆயர்கள்) மக்களின் திருமணத்துடன் தொடர்புடையதாகப் பண்டையக் காலத்தில் இருந்தது. இவ்விளையாட்டு இன்றளவும் பின்பற்றி வருகின்றனர். பண்பாட்டு திருவிழாவாகவும் மக்களின் சமயம் சார்ந்த திருவிழாவாகவும் இளைஞர்களின் வீர உணர்வை நினைவு கூறும் விழாவாகவும் நடைபெறும் ஏறுதழுவுதல் பற்றி இலக்கியங்களில் இடம் பெறும் செய்திகளாகப் பகுத்து ஆராயமுடிகிறது.

பழந்தமிழ் நூலான கலித்தொகையில் இடம்பெறும் பாடல்களில் ஏறுதழுவுதல் சிறப்பாக குறிப்பிடப்பட்டுள்ளது. மலைபடுகடாம், பட்டினப்பாலை, சிலப்பதிகாரத்திலும் ஏறுதழுவுதல் பற்றிய கருத்துக்கள் உள்ளன. குறிஞ்சி, முல்லை நில மக்களும் தங்கள் நிலங்களில் உள்ள வலிமை வாய்ந்த எருதுகளை ஒன்றுடன் ஒன்று மோத செய்து ஆரவாரம் செய்வர். இவ்வெருதுகளின் வெற்றியைத் தங்களது வெற்றியாக எண்ணி மகிழ்வர். இதனை,

**“ இனத்திற் றீர்ந்த துளங்கிமி னல்லேறு மலைத்தலை வந்த**
**மரையான் கதழ் விடை மாறா மைந்தின் ஊறுபடத் தாக்கிக்**
**கோவலர் குறவரோ டொருங்கியைந் தார்ப்ப வள்ளிதழ்**
**குளவியுங் குறிஞ்சியுங் குழைய நல்லேறு**
**பொரூஉம் கல்லென் கம்பலை.” (மலை- 330-335)**

என மலைபடுகடாம் கூறுகிறது.

ஏறுதழுவுதலுக்கு முதல் நாள் குரவைக் கூத்து நடைபெறும். அன்று பெண்கள் ஏறு தழுவும் வீரன் வெற்றி பெற்றவரை அந்நாளின் மாலையில்

புகழ்ந்துப் பாடி வளமுடைய இளைய காளையை அடக்கியவர்க்கு உரியவள். இம்முல்லை மலரை அணிந்துள்ள மென்மையான கூந்தலையுடையவள் என ஆய்ச்சியர்கள் ஆடிப் பாடுவதைச் சிலப்பதிகாரம் கூறுகிறது.

**“ மல்லல் மழவிடை ஊர்ந்தாற்கு உரியவள்**

**இக் முல்லையாம் பூங்குழல் தான்.” (சிலம்பு , ஆய்ச்சி. கொளு-8)**

என்று கூறுவதை ஒப்பிட்டு அறியலாம்.

முல்லைக்கலியில் இடம் பெறும் பகுதியில் மாடுகளின் நிறம், வகை, வீரம், அதனை அடக்கும் இளைஞர்களின் செயல், பரண்மீது அமர்ந்து ஏறு தழுவுதலை பார்க்கும் பெண்களின் பேச்சுகள், பெண்களைப் பெற்ற பெற்றோர்களின் இயல்பு என சிறப்பாகக் காட்டப்பட்டுள்ளன.

ஏறு தழுவுதலில் ஆயர்கள் தம் காளைகளை அடக்குபவர்களுக்கு தன் மகளை மணம் செய்து தருவதாக உறுதியளித்து மாட்டின் கொம்புகளை கூர்மையாக சீவி தயார் நிலைப் படுத்துவதை,

**‘ கூரை நல்மலைக் குறுந்தொகை மகளிர்**

**மணலொடு கழங்கு’**

என்று பருவ வயதுள்ள பெண்கள் தங்களுக்கேற்ற காளைகள் மீது காதல் கொண்டனர். அக்கால ஆடவனுக்கு வீரமே வாழ்வாக விளங்கியது. பொன்முடியார் என்ற பெண்பாற் புலவர் இளைஞன் ஒருவனைக் குறிப்பிடுகின்ற பொழுது,

**“ ஒளிறுவாள் அறுசமம் முருக்கிக்களிறெறிந்து பெயர்தல்**

**காளைக்குக் கடனே.” (புறம் - 312, 5-6)**

என்று கூறியுள்ளார். முல்லை நில மகளிர் தம்மால் விரும்பி வளர்க்கப் பெற்ற வலிய எருதுகளைப் பிடித்து அடக்கும் அஞ்சா நெஞ்சமும் ஆற்றலுமுடைய காளையரையே மணக்க விரும்பினர். என்பதை,

**“ கொல்லேற்று கோடஞ்சு வானை மறுமையுள் புல்லாளே ஆயமகள்.”**

**(கலி, 103, 63-64)**

என்று முல்லைக்கலி குறிக்கின்றது. இந்நாளைப் போல் அல்லாமல் அக்காலத்தே மகளிரை மணந்து கொள்ள ஆடவரே மகளிர் தம் அணிகலன்களுக்கெனப் பெரும் பொருளினைப் பரிசாக தம்மைத் தந்தார்கள் என்பதனை அறியமுடிகிறது. ஆனால் அதற்காகத் தகுதியில்லாதவன் ஒருவன் பெரும் பரிசுப் பொருளைக் கொணர்ந்து தந்தாலும் தங்கள் மகளைப் பழந்தமிழ்ப் பெருமக்கள் மணஞ்செய்து கொடுத்தார்களில்லை என்ற கருத்தினை,

**“ முழங்கு கடல் முழவின யன்ன**

**நலஞ்சால் விழுப் பொருள் பணிந்து வந்து கொடுப்பினும்**

**புரையர் அல்லோர் வரையலள் இவளெனத்**

**தந்தையும் கொடாஅன்.” (புறம். 334-10-13)**

என்று கூறுவது குறிப்பிடத்தக்கது.

## புராண இதிகாசக் கருத்துகள்

### வீமனின் வஞ்சினம்

ஏறு தழுவுதல் பற்றி இலக்கியங்களில் இடம்பெறும் புராண இதிகாச கருத்துகள் கூறப்படுகின்றன. பழந்தமிழர்களின் பண்பாட்டில் வீரம் பற்றி கூறப்படுகிறது. மகாபாரதத்தில் பாண்டவர்கள் திரௌபதி பற்றி சித்தரிக்கப்பட்டு உள்ளது. பறக்கும் பட்டுப் பூச்சியின் சாம்பல் நிறத்தைத்

கொண்ட ஒரு காளையின் கூரிய பார்வைக்கு அஞ்சாமல் பாய்ந்த ஒரு ஆயன், அவன் சாகுமாறு தனது கொம்பால் அக்காளை குத்திக் குலைக்கும் காட்சி தலைமை பொருந்திய அழகிய திரௌபதியின் கூந்தலைப் பற்றி இழுத்த துச்சாதனைப் போர்களத்தில் பகைவர் நடுவே நெஞ்சைப் பிளந்து பழி முடித்த வீமனை போலக் காட்சி யளிக்கிறது. இதனை,

**“ மேற்பாட்டு உவண்டின் நிறன் ஒக்கும் புன்குருக்கன்**
**நோக்கு அஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாக்குத்தி**
**கோட்டிடைக் கொண்டு குலைப்பதன் தோற்றம் காண்**
**அஞ்சீர் அசைஇயல் கூந்தல் கை நீட்டியான்**
**நெஞ்சம் பிளந்து இட்டு நேரார் நடுவண் தன்**
**வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்” (மு.கலி, 101,15-20)**

என முல்லைக் கலியில் கூறும் மகாபாரதக் கருத்து ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது.

## உருத்திரனின் வீரம்

உருத்திரன் என்பவன் படைக்கும் தொழிலை செய்யும் பிரம்மனின் மகன். இவர் சைவ சமயக் கடவுளான சிவபெருமானால் அழிக்கும் தொழில் செய்ய உருவாக்கப்பட்டவர். உருத்திரன் என்றால் துன்பத்தை நீக்குபவர் என்று பொருள். இவர் அந்நாள் வரை உயிர்களை பிரிக்கும் எருமை வாகனத்தை கொண்ட எமனின் நெஞ்சை பிளந்து கொன்று குடலை பேய்களுக்கு இட்ட காட்சியானது காளை ஒருவனின் குடலை வெளி வருமாறு குத்தி குலைக்கும் காட்சி போல் சித்தரிக்கப்பட்டுள்ளது, இதனை,

**“ படர்அணி அந்தப் பசுங்கட் கடவுள்**
**இடரிய ஏற்றெருமை நெஞ்சு இடந்திட்டுக்**
**குடர்கூளிக்கு ஆர்த்துவான்” (கலி. பா: 101-24-26)**

என குறிப்பிட்டுள்ளது. ஏறு தழுவதற்கானப் போட்டியில் கலந்து கொள்ளும் ஆயர்குடி இளைஞர்களின் நிலையினை முல்லைக்கலியில் சித்தரிக்கப்பட்டுள்ளதை பகுத்து ஆராயலாம்.

## துரோணரை கொன்ற சிகண்டிகை

துரோணர் மகாபாரதத்தில் வரும் கௌரவர், பாண்டவர்களுடைய ஆசான். இவர் போர்க்கலைகளில் மிகவும் தேர்ந்தவர். இவரது மகன் அசுவத்தாமன். பாஞ்சால மன்னனின் (துருபதன்) மகள் சிகண்டிகை குருசேத்திரப் போரில் பாண்டவர்கள் தரப்பில் தனது தந்தை துருபதனன் மற்றும் தமையன் திருஷடத்யும்னனுடன் போரிட்டவன் ஆவான்.

குருஷேத்திரப் போரின் போது பீஷ்மர் அம்பாவின் மறுபிறவியிலேயே சிகண்டிகை என்பதனை அறிந்தவராக இருந்ததால் ஒரு பெண்ணிடம் போர் புரிதல் ஆண்மைக்கு இழுக்கு என்ற நிலையில் சிகண்டியுடன் போரிட மாட்டார் என்பதை அர்ச்சுனன் அறிந்தான். அவரை நேரிடையாக வெற்றி கொள்ள முடியாத அர்ச்சுனன் சிகண்டிகையை முன்னிறுத்தி பின்னால் இருந்து அம்பு மழை பெய்தான். இவ்வாறே சிகண்டியின் உதவியால் யாராலும் வெல்ல முடியாத பீஷ்மரை அர்ச்சுனன் வீழ்த்தினான்.

போரின் பதினெட்டாம் நாள் அசுவத்தாமன் தனது தந்தையாகிய துரோணரைக் கொன்ற சிகண்டியை நள்ளிருளில் சென்று போரிட்டு வென்று தலையைத் திருகிக் கொன்றதைப் போல காளையை கண்டு அஞ்சாமல் பாயும் வீரன் ஒருவனை தன்னுடைய கொம்பின் முனையால் குத்திக் குலைக்கும் காட்சியாக அமைகிறது. இதனை,

**“ செவிமறை நேர் மின்னும் நுண்பொறி வெள்ளைக்**

**கதன் அஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாடி**

**நுதிநுனைக் கோட்டால் குலைப்பதன் தோற்றம்காண்**

**ஆரிருள் என்னான், அருங்கங்குல் வந்து, தன்**

**தாளின் கடந்து அட்டுத் தந்தையைக் கொன்றானைத்**

**தோளின் திருகிவான்''  (101,  27-32)**

## கண்ணன் கம்சனை அழித்தல்

கம்சன் சகோதரியான தேவகியை வாசுதேவருக்கு திருமணம் செய்து கொடுத்தான். ஒருநாள் இருவரையும் தேரில் அழைத்துச் சென்ற போது வானில் அசரீரியாக, கம்சா உன் சகோதரிக்கு பிறக்கும் எட்டாவது குழந்தை உன்னை கொல்லும் என்றது.

இதை கேட்டு அதிர்ச்சி அடைந்த கம்சன் தேவகியை கொல்ல வாளை உருவிய போது வாசுதேவர் பிறக்கும் எல்லா குழந்தைகளையும் தங்களிடம் ஒப்படைத்து விடுவதாக கூறியதை கம்சன் ஏற்றுக் கொண்டான். தேவகி தன் கண்காணிப்பிலே இருக்க வேண்டும் என்பதற்காக இருவரையும் சிறையில் அடைத்து வைத்தான். அங்கு பிறந்த ஏழு குழந்தைகளையும் கம்சன் அழித்துவிட்டான். எட்டாவது முறையாக கர்ப்பம் தரித்தாள்.

அதே சமயத்தில் வாசுதேவரின் நண்பர் நந்தாவின் மனைவி யசோதாவும் கர்ப்பம் தரித்தாள். ஆவணி மாதம் அஷ்டமி திதி ரோகிணி நட்சத்திர தினத்தன்று தேவகிக்கு ஆண் குழந்தையும், யசோதாவுக்கு பெண் குழந்தையும் பிறந்தனர். அப்போது வாசுதேவர் முன்பு மகாவிஷ்ணு தோன்றினார்.

“இந்த ஆண் குழந்தையை (கிருஷ்ணர்) கோகுலத்தில் உள்ள யசோதா வீட்டில் சேர்த்துவிட்டு அங்கு பிறந்துள்ள பெண்குழந்தையை இங்கு கொண்டு வருமாறு உத்தரவிட்டார். அதன்படி கிருஷ்ணரை கூடையில் சுமந்து கொண்டு செல்ல ஆதிசேஷன் குடை பிடித்து சென்றது. அக்குழந்தை பிருந்தாவனத்தில் யாதவ குல நந்தா, யசோதாவிடம் ஒப்படைத்தார். அக்குழந்தைக்கு கிருஷ்ணர் (கண்ணன்) என பெயரிட்டனர். குழல் ஊதி மாடு மேய்த்து வெண்ணெய் திருடி குறும்புத் தனம் செய்து பிருந்தாவனத்திற்கு செல்ல பிள்ளையானார்.

கம்சன் தன் சகோதரிக்கு எட்டாவது குழந்தையைப் பார்க்க சிறைக்கு வந்தான். அவனுக்கு தெரியாமல் மாற்றி வைக்கப்பட்டிருந்த பெண் குழந்தையைப் பார்த்தான். இப்பெண் குழந்தையா என்னை கொல்ல போகிறது என ஏளனமாக சிரித்தான். அக்குழந்தையை தூக்கி பிடித்தபடி வாளால் வெட்டி கொல்ல முயன்ற போது, உன்னை கொல்ல அவதாரம் எடுத்து இருப்பவர் கோகுலத்தில் வளர்ந்து வருகிறார் என கூறியது. அக்குழந்தை அசரீரியாக சொல்வதைக் கேட்டு கம்சன் அதிர்ச்சி அடைந்தான்.

எட்டாவது குழந்தையான கண்ணனை அழிக்க கம்சன் வீ:ரர்களை அனுப்பி வைத்தான், அந்த அசுரர்களையும் கம்சனையும் அழித்த கண்ணன். பகைவர் தன்னை கொல்ல வந்த குதிரையின் வாயைப் பிளந்து வென்ற கண்ணனை போல் செவலைக் காளையின் கொம்பில் அடிப்பாகத்தை இறுகப் பிடித்து வலிமைப் போக்கிய காயம்பூக் கண்ணியை அணிந்துள்ள ஆயனின் மறப்பண்பை பற்றி கூறுகிறது. இதனை,

**“ ஒவா வேகமோடு உருத்துத்தன் மேல் சென்ற**

**சேஎக் செவிமுதற் கொண்டு பெயர்ந்து ஒற்றும்**

**காயாம்பூங் கண்ணி பொதுவன் தகைகண்டை**

**மேவார் விடுத்தந்த கூந்தற் குதிரையை**

**வாய் பகுத்திட்டுப் புடைத்த ஞான்று இன்னன்கொல்**

**மாயோன் என்று.” (103-50-55)**

முல்லைக்கலியில் புராணக் கருத்துகளையும் விளக்குவதையும் அறிய முடிகிறது.

## அரக்கு மாளிகைக்கு தீ இட்டது

துரியோதனன் அரக்கினால் பொய்யாக ஓர் மாளிகை அமைத்து அம்மாளிகைக்குப் பாண்டவர்களை அழைத்து இருக்கச் செய்தான். அரக்கு மாளிகை தீ பற்றி எரியும் சூழலில் தருமன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன், திரௌபதி ஆகிய அய்வரும் நன்கு உறங்கி கொண்டு இருந்த போது, விழித்துக் கொண்ட பீமன் அந்த அய்வரையும் தோளின் மேல் தூக்கி போட்டுக் கொண்டு சுரங்கத்தின் வழியாக வெளியேறிக் காப்பாற்றினான். நன்கு காய்ந்த மூங்கில் காடுகள் தீ பற்றி எரிய வலிமையான யானைகள் வருத்தமாக இருக்கும் போது ஆற்றல் உடைய யானை கணைய மரத்தை வெல்லுகிற திண்மையுடைய பெரிய துதிக்கையை கொண்டு நடக்கும் வழியிலே இருக்கும் நெருப்பு துகள்கள் கிடந்ததை மிதித்து புகைமண்டலத்தைக் கடந்து மற்ற யானைகளை காப்பாற்றியது போல் காட்சியளிக்கிறது. இத்தகைய வீர நிலையினை,

**“ வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர் பெற்ற**

**முகத்தவன் மக்களுள் முதியவன் புணர்ப்பினால்**

**ஐவர் என்று உலகேத்தும் அரசர்கள் அகத்தராக்**

**கைபுனை அரக்கு இலைக் கதழ்எரி சூழ்ந்தாங்கு**

**களிதிகழ் கடாஅத்த கடுங்களிறு அகத்தவா**

**முளிகழை உயர்மலை முற்றிய முழங்கு அழல்**

**ஒள்ளிரு அரக்கு இல்லை வளிமகன் உடைத்துத்தன்**

**உள்ளத்து கிளைகளோடு உயப்போகு வான்போல.”**

**(பாலைக்கலி-25)**

என்று ஒப்புமைப்பட கூறப்பட்டுள்ளதையும் வீர உணர்வையும் அறிய முடிகிறது.

## குறிஞ்சிக் கலியில் அகப்பொருள் மாற்றங்கள்

அகப்பொருளைப் பற்றிய சங்க இலக்கியங்கள் அனைத்தும் களவியலுக்கு உடம்பாடான ஒத்த காமத்தை அடிப்படையாகக் கொண்டவை. கைக்கிளை, பெருந்திணை என்னும் ஒவ்வாக் காமத்தை பற்றிய பாடல்கள் அவற்றுள் காண முடியாது. ஆனால் கலித்தொகையில் பெரும்பாலான பாடல்கள் கைக்கிளையையும் பெருந்திணையையும் பற்றியனவாக அமைகின்றது.

**“ மையின் மதியின் விளங்கு முகத்தாரை வவ்வின் கொளலும்**

**அறன் எனக் கண்டன்று.”[27]**

என்று குறிஞ்சிக் கலிப்பாடல் கூறுகின்றது. மகளிரைக் கவர்ந்து சென்று மணத்தலை வடமொழியாளர் இராக்கத மணம் என்பர்.

தொல்காப்பியர் பெருந்திணையாவது ஒவ்வாத காமம் என்று கூறினாரேயன்றி மகளிரை கௌவிச் செல்லும் இராக்கத மணமுறைக்கு விதி எதுவும் வகுத்துக் காட்டப்படவில்லை.

**“ இராக்கத மணம் அறன்.”[28]**

என்று தொல்காப்பியரோ, சங்க காலப் புலவர்களோ எங்கும் எடுத்துக் கூறவில்லை என்கிறார் கே.கே.பிள்ளை. எனவே குறிஞ்சிக் கலியில் தோழியும் தலைவியும் வள்ளைப் பாட்டில் தலைவனது இயல்புகளைக் கூறி பாடுகின்றனர். தலைவன் சிறைப்புறமாக நிற்கின்றான். இச்சூழ்நிலையில் தலைவி தலைவனது இயல்பைப் பழித்துக் கூற தோழி இயற்பட மொழிகின்றாள். இவ்வாறு இயற்பட மொழிதல் வினாவிடை அமைப்பில் விளங்குகின்றது. இதனை,

**“ பாடுகம் வாவாழி தோழி வயங்களிற்றுக்**

**கோடுலக்கை யாகநற் சேம்பின் இலைகளாக**

**ஆடுகழை நெல்லை அரையுரலுட் பெய்திடுவோம்**

**பாடுகம் வா வாழி தோழிநற் றோழி பாடிற்று."[29]**

என்னும் குறிஞ்சிக் கலிப்பாடல் மூலம் தெரிந்து கொள்ளலாம். இவ்வாறாக குறிஞ்சிக் கலியில் அகப்பொருள் மாற்றங்கள் காணப்படுகின்றன.

## குறிஞ்சிக்கலியில் புராண இதிகாசக் கருத்துகள்

## இராவணன் கைலை மலையைப் பெயர்த்தல்

சிவபெருமான் உமாதேவியுடன் கைலை மலையில் வீற்றிருக்கும் போது, பத்து தலைகளைக் கொண்ட இராவணன் தனது வலிமைமிக்க கைகளால் அம்மலையினை எடுக்கத் தலைப்பட்டான் என்றும், இறைவன் கால் நுனியால் அம்மலையினை அழுத்த அதனுள் அகப்பட்டு இராவணன் வருந்தினான் என்பதைப் போல் வேங்கை மரத்தைப் புலி என நினைத்து அதன் அடிப்பகுதியைத் தந்தத்தால் குத்திய யானை தந்தத்தை எடுக்க முடியாமல் வேதனைப்பட்டு அலறிய நிலையை ஒத்தது என சித்தரிக்கப்படுகிறது. இதனை,

**" இமயவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்**
**ஊமை அமர்ந்து உயர்மலை இருந்தனனாக**
**ஐயிரு தலையின் அரக்கர் கோமான்**
**தோடிப்பொலி தடக்கையின் கீழ்புகுத்து அம்மலை**
**எடுக்கல் செல்லாது உழப்பவன் போல**
**உறுபுலி உருஎய்ப்பப் பூத்த வேங்கையைத்**
**கறுவு கொண்டு அதன் முதல் குத்திய மதயானை**
**நீடு இரு விடரகம் சிலம்பக் கூய்த்தன்**
**கோடு எடுக்கலாகாது."  ( குறிஞ்சிக்கலி, 38-1-9)**

## துரியோதனன் தொடையினை பீமன் பிளக்கும் செய்தி

துரியோதனனின் தொடையைப் பிளந்த பீமனைப் போல, புலியின் மார்பில் தந்தத்தால் குத்திய யானை கம்சன் அனுப்பிய அசுரர்களை வென்ற கண்ணனைப் போல உள்ளது என்று கூறுகிறது.

**"முறஞ்செவி மறைப்பாய்பு முரண் செய்த புலிசெற்று**
**மறந்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்**
**குறங்குஅறுத் திடுவான்போல். கூர்நுதி மடுத்து அதன்**
**நிறம் சாடி முரண் தீர்ந்த நீள் மருப்பு" ( குறிஞ்சிக்கலி,52-1-4)**

என விளக்கப்பட்டுள்ளது.

## மருதக்கலியில் அகப்பொருள் மாற்றங்கள்

மருதக்கலிப்பாடல்கள் உரிப்பொருள் மாறாமல் ஊடலையே பொருளாகக் கொண்டுள்ளன. பிற திணைச் சூழல்களிலும் மருதத்திணைச் சூழல் இயற்கையாகப் படைக்கப்பட்டுள்ளது. நகர்புற பண்பாடு பற்றி மருதக்கலிப் பாடல்களில் வெளிபடுத்தப் பட்டுள்ளன.

**"உரையாடல் நாடகப்போக்கு இவையன்றி இயற்பழிப்பு மிகுதி வழக்கில் சாடை என வழங்கப்படும் உட்குறிப்புப் பேச்சு, குத்தல் பேச்சு, இழித்துரைத்தல் பெருந்திணை மரபுகள் என உரையாசிரியரால் சுட்டத் தகுந்தவை ஆகிய போக்குகளை மருதக்கலியின் உரிப்பொருள் வெளியீட்டில் காண முடிகின்றது."**[30]

என்று அமிர்தகௌரி விளக்குகிறார்.

## தலைவி தோழி உறவு நிலை

தொல்காப்பியர் வரையறுத்த கூற்றிற்குரிய மாந்தருள் சேடி பற்றிய குறிப்பில்லை. ஆனால் நாற்கவிராச நம்பி தோழியைக் குறிக்க சேடி என்ற சொல்லை கையாண்டுள்ளார்,[31] சேடி என்பவள் அனுப்பப்படுபவள் என்று பிங்கல நிகண்டு கூறுகிறது.

தலைவியும் சேடியும் உரையாடுவதாகக் கலித்தொகைப் பாடல்கள்(82, 83, 84) கூறுகின்றது. இம்மூன்று மருதத்திணை உரையாடல்களையும் ஆராயும் போது சேடி தான் தோழியோ என்ற ஐயம் எழக்கூடும். செவிலியின் மகளாகக் கருதப்படுபவளும் எல்லா நிலைகளிலும் தலைவியிடம் மிகுந்த உரிமையுடையவளாகிய தோழியைத் தலைவி ஏவுவதாக எந்தப் பாடலிலும் குறிப்பு இல்லை. தோழியிடம் தலைவி வேண்டுகிற பாடல்களிலும் குறிப்பு இல்லை. தோழியிடம் தலைவி வேண்டுகிற பாடல்கள் மிகுதியாகக் காண முடிகிறது.

**“தலைவிக்குத் தோழியாகவும் நற்றுணையாகவும் வாழ்ந்து சொல்லாடிச் செயல்படுபவர்களாகவும் விளங்கும் தோழி பணிப்பெண் நிலையில் அஞ்சி வாழ்வதாகப் பகர்தல் பொருந்தாது.”**[33]

என்கிறார் அமிர்தகௌரி.

மேற்கூறிய மூன்று பாடல்களிலும் புதல்வனை அழைத்துக் கொண்டு புத்தேளிர் கோட்டம் வலம் செய்து வருக எனப் பணித்திருந்தாள் தலைவி. புதல்வனுடன் போன சேடி காலம் தாழ்த்தி இல்லம் திரும்ப பாலொடு வீங்கிய மார்பின் துன்பத்தினால் தலைவி அவளைக் கடிகிறாள். எங்கெல்லாம் பொருத்தமின்மை அல்லது முரண்பாடு காணப்படுகின்றதோ அங்கெல்லாம் நகைப்பு விளைவதற்கு இடமுண்டு என்பதை மருதக்கலியின் வாயிலாக அறிய முடிகின்றது.

**“ நம்முள் நகுதல் தொடீஇயர் நம்முள் நாம்**

**உசாவுங் கோனடி தொட்டேன்.”**

எனக் குறளால் அடிப்பணிந்து விடக் கூனியும் குறியிடம் அமைத்துக் கூறுகின்றாள். இப்பாடல் காம உணர்வு மிக்க அடியோர் நிகழ்த்தும் உரையாடல் நகைச்சுவை நாடகக் காட்சியினை விளக்குவதாக அமைகின்றது. இத்தகைய அமைப்பு பிற சங்க இலக்கியத்தில் இல்லை எனினும் கலித்தொகையின் வாயிலாகப் பகுத்து ஆராய முடிகிறது.

## தலைவனை தலைவி விளித்தல்

தலைவனைத் தலைவி விளித்துக் கூறல் கலித்தொகையில் காணப்படுகின்றது. ஊடல், உரிமை, இகழ்ச்சி, அன்பு நிலைகளில் தலைவனைத் தலைவி விளிப்பது ஆகியவற்றை இதன் மூலம் அறியலாம்.

ஊடல் நிலையில்

(1) யாரிவன் (ம.கலி.89:1-7)

(2) ஏடா (ம.கலி.87:5)

(3) பரத்தை வியன் மார்ப (ம.கலி. 93-2)

இகழ்ச்சி உரையில்

(1) விடலை (ம.கலி 95:32)

(2) சேகா (ம.கலி. 96:22)

உரிமை அன்பு நிலைகளில்

(1) ஏந்தெழில் மார்ப (ம.கலி 95:1)

(2) மிகு புனல் நல்லூர் (ம.கலி:66-8)

(3) புலைணி நல்லூர் (ம.கலி 66:8)

மேலும்,

**“ ...இவனொடு**

**புக்க வழியெல்லாம் கூறு.”**[34]

எனத் தலைவி கடிந்து கேட்க,

**“ கூறுவேன் மேயாயே போல வினவி வழிமுறைக்**

**காயாமை வேண்டுவல் யான்.”** [35]

எனப் பணிந்து இரக்கின்றாள் சேடி.

**“காயாது என்னுரையைக் கேட்க வேண்டும்.” என்று சேடி இரப்பதும் காயேம் எனத் தலைவி இருப்பதும் சேடி என்பவள் தோழி அல்லள் என்பதை உறுதிப்படுத்துகின்றன.”**[36]

என்னும் அமிர்த கௌரியின் கருத்தும் குறிப்பிடத்தக்கதாகும். மருதக்கலியில் இடம் பெறும் தலைவி – சேடி உரையாடல் பாடல்கள் மூலம் பகுத்து ஆராய முடிகிறது.

தலைவியின் உள்ளம் அறிந்தவள் தோழி, தலைவன் பரத்தையிடம் செல்லும் போது தலைவிக்கு எந்த அளவிற்கு வெறுப்பு உள்ளதோ அந்த அளவிற்கு வெறுப்புடையவள் தோழி. அத்தன்மை உடைய தோழி தலைவனின் புதல்வனை பரத்தையர் தீண்டிக் கொஞ்சி மகிழ்ந்து அணிகலன்கள் பூட்டி மகிழ்வதற்கு விரும்ப மாட்டாள். இதற்கு மாறாக மருதக் கலிப் பாடல்கள் அமைந்துள்ளன. எனவே சேடியானவள் தலைவி இட்ட பணிகளைச் செய்வதற்கு உரியவள் என்பதும், வேறு எவ்வித உரிமையுடையவளும் அல்லள் என்பதும் தலைவியின் புலம்பலைக் கேட்டுக் கொள்வாளே தவிர, தோழி போன்று எதிர் ஆறுதல் மொழி உரைக்கும் உயர்நிலைப் பெற்றவள் அல்லள் என்பதும் தெளிவாகின்றது. பிற அக

இலக்கியங்களில் இத்தன்மை உடைய பாடல்கள் இடம்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## குறளன் - கூனி உரையாடல்

**"அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்**

**கடிவரை யிலபுறத்து என்மனார் புலவர்."**[37]

என்பதனால் அடியோராகிய கூனும் குறளும் உறழ்ந்து கூறக் கூடியதாக அமைந்த கலித்தொகைப் பாடல் ஒன்று (94) உரையாடல் அமைப்பில் உள்ளது.

இப்பாடலில் வரும் குறளன், கூனி உருவ அமைப்பு நகைப்பிற்கு உரியது. இப்பாடலில் இருவரின் பாலுணர்வும் வெளிப்படையாக குறிக்கப்படுகின்றது.

**" நீருள் நிழற்போல் நுடங்கிய மென் சாயல்"**[38]

**" மாண்ட எறிந்த படையொன் முடங்கி முடங்கி**

**நெறித்துவிட் டன்ன நிரையேரா லென்னைப்"**[39]

**" உக்கத்து மேலும் நடுவுயர்ந்து வாள்வாய**

**கொக்குரித்து அன்ன கொடுமடாய்"**[40]

என்று கூனியின் உருவ அமைப்பைக் குறளன் எள்ளி நகையாடுகின்றான். கூனியோ, குறளனுக்கு சற்றும் குறுகாதவளாய்,

**" குறள் நாழிப் போழ்கினான்"**[41]

**" ஆண்டலைக்கு ஈன்ற பறழ்மதனே"** [42]

**" வல்லுப் பலகை யெடுத்து நிறுத்தன்ன**

**கல்லாக் குறள்."[43]**

**" யாமை யெடுத்து நிறுத்தற்றால்"[44]**

என்று குறளன் உருவத்தை எள்ளுகின்றாள். கூனியைப் புல்ல விரும்பும் குறளனது ஆவலும் அவ்வாறு புல்லுதற்கு இடையூறாக இருக்கும் அவளது கூனும் வெளிப்படையாக குறளனால் சொல்லப்படுகின்றன"[45] என்றும் அமைகிறது.

பிற அக இலக்கியங்களைக் காட்டிலும் கலித்தொகையில் தலைவனிடம் மிகுந்த உரிமையுடன் தலைவி பேசுவதால் இத்தகைய விளி நிலைகள் எழுகின்றன என்றும் எண்ணுதற்கு இடமுண்டு.

## நெய்தல் கலியில் அகப்பொருள் மாற்றங்கள்

நெய்தல் கலியில் தலைவியின் பேச்சைக் குழுவினர் கண்டெடுத்து மொழிவதாக நான்கு பாடல்கள் உள்ளன.[47]

மாலைப்பொழுது கண்டு வருந்தும் தலைவியின் புலம்பலை நான்கு பாடல்களிலும் குழுவினர் கொண்டெடுத்து கூறுகின்றனர்.

**" மாலை நீ.........**

**..............கொடியான் போல்**

**அல்லற்பட்டு இருந்தாரை அயர்ப்பிய வந்தாயோ**

**மாலை நீ...."**

**ஆரகூர் உற்றாரை அணங்கிய வந்தாயோ**

**மாலை நீ........**

**.........வேல் கொண்டு நுழைப்பான் போல்**

**காய்ந்த நோய் உழப்பாரைக் கலக்கிய வந்தாயோ.''[48]**

என மாலையை முன்னிலைப்படுத்திப் பேசுவது போல் உள்ள தலைவியின் கூற்று நல்ல நாடகத் தன்மை வாய்ந்துள்ளது.

இவ்வமைப்புக் கலித்தொகையில் மட்டுமே காணப்படுகிறது. மற்ற அக இலக்கியங்களில் காணப்பெறவில்லை. கலித்தொகைப் பாடல்கள், ஒருவர் கூற்றில் அமைந்த கொண்டெடுத்து மொழியும் உரையாடல் வகையைச் சார்ந்தவை. நாடகக் கூறுகள் ஆசிரியப்பாவை விட கலிப்பாவிலேயே நன்கு அமையும். எனவே கலித்தொகைப்பாடல்கள் உரையாடல் வடிவில் அமைந்திட யாப்பு முறையும் ஒரு காரணம் என்று கூறலாம்.

## கலித்தொகையின் இலக்கணம்

கலிப்பாக்களால் தொகுக்கப் பெற்றமையால் கலித்தொகை என்னும் பெயர் பெற்றது என்பார் இராமநாதன் செட்டியார்.[49] அதன் ஐந்திணையாகிய அகப்பொருள் செய்திகளைப் பாடுதற்குரிய தகுதி வாய்ந்த பாவாகத் கலித் தொகையைத் தொல்காப்பியர் குறித்து உள்ளார். இதனை,

**''நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்**
**பாடல் சான்ற புலனெறி வழக்கம்**
**கலியே பரிபாட்டு ஆயிரு பாங்கினும்**
**உரியதாகும் என்மனார் புலவர்.''[50]**

என்னும் நூற்பாவின் வழி அறியலாம்.

இதில் என்மனார் புலவர் என்று குறிப்பதனால் தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரே அகப்பொருள் இலக்கிய வழக்கில் பரிபாடலும் கலியும் முதன்மை பெற்று விளங்கின என்பது புலனாகும்.

கலிப்பா, வெண்பா நடையினை உடையது என்று தொல்காப்பியர் தம் குறித்துள்ளமையைக் கீழ்வருமாறு அறியலாம்.

**“ வெண்பா நடைத்தே கலி என மொழிப”**[51]

இக்கூற்றுக்கு ஏற்ப பல வெண்பாக்கள் கலிப் பாடல்களில் காணப்படுகின்றன. அவை,

**“ நேரிசை வெண்பா (கலி-43)**

**இன்னிசை வெண்பா (கலி- 41)**

**நேரிசைச் சிந்தியல் வெண்பா (கலி-42)**

**இன்னிசை சிந்தியல் வெண்பா (கலி-41)**

**குறள் வெண்பா (கலி-88)**

கலிப்பாவினை ‘இசைப்பாட்டு’ எனக்குறித்துள்ளனர்[52]

என்று மு.சண்முகம்பிள்ளை குறிப்பிடுகின்றார். எனவே கலிப்பாவில் வெண்பா வந்துள்ளமை பற்றிய கருத்தினை இதன் மூலம் அறிய முடிகிறது.

## கலிப்பாவின் வகை

கலிப்பா ‘ஒத்தாழிசைக் கலி’ கலிவெண்பாட்டு, கொச்சகக் கலி, உறழ்கலி என நான்கு வகைப்படும் என்பதைத் தொல்காப்பியர்,

**“ ஒத்தாழிசைக் கலி, கலி வெண்பாட்டே**

**கொச்சகம் உறழொடு கலிநால் வகைத்தே”**[53]

என்னும் நூற்பாவில் குறித்துள்ளார்.

இவற்றுள் ஒத்தாழிசைக் கலியில் தரவு, தாழிசை (இடைநிலைப் பாட்டு) தனிச் சொல் (அடை) சுரிதகம் (போக்கு) என்னும் நான்கு உறுப்புகள்

வருகின்றன. இம்முறை பெரும்பாலான ஒத்தாழிசைக் கலிப்பாக்களில் காணப்படுகின்றது. கலித்தொகைப் பாடல்கள் பெரும்பாலும் இவ்வொத்தாழிசைக் கலியாலே பயின்று வருகின்றன.

கலித்தொகையில் 150 பாடல்களும் பெரும்பாலும் ஒத்தாழிசைக்கலி, அறுபத்தெட்டு பாடல்களில் பயின்று வந்துள்ளது[54] என நச்சினார்கினியர் கூறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

கலித்தொகைப் பாடல்கள் பெரும்பாலும் உரையாடல் முறையில் அமைந்துள்ளன. உரையாடல் முறைக்கு என்றே இயற்றப்பட்ட பாவாகக் கலிப்பாவினைக் குறிப்பிடலாம்.

செய்யுள் வரலாற்றில் அகவலும், வெண்பாவும் முற்படத் தோன்றின். கலியும், வஞ்சியும் பிற்பட்டு எழுந்தன என்று கூறும் கருத்தாக்கங்களும் உள்ளன. கலித்தொகையில் தாழிசைப் பகுதிகள் எல்லாம் இசையோடு பாடுவதற்கு அமைந்த பகுதிகளாகும்.

**“ ஆய்சாவி அமைஎன அணி மயிற்பெடை என**

**தூது உன் அம்புறவு என துதைத்த நின் எழில் நலம்.”**[55]

என்று பாடிக்காட்டலாம்.

ஒரு செய்தியைத் தொகுத்தும் விரித்தும் சுருக்கியும் கூறுவதற்கேற்ற பகுதிகளைக் கேட்ட பாடல் கலிப்பாடல் இத்தகைய பாடல்களின் தொகுப்பே கலித்தொகை[56] என்பார் சாமி சிதம்பரனார்.

கலித்தொகையின் ஒரே பாடலைப் பல இசைகளில் இணைத்துப் பாடமுடியும். மேலும் சொல்லத் தொடங்கிய பொருளைத் தொகுத்துக் கூறலாம், விரித்துரைக்கலாம், சுருக்கிச் சொல்லலாம். இத்தகைய சிறந்த பாடல்களின் தொகுப்பையே கலித்தொகை என்றும் கூறுவர். கலித்தொகையில் காணப்படும் கலிப்பா.

**"வாய்மொழிக் கூறுகளில் சிறப்பான பகுதியாய் இருப்பது இசையேயாகும். இசையோடு உடன் தொடர்ந்து நடனமாகும். எனவே ஆடலுடன் பாடப்படும் பாடல் மீண்டும் மீண்டும் வரும் வாய்மொழி உத்திகளை நினைவூட்டுகிறது."**[57]

என்று கதிர்மகாதேவன் கூறுவதை இதன் மூலம் அறியலாம்.

## உரையாடல்

வாய்மொழிப் பாடல்களின் புனைதிறன் உத்திகள் கலிப்பாடல்களில் காணப்படுகின்றன. தாழிசையில் உரையாடல் பாங்கில் வந்த சொற்களை மிகுதியாக கலித்தொகையில் அறியலாம்.

**" அகவினம் பாடுவாம் தோழி!**

**வகைசால் உலக்கை வயின் வயின் ஓச்சிப்**

**பகையில் நோய் செய்தான் பயமலை யேத்தி**

**அகவினம் பாடுவாம் நாம்**

**பாடுகம் வா, வாழி! தோழி! வயக்களிற்றுக்**

**கோடுலக்கையாக நற்சேம்பின் இலைகளா**

**ஆடுகழை நெல்லை அரையாலும் பெய்திடுவாம்**

**பாடுநம் வா வாழி! தோழி'! நற்றோழி ! பாடுற்று."**[58]

என்பது இலக்கிய உத்தியாக அமைகின்றன.

## வள்ளைப்பாட்டு

'வெதிர்நெல்' என்ற மலை நெல்லைக் குற்றும் போது பாடுகின்ற வள்ளைப்பாட்டுக்கள் பல கலியில இலக்கிய வடிவம் பெற்றுள்ளன. இன்றும் இவை 'உலக்கைப்பாட்டுகள்' என வழங்கக் காணலாம்.

**“ கொல்யானைக் கோட்டால் வெதிர் நெற்குறுவாநாம்**

**வள்ளை யறவும் வா! இகுளை நாம்**

**வள்ளை அகவுறும் வா”[59]**

என்று பாடுவதை அறியலாம்.

## குரவைக் கூத்து

குரவைக்கூத்து எனும் இலக்கிய வடிவம் சிலப்பதிகாரம், கலித்தொகையில் கூறப்படுகிறது.

**“ தெரிவிழாய் நீயும் நின் கேளும் புணர**

**வரையுரை தெய்வம் உவப்ப உவந்து**

**குரவை தழீஇ யாம்ஆடக் குரவையுள்**

**கொண்டு நிலைப்பாடிக் காண்,”[60]**

எனும் குறிஞ்சிக் கலிப்பாடலைச் சுட்டலாம்.

இவ்வாறு தெய்வங்கட்குச் சடங்கு செய்யும் விழா நாள்களில் ஆடலுடன் கூடிய பாடலாக்க குரவைகள் நிகழ்த்தப்பட்டன என எண்ண இடமேற்படுகிறது.”[61] என்று இராம. பெரியகருப்பன் கூறுகிறார்.

தொல்காப்பியர் கலிப்பாவின் இலக்கணம் கூறுகையில் உரையாடல் வடிவில் அமைந்த கலிப்பாவை ‘உறழ்கலி’ என்கிறார். ஒருவர் பேச்சுக்கு மறுபேச்சு எழும் போது தான் உரையாடல் உருவாகின்றது. இதனை,

**“ கூற்றும் மாற்றமும் இடையிடை மிடைந்தும்**

**போக்கின் றாதல் உறழ்கலிக்கு இயல்பே.”[62]**

என்னும் நூற்பாவின் வழி விளக்குகின்றார்.

எனவே உரையாடல் வடிவம் மிகத் தொன்மையானது என்பதில் ஐயமில்லை. வடமொழி நூல்களிலும் உரையாடல் இடம்பெற்றுள்ளமையை நாடகக் கூறுகளாகிய உரையாடல், இசை, ஆடல், ஆகியன (ரிக்) வேதத்தில் காணப்படுகின்றன என்ற கூற்றும் உள்ளதென"[63] ஆய்வாளர்கள் கூறுவதை அறியலாம்.

தொல்காப்பியர் நாடகத்துக்கு இயன்ற பாவகையாகக் கலிப்பாவையும், பரிபாடலையும் கருதி இருக்கின்றார். இதனை,

**"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்**

**….. கலியே பரிபாட்டு ஆயிரு பாவினும்"[64]**

என்னும் நூற்பாவின் வழி அறியலாம்.

நாடக வழக்கு என்பது பொதுவாக இலக்கிய வழக்கைக் குறித்தாலும் இங்கு நாடகம் என்ற வகையைச் சிறப்பாகச் சுட்டுவதாகக் கருதலாம். தலைவன், தலைவி, பாங்கன், தோழி, நற்றாய் முதலிய பாத்திரங்களைக் கொண்டு சுவையான உரையாடல்களை அமைத்துப் புலவர்கள் அகநாடகக் காட்சிகளைப் புனைந்து காட்டி உள்ளார்கள். இவ்வகையான அகப்பாக்கள் நாடக மரபினை ஒட்டியே யாக்கப்பட்டிருக்கலாம். இத்தகைய வெளிப்பாட்டிற்கு கலிப்பா, பரிபாடல் ஆகியவை பொருத்தமானவைகளாக அமைந்துள்ளதனை அறிய முடிகின்றது.

நாடக உணர்ச்சிப் புலப்பாட்டைப் பல நிலைகளில் வெளியிடுவதற்கு கலிப்பாவின் உறுப்புகளான தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம், முதலியன துணை செய்கின்றன எனலாம்.

**"தமிழில் நீண்ட பாடல்கள் பலவும் நாடகக் கட்டமைப்புடையன"[65]**

என்று அமிர்தகௌரி கூறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

## சொல்லாட்சி

கலித்தொகையில் சில அரிய சொல்லாட்சிகள் காணப்படுகின்றன. இச்சொற்கள் சங்க இலக்கியங்கள் அரியனவாகும். பிற்காலத்தனவாகக் கருதப்படும். சில சொற்களும் இந்நூலில் உள்ளது. இதனைக் கொண்டும், இந்நூலில் உள்ள சொல்லமைப்பு முதலியவற்றைக் கொண்டும் இந்நூல் பிறத்தொகை நூல்களுக்குக் காலத்தால் பிற்பட்டது என்று உணர முடிகிறது.

சங்கத் தமிழில் காணப்படும் குறில் வடிவங்களை உடைய வினைவிகுதிகள் சங்கம் மருவிய காலத் தமிழில் நெடில் வடிவங்களையுடைய வினை விகுதிகளாக மாறுகின்றன. இம்மாற்றத்தை கலித்தொகையில் காணலாம்.

| சங்கத்தமிழ் | | சங்கம் மருவிய காலத் தமிழ் |
|---|---|---|
| என் | - | ஏன்(ஆற்றுகள்) (கலி-140-4) |
| எம் | - | ஏம் |
| அன் | - | ஆன்( உதவாதான்) (கலி-13-40) |
| அள் | - | ஆள் |
| அர் | - | ஆர் |

என்பன போன்ற பல சொல்லாட்சிகள் மருவிக் காணப்படும் போக்கினை கலித்தொகையில் காண முடிகின்றது.

## தமிழ் வளர்த்த மதுரை

பாண்டிய மன்னர்கள் சங்கம் வைத்து புலவர்களுக்கு ஊக்கம் ஊட்டிய பதிய நூல் ஆக்கத்திற்கான தொண்டினைச் செய்தார்கள். முதற்சங்கமும், கடைச் சங்கமும் முறையே தென் மதுரையிலும் மதுரையிலும் நிலவியதாகக் கூறப்படுகின்றது.

**“ பாண்டி நன்னாடுடைத்து நல்ல தமிழ்”**[66]

என்று பிற்காலத்தில் ஔவையார் பாடியதாகப் பாலசுப்ரமணியம் கூறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

இவ்வகையில் தமிழ் இலக்கியங்களோடு மதுரையும், பாண்டிய மன்னர்களும் நெருங்கிய தொடர்புடையவர்களாக இருந்திருக்கிறார்கள் என்பது தெரிய வருகின்றது. கலித்தொகையில் மதுரை வையையாறு, திருமருத முன்றுரை முதலியவற்றைப் பற்றியும் பல குறிப்புகள் காணப்படுகின்றன. ஆனால் சேர, சோழ வேந்தர்களைப் பற்றியும் அவர்களுடைய நாடு முதலியவற்றை பற்றியும் குறிப்புகள் காணப்படவில்லை. கலித்தொகை, பாண்டிய நாட்டினைப் பற்றிய பாக்களைக் கொண்டது என்று கருதலாம்.

கலித்தொகை பாக்களில் பரவலாகப் பாண்டிய நாட்டின் சிறப்பையும், பாண்டிய அரசின் பெருமையையும் உணர்த்துவதை பகுத்து ஆராய முடிகிறது.

மதுரையின் வையை ஆற்றங்கரையில் பல புலவர்களால் புகழப்பட்ட திருமருத முன்றுரை எனும் துறை இருந்தது. அத்துறை வண்டுகள் இடைவிடாது ஒலிக்கும் தன்மை கொண்டு விளங்கியது. இதனால் தலைவியின் நலன் கெட்டது என்பதைப் பின்வரும் பாடலடிகளால் புலவர்கள் புனைந்துரைக்கின்றனர்.

**“ திசைதிசை தேனார்க்கும் திருமருத முன்றுரை**

**வசை தீர்த்த என்நலம் வாடுவ தருளுவார்”**[67]

இளவேனிற் பருவத்து வையையாறு உயர்ந்த இரு மலைக் கொண்டது. அங்கு குளிர்ந்த அருவி நீர் இடைவிடாது ஓடியது. வண்டுகள் ஆரவாரம் செய்து முல்லைப் பூவில் உள்ள தாதை உண்டது.

**“வண்ணவன் டிமிர்ந்தாரை வையைவா ருயரெக்கர்த்**

**தண்ணருவி நறுமுல்லைத் தாதுண்ணும் பொழுதன்றோ”**[68]

என்ற பாடலடிகளால் உணரலாம்.

இவ்வையை ஆற்றில் காணப்படும் சிவந்த மணற் பகுதிகள் மகளிரின் சிவந்த தலைக் கோலம் போல் காட்சி அளித்தன. திருமகள் மார்பில் உள்ள முத்துமாலையைப் போன்று அவற்றில் கழுகும் அலறல் மணல் காணப்பட்டது என்பதனை,

**“ செய்யவ ளணியகலத் தாரமொ டணிகொள்பு**

**தொய்யகந் தாழ்ந்த கதுப்புப் போல் துவர்மணல்**

**வையைவார் அவிரற் லிடைபோழும் பொழுதினான்.”**[69]

வையாறு கார்காலத்தில் மலர்ந்த பூக்களை அணிந்திரந்து அது பெரிய நில மடந்தை ஒரு பூ மாலையைச் சூடி கொண்டிருப்பதைப் போல் காணப்பட்டதை,

**“ கார்முற்றி இணரூழுந்த கமழ்தோட்ட மலர்வேய்ந்து**

**…..தார்முற்றி யதுபோலத் தழைபூத்த வையைதான்.”**[70]

என்று இயற்கை மணம்பட பாடியுள்ளதை அறியலாம்.

## கலித்தொகையின் காலம்

கடைச் சங்கத்தின் இறுதி காலம் கி.பி இரண்டாம் நூற்றாண்டு என்பர் வரலாற்று அறிஞர். கடைச் சங்கத்தொகை நூல்களுள் பல நூற்றாண்டுகளில் பாடப்பட்ட செய்யுட்கள் உள்ளன. அவற்றுள் பல களவியலை அடிப்படையாகக் கொண்ட ஒத்த காமத்தைப் பற்றியவையாகும். கைக்கிளை, பெருந்திணைப் பற்றி அச்சான்றோர்கள் செய்யுள் இயற்றவில்லை.

தொகை நூல்களில் அவை காணுமாறில்லை. பாடிய ஒத்த காமச் செய்யுட்களும் உயர்ந்த பொருள் நோக்குடையனவாகும். அவர் மரபுக்கு மாறாக பெரும்பாலும் பொருளியல் சூத்திரங்கட்கு இலக்கியமாக அமைந்தவை கைக்கிளை பெருந்திணைச் செய்யுட்களைக் கொண்டவை. உயர்ந்த பொருள் நோக்கம் ஓரளவிற்கு குறைந்தவையே ஆகும். இவ்வேறுபாட்டை ஆய்வறிஞர்கள் நன்கு உணர்த்துவதை அறியலாம்.

**" மைகன் மதிலின் விளங்கு முகத்தாரை**

**கவ்விக் கொளலும் அறனெனக் கண்டன்று"**[71]

என்று குறிஞ்சிப் பாடல் ஒன்று கூறுகின்றது. மகளிரைக் கவர்ந்து சென்று மணக்கும் முறையை வடமொழியாளர் இராக்கத மணம் என்பர். தொல்காப்பியர் பெருந்திணையாவது ஒவ்வாத காமம் என்று கூறினாரே அன்றி மகளிரை கவர்ந்து செல்லும் இராக்கத மணமுறைக்கு விதி எதுவும் வகுத்துக் கூறவில்லை.

"இராக்கத மணம் அறன்" என்று தொல்காப்பியரோ, சங்க காலப் புலவர்களோ எங்கும் எடுத்துச் கூறவில்லை. ஆரியருடைய எண்வகை மணங்களுள் 'இராக்கத மணமும்' ஒன்றாகும். தமிழரிடம் இவ்வகை மணமுறை வழங்கியதில்லை. தம் காலத்து வழங்காத ஒரு பழக்கத்தைப் பாராட்டி பழந்தமிழ்ப் புலவர்கள் செய்யுள் செய்யார்.

ஆகவே இராக்கத மணம் அறன் எனக் கூறும் இச்செய்யுளும் இது போன்ற ஏனைய கலிச் செய்யுட்களும் கடைச் சங்க காலத்திற்குப் பிற்பட்ட. ஆரியக் கொள்கைகள் அறனெனக் கருதப்பட்ட காலத்தனவாகும் எனக் கொள்ளுதல் வேண்டும்.

**" தெருவின்கண் காரணமின்றிக் கலங்குவார்க்**

**கண்டுநீ வாரணவாசிப் பதம் பெயர்த்தல் எதில்"**

**என்னும் குறிஞ்சிக் கலிச் செய்யுள் ஒன்றில் தலைவி,**

**" தோழி நீ தெருவில போவார்க்கெல்லாம் இரங்குதல்**

**வாரண வாசியில் (காசியில்) பிறர் வருத்தம் தம்**

**வருத்தமாகக் கருதும் அருகுடையார் செயலை ஒத்துள்ளதே."**[72]

எனக் கூறியுள்ளது இரக்க உணர்வை வெளிப்படுத்துகிறது.

வாரணவாசி எனும் சொல் சங்க நூல்கள் ஒன்றில் கூட வழங்கப்படாத ஒன்றாகும்.

**“ஏனைய பழம்பாடல்களில் காணப்பெறாத இவ்வட நாட்டுச் செய்தி சங்க காலத்திற்கு பிற்பட்டது என்பதில் ஐயமில்லை.”**[73]

என்கிறார் இராசமாணிக்கனார்.

ஏனைய தொகை செய்யுட்களில் காணப்படாத முன்னிலைப் பன்மைச் சொல்லாகிய நீர் என்ற பலர்பால் சொல்லொடு ‘கள்’ விகுதி சேர்த்துக் கூறப்படல் ‘செய்யும்‘ என்னும் வாய்பாட்டு வினைமுற்றுப் ‘பலர்பாலில் வரல்’ போன்றவை கலித்தொகைச் செய்யுட்களில் காணப்படுகின்றன.

மேலும் ‘நின்நீத்தை’ ‘போசீத்தை’ (மருதக்கலி-29) எனவும் இல்லானும் பாடித்தை இ∴தொத்தன் (குறிஞ்சிக்கலி -21-24-25) எனவும் பல சொற்கள் மாறுபட்டுச் செய்யுட்களில் இடம் பெற்றுள்ளன என்று ஏனைத் தொகைச் செய்யுட்களை கொண்டு கூறவியலாது.

**“இத்திணைகளைப் பற்றியே பாடப்பட்ட சங்க காலப் புலவர் பழம் பாடல்களில் பயின்றில என்பதை நோக்கி இச்சொற்கள் கொண்ட செய்யுட்கள் பிற்காலத்தன எனக் கூறாமலே விளங்கும்.”**[73]

என்று இராச மாணிக்கனார் குறிப்பிடுகின்றார்.

## ஆரிய தாக்கம்

குறிஞ்சிக் கலியுள் ஐந்திணை பற்றி கூறுவதற்குரிய அரிய செய்திகளை ஏனைச் சான்றோரைப் பின்பற்றிக் கூறுதலை விடுத்து, அவரால் களவிலும் கருதப்படாதவையும் சொல்லப்படாதவை கைக்கிளை, பெருந்திணைச் செய்திகளை (இவற்றை ‘ரஸாபாஸம் என்பர் வடநூலார்) இழிந்தோர் களவினையும் மருதக்கலியுள் கூறும் குறளும் உறழ்ந்து கூறலும் புணர்தலும் (29) போன்ற செய்திகளையும் “தேள் கொட்டி ஏறும் விஷம்

போலக் காமம் தலைக்கேறுகிறதோ? என்றாற் போலக் கூறப்படும் முல்லைக்கலிச் செய்திகளையும் இவை போன்றே ஏனைய கலிகளிலும் வெறுக்கத்தக்க பண்டைப் புலவர் நெறிக்கு மாறாக கூறப்படும் செய்திகளையும் அச்சங்க கால புலவரோடு இருந்த சான்றோர் பாடவில்லை என்பது அறிவும் நடுவு நிலைமையும் உடையவர் நன்கறிவர். இவற்றை பிற்காலத்துப் புலவர்கள் பாடினார்கள் எனக் கோடலே அறிவுக்கும் ஆராய்ச்சிக்கும் பொருத்தமாகத் தெரிகிறது என்பர்”[74] அறிஞர் கே.கே. பிள்ளை.

காமன், ஆரியக் கடவுள் மருதக்கலியில் (29) ‘காமனாரும்’ அவர் தம்பி ‘சாமனாரும்’ வருகின்றனர். இப்பெயர்களையும் சங்க நூல்களில் காண முடியாது. காமனைப் பற்றிய செய்திகள் பிற்காலத்திய சமண பௌத்த காவியங்களிலும் ஆண்டாள் பாசுரங்களிலும் பெருங்கதையிலும் காணப்படுகின்றன. எனவே ‘காமன்’ எனும் கடவுளும், அவன் சாமணார் ‘தமையன்’ எனும் செய்தியும் கி.பி.இரண்டாம் நூற்றாண்டிற்கு முற்பட்ட கடைச்சங்க காலத்துப் பழம்பாடலுக்குப் பிற்பட்டனவே என்பது தவறாகாது என்கிறார் கே.கே.பிள்ளை”[75]

எனவே ‘மலிதிரை யூர்ந்துதல்’ எனவரும் முல்லைக்கலி அடிகள் தமிழகத்துக் கடல்கோள் ஒன்றைக் குறிப்பதாகும். அக்கடல்கோள் எதுவாயினும் கி.மு.வில் நடந்ததாகவே வரலாறு கூறுகிறது. கி.மு.504, கி.மு.306, இவ்விரு காலங்களில் ஒன்றாக இருக்காலம். மிகக்குறைவாக கொள்ளினும், இதனை கி.மு.4-ம் நூற்றாண்டில் நடந்த நிகழ்ச்சி என்று கூறாலம்[76] என்பர். இவ்வாறான சில செய்யுட்கள் இக்கலித் தொகையில் கடைச்சங்க காலத்தனவாக இருக்கலாம் என்று கூறவும் இடம் தருகின்றது.

கால முறைப்படி ஆராய்ந்தாலும், கலித்தொகை பாடியவராகக் கருதப்படும் புலவர் ஐவரும் வேறு வேறு காலத்தைச் சேர்ந்தவர்களாகின்றனர்.

எனவே "கலித் தொகைச் செய்யுட்கள் பத்துப்பாட்டை போல் சில நூற்றாண்டுகளில் செய்யப்பட்டிருக்க வேண்டும்"[77]. என்றும் அறிஞர் கூறுவர்.

கலித்தொகை முழுவதிலும் மூவேந்தருள் பாண்டிய மன்னன் ஒருவனைப் பற்றிய பாடல்கள் உள்ளன. ஏனைய இருவரைப் பற்றிய ஒரு குறிப்பும் காணப்பெறவில்லை. வையையாறு, கூடல்நகரம், ஆகியவற்றைத் தவிர்த்து வேறு ஒரு ஆற்றின் பெயரோ, நகரத்தின் பெயரோ கலித்தொகையில் காணவில்லை. மற்றும் பிற சங்க இலக்கியங்களில் தொகுக்கப்பட்டு உள்ள அகத்துறைப் பாடல்களில் குறிப்பிடப்பெறும் புலவர்கள், மன்னர்கள், வள்ளல்கள், ஆகியவர்களின் பெயர்கள் கலித்தொகையில் ஒரு பாட்டிலும் பயின்று வரவில்லை.

மேற்கோள் காட்டத்தகும் இடங்களில் "வாரண வாசிப் பதம்" போன்ற வடநாட்டுச் செய்திகளும் பிற்காலப் புராணக் கதைகளும், தெய்வங்களுமே குறிப்பிடப்பட்டு உள்ளன. மேலே காட்டிய சான்றுகளுள் கலித்தொகையானது சங்க காலத்துக்குப் பிற்பட்டு எழுந்த இலக்கியமாகும். என்னும் கருத்தினை உறுதிப்படுத்துகின்றன.

களப்பிரரும், பல்லவரும் வடமொழியையும் ஆரியக் கொள்கைகளையும், சமணச் சமயத்தையும் பெரிதும் பரப்பி வந்தார்கள். அவர்களைத் தொடர்ந்து. நாயன்மார்களும், ஆழ்வார்களும் தத்தம் சமயதத்துவங்களை விளக்கிப் பாடல்களைப் பாடி புராணக்கதைகளையும் மதக் கோட்பாடுகளையும் போதித்து வந்தனர். இந்நூற்றாண்டுகளில் தமிழகத்தில் நுழைந்து விட்ட கருத்துக்கள், சொற்கள் மக்கள் வாழ்க்கை முறையில் ஏற்பட்ட மாற்றங்கள் ஆகியவற்றை கலித்தொகையில் காண முடிகின்றது.

## அகப்பொருள்

பண்டையத் தமிழர் வாழ்க்கையை அகம் என்றும் புறம் என்றும் பிரித்தனர்.

'உள்ளம் ஒன்றுபட்ட தலைவனும் தலைவியும் ஊழினால் ஒன்றுக் கூடி தாம் உணர்ந்த இன்பம் இது தான் என பிறருக்குச் சொல்ல முடியாமல் உள்ளத்தே அனுபவிக்கும் உணர்ச்சியே அகம் எனப்படும். அகப்பாடல்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்திணைகளுக்கும் உரிய அக ஒழுக்கங்களான 'அன்பின் ஐந்திணை எனக் கூறுகின்றன, பொருந்தாத காதலை பெருந்திணை, என்றும், ஒரு தலைக்காமத்தை கைக்கிளை என்றும் கூறுகின்றன.

## அகநானூற்றில் புராண கருத்துக்கள்

இராமன் சீதையை இலங்கையிலிருந்து மீட்டு வரும் பொருட்டு வானர சேனைகளுடன் தனுஷ்கோடியில் உள்ள பெரிய ஆலமரத்தின் கீழ் அமர்ந்து ஆலோசனை நடத்தினான். அப்போது அம்மரக்கிளையில் தங்கி இருந்த பறவை இனங்கள் ஒன்றோடொன்று சண்டையிட்டும் கூச்சலிட்டும் இருந்தன. இதனால் இராமனுடைய மந்திராலோசனைக்குத் தடை ஏற்பட்டது. உடனே இராமன் தனது கையினைக் குவித்து அப்பறவைகளின் ஒலியினை அடக்கினான். என்று அகநானூற்றுப் பாடலில் கூறப்படுகிறது.

இதனை

**"வெவ்வெல் கவுரியர் தொன் முதுகோடி**

**முழங்கு இரும் பௌவம் இரங்கு முன்துறை**

**வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த**

**பல வீழ் ஆலம் போல"**[76] **( 70-13-16 )**

என சித்தரிக்கப்பட்டுள்ளதை அறியலாம்.

## பரசுராமன் சூளுரை

பரசுராமன் “இம்மண்ணுலகிலேயே சத்திரிய அரசத் தரப்பினர் ஒருவர் கூட இல்லாமல் பூண்டோடு ஒழிப்பேன்” என்று சபதம் செய்து மிகுந்த முயற்சியோடு பெரிய வேள்வியை செய்து முடித்தான் என்ற கருத்தினை,

**“மன்மருற் கறுத்த மழுவாள் நெடியோன்**

**முன்முயன் றிரிதினின் முடித்த வேள்வி**

**குயிறரை யாத்த காண்டகு வனப்பின்**

**அருங்கடி நெடுந் தூண் போல”[77] ( 220.5.8 )**

என்று கூறப்பட்டுள்ளதை பகுத்தாராய முடிகிறது.

## கிருஷ்ணன் ஆயர் பெண்களின் ஆடைகளை ஒளித்தல்

ஆயர் பெண்கள் ஆற்றின் கரையில் ஆடைகளையொல்லாம் வைத்து விட்டு நதியில் நீராடிக் கொண்டு இருந்தனர். அவர்கள் அறியா வண்ணம் கண்ணன் அவர்களது உடைகளை எல்லாம் எடுத்துக் கொண்டு அருகில் இருந்த மரத்தில் ஏறிக் கொண்டான். அது கண்ட ஆயர்குல மகளிர் தங்கள் கைகளால் தங்கள் அங்கங்களை மறைத்துக் கொண்டு உடையினைத் தரும்படி கண்ணனை வேண்டிக் கொண்டனர். கண்ணனோ எல்லோரும் தங்கள் இரு கைகளையும் நீட்டி வெளியில் வந்து கேட்டால் தருவதாக கூறிக் கொண்டு இருக்கும்போது, பலராமன் அவ்விடம் வந்தான். அதுகண்ட கண்ணன் குருந்த மரத்தின் கிளையினை மிதித்து அதனைத் தாழும்படி செய்து அதில் அப்பெண்களை மறைத்துக் கொள்ளும்படி செய்தான். இச்செய்தியை அகநானூற்றில்,

**“வடாஅது வண்புனல் தொழுதை**

**வார்மணல் அகன்றுறை அண்டமகளிர்**

**மரஞ்செல மிதித்த மா அல் போல”[78] ( பாடல் 59.3.6 )**

என்று உவமை நயத்தோடு இதிகாசக் கருத்துகளை அறியமுடிகிறது.

# கலித்தொகை

## நாரதர் கூறிய கதைகள்

முன்பொரு காலத்தில் சுகதன் மற்றும் உபசுகதன் என்ற இரு அசுர சகோதரர்கள் வாழ்ந்து வந்தனர். ஒருவருக்கொருவர் அன்புடனும் பாசத்துடனும் இருந்தார்கள். இருவரும் அசுர வதத்தில் வல்லவர்கள். அத்தனை கொடூரமானவர்கள். அந்த இரண்டு பேரும் ஒன்றாக இருந்ததினால் ஒருவருக்கொருவர் உதவிக்கொண்டு யார் வந்தாலும் அவர்களை அடக்க இயலாமல் இருந்தனர். அவர்களை அழிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டபோது இந்திரன் தேவலோகத்தில் இருந்த அப்ஸரையான திலோத்தமை என்பவளை அவர்களுக்கு முன்னால் நிற்குமாறும், அதன் பின் என்ன செய்ய வேண்டும் என்பதையும் கூறி அனுப்பினார். இருவரையும் தன் வயப்படுத்த தனித்தனியாக ஒருவருக்கொருவர் தெரியாமல் சந்தித்தாள். அவர்களில் ஒருவர் திலோத்தமையை வீட்டிற்கு அழைத்தனர். வீட்டிற்கு திலோத்தமை வந்ததும் ஒருவருக்கொருவர் சண்டையிட்டு இருவருமே இறந்து போக திலோத்தமையும் தேவலோகத்துக்கு திரும்பிச் சென்றாள். இப்படி ஒரு குடும்பத்தில் ஒரு பெண்ணைக் கொண்டே ஒரு குடும்பத்தை தேவேந்திரனால் அழிக்க முடிந்தது.

எனவே இந்தக் கதையைக் கொண்டு பாண்டவர்களிடமும் திரௌபதியை வைத்து துரியோதனின் படையை அழிக்க முடியும் என்பது உணர்த்தபடுகிறது. திரௌபதி உனக்கு 5 கணவன்மார்கள். நீதான்

அவர்களுக்குள் பிளவு நேராமல் அவர்களுடைய ஒற்றுமையைப் பாதுகாத்த வண்ணம் இருக்க வேண்டும். அதே சமயம் அவர்கள் ஒவ்வொருவரின் மனதும் சந்தோஷமாக இருக்குமாறு நீயும் உன் மனதைப் பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும். ஒரே வீட்டில் அனைவரும் வாழ்வது கடினம் என்பதால் நீங்கள் ஐவரும் ஒரு குறிப்பிட்ட கால முறை வகுத்துக் கொண்டு ஒவ்வொரு வருடம் ஒருவர் என அவளுடன் தனித்து வாழ வேண்டும். அவள் யாருடன் தனித்து வாழ்கிறாளோ அந்தக் காலத்தில் மற்றவர்கள் தனது அண்ணியாக பார்க்க வேண்டும். இதற்கு மனக் கட்டுப்பாடு வேண்டும். அவ்வாறு இல்லையெனில் 12 வருட தீர்த்த யாத்திரை மேற்கொள்ள வேண்டும். ஒவ்வொரு வருடமும் துலாம், வைகாசி மாதங்களில் காவேரி ஆற்றில் ஸ்நானம் செய்து ஹரி நாமத்தை கூறிக்கொண்டு சிநேக பாவத்துடன் வாழ வேண்டும் என கடுமையாக எச்சரித்தார். அகத்தியர் இல்லையெனில் ஒரு பெண்ணால் அழிந்து விட்டீர்கள் என்ற பாண்டவர்கள் ஐவரும் மற்றும் திரௌபதியும் சத்தியக் கட்டுபாட்டை மேற்கொண்டார்கள்.

இதைக் கூறிய அகத்தியர் தனது மூத்த சகோதரனுடன் திரௌபதி உல்லாசமாக இருந்த நேரத்தில் அவர்கள் வீட்டுக்குள் ஒடிய ஒரு பிரஷ்டனை துரத்திக் கொண்டு அவர்கள் வீட்டிற்குள் புகுந்து ஒடிய அர்ஜீனன் தன்னை அறியாமல் அவர்களை அந்த கோலத்தில் பார்த்து விட்டான். அவர்கள் செய்த தர்மத்தை மீறி இன்னொரு சகோதரன் வீட்டில் இந்த திரௌபதியை அலங்கோல காட்சியில் பார்த்து விட்டதால் அதற்குப் பிராயச்சித்தமாக 12 வருட கால தீர்த்த யாத்திரையை அர்ஜீனன் மேற்கொள்ள வேண்டி இருந்தது. அந்த நேரத்தில் தான் கிருஷ்ணரின் சகோதரியை பார்த்து காதல் கொண்டு மணம் செய்து கொண்டான் என்று அரிச்சந்திரனிடம் கூறிய அகத்தியர் நாரதர் கூறிய கதையைத் தொடர்ந்தார்.

இப்படியாக திலோத்தமை கதையைக் கூறிய நாரதரை பாண்டவர்களாகிய 5 சகோதரர்களும் வணங்கித் துதித்து இனி எந்த விதத்திலும் திரௌபதியினால் பிரியக் காரணமாக இருக்க மாட்டோம் எனக் கூறி முடித்தார். இந்த கதையில் ஒரு பெண்ணால் குடும்பம் பிரியக்கூடாது

என்ற கருத்தை அனைவரும் பின்பற்றி வரலாம் எனக் கூறியது துலா புராணக் கருத்து என்பர்.

## யயாதியின் கதை

கலித் தொகையில் யயாதியின் கதையைப் பற்றிக் கூறப்பட்டு உள்ளது. அத்தினாபுரத்தை தலை நகராகக் கொண்டு குரு நாட்டை யயாதி ஆண்டு வந்தார். இவர் சத்திரிய குல அரசை சார்ந்தவர். இவரது தந்தை பெயர் நகுசன். இவர் நூறு அசுவமேத வேள்விகளைச் செய்து முடித்தமையால் தேவ உலக இந்திர பதவியை அடைந்தவர் என்று யயாதியின் கதைப்பற்றி மகாபாரதம்[(1)] பாகவத புராணம், பதினென் புராணங்களில் மிகச் சிறப்பாக செல்லப்படுகிறது.

அசுர மன்னரின் குருவான சுக்கிராச்சாரியின் மகள் தேவயானியை யயாதி திருமணம் செய்து கொள்கிறார். யயாதி, தேவயானிக்கு யது, துர்வசு என இரு ஆண் குழந்தைகள் பிறக்கிறது. அசுர மன்னன் விருசபர்வன் மகளும், தேவயானியின் நெருங்கிய தோழியுமான சாமிஷ்டையை யயாதி இரகசியமாக இரண்டாவது திருமணம் செய்து கொள்கிறார். சர்மித்தை-யயாதிக்கும் துருயு, அனு, புரு என்னும் மூன்று ஆண் குழந்தைகள் பிறக்கின்றனர். இச் செய்தியைக் கேட்ட தேவயானி யயாதி மீது கோபம் கொண்டு தன் தந்தையும், அசுர குருவான சுக்கிராச்சாரியாரிடம் தனக்கு தன்கணவன் இழைத்த அநீதி குறித்து முறையிட்டாள். இச்செய்தியை அறிந்த சுக்கிராச்சாரி, தன் மகள் மீது கொண்ட அதிக அன்பின் காரணமாக மன்னன் யயாதிக்கு கிழட்டுத்தன்மை அடைய சாபமிட்டார். யயாதியும் அடுத்த நொடியிலே இளமை நீங்கிக் கிழட்டுத் தன்மை அடைந்தார். கிழட்டுத் தன்மை அடைந்த யயாதி தனது மாமனாரும், அசுர குருவுமான சுக்கிராச்சாரியாரிடம் மன்னிப்பு கேட்டு. தான் அடைந்த கிழட்டுத் தன்மை நீங்க வழி கேட்டான்.

அதற்கு அவர், உனது கிழட்டுத் தன்மையை உனது மகன்களில் ஒருவனுக்கு அளித்து அவனின் இளமையை நீ அடைவாய் என்று கூறினார்.

பின்னர் யயாதி முதல் மனைவியான தேவயானியின் மூத்த மகனான யதுவிடம் தனது மூப்பை ஏற்று இளமையைக் கேட்டான். யது தந்தை யயாதியின் வேண்டுகோளை மறுக்கவே யயாதி தனது மூத்த மகன் யதுவுக்கு இனி உனக்கும், உன்தலைமுறையினருக்கும் அத்தினாபுரத்து அரச மணிமகுடம் சூட்டிக் கொள்ளத் தகுதி இல்லாமல் போகட்டும் என்று சாபமிட்டார்.

பின்னர் இரண்டாவது மகன்களான துர்வசு, துருயு, அனு, ஆகியோரும் தந்தை யயாதியின் கோரிக்கையை மறுத்துவிட்டனர். இரண்டாம் மனைவியான சாமிஷ்டைக்குப் பிறந்த கடைசி மகனான புரு மட்டுமே யயாதியின் முதுமையை ஏற்றுக் கொண்டு தனது இளமையைக்கொடுத்தான். அடுத்த நொடியிலே யயாதி முதுமை நீங்கி இளமையை அடைந்து ஆயிரம் ஆண்டுகள் தன் இரு மனைவிகளுடன் இன்பம் துய்த்தான்.

ஒரு நாள் தனது இளமை வழங்கி, தன் முதுமையை ஏற்றுக் கொண்ட தனது கடைசி மகனான புருவின் நினைவு வரவே, புருவை அழைத்து, அவனின் இளமையை அவனிடமே திரும்ப அளித்து தனது முதுமையை ஏற்றுக் கொண்டு புருவை அத்தினாபுரத்து மன்னனாக முடி சூட்டிய பின் தனது மனைவியருடன் கானகம் ஏகி நற்றவம் செய்து தேவலோகம் அடைந்தார்.

தேவயானியின் முதல் மகனான யதுவின் வழியாக தோன்றியவர்களே யாதவர்கள். ஸ்ரீகிருஷ்ணர் இந்த யாதவ குலத்தில் தான் தோன்றினார், கம்சன், கண்ணன், பலராமர், சிசுபாலன், குந்தி, கிருதவாமன் ஆகியோர் யாதவ குலத்தில் பிறந்தவர்களில் சிலர் ஆவார்கள்.

சர்மித்தையின் இளைய மகனான புருவின் வழி தோன்றியவர்களே பாண்டவர்கள் மற்றும் கௌரவர்கள் எனப்பட்டனர்.

## சூரபத்மன் போர்

சூரபதுமன் என்ற அரக்கன் சிறந்த சிவ பக்தன். அவன் மிகப் பெரிய யாகங்கள், தவங்கள் ஆகியவற்றை செய்து சிவபெருமானின் நன்மதிப்பைப் பெற்றான். அவனுக்கு வரம் அளிக்க விரும்பினார் சிவன். எனவே என்ன வரம் வேண்டும் என கேட்டார்.. ஈசன் உட்பட யாருக்கும் தன்னைக் கொல்ல வல்லமை இருக்கக் கூடாது என்று வேண்டினான் சூரபதுமன்.

இதனைக் கேட்ட சிவன் தன் பக்தன் ஆயிற்றே, தானே கொல்லவா போகிறோம் என்று எண்ணி அவன் கேட்ட வரத்தை அளித்தார். உடனடியாக முப்பத்து மூன்று கோடி தேவர்களும் சூரபதுமனைக் கொல்லும் வல்லமை அற்றுப் போனார்கள்.

சூரபதுமனுக்கு அகங்காரம் கூடியது. முப்பத்து மூவர் உட்பட முனிவர்களுக்கும் மனிதர்களுக்கும் பொறுக்க முடியாத தொந்தரவுகளைச் செய்யத் தொடங்கினான். அனைவரும் சிவனையே சரணடைந்தனர். காப்பாற்றக் கோரி சிவனாலும், அவரது வரத்தினால் அது இயலாததாயிற்று.

இந்த நேரத்தில் அவரது அதே முகம் விழித்து எழுந்தது. அதிலிருந்து ஆறு தீப்பொறிகள் தோன்றின. பின்னர் அதே முகம் மறைந்தது.

**“ எரிகனன்று ஆனாக்குடாரி கொண்டு அவன் உருவு**

**திரித்திட்டோன் இவ்வுலகு ஏழுமருள”**[80] **(பா – 5-34-35)**

அப்பொறிகளில் இருந்து உடனடியாக ஆறு தெய்வக் குழந்தைகள் தோன்றின. அவை சரவணப் பொய்கையில் ஆறு தாமரை மலர்களில் மலருக்கு ஒன்றாக ஆசனம் பெற்றன.

அத்திருச் குளத்திற்கு புனித நீராட வந்த தேவதைகளான ஆறு கார்த்திகை பெண்கள் அக்குழந்தைகளை ஆளுக்கு ஒன்றாக எடுத்து வாரி அணைத்தனர். சிறிது காலத்திற்கு பிறகு சிவபெருமான் அக்குழந்தைகளை ஒன்றிணைத்தார். இதனால் ஆறு தலைகள் கொண்ட ஆறுமுகன் தோன்றினான். தீமையை வெல்லும் புனிதம் படைக்கப்பட்டது.

சக்தி தேவி தனது பலத்தை எல்லாம் ஒன்று திரட்டி வேல் ஒன்றை அளித்தாள். சக்திவேல் ஆனான் குமரன். சூரபதுமனை அழிக்க உருவெடுத்தான். அந்த கந்தன் தனித்தமிழ் கடவுள் ஆனார். முருகு என்றால் அழகு. அழகன் சூரனை அழிக்கத் தோன்றினான்.

வேலனுக்கும் சூரபதுமனுக்கும் போர் மூண்டது. எந்த சிவனுக்கு பக்தனாக இருந்தானோ அந்த சூரன் அச்சிவனின் மைந்தனுக்கே பகைவன் ஆனான். தனது தளபதி வீரபாகுவுடன் களமிறங்கினான். முருகன் சக்தி தந்த வேல் எடுத்து வீசினான். சூரபதுமனை நோக்கி மாயாவியாய் உருவெடுத்து மாமரமாய் மாறினான் சூரன்.

**“ பாய் இரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்கு**

**சேய் உயர் பிணிமுகம் ஊர்ந்து அமர்உழக்கி**

**……………………………………………………..**

**……………………………………………………..**

**குருகொடு பெயர் பெற்ற மாலவரை உடைத்து”**[81] **( பரி- 5:1-9 )**

ஒரு மாமரமே அடர்ந்த காடு போல் இருந்தது. சூரைக் காற்றில் தலைக் கிளை விரித்து ஆடி சிறுவனான முருகனை பயமுறுத்தியது. பயமின்றி அம்மரம் நோக்கி வேலை எறிந்தான் வேலன். இரண்டாக பிளந்த சூரனை வென்று மயிலாகவும், சேவலாகவும் மாறி வேலனை கொத்தி தின்ன வந்தான்.

மயிலை வாகனமாகவும், சேவலைக் கொடியாகவும் கொண்டு வெற்றி முழக்கமிட்டான் முருகன். இந்த நிகழ்ச்சியை நினைவு கூறும் வகையில் ஒவ்வொரு ஆண்டும் சூரசம்ஹார நிகழ்ச்சியாக பல திருத்தலங்களில் நடைபெறுகிறது.

ஆறுமுகக் கடவுளைத் தோற்றுவிக்க எழுந்தது என்று திருமூலர் தமது திருமந்திரத்தில் குறிப்பிடுகிறார். சிவபெருமான், ஈசானம், தற்புருடம், வாமதேவம், அகோரம், சத்யோஜாதம் ஆகிய ஐந்து முகங்களை திருவானைக்காவல் திருத்தலத்தில் காட்டி அருள்கிறார். ஆறாம் முகமான அதே முகம் சூட்சுமான கண்களுக்கு புலப்படாமல் மறைந்து அகமுகமாகவே இருக்கும் என்று சூரபதுமன் போரைப் பற்றி கலித்தொகையில் கூறப்பட்டுள்ளது. எனவே இத்தகைய புராண இதிகாசக் கருத்துக்களை இவ்விலக்கியங்கள் வாயிலாகப் பகுத்து ஆராய முடிகிறது.

# தொகுப்புரை

- புராண மரபுக் கதைகள் பிற தொகை நூல்களை விட மிகுதியாக பெற்று வரும் செய்திகளை கலித்தொகையில் காணலாம்.
- நாட்டுப் புறப் பாடல்களில் காணப்படும் தாலாட்டு, ஒப்பாரி வள்ளைப் பாட்டு போன்ற பாடல்களை ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வரும் தன்மையினை கலித்தொகைப் பாடல்கள் தரவு, தாழிசை, உரையாடல், தனிச்சொல், சுரிதகம் கொண்டு அமைந்துள்ளதை எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.
- அகப்பொருள் பற்றி கூறுவதற்கு ஏற்ற நூலாக விளங்குகிறது.
- தமிழரது மணமுறை, கடவுள் வழிபாட்டு முறைகள், இல்லற இன்பம், ஏறுதழுவல், தைந்நீராடல் போன்ற தமிழர்க்கே உரிய செய்திகளைப்பற்றிக் காண முடிகிறது.
- பிற நூல்களில் கலித்தொகைப் பாடல்களை மேற்கோளாக உரையாசிரியர்கள் மிகுதியாக எடுத்தாண்டுள்ளனர் என்பதை சுந்தர சண்முகனார் தம் நூலில் குறிப்பிட்டுள்ளதை அறியமுடிகிறது.
- கலித்தொகைப் பாடல்கள் நாடகப் பாங்கில் உரையாடலுக்கு ஏற்ற வகையில் அமைந்துள்ளன என்பது பகுத்தாராயப்பட்டுள்ளது.
- தொகுத்தவர் நல்லந்துவனார் என்பதும் இந்நூலுக்கு நச்சினார்க்கினியர் ஒருவரே முழுமையும் உரை எழுதி உள்ளார் என்பதும் அறிய முடிகிறது.
- கலித்தொகைப் பாடல்கள் மட்டுமே திணைப்பெயர் வழக்கினையொட்டி பாலைக்கலி, குறிஞ்சிக்கலி, மருதக்கலி, முல்லைக்கலி, நெய்தற்கலி என அமைந்து உள்ளதும் சிறப்பான ஒன்றாகக் கருதப் படுகிறது.
- கலித்தொகையும், பரிபாடலும் சங்க இலக்கியத்தில் காலத்தால் பிற்பட்டதெனக் கருதப்படுகிறது. மற்ற இலக்கியத்தைக் காட்டிலும் பாடுபொருள் வேறுபட்டுக் காணப்படுவதும் இதற்கு சான்றாக விளங்குகிறது.

❖ கலித்தொகைப் பாடல்கள் உரையாடல் வடிவிலேயே அமைந்துள்ள நிலையை எடுத்து கூறுவதை காணலாம்.

❖ சங்க காலத்தில ஆடவர் முன்னிலையில பெண்கள் பேசக்கூடாது என்ற நிலையில் இருந்த மரபை மாற்றி கலித்தொகைப் பாடல்களில் தலைவனொடு சொல்லெதிர் சாற்றும் அளவிற்கு உயர்ந்த தலைவியை இவ்வியலில் காண முடிகிறது.

❖ முல்லைக்கலிப் பாடல்கள் முல்லைத்திணை ஒழுக்கத்திற்கு முரண்பட்டு அமைகின்றன.இருத்தல் என்னும் ஒழுக்கம் இம்முல்லைக்கலிப்பாடல்களில் காணப்படவில்லை, புணர்தல் ஒழுக்கம் பற்றியே கலித்தொகைப் பாடல்கள் புனைந்துரைப்பதைக் காண முடிகிறது.

❖ மருதக் கலிப்பாடல்களில் நகர்புற பண்பாடு நன்கு புனையப்பட்டு உள்ளதையும் கலிப்பாவை "இசைப்பாட்டு" என மு.சண்முகப்பிள்ளை கூறியுள்ளதையும் ஆராயப்பட்டுள்ளன.

❖ கலிப்பாடல்கள் வாய்மொழி இசை நலமும் வாய் மொழிப் பாடல்களின் புனைத்திறன் உத்திகளும் பெற்றுள்ளதை அறிய முடிகிறது.

❖ கலித்தொகையில் முல்லைக்கலியில் புராண இதிகாச கருத்துக்களான, வீமனின் வஞ்சினம், உருத்திரனின் வீரம், துரோணரை கொன்ற சிகண்டிகை, கண்ணன் கம்சனை அழித்தல், போன்ற புராண கருத்துக்கள் ஆராய்ந்து கூறப்பட்டுள்ளன.

❖ பாலைக்கலியில் அரக்கு மாளிகைக்குத் தீ இட்டது பற்றிய புராணக்கருத்துக்கள் எடுத்தியம்புகிறது.

❖ குறிஞ்சிக் கலியில் இராவணன் கைலை மலையைப் பெயர்த்து துரியோதனன் தொடையினை பீமன் அறுக்கும் செய்தி பற்றி குறிப்பிடப்பட்டு உள்ளது.

- ❖ அக இலக்கியமான அகநானூற்றில் பரசுரமான் சூளுரை, கிருஷ்ணன் ஆயர் பெண்களின் ஆடைகளை மறைத்தல் மற்றும் புறநானூற்றிலும் புராண கருத்துக்கள் இடம் பெறுகின்றன.
- ❖ கலித் தொகையில் திலோத்தமை கதை, சூரபதுமன் போர் பற்றி எடுத்துக் கூறப்பாட்டு உள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. கலித்தொகை, பொ.வே.சோம சுந்தரனார், நெய்தல்கலி, பா-5.
2. இராம. பெரிய கருப்பன், சங்க இலக்கிய ஒப்பீடு, ப-101
3. மேலது, ப-101
4. லெ.ப.கரு. இராமநாதன் செட்டியார், எட்டுத்தொகைச் செல்வம், ப-100
5. சுந்தர சண்முகனார், தமிழ்நூல் தொகுப்பு கலைக் களஞ்சியம், ப-334
6. தொல். செய்யுளியல், நூ,130, 131, 158, 155, 160
7. சுந்தர சண்முகனார், மு.நூ, ப-336
8. மேலது, ப-336
9. மேலது ப-337
10. தொல் செய்யு, பேராசிரியர் உரை, ப-8
11. பொ.வே.சோமசுந்தரனார், மு.நூ ப-8
12. சுந்தர சண்முகனார், நூ-337
13. பொ.வே.சோம சுந்தரனார், மு.நூ.ப-5
14. கலி, பா-51
15. ச.வே.சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வகையும் வடிவும், ப-78
16. தொல், செய்யு, நூ-1412
17. இளவழகனார், தொல், நூ-1056
18. கலி, பா-எண், 108, 110, 112, 113, 116, 117
19. மேலது, பா-113

20. மேலது, பா-113

21. மேலது, பா-113

22. மேலது பா, 117

23. ஆ. அமிர்த கௌரி, சங்க இலக்கியத்தில் உரையாடல், பக்-132-133

24. நா. ஆறுமுகம். கலித்தொகை ஒரு அகழாய்வு, பக்-148-149

25. E.K.நடேசசர்மா, கலித்தொகைச் சொற்பொழிவுகள், ப-123

26. ஆ.அமிர்தகௌரி, மு.நூ.ப-318

27. கலி, பா-62

28. கே.கே.பிள்ளை, தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும், ப-87

29. கலி, பா41

30. ஆ.அமிர்தகௌரி, மு.நூ.ப-133

31. அகப்பொருள் விளக்கம், நூ-339

32. பிங்கலந்தை, நூ-339

33. ஆ.அமிர்தகௌரி, மு.நூ. ப-157

34. கலி, பா-82

35. மேலது,பா-82

36. ஆ. அமிர்தகௌரி, மு.நூ.ப-157

37. தொல்.அகத், நூ-969

38. கலி, பா-94

39. மேலது, பா-9

40. மேலது, பா-94

41. மேலது, பா- 94

42. மேலது, பா-94

43. மேலது, பா-94

44. மேலது, பா-94

45. மேலது, பா-94

46. மேலது, பா-94

47. மேலது, பா-120, 130, 131, 148

48. மேலது, பா-120

49. லெ.ப.கரு.இராமநாத செட்டியார், மு.நூ ப-11

50. தொல். அகத், நூ-53

51. மேலது, செய்யுள், நூ-108

52. மு.சண்முகப்பிள்ளை, சங்கத்தமிழர் வாழ்வியல், ப-32

53. தொல். செய்யுள், நூ-130

54. மேலது, நூ-130

55. கலி, பா- 56

56. சாமி சிதம்பரனார், எட்டுத்தொகையும் தமிழர்பண்பாடும், ப-13

57. கதிர் மகாதேவன், பழந்தமிழர் வீரப் பண்பாடு, பா-242

58. கலி, பா-40

59. மேலது, பா-42

60. மேலது பா-39

61. இராம.பெரிய கருப்பன், மு.நூ. பா-101

62. இளவழகனார். மு.நூ 1412

63. ஆ.அமிர்தகௌரி, மு.நூ -116

64. தொல். அகத், நூ-53

65. ஆ.அமிர்தகௌரி, மு.ப -76

66. சி.பாலசுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, ப-27

67. கலி, பா-26

68. மேலது, பா-35

69. மேலது, பா28

70. மேலது, பா67

71. மா. இராச மாணிக்கனார், தமிழ் இலக்கண இலக்கிக் கால ஆராய்ச்சி

72. மேலது, பா-67

73. மேலது, பா-67

74. கே.கே.பிள்ளை, மு.நூ ப-87

75. மேலது ப-88

76. அகப்பாடல், பா-70

77. மேலது, பா-226

78. மேலது, பா-59

79. புறம், பா-378

80. பரி. பா:5

81. மேலது, பா-5

# இயல் - 3

# புற இலக்கியங்களில் புராண இதிகாசக் கருத்துக்கள்

## புறநானூறு

சங்க இலக்கியத்தில் புற இலக்கியங்களாக இருப்பது புறநானூறு பதிற்றுப்பத்து என்பனவாகும். புறநானூறுக்குப் புறம், புறப்பாட்டு, புறம்பு நானூறு என்னும் வேறுபெயர்களும் உண்டு இந்நூல் அகவற்பாவினால் ஆனது.

சில பாடல்களில் வஞ்சி அடிகள் வந்துள்ளன. 'நாடக வழக்கிலும், உலகியல் வழக்கிலும் என்னும் நூற்பாவிற்கு உரை தரும் நச்சினார்க்கினியர் புறநானூற்றை புறம் (45) எனக் குறிப்பிடுகின்றார். மேலும் புறநானூற்றை புறத்திணை மருங்கின் பொருந்தின் அல்லது என்னும் நூற்பாவிற்கு உறை தரும் நச்சினார்க்கியர் "புறப்பாட்டு" எனக் குறிப்பிடுகின்றார். இவை 4 முதல் 40 அடிவரையிலான அடியளவு கொண்ட பாடல்கள் உள்ளன. மொத்தப் பாடல்கள் 400. பாரதம் பாடிய பெருந்தேவனாரின் சிவன் வாழ்த்து, கடவுள் வாழ்த்தாக முகப்பில் இடம் பெற்றுள்ளது.

ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் திணை, துறை, பாடினோர், பாடப்பட்டோர், சூழல் போன்ற குறிப்புகள் காணப்படுகின்றன. தொகுத்தோர் தொகுப்பித்தோர் பெயர்கள் தெரியவில்லை. எனவே புற இலக்கியங்களில் புராண இதிகாச கருத்துக்களை ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

## புலவர்கள்

புறநானூற்றுப் புலவர்களின் எண்ணிக்கை 158. இவர்களில் பத்துபேருக்கு மேல் பெண்பாற்புலவர்கள் உள்ளனர். அரசன் பாடியன சில. அரசர்களை இடித்துக்கூறி திருத்துபவர்களாகப் புலவர்கள் விளங்கினர். அரசனை அவன் என்றும் தனியொரு புலவரை அவர் என்றும் குறிப்பிடலால்,

அரசனை விடப்புலவரையே பெரிதும் மதித்தனர் என்பது புலனாகும். 160 பாடல்கட்கு ஆசிரியர் பெயர் தெரியவில்லை. தொடித்தலை விழுத்தண்டினார் இரும்பிடத்தலையார் ஊன் பொதி பசுங்குடையார் போன்றவை சிறப்புத் தொடரால் அமைந்த புலவர்களின் பெயர்களாகும்.

13 பாண்டியர்களையும், 18 சேரர்களையும் 20 சோழர்களையும் 18 வேளிர்களையும், பற்றிப் புறநானூறு பேசுகிறது. பண்டைய வேந்தரின் படைத்திறம் போர்முறை, கடையெழு வள்ளல்களின் கொடைமடம், குமணன் போன்றோரின் வள்ளன்மை, கபிலர் – பாரி, ஔவை – அதியன், பிசிராந்தையார் – கோப்பெருஞ்சோழன், ஆகியோர் நட்பு, பாணர், பொருநர், விறலியர், கூத்தர் முதலியோரின் கலைத்திறம், அவரைப் புரந்த வள்ளல்களின் மாண்பு போன்ற வரலாற்றுச் செய்திகள் விரித்து உரைக்கப்பட்டு உள்ளன.

## நூலின் அமைப்பு

இந்நூலில் பாடல்கள் தொகுக்கப்படும் போது ஒரு வகை இயைபு கருதி முதலில் முடிமன்னர் மூவர், அடுத்து குறுநில மன்னர், வேளிர் ஆகியோரைப் பற்றிய பாடல்களும் அடுத்து போர்ப் பற்றிய பாடல்களும் கையறுநிலைப் பாடல், நடுகல், மகளிர் தீப்பாய்தல் என்று தொகுத்துள்ளனர். புறப்பொருள் கருத்துக்களைத் தழுவிப் பாடப்பட்ட இந்நூலில் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் திணை, துறை, பாடப்பட்டோர், பாடப்பட்ட சூழல் போன்ற குறிப்புகள் உள்ளன.

## புறப்பொருள்

அகப்பாடல்கள் ஐந்திணை ஒழுக்கங்களைக் குறித்தது போல, புற ஒழுக்கங்களை குறித்து அமைந்த பழங்கால வாய்ப்பாட்டுப்பாடல் நமக்கு விளக்குகிறது.

**“தத்தம் புதுநூல் வழிகளால் புறநானூற்றிற்குத்துறை கூறினாரேனும் அகத்தியமும் தொல்காப்பியமுமே தொகைகளுக்கு நூலாகலின் அவர் சூத்திரப் பொருளாகத் துறை கூற வேண்டுமென்றுணர்க“**[1] என்னும் உரைப்பகுதியால் அறியலாம். புறநானூற்றில் புறப்பொருளுக்கு உரிய பன்னிரண்டு தினைகளும் ஏறக்குறைய இடம் பெற்றுள்ளன. அத்திணைகள் பற்றிய விவரம் பின்வருமாறு.

( 1 ) வெட்சி : ஆநிரைகளைக் கவர்தல்.

( 2 ) கரந்தை : ஆநிரைகளை மீட்டல்

( 3 ) வஞ்சி : பகைவர் நாட்டின் மேல் படையெடுத்தல்

( 4 ) காஞ்சி : நாட்டிற்கு உரியவர் தம் நாட்டைக்காத்தல்

( 5 ) உழிஞை : பகைவர் அரணைத் தாக்குதல்.

( 6 ) நொச்சி : அரணுக்கு உரியவர் தம் அரணைக் காத்தல்

( 7 ) தும்பை : இருதரப்பினரும்தம் வலிமையைநிலைநாட்டப் போரிடுதல்

( 8 ) வாகை : வெற்றி பெறுதல்

( 9 ) பாடாண் : ஒருவருடைய கொடை , வீரம் முதலிய சிறப்புகளை புகழ்ந்து பாடுதல்

(10) பொதுவியல் : இது வரை கூறியவற்றிற்குப் பொதுவான செய்திகளையும் சொல்லாது விட்ட செய்திகளையும் நிலையாமை, வீடு பேறு முதலிய பொருள் பற்றியும் விளக்குதல்.

( 11 ) கைக்கிளை : ஆண் பெண் இரு பாலரும் ஒருவரிடம் மட்டும் உள்ள ஒரு தலைக் காமம்

( 12 ) பெருந்திணை : பொருந்தா காமம்.

இனி புறநானூற்றில் ஒவ்வொரு திணைக்கும் உரிய பாடல் எண்ணிக்கை முறையே பின்வருமாறு,

1. வெட்சி ...... 5
2. கரந்தை...... 12
3. வஞ்சி ...... 11
4. காஞ்சி ...... 33
5. உழிஞை...... 9
6. நொச்சி ...... 6
7. தும்பை ....... 27
8. வாகை ....... 80
9. பாடாண்திணை... 139
10. பொதுவியல்..... 73
11. கைக்கிளை..... 3
12. பெருந்திணை.... 5

புறநானூற்றில் இரண்டு பாடல்கள் முழுவதும் கிடைக்கவில்லை. எனவே அவற்றிற்குரிய திணைகள் தெரியவில்லை. வேறு சில பாடல்களின் திணைகளும் அறிவிக்கப்படவில்லை மேலே கூறப்பட்ட பட்டியலில் உழிஞைத் திணைக்கு ஒரு பாடலும் அறியலாம்.

புறநானூற்றில் பன்னிரு திசைகளும், பாடாண்திணை நூற்று முப்பத்தொன்பது பாடல்களுக்குக் குறையாமல் பெற்று முதலிடத்தில் நிற்கிறது. முப்பத்தொன்பது பாடல்களுக்குக் குறையாத வாகைத் திணை

இரண்டாவது இடத்திலும், எழுபத்து மூன்று பாடல்களுக்குக் குறையாத பொதுவியல் திணை மூன்றாவது இடத்திலும் முறையே இடம் பெற்றுள்ளன. மற்ற திணைகள் மற்ற பாடல்களைக் குறைந்த அளவில் பங்கிட்டு கொண்டு உள்ளன.

சங்க இலக்கியங்களில் மிகுதியான போர்ச்செயல்களைக் கூறும் நூல் இதுவாகும். எனினும் போரின்றி உலகிற்கு அனைவரும் ஒன்றுபட்டு வாழ வேண்டிய தேவையினை புறநானூறு வற்புறுத்துகிறது. போற்றத் தக்க சான்றோர்களின் வரலாறாகத் திகழ்வது புறநானூறு. சங்க இலக்கியங்களில் இன்றும் பலராலும் விரும்பி பயிலப் பெறும் இலக்கியம் புறநானூறு ஆகும்.

## புறநானூற்றின் பழைமையும் பெருமையும்

புறநானூற்றில் உள்ள பாடல்களின் காலம் கி.மு.1000 முதல் கி.பி.300 வரை என்று அறிஞர்கள் கருதுகின்றனர். வேறு சிலர் கி.மு. 300 வரை எனக் கருதுகின்றனர். எவ்வாறாயினும் ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இலக்கியம் இ∴து என அறியலாம். கரிகாற் பெருவளத்தான் என்ற சோழ மன்னன் காலம் கி.பி.75 முதல் கி.பி.115 வரை எனக் கருதப் பெறுகின்றது. இவ்வேந்தனைப் பற்றிய பாடல்கள் புறநானூற்றில் உள்ளன.

பண்டைத் தமிழரின் பண்பாட்டுச் சிறப்பைப் புறநானூறு நன்கு புலப்படுத்துகிறது. புகழ் எனின் உயிரையும் கொடுப்பவர். தமக்கென வாழாது பிறர்க்கென வாழ்பவர் என விடை கூறுகின்றது. பழங்காலத் தமிழ் புலவர்கள் பொன்னுக்கும், பொருளுக்கும் வேந்தரைப் பாடியவர் அல்லர். வேந்தரோ, சிற்றரசரோ செய்யாதவற்றை செய்ததாகச் கூறிப் போலி புகழுரை செய்தவரும் அல்லர். கல்வி, புலமை, அஞ்சாமை, நடுவுநிலைமை ஆகியன தலை சிறந்து விளங்கிய ஒரு காலத்தைக் காட்டும் பெருமையுடையதாகப் புறநானூறு விளங்குகிறது எனலாம்.

## புறநானூறு – ஒரு வரலாற்றுக் களஞ்சியம்

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்க காலத் தமிழக வரலாற்றை எழுதுவதற்குப் புறநானூறே பெரிய ஆதார நூலாகும். மூவேந்தர்களுக்குள் நிகழ்ந்த போர்கள், வேந்தர்களுக்கும், சிற்றரசர்களுக்கும் இடையே நிகழ்ந்த போர்கள், வேந்தர்களிடையே இருந்த பகையைப் புலவர் நீக்கியது, ஔவையார் அதியமானுக்காகத் தொண்டைமானிடம் தூது சென்றது, பெருந்தலைச் சாத்தனார் தம் உரையால், தமையனைக் கொல்ல விரும்பிய இளங்குமணன் மனத்தை மாற்றியது, மன்னன் வரிவாங்கும் நெறி பற்றிக் கூறிப் பிசிராந்தையார் பாண்டியன் அறிவுடை நம்பிக்கு அறம் உரைத்தது, வெள்ளைக்குடி நாகனார் கிள்ளிவளவனுக்கு அறிவுரை கூறி மக்களின் நிலத்திற்கு விதிக்கப்பட்ட பழைய வரியை நீக்கியது எனப் பல வரலாற்று நிகழ்வுகள் புறநானூற்றில் இடம் பெறுகின்றன. எனவே இந்நூலை ஒரு வரலாற்றுக் களஞ்சியம் எனக் கூறலாம்.

## புறநானூறு ஒரு பண்பாட்டு ஆவணம்

'ஆயிரத் தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்' என்ற நூலை எழுதிய அறிஞர் கனகசபைப்பிள்ளை அவர்களும், 'தமிழர் வரலாறு' எழுதிய அறிஞர் பி.டி.சீனிவாச ஐயங்காரும், புறநானூற்றையே பெரிய சான்றாதாரமாகக் கொண்டனர். போர் செய்யப் புகும் அரசன் "பசுக்கள், பார்ப்பனர். பெண்கள். நோயுற்றோர், பிள்ளைகளைப் பெறாதோர் ஆகியோர் பாதுகாப்பாக சென்றுவிடுவீர்" அறிவித்தப் பிறகே போர் செய்யும் பண்பாட்டைப் பற்றி,

**" ஆவும் , ஆனியற் பார்ப்பன மாக்களும்.**

**பேண்டிரும் , பிணியுடையீரும் பேணித்**

**தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்**

**பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்**

**எம்அன்பு கடிவிடுதும் நுன் அரண்**

**சேர்மின் என "........ "[2]( புறம் 9 )**

என்று இப்பாடலில் கூறப்பட்டுள்ளது. ஒருவரது செல்வம், அறம், பொருள், இன்பம் என்ற மூன்றையும் வளர்க்க வேண்டும் என்பதை,

**"அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்**

**ஆற்றும் பெரும ! நின் செல்வம்**

**ஆற்றாமை நின் போற்றாமையே"[3] ( புறம் - 28 )**

என்று கூறுவதைக் காணலாம்.

அரசரது வெண்கொற்றக்குடை வெயில் மறைப்பதற்கல்ல குடிகளுக்கு நிழல் தருவதற்கு என இந்நூலில்,

**" கண்பொர விளங்கும் நின் விண் பொருவியன் குடை**

**வெயில் மறைக் கொண்டன்றோ ? அன்றே வருந்திய**

**குடி மறைப்பதுவே : கூர் வேல் வளவ......."[4](புறம்35)**

என கிள்ளி வளவனை வெள்ளைக்குடி நாகனார் பாடி அறிவுறுத்துவர். இவ்வுலகில் புகழ் பெற வாழ்வாரே மறுமையுலகு எய்துவர் என்பதை,

**" உயர் நிலை உலகத்து உறையுள் இன்மை**

**விளங்க கேட்ட மாறு கொல்"[5] ( புறம் -50 )**

என்று இப்பாடல் சுட்டுகிறது. கல்வியே ஒருவனுடைய மேன்மையை காட்டுமேயன்றிக் குடிப்பிறப்பன்று என்பதை,

**“ ஒரு குடிப் பிறந்த பல்லோருள்ளும்**

**மூத்தோன் வருக என்னாது அவருள்**

**அறிவுடையோன் ஆறு அரசு செல்லும் “[6] ( புறம் - 183 )**

என்று கூறப்பட்டுள்ளது. எங்கு மனிதர் நல்லவராய்த் திகழ்கின்றார்களோ அங்கு நிலமும் நல்லதாக அமையும் என்ற பாடலில்,

**“ நாடா கொன்றோ : காடா கொன்றோ**

**அவலா கொன்றோ, மிசையா கொன்றோ**

**எவ்வழி நல்லவர் ஆடவர்**

**அவ்வழி நல்லை : வாழிய நிலனே”[7] ( புறம் 187 )**

என்று ஆடவரது ஒழுக்கமே உலக மேம்பாட்டிற்கு அடிப்படை என்பதை ஔவையார் பாடி உள்ளார். சான்றோர் வாழும் சூழலில் இருப்பவர்கள் என்றும் இளமை மாறாது இருப்பர் என்பதனை,

**“ ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச்**

**சான்றோர் பலர் யான் வாழும் ஊரே “[8] ( புறம் 191 )**

என பிசிராந்தையார் பாடும் பாடலில் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு பல அரிய பண்பாட்டுக் கூறுகளையும் வாழ்நெறிகளையும் புறநானூறு வழி அறியலாம்.

## புறநானூற்றில் புராண இதிகாசக் கருத்துக்கள்

இராமன் காட்டில் சீதையுடன் வசிக்கும் போது இலங்கை வேந்தனான இராவணன் சீதையினை இராமன் அறியா வண்ணம் தூக்கிச் சென்றான் என்றும், அப்போது சீதையானவள் தனது ஆபரணங்களை ஒவ்வொன்றாகக் கழற்றி வழி நெடுகப் போட்டுக் கொண்டே போனாள் என்றும் இந்தக்

காட்சியினைக் கண்ட குரங்குக் கூட்டங்கள் அந்த ஒளிமிக்க ஆபாரணங்களைக் கண்டு மிக்க வியப்பு அடைந்தன என்று கூறப்படுகிறது.

**“ கடுந்கெறல் ராமன் உடன் பணர்சீதையை**

**வலித்தகை அரக்கன் வவ்விய ஞான்றை**

**நிலம் சேர் மதர் அணிகண்ட குரங்கின்**

**செம்முகப் பொருங்கினை”[9] (புறம்.378.18.21)**

என்ற பாடலில் மேற்கூறிய புராண இதிகாச கருத்துக்கள் கூறப்படுவதை அறியலாம்.

பாரதப் பெரும் போர் நடந்த நாளில் நாவலந் தீவின் பேரரசனாக உதியஞ்சேரலாதன் இருந்தான். கதிரவன் தோன்றி, மறையும் இடத்திற்கு இடையேயுள்ள பெருந் நிலப்பரப்பு அவனுக்குரியது. ஐம்பெரும் நிலப்பரப்பும் அவனுக்குரியது. ஐம்பெரும் பூதங்களான நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம் ஆகியவற்றிற்கு நிகரானவன். ஞாயிறு இருண்டாலும், மறைநெறி திரிந்து பிறழ்ந்தாலும் கடமையினின்று தவறாதவன். மந்திர சுற்றத்தாரான அமைச்சர், படைத்தலைவர் ஆகியோர் அவனை ( உதியஞ்சேரலாதன் ) ‘உயர்வால் இமயமும், புகழால் தமிழ் வளர்த்த பொதியமும் போன்று நீ நீண்டநாள் வாழ வேண்டும்’ என வாழ்த்துகின்றனர் என்பதை,

**“ ஐம்பெரும் பூதத்து இயற்கை போலப்**

**போற்றார் பொறுத்தலும், சூழ்ச்சியது அகலமும்**

**வலியும் , தெறலும் , அளியும் உடையோய்**

**……………………………………………….**

**……………………………………………….**

**…………………………………………….**

**…………………………………………….**

**முத்தீ விளக்கிற் றுஞ்சும்**

**பொற்கோட்டு இமயமும் பொதியமும் யான்றே !"[10] (புறம் - 2)**

இப்பாடலின் வழி அறியலாம்.

சங்க இலக்கியத்தில் பாடலால் பெயர் பெற்ற நூல்கள் இரண்டு. அதில் ஒன்று கலித்தொகை, மற்றொன்று பரிபாடல். அகத்திணைச் செய்யுள்களுக்கு பாடல் வகைகளாகக் கலிப்பாவையும், பரிபாடலையும் தொல்காப்பியர் கூறுகிறார்.

**" நாடக வழக்கினும், உலகியல் வழக்கினும்**

**பாடல் சார்ந்த புலனெறி வழக்கம்**

**கலியே பரிபாட்டு ஆயிரு பாங்கினும்**

**உரிய தாகும் என்மனார் புலவர்."[11] (தொல்-999)**

ஓங்கு பரிபாடல் என்று புகழப்பட்டு, பரிந்து செல்லும் ஓசையைப் பெற்றும் பண்ணோடு பாடப்பட்ட எட்டுத்தொகை நூல்களுள் பரிபாடல் தனிச்சிறப்புப் பெறுகிறது. கடவுள்களைப் பற்றிப் பாடுவதால் 'ஓங்க' என்ற அடைமொழி பெற்ற அமைகிறது.

**" பரிபாடலே தொகை நிலை வகையின்**

**இதுபா என்னும் இயனெறி இன்றிப்**

**பொதுவாய் நற்றற்கும் உரிதொன மொழிப"[12] (தொல்-1377)**

என தொல்காப்பியம் பரிபாடலைப் பற்றிக் குறிப்பிடும் போது சிற்றெல்லை 25 அடியும் பேரெல்லை 400 அடியும் பெற்று வரும் என்கிறது தொல்காப்பியம்.

**“ பரி பாட்டெல்லை,**

**நாலீர் ஐம்பது உயர்வு அடியாக**

**ஐ ஐந்து ஆகும் இழிபு அடிக்கு எல்லை.”[13]** (தொல்-1418)

இறையனார் அகப்பொருளுரையில் பரிபாடல்களின் தொகுப்பு 70 எனக் குறிக்கப்பட்டு இருந்தாலும், இவற்றில் கிடைத்து இருக்கும் பாடல்களின் எண்ணிக்கை 22 ஆகும். பரிபாடலில் ஆறும், புறத்திரட்டில் ஒன்றுமாக ஏழுபாடல்களில் திருமால் பற்றிய செய்திகள் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

## திருமாலின் அவதாரம்

உலக உயிர்களைப் படைத்தவன் இறைவன். படைக்கப்பட்ட உயிர்களைப் பரிவுடன் காத்து அருள்புரிபவன் இறைவன். உலகை நிலை நிறுத்தி ஆளுகின்ற இறைவன் தன் நிலையிலிருந்து இறங்கி வந்து அருள் புரிவதை அவதாரமாகக் கூறுகிறது. விண்ணுலகில் உறையும் இறைவன் மண்ணுலகில் வாழும் மக்களைக் காக்கவும், தீயவர்களை அழிக்கவும், தர்மத்தையும், அறத்தையும் நிலைநாட்டி மக்களை நல்வழிப்படுத்தவும் அவதாரம் எடுக்கிறார் என்றும், அதை,

**“நல்லோரை காப்பதற்கும் கெட்டவரை**

**கரந்தொடுக்குவதற்கும் அறத்தை நிலை**

**நாட்டுவதற்கும் யுகந்தோறும் நான்**

**அவதரிக்கிறேன்.”[14]**

என்று கண்ணன் கீதையில் கூறுவதை அறியலாம்.

## திருமாலின் பெருமை

ஆதிசேடன் என்னும் பாம்பினை உடையவனாகவும், திருமகளை மார்பில் உடையவனாகவும், குற்றமற்ற வெண்மையான சங்கினைப் போன்ற மேனியையுடையவன். இவன் கண்ணபிரானாகவும், பலதேவனுமாக உள்ளான் என்பதையும் அந்தணரின் அருமறைப் பொருளானவன் எனப் போற்றுகிறது.

**“ ஆயிரம் விரித்த அணங்குடை அருந்தலை**

**தீ உமிழ் திறலொடு முடிமிசை அணவர**

**………………………………………**

**நாவல் அந்தணர் அருமறைப் பொருளே.”[15]** ( பரி-1,1-14)

நிலம், நீர், காற்று, நெருப்பு, விசும்பு எனத் திகழும் ஐம்பெரும் பூதங்களாகவும், இருப்பவன் என இறைவனின் புகழைச் சொல்லி வழிபடுகின்றனர் மக்கள்.

**“ அவையும் நீயே, அடுப்போர் அண்ணல்**

**அவை அவை கொள்ளும் கருவியும் நீயே,**

**…………………………………………**

**…………….முதன்மையின் இகந்த**

**காலமும், விசும்பும் காற்றொடு கனலும்.”[16]** ( பரி:13:15-25)

இறைவன் தூணிலும் இருப்பார் துரும்பிலும் இருப்பார் என்பதற்கேற்ப எல்லாப் பொருளும் பொருளின் தன்மையும் திருமால் என்பதை,

**“ தீயினுள் தெறல் நீ பூவினுள் நாற்றம் நீ**

**கல்லினுள் மணியும் நீ சொல்லினுள் வாய்மை நீ**

**அறத்தினுள் அன்பு நீ மறத்தினுள் மைந்து நீ**

**..........................................**

**அனைத்தும் நீ, அன்னத்தின் உட்பொருளும் நீ."[17](பரி-3,63-68)**

எனப் போற்றுகின்றார் புலவர் கடுவன் இளவெயினார்.

மேலும் இறைவனின் பெருமையை இயற்கைப் பொருளைக் கொண்டு உணர்த்துகின்றார்.

**" நின் வெம்மையும் விளக்கமும் ஞாயிற்று உள**

**நின் தன்மையும் சாயலும் திங்களும் உள**

**நின் சுரத்தலும் வண்மையும் மாரி உள**

**நின் புரத்தலும் நோன்மையும் ஞாலத்து உள**

**நின் நாற்றமும் ஒண்மையும் பூவை உள**

**நின் தோற்றமும் அகலமும் நீரின் உள**

**நின் உருவரும் ஒளியும் ஆகாயத்து உள**

**நின் வருதலும் ஒடுக்கமும் மருத்தின் உள"[18] ( பரி-4:25-32)**

இவ்வாறு உருவப் பொருளிலும் அருவப் பொருளிலும், நீக்கமற நிறைந்திருக்கும் இறைவனாகத் திருமாலைக் காட்டுகின்றது பரிபாடல். ஐம்பூதங்களாகவும், கோள்களாகவும் இறைவனைக் கண்ட புலவர்கள் சொல்லினுள் வாய்மை நீ எனச் சுட்டி எண்ணம், பேச்சு, செயல் ஆகிய மூன்றிலும் நெருடல் இல்லாத தன்மையைக் காட்டுகின்றனர்.

## ஊழிக்கே பெயர் (வராக கற்பம்) பெற்ற அவதாரம்

திருமாலின் அவதாரம் ஊழிக்கே பெயர் பெற்ற அவதாரமாகத் திகழ்கிறது. இதனை,

**“ நெய்தலும் குவளையும், ஆம்பலும் சங்கமும்**

**மைஇல் கமலமும், வெள்ளமும், நுதலிய**

**……………………………………….**

**ஊழி ஒருவினை உணர்த்தலின் முதுமைக்கு**

**ஊழி யாவரும் உணரா**

**ஆழி முதல்வ! நீற் பேணுதும், தொழுது.”[19] (பரி:2:13-19)**

என்ற பாடல் குறிப்பிடுகிறது. நெய்தல், குவளை, ஆம்பல், சங்கம், வெள்ளம் முதலான எண்களுக்குள் அடங்காது. எவராலும் கணக்கிட்டு அறிந்து கொள்ள முடியாத எண்ணற்ற ஊழிக்காலங்கள் (உலக அழிவுறும் காலங்கள்) பல கழிந்துள்ளன.

உலகைக் காக்கும் பொருட்டுத் திருமால் ஊழிதோறும் எண்ணற்ற திருவிளையாடல்கள் நிகழ்த்தியுள்ளார். அவற்றுள் ஒன்றுதான் அசுரன் நிலத்தை சுருட்டிக் கொண்டு கடலுக்குள் மறைந்து கொண்டான். அந்நிலவுலகத்தைப் பன்றியாக (வராக) அவதாரமெடுத்துத் தன் கொம்பால் மேலே கொண்டு வந்தது. அந்த ஊழிக்காலமே வராக கற்பகம் எனும் பெயர் பெற்றது.

திருமாலின் தொன்மைக்குரிய ஊழிகள் எவராலும் அறியப்படாதவை. அப்பெருமான் தன்னுடைய திருக்கரங்களில் சக்ராயுதத்தை ஏற்றி ஊழிகளுக்கெல்லாம் முதல்வனாகவும், உலக உயிர்களுக்கெல்லாம் தலைவனாகவும் சிறந்து விளங்கினர்.

## ஆதிசேடனின் பெருமை

தேவர்களும் அசுரர்களும் இணைந்து பாற்கடலைக் கடைந்தனர். இந்திரன் இழந்த செல்வத்தை எடுப்பதற்காக மந்தரமலையை மேலே எடுத்து பாற்கடலிடத்து ஆமை உருக்கொண்ட திருமால் தன் அழகிய முதுகில் ஏற்றி வைத்து நிலைபெறச் செய்து அமிழ்தம் கடைய மந்தாரமலையாகிய மத்தினை இழுக்க இருபுறமும் கயிறாக இருந்தது. தேவரும், அசுரரும் ஒரு புறம் பற்ற மறுபுறத்தில் திருமாலே தன் கைகளால் பற்றி இழுத்தார் என்பது புராணம். இச்செய்தியைப் பரிபாடல் திரட்டின் முதல் பாடல் பின்வருமாறு கூறுகின்றது.

**" திகழ்ஒளி முந்நீர் கடைந்தக்கால், வெற்புத்**

**திகழ்புஎழ வாங்கித் தம்சீர்க் சிரத்து ஏற்றி**

**மகர மறிகடல் வைத்து நிறுத்துப்**

**புகழ்சால் சிறப்பின் இரு திறத்தோர்க்கும்**

**அமுது கடைய இருவயின் நாண்ஆயி**

**மிகாஅ இருவடம் ஆழியான் வாங்க**

**உகாஅ வலியின் ஒருதோழம் காலம்**

**அறா அது அணிந்தாரும் தாம்."[20] (ப.திரட்டு:64-71)**

## நரசிங்கவதாரம்

இரணியன், பிரகலாதன் ஆகியோர் பற்றிய கதை நரசிம்ம அவதாரத்தில் இடம் பெறும். இரணியன் தன்னை விலங்கு, மனிதர், தேவர் யாரும் கொல்லக் கூடாது. பகல், இரவு வீட்டுக்குள் இருந்து வெளியில் யாரும் எந்த நேரத்திலும் தன்னைக் கொல்லக் கூடாது.

ஆயுதங்களாலும், தனக்கு அழிவு வரக் கூடாது எனப் படைப்புக் கடவுள் பிரம்மாவிடம் வரம் பெற்று இருந்தான். எனவே தன்னை எல்லோரும் வணங்க வேண்டும் எனக் கட்டாயப்படுத்தினான்.

தந்தையான இரணியனை திருமாலின் அடியவனான மகன் பிரகலாதன் சிவனை வணங்க மறுத்தான். இருவருக்கும் நடந்த வாக்குவாதம் முற்ற இறைவனைக் காட்டு எனத் தந்தை கேட்க, மகன் தூணிலும் இருப்பான், துரும்பிலும் இருப்பான் என விடை சொன்னான். இறைவன் நரசிம்ம வடிவத்தைக் கொண்டு தூணைப் பிளந்து வந்த இரணியனை இழுத்துத் தன் மடியில் கிடத்தித் தன் நகத்தால் கிழித்துக் கொன்றான் என்பது நரசிம்ம அவதாரம் ஆகும் எனப் பாடியுள்ளார் கடுவன் இளவெயினார்.

**“ செயிர் தீர் செங்கட் செல்வர் நிற்புகழ**

**புகைந்த நெஞ்சின், புலர்ந்த சாந்தின்**

**பிருங்க லாதன் பலபல பிணிபட**

**…………………………………………..**

**வேடிபடா ஒடிதூ தடியொடு**

**துடிதடி பலபட வகிர் வாய்த்த உயிரினை.”**[21] (பரி:4:10-21)

## திருமகளோடு நிலமகளையும் மணத்தல்

திருமகளோடு நிலமகளையும் மணந்த திருமாலின் அவதாரம் குறிப்பிடப்பட்டுள்ளது.

**“ நித்தில மதாணி அத்தகு மதி மறுச்**

**செய்யோன் சோந்த நின் மாசு இல்அகலம்**

**………………………………………………**

**புள்ளி நிலனும் புரைபடல் அரிது என,**

**உள்ளுநர் உரைப்போர் உரையொடு சிறந்தன்று."[22] (பரி:2:30-35)**

என்ற பாடல் வெளிப்படுத்துகிறது. இதில் வானவில்லைப் போன்ற பல நிறங்களை உடைய அணிகலன்கள் திருமாலின் திருமார்பை அழகு செய்கின்றன.

வெண்முத்துக்களால் தொடுக்கப்பட்ட மாலைகளுடன் ஒளி வீசக் கூடிய முத்துப்பதக்கமானது நிலவில் உள்ள கலங்கத்தைப் போன்று காட்சியளிக்கிறது. அத்தகைய திருமார்பில் சிவந்த நிறம் உடைய திருமகளை வீற்றிருக்கச் செய்தலன்றி கலங்கமில்லாதவராக விளங்குகின்றார். அவர் இரண்யாட்சனால் கடலுக்கடியில் இருந்த நிலமகளை மீட்டு கொண்டு வருவதற்காக அலைகடலில் மூழ்கியதால் தூய்மை செய்யப்பட்ட தம் கொம்புகளால் நிலமகளைத் தாங்கி மேலே கொண்டு வந்தார். இப்புராண செய்தியானது திருமகளை மணந்த திருமால் நிலமகளையும் மணந்தார் என்ற பொருளைத் தருகின்றது என்பர்.

## ஏழு உலகங்களையும் எஞ்சாது காத்தல்

ஏழு உலகையும் காத்து அருள்புரியும் நிலையைப் பரிபாடல் வெளிப்படுத்துகிறது.

**" கீழேழ் உலகமும் உற்ற அடியினை**

**தீ செங்கனலியும் குற்றமும் ஞமனும்**

**மாசு இல ஆயிரம் கதிர் ஞாயிறும் தொகுஉம்**

**ஊழி ஆழிக்கண், இருநிலம், உருகெழு**

**கேழலாய் பருப்பின் உழுதோய் எனவும்**

**…………………………………………**

**.................. நயநடது நிற்பாடுவோர்**

**பாடும் வகையே, எம்பாடல் தாம்அப்**

**பாடுவார் பாடும் வகை."[23] (பரி:3:20-30)**

விண், மண், பாதாளம் என்னும் மூவகைப்பட்ட உலகங்களுள் பாதாளம் என்பது கீழ்உலகம் என்று குறிப்பிடப்படுகிறது. அவை, 1.அதலம், 2.விதலம், 3.சுதலம், 4.தராதலம், 5.மகாதலம், 6. இராசாதலம், 7.பாதாளம் என்பனவாம்.

ஊழிக்காலத்தின் முடிவானது (உலக அழிவானது) பஞ்ச பூதங்களால் உருவாகும். அத்தருணத்தில் உலகம் முழுவதையும் ஒருசேர அழித்து விடும்படியான பெருந்தீயும், உலக உயிர்களை அவற்றின் வினை பயன்களுக்கேற்ப அழிக்கக் கூடிய அயமனும், அவனது ஏவலர்களாகிய கூற்றுவனும் உலக இயக்கத்திற்குக் காரணமாகிய ஞாயிறும், திங்களும் இவையாவும் ஒன்றோடு ஒன்று கூடிய நிலையில் ஏழு உலகங்களும் கடலினுள் மூழ்கி அழியும் என்று பரிபாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

புட்கலம், சம்வர்த்தம், ஆவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நிலவருணம் என்று ஏழு மேகங்களும் ஒன்று சேர்ந்து பொழிந்த மழையினால் கடலில் மூழ்கிய நிலப்பகுதியைப் பன்றியாக உருவெடுத்துத் திருமால் மீட்டு வெளிக்கொணர்ந்தார். இத்தகைய பெருமைக்குரிய திருமாலை மண்ணுலகில் வாழும் முனிவரும் விண்ணுலகில் வாழும் தேவர்களும் தங்கள் முன்னோர்களும் வாழ்த்தி வணங்கினர் என்றும், அந்த மரபில் வந்த மக்களும் வாழ்த்தி வணங்குவதாக அமைந்துள்ளது.

## நானில மாந்தர்களையும் நடுக்கத்திலிருந்து உயிர்ப்பித்தல்

திருமால் வராக அவதாரம் எடுத்து உலகைக் காத்து மக்களின் பயத்தைப் போக்கிய நிலையினை வெளிப்படுத்துகிறது.

**“ நானிலம் துளக்கு அறமுழு முதல் நாற்றிய**

**பொலம் புனை அதழ் அணி மணி...**

**இலங்கு ஒளி மருப்பின் களிறும் ஆகி**

**மூவுரு ஆகிய தலைபரி ஒருவனை!”[24] (பரி:13:34-37)**

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என நானிலங்களில் வாழும் உயிர்களின் நடுக்கம் நீங்க திருமால் அந்நில உலகைக் கடலிலிருந்து வெளியே நெம்பிக் கொண்டு வர உருவெடுத்தார்.

உருத்திர சிவனாக அழித்தல், நான்முகனாகப் படைத்தல், திருமாலாகக் காத்தல் எனும் முத்தொழிலை வெவ்வேறு உருவம் கொண்டு செய்பவராகவும், ஒப்பற்ற முழுமுதற்கடவுளாகவும் விளங்குகின்றார் என்பதைப் பரிபாடல் எடுத்துரைக்கிறது.

## திருமால்

திருமாலுடைய திருவடி பிறவிப்பெருங்கடலைக் கடக்கத் துணை செய்வது பிறப்பறுக்கும் திருவடி,

**“ மா அயோயே மா அயோயே**

**மறுபிறப்பு அறுக்கும் மாசுஇல் சேவடி**

**மணிதிகழ் உருபின் மாஅயோயே,”[25] (பரி:3:1-3)**

எனப் புகழ்ந்து,

**“ முதல்முறை இடைமுறை கடைமுறை தொழிலில்**

**பிறவாப் பிறப்பு இல்லை, பிறப்பித்தோர் இலையே.”[26] (பரி:3:71-72)**

உலகில் முதல், இடை, இறுதியில் படைப்பு, அளிப்பு (காத்தல்) அழிப்பு போன்றவை செய்தலால் அவன் பிறவாதப் பிறப்பு இல்லை எனச் சிறப்பிக்கின்றது.

## முருகன் (செவ்வேள்)

முருகன் குறிஞ்சி நிலக் கடவுள். இவன் தொல்காப்பியரால் சேயோன் எனக் குறிப்பிடப்படுகிறான். முருகன் செந்நிறமுடைமையால் சேயோன் எனவும், கடம்ப மரத்தடியில் உறைவதால் கடம்பன் எனவும் பெயர் பெற்றான். குறிஞ்சி நில மக்களின் களவு வாழ்வோடு முருகன் இணைத்துப் பேசப்பட்டார்.

முருகன் தெய்வத்தன்மை, அழகு, இளமை, மகிழ்ச்சி, மணம், இனிமை ஆகிய ஆறு அம்சங்களின் பொருளாகவும் இருக்கிறார். அவரது வனப்பை மிகச் சிறந்த எழுத்தாளர்களாலும் எடுத்து உரைக்க இயலாது. எனவே தான் அருணகிரிநாதர் முருகனது ஆறுமுகங்களையும் எழுதரிய அறுமுகம் என்று பாடினார். முருகன் கோயில் கொண்டிருக்கும் அறுபடை வீடுகளையும் திருமுருகாற்றுப்படை சிறப்பாக விவரித்துப் பேசுகிறது.

## முருகனின் வேறு பெயர்கள்

முருகன் என்றால் ‘அழகன்’ என்பதாகும். குமரன், குகன், காங்கேயன், சரவணபவன், சேனாதிபதி, வேலன், சுவாமிநாதன், கந்தன், கார்த்திகேயன், சண்முகன், தண்டாயுதபாணி, வடிவேலன், சுப்ரமணியன், மயில்வாகனம், ஆறுபடை வீடுடையோன், வள்ளற்பெருமான், சோமாஸ்கந்தன், முத்தையன், சேயோன், சேந்தன், விசாகன், சுரேஷன், செவ்வேள். கடம்பன், ஆறுமுகன், அயிலவன் போன்ற பல பெயர்களால் வழங்கப்படுகிறார்.

## முருகனின் பிறப்பு

தெய்வ நிலையுடன், போர் தெய்வமாக முருகன் மாறிய சூழல்களை பழந்தமிழ் இலக்கியங்கள் பரவலாகப் பேசினாலும், முருகன் முழுமையாக

ஆரிய மயமான சூழலில் தான் முருகனின் பிறப்புக் கதைப் பேசப்படுகிறது. எனவே இறைவழிபாட்டு நெறிகள் அதிகமாக கூறப்பட்டுள்ள பரிபாடலிலும், திருமுருகாற்றுப்படையிலும் முருகன் பிறப்பு குறித்தச் செய்திகள் இடம் பெற்றுள்ளன.

பிரம்மன் இமயத்திலிருந்து கங்கையை உருவாக்கினார். அதைச் சிவன் தன் தலையில் தாங்கி சலதாரி எனும் திருப்பெயரைப் பெற்ற நீலமணி போன்ற நிறமுடைய மிடற்றினையுடைய சிவபெருமானுக்குத் தம் கணவராகிய உயர்ந்த தவத்தையுடைய தெய்வமுனிவர் அறுவரும் உடம்பட நன்கு மதிக்கப்படும். கார்த்திகை மகளிரிடத்தே தோன்றியவன் முருகன் என்பதை,

**“ எரிமலர்த் தாமரை யிறைவீழ்ந்த பெருவாரி**

**விரிசடைப் பொறையூழ்த்து விழுநிகர் மலரேய்ப்பத்**

**தணிவுறத் தாங்கிய தனிநிலைச் சலதாரி**

**மணிமிடற் றண்ணற்கு மதியாரற் பிறந்தோய் நீ.”[27] (பரி:9:4-7)**

என்ற தொன்மக் கதை கூறுகிறது. மேலும் இமயமலையில் உள்ள ஏனைய சுனைகளை விடச் சிறப்புடைய சரவணப் பொய்கையில் உள்ள தாமரை மலரில் முருகன் பிறந்தச் செய்தியை,

**“ இமயக் குன்றினிற் சிறந்து**

**நின்னீன்ற நிரையிதழ்த் தாமரை**

**மின்னீன்ற விளங்கினரூழா**

**ஒருநிலைப் பொய்கையோ டொக்குநின்குன்றின்**

**அருவிதாழ் மாலைச் சுனை.”[28] ( பரி:8:12-16)**

என நல்லந்துவனார் குறிப்பிடுகிறார்.

சிவன் உமையை மணந்த திருமண நாளில் இந்திரன் சிவனிடம் ஒருவரம் வேண்டிப் பெற்றான். நின் புணர்ச்சியால் உண்டான கருவினை அழிப்பாயாக என்று இந்திரன் கூற அதை ஏற்று சிவன் அவ்வரத்தினை மறவாமல் உமையோடு சேரும் புணர்ச்சித் தவிர்த்தான். பின் உருவாய்த் திரண்டக் கருவினைப் பல துண்டுகளாகச் சிதைத்து இந்திரனிடம் கொடுத்தான்.

ஏழு முனிவர்கள் அக்கருத்துண்டுகளை இந்திரனிடம் பெற்றுக் கொண்டனர். அக்கரு தேவர்களுக்கு தலைவனாகும் என்பதை உணர்ந்த முனிவர்கள் தம் மனைவியர் சிதைக்கப்பட்ட அக்கருவினை உட்கொண்டு வயிற்றில் அக்குழந்தையை வளர்த்தெடுத்தால் கற்புநிலைக் கெடும் என கருதி வேள்வித் தீயில் அக்கருத் துண்டங்களைப் போட்டனர். வேள்வித் தீயில் இட்ட சுத்தமான அக்கருவை முனிவரின் ஏழு மனைவியருள் அருந்ததி நீங்கலாக ஏனைய கார்த்திகைப் பெண்கள் உண்டனர்.

குற்றமற்ற கற்பினை உடைய கார்த்திகைப் பெண்டிர் அறுவரும் கணவன்மார்களின் விருப்பப்படியே உண்டமையால் கர்ப்பந்தரித்தனர். பின்னர் இமயமலையில் உள்ள பொய்கையில் தாமரைப் பூவாகியப் படுக்கையில் ஒரு சேர ஈன்றெடுத்தனர். அப்போது இந்திரன் தான் கருத்துண்டுகளை முனிவர்களுக்குக் கொடுத்ததையும் மறந்து தன் வரத்தையும் கடந்து அங்கு வந்து தன் வச்சிராயுதத்தாலே வெட்டினான்.

ஆறு உருவாயிருந்த குழந்தைகள் ஓர் உருப்பெற்று ஒரு குழந்தையாயின எனும் இத்தொன்மக் கதையை இளவெயினார் பாடலால் அறிய முடிகிறது.

**“ பாகம் உண்ட பைங்கண் பார்ப்பான்**

**உமையொடு புணர்ந்து காம வதுமையும்**

**அமையாப் புணர்ச்சி அமைய, நெற்றி**

**இமையா நாட்டத்து ஒருவரம் கொண்டு**

**……………………………………….**

**எரிஉமிழ்  வச்சிரம் கொண்டு, இகந்து வந்து எறிந்தென**

**அறுவேறு துணியும் அறுவர் ஆகி,**

**ஒருவனை, வாழி ஓங்கு விறல் சோய்."[29]     (பரி:5:22-54)**

என முருகன் பிறப்புப் பற்றிப் பரிபாடல் கூறுகின்றது. சிவனின் மைந்தன் முருகன் என்பதை,

**" ஆலமல் செல்வன் அணிசால் பெருவிறல்**

**போல வருமென் உயிர்."[30]**

**" ஆலமர் செல்வன் அணிவால் மகன் விழாக்**

**கால் கோள்."[31]**

என்ற பாடல் சான்று தருகின்றது. தாரகனால் பெரும் துயர் அடைந்த தேவர்கள் அக்னி தேவனை ஒரு புறா வடிவில் சிவபெருமானிடம் செல்லப் பணிக்க அவன் சிவபெருமான் லீலையில் இருந்த போது அந்தப்புர அறையில் செல்ல, சிவன் அந்தப் புறாவே தனது வீரியத்தைத் தாங்க வீரியத்தை விட்டார்.

அதன் வீரிய வெப்பத்தைத் தாங்க முடியாத புறா அதனைக் கங்கையில் விட அதைக் கங்கை தருப்பப் புல்லில் விட, அந்தச் சிவ வீரியத்திலிருந்து பேரழகன், சகல மேன்மை தரவல்ல முருகன் தோன்றினார் என முருகன் பிறப்புக் குறித்துப் புராணம் கூறுகிறது.

திருமுருகாற்றுப் படையில் முருகனின் பிறப்புப் பற்றியத் தொன்மச் செய்தியாக,

**“ நெடும் பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை**

**ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப**

**அறுவர் பயந்த ஆறு அமர் செல்ப.”[32] (முருகு:253-55)**

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இச்செய்தி மூலம் இமயமலையில் உள்ள தருப்பை வளர்ந்த பசுமையான சுனையிடத்தே பஞ்சபூதங்களுள் ஒன்றாகிய தீ தன் அகங்கையில் ஏற்றுக் கொள்ள அருந்ததி ஒழிந்த அறுவராகிய கார்த்திகைப் பெண்டிரால் பெறப்பட்ட ஆறுவடிவு பொருந்திய செல்வன் முருகனாவான் எனப் புலனாகிறது.

## திருப்பரங்குன்றத்தின் சிறப்பு

முருகன் கடவுள்கள் எல்லாம் வணங்கும் கடவுளாகக் காணப்படுகின்றான். இவன் அறுபடை வீடுகளில் ஒன்றாகத் திருப்பரங்குன்றம் இருக்கிறது. இன்றுள்ள மதுரைக்குத் தென்மேற்கில் ஏறத்தாழ ஐந்து கல் தொலைவில் உள்ளது என்பர்.

**“ திருவீற் றிருந்த த்துநீர் நியமத்து**

**மாடம் மலிமறுகின் கூடற் குடற்வயின்**

**குன்று அமர்ந்து உறைதலும் உரியன் அதா அன்று.”[33]**

**(முருகு:70-71)**

மதுரைக்கும் திருப்பரங்குன்றத்துக்கும் இடையே வயல்கள் மிகுதியாக உள்ளன. வயலில் உள்ள தாமரை மலரில் தங்கிய வண்டுகள், வைகறைப் பொழுதில் தேன் உண்டு ஞாயிறு தோன்றியதும் பரங்குன்றுச் சுனைப்பூவில் ஆரவாரிக்கும் வளங்கொண்ட பகுதியாய் தோற்றமளிக்கின்றது.

இப்படி சுனைநீர் வளம் கொண்ட மலைக்கு உரியவன் முருகன் என்பதால் இவனது திருமுகம் காண திருமால், சிவன், பிரம்மன், இந்திரன்

உள்ளிட்ட தேவர் கூட்டம் பரங்குன்றம் வந்து தங்கியதால் இமயமலையை ஒத்துக் காணப்படுவதாய் பாடல் பொருள் விளக்கம் தருகின்றது.

## வள்ளியின் திருமணம்

வள்ளி மலையில் குறத்திப் பெண்ணாக வளர்ந்து வரும் வள்ளியைக் காதல் கொண்டு மணம் முடிக்க விரும்பிய முருக கடவுளுக்கு விநாயகப் பெருமான் யானை உருப் பெற்று தினைபுனை விளையாடும் வள்ளியைப் பயமுறுத்தினார். அச்சமயத்தில் குறவன் வேடமேற்று கந்தன் வள்ளியைக் காப்பாற்றிக் காதல் கொண்டான் எனப் புராணம் உரைக்கிறது. இச்செய்தியைப் பரிபாடலில்,

**“ மாறுகொள் வதுபோலும், மயிற்கொடி வதுவை.”[34] (பரி:19:7)**

என்றும் பழனி பிள்ளைத்தமிழில்,

**“ கங்குலின்றிய பொன் னகர்க் கடவுள் யானை**

**தரு கன்னிமன நொந்து வாடக்**

**சுகன முனிமொழி வழி கடுக்கென்**

**றெழுந்தொடு கருங்கானகம் புகுந்து**

**வெங்குறவரே னலரு கிற்சிறுமியைக்**

**கண்டு வேடம் வெவ்வேறு கொண்டு**

**வேங்கை மரமென்று நின்ற வடருதினைப்**

**பிண்டி மிகவுண்ணட மேலு மேலும்.”[35] (வ.ச.பி.தால்-1)**

என்றும் பாடுகிறது. இதில் கானகம் புகுந்து தன் கோலத்தை மாற்றி வேடவுருவேற்று வள்ளியைக் காதல் கொண்டு தினைமாவு உண்டு மகிழ்ந்தான் முருகக்கடவுள் பற்றிய செய்தி கூறப்பட்டுள்ளது.

முருகக் கடவுள் வள்ளியிடம் குற்றேவள் புரிந்து தன் காதலை வளர்த்துக் கொண்டான் எனக் கூறுகிறது. இது முருகன் களவு வாழ்க்கையை மிகவும் விரும்பி ஏற்றான் என்பதைக் காட்டுகிறது.

**“ வாட விடுத்துத் தினைப் புனைந்தோய்**

**வள்ளிக் கொடியுள் ளுவகைப் பெற**

**கும்பிட் டருள்ளகத் தாமரையாற்,”[36] (த.க.பி.சப்பாண்-7)**

என வரும் தண்டபாணிக் கடவுள் பிள்ளைத் தமிழில் ‘குறவர் பால் வளர்ந்த வள்ளியின் அழகினில் மயங்கி அவளை அடைய விரும்பும் கள்வன்’ என்று உரைக்கப்பட்டு உள்ளது. இதனுள் முருகக் கடவுளின் மனதின் காதல் முளைவிட்டு வளர்ந்த செய்தி நயம்படக் கூறப்பட்டுள்ளது.

குறிஞ்சி நிலத் தெய்வமாக முருகன் இருந்த நிலையில் வள்ளி எனும் வளமைத் தெய்வம் அவனுடன் இணைத்துக் கூறப்படுகிறது. பழந்தமிழ் இலக்கியமான நற்றிணையில்,

**“ முருகு புணர்ந்து இயன்ற வள்ளி போல நின்**

**உருவு கண் எறிப்ப நோக்கல் ஆற்றலெனே.”[37] (ந:82:4-5)**

எனும் கருத்துக் குறிப்பிடப்பட்டுள்ளது. தன் காதலியின் துயர் கண்ட தலைவன் முருகனுடன் கலந்து அவனுடன் சென்ற வள்ளியைப் போல நீயும் என்னுடன் வருகின்றனையோ என வேண்டுவது போல இப்பாடல் அமைந்துள்ளது.

முருகனும் வள்ளியும் களவுக் காதலராய் காட்டப்பட்டு உள்ளனர். ஐங்குறுநூற்றில் வேலன் கழங்கிட்டுத் தலைவியின் மாற்றத்திற்கு முருகனே காரணம் என்பதை,

**" மணிவரைக் கட்சி மடமயில் ஆறும், நம்**

**மலர்ந்த வள்ளியங் கானங் கிழவோன்**

**ஆண்டகை விறல்வேள் அல்லன் இவள்**

**பூண் தாங்கு இளமுலை அணங்கியோனே."[38] (ஐங்-250:2-5)**

என்னும் பாடலடிகளில் தலைவன் முருகனுடன் இணைத்துக் கூறப்பட்டுள்ளான். இங்கு தலைவன் வள்ளிக்கொடி படர்ந்த காட்டிற்கு உரியவனாகக் குறிப்பிடப்படுவது முருகன் மற்றும் வள்ளி ஆகிய இருவரின் களவு வாழ்வைக் குறிப்பாக உணர்த்துவதாகக் கொள்ளலாம். இது குறிஞ்சி நில தெய்வமான முருகனின் திராவிடத் தன்மையை வெளிப்படுத்துகிறது.

## தெய்வானையை மணத்தல்

ஆரிய மரபில் தெய்வானை எனும் பிறிதொரு மனைவியுடன் முருகன் இணைத்துப் பேசப்படுகிறான். அறக் கற்பையும் ஒளி பொருந்திய நெற்றியையும் உடைய இந்திரனின் மகளாகிய தெய்வானை முருகனின் மனைவி என்பதை திருமுருகாற்றுப்படை,

**" மறுவில் கற்பின் வாணுதல் கணவன்"[39] ( தி.முருகு-6)**

எனப் பதிவு செய்கிறது. மேலும் திருமுருகாற்றுப்படை முருகனை,

**" மங்கையர் கணவ"[40] (தி.முருகு-264)**

என அழைக்கிறது. இதன் மூலம் தெய்வானை, வள்ளி என்னும் மங்கையரின் கணவன் முருகனே என்பது புலனாகிறது.

பரிபாடலில் திருப்பரங்குன்றத்தில் வள்ளியைத் திருமணம் செய்த செயல் தேவருலக இந்திரன் மகளான தெய்வானையின் திருமணத்தோடு மாறுபாடு கொண்ட செயல் என்பதை,

**“ தண்பரங்குன்றத்து இயல் அணிநின் மருங்கி**

**சாறு கொள் துறக்கத் தவனொடு.”[41] ( பரி:19:5-6)**

எனத் தெய்வானை, வள்ளி ஆகியோர் முருகனின் மனைவியராக காட்டப்படுகிறார்கள்.

## முருகன் சூரபதுமனை அழித்தல்

முருகன் அச்சத்தைப் போக்கும் கடவுளாகவும், பகைவருக்கு அச்சத்தை தோற்றுவிக்கும் கடவுளாகவும் கருதப்படுகிறான்.

**“‘சூர்’ என்னும் தமிழ்ச் சொல்லிற்கு அச்சம், துன்பம், வீரம், கொடுந்தெய்வம், தெய்வப்பெண், வன தேவதை, சூரபதுமன் எனப் பல பொருள்களைத் தமிழ் அகராதி கூறுகின்றது.”[42]**

உடம்பில் ஏற்படும் புறப் புலப்பாடுகள் பற்றிக் கூறும் மெய்ப் பாட்டியலில் அச்சம் தோன்றும் நிலைக் களன்களாக,

**“ அணங்கே விலங்கே கள்வர் தம் இறை எனப்**

**பிணங்கல் சாலா அச்சம் நான்கே.”** [43]

என்கிறார் தொல்காப்பியர். ‘சூர்’ என்னும் புலப்படாத ஆற்றல் மலையில் மேயும் ஆநிரைகளை அச்சுறுத்தியதோடு மலை மற்றும் நீரோடைகளிலும் நின்று அச்சுறுத்தியச் செய்தியை நற்றிணைக் குறிப்பிடுகிறது.

சூரர் என்போர் வெல்ல முடியாத ஆற்றலும் மனித சக்திக்கு அப்பாற்பட்ட மெய்யியல் தன்மையும் கொண்ட மலைவாழ் மக்கள் என்பதும் அவர்களின் தலைவன் சூரன் எனவும் கொள்ளலாம்.

குறிஞ்சி நில இனக்குழு சமூகத்தின் சூரன் அந்நில மலைகள், ஆறுகள், குகைகள் அனைத்தையும் தனது கட்டுப்பாட்டில் வைத்திருந்தான். பிற இனகுழுக்களைத் தன் ஆளுகைக்குள் நெருங்கவிடாது அவர்களது

ஆநிரைகளையும் கவர்ந்து சென்றான். மனித சக்தியை மிஞ்சியதாக அவன் இருந்தமையால் மக்களால் அவனை நெருங்க முடியவில்லை.

முருகன் அவனை வெற்றிக் கொண்டு அழித்ததாகத் தொன்மக் கதைகள் பேசுகின்றன. கலித்தொகையும் சூரன் கெடாத விரதத்தால் குதிரை முகமும், மக்கள் உடலுமாகிய இரண்டு அழகுக்கு பொருந்தியவன் என்பதை,

**“ ஈர் அணிக்கு ஏற்ற ஒடியாப் படிவத்துச்**

**சூர் கொன்ற செவ்வேலாற் பாடி.”[44]**

என குறிப்பிடுவதால் சூரனின் இருவேறு வடிவங்கள் புலப்படுகின்றன.

**“ சூர் நவை முருகன் சுற்றத்து அன்ன நின்**

**கூர்நல் அம்பின் கொடுவில் கூனியர்”[45]** என்றும்,

**“ நகைவர்க் காரணமாகிப் பகைவர்க்குக்**

**சூர் நிகழ்ந்தன்று நின்தானை”[46]**

ஆகிய செய்யுளடிகளிலும் அகநானூறு, பெரும்பாணாற்றுப்படை, ஆகிய இலக்கியங்களிலும் சூர் ஆணாகவும், முருகனின் எதிரியாகவும் கூறப்பட்டுள்ளது. அச்சம் தரும் தெய்வமாகக் குறிப்பிடப்பட்டுள்ள பிற இடங்களில் பால்பாகுபாடின்றியே சூர் சுட்டப்பட்டுள்ளது. முருகனோடு இணைத்துக் கூறப்பட்ட நிலையில் சூர் ஆணாகவே கருதப்பட்டது. இது முருக வழிபாட்டில் பின்னாளில் ஏற்பட்ட மாற்றமாகும்.

அகத்தியர் சாபத்தினால் தாரகை என்னும் அரக்கி கிரௌஞ்ச மலையாக மாறிப் பல தேவர்களை உட்கொண்டாள். அம்மலையில் தாரகாசூரன் இந்திரனைத் தோற்கடித்து மறைந்து கொள்கிறான். அதனை அழிக்க வந்த அக்கிரௌஞ்ச மலையையே பொடிபொடியாக்கி அழித்தான். இதனால் மண்ணியாற்றங்கரையில் சிவபெருமான் உருத்திரப் பாசுபதப் படைக்கலத்தை முருகனுக்கு அளித்தார்.

இவ்வாறு சிவன், முருகக்கடவுளுக்கு அருளிய திருத்தலம் திருச்சேய்ஞலூர் என்பதை கந்தபுராணத்தின் வழியே உணர முடிகிறது. பின்பு முருகக் கடவுள் திருச்செங்குன்றூர் என்னும் சிவதலத்தை வழிபட்டு திருச்செந்தூர் சென்று இந்திரன், வியாழன், வாயு பகவான் போன்ற தேவர்களின் மூலம் சூரபன்மன், சிங்கமுகன் போன்ற அசுரர்களின் கொடுஞ்செயல்களைக் கேட்டு அவர்களுடன் போரிட்டு அசுரர்களை அழித்து வெற்றி பெற்று தேவர்களுக்கு அருள் வழங்கினார். இதனை,

**“ பாய் இரும் பனிக்கடல் பார் துகள் படப்புக்கு**

**சேய்உயர் பிணிமுகம் ஊர்ந்து அமர் உழக்கு**

**தீ அழல் துவைப்பத் திரிய விட்டெறிந்து**

**நோயுடைய நுடங்கு சூர்மா முதல் தடிந்து**

**வென்றியின் மக்களுள் ஒருமையொடு பெயரிய**

**கொன்று உணல் அஞ்சாக் கொடுவினைக் கொல்தகை**

**மாய அவுணர் மருங்கு அறந்தபுத்த வேல்**

**நாவல் அம் தண் பொழில் வட பொழில் ஆயிடை**

**குருகொடு பெயர் பெற்ற மால் வரை உடைத்து”[47] (பரி:5:1-9)**

எனப் பரிபாடல் கூறுகிறது. இதில் முருகப் பெருமான் சூரபன்மனான மாமரத்தினது வேரை அறுத்து அவுனின் குலம் அழியுமாறு போர் செய்தான் என உரைக்கிறது. இப்புராணச் செய்தியினை கந்தபுராணத்தில் சூரபன்மன் வதைப்படலம் பேசுகிறது.

முருகன் கடலுள் புகுந்து அவுணர் கூட்டமாய் கூடியிருந்த காவல் செய்யும் சூரனின் மாமரத்தை வேருடன் வெட்டிக் குறைத்தக் கொடிய

சினமுடைய முருகப் பெருமான் பிணிமுகம் என்னும் யானையின் மீது ஏறி வெற்றி உலா வந்ததை,

**“ அணங்குடை யவுணர் ஏமம் புணர்க்கும்**

**குருடை முழுமுதல் தடிந்த பேரிசைக்**

**கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்கு”[48] ( பதிற்:11:4-6)**

எனப் பதிற்றுப்பத்து கூறுகிறது. காசி மாயையிடத்துப் பிறந்த புத்திரருள் மூத்தவன் சூரபதுமன். இவன் தான் பெற்ற வரத்தினால் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் நூற்றெட்டுயுகம் ஆட்சி செய்தான்.

தேவரைச் சிறையிட்டான். குமரக் கடவுளால் அழிந்து ஒரு பாதி மயிலாகி அக்கடவுட்கு வாகனமாகவும் ஒரு பாதி குக்குடக் கொடியாகவும் மாறினான். **இவன் பிறந்ததும் தவத்தால் இணையற்று உயர்ந்ததும், செல்வம் அதிகாரம் வீரம் முதலியவற்றை அளவின்றி பெற்று, மயங்கித் தீய நெறியிற் சென்று உலகங்களுக்கெல்லாம் பயங்கரகாரனாயிருந்தும் தெய்வ சிந்தை சிறிதும் இன்றி அகங்கரித்திருந்தும், ஈற்றிலே எல்லாம் இழிந்து கதியற்றதும், பின்னர் பூர்வ ஜென்ம புண்ணிய வசத்தினால் முருகக்கடவுளுக்குச் சேவல் மயிலுமாகிறது.**[49] இது சூரமனைப் பற்றிய தொன்மச் செய்தியாகும்.

பழந்தமிழ் இலக்கியங்களில் குறிஞ்சி நிலத்திற்குரியதாகக் கருதப்படும் சூர் எனும் அணங்கு முருகனின் சீற்றத்தை எதிர் கொள்ள முடியாமல் புலம் பெயர்ந்து கடவுள் சென்று ஒளிந்து கொண்டது. சூரனை நெய்தல் நிலம் வரை சென்று வெற்றி கொண்டமையால் நெய்தல் நிலமாகிய திருச்சீரலை வாயிலிலும் முருகன் வீற்றிருக்கிறான். இன்றும் முருகன் கோவில்களில் சூர சம்கார நிகழ்ச்சி நிகழ்வது இத்தொன்மத்தை மையப்படுத்தியதே ஆகும்.

## முருகன் கிரௌஞ்ச மலையைப் பிளத்தல்

கிரௌஞ்ச மலை நாவலந்தீவின் வடபகுதியில் உள்ள ஒரு மலை ஆகும். இது கிரௌஞ்சம் என்ற பறவையின் பெயரைக் கொண்டு உள்ளது. முருகன் தன்னுடைய வேற்படையால் கிரௌஞ்ச மலையைக் குடைந்து அம்மலையின் வழியை உண்டாக்கியச் செய்தியைப் பரிபாடல்,

**" நாவல் அம்தண் பொழில் வடபொழில் ஆயிடை**

**குருகொடு பெயர் பெற்ற மால்வரை உடைத்து**

**மலை ஆற்றுப் படுத்த மூகிரு கயந்தலை"[50]** (பரி:5:8-10)

எனக் குறிப்பிடுகிறது. மேலும் உலகத்துக்குத் துன்பம் செய்தலால் அறத்துக்குப் பொருந்தாதச் சூரபன்மா என்ற மாமரத்தை வேருடன் அழித்து பகைமை பொருந்த கிரௌஞ்ச மலையில் வேலை எறிந்து அம்மலையை உடைத்த பெருமான் முருகன் என்பதை,

**" எவ்வத்து ஒவ்வா மாமுதல் தடிந்து**

**தெவ்வுக் குன்றத்துத் திருந்து வேல் அழுத்தி**

**அவ்வரை உடைத்தோய்."[51]** (பரி:19:101-103)

என்ற பரிபாடலில் அடிகள் சுட்டுகிறது.

கடுவன் இளவெயினனார் என்ற புலவர் பரிபாடலில் செவ்வேளாகிய முருகனிடம், வேண்டி கேட்கும் பொழுது எங்களுக்குப் பொன்னும் பொருளும் வேண்டும் எனக் கேட்காமல் உன் அருளும், அன்பும், அறனும் மூன்றும் தான் வேண்டும் என்று கேட்கிறார். இதனை,

**" யாஅம் இரப்பாவை**

**பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்**

**அருளும் அன்பும் அறனும் மூன்றும்**

**உருன் இணர்க் கடம்பின் ஒலிதா ரோயே!"[52]** (பரி:5:78-81)

## பிரமனை சிறையிடுதல், தலையில் குட்டுதல்

முருகப் பெருமான் கைலையில் பாலகனாய் இருந்தபோது பல வகையான திருவிளையாடல்கள் செய்து உள்ளார். பிரம்ம தேவனான படைப்புக் கடவுளிடம் பிரணவ மந்திரத்தின் பொருளைக் கேட்க பிரம்மன் பதில் உரைக்கத் தெரியாது முழிக்க, அதனால் பிரம்மனைக் கையால் குட்டிச் சிறையிட்டான். இப்புராணச் செய்தியினை,

**" தூமறைக் கெலாம் ஆதியும் அந்தமும் சொல்லும்**

**ஓமெ னப்படும் ஓரெழுத் துண்மையை யுணரான்**

**மாமலார்ப் பெருங் கடவுளும் மயங்கினன் என்றால்**

**நாமினிச் சில அறிந்தனம் என்பது நகையே"[53]** (க.பு.பா-1217)

என்று கந்தபுராணம் உரைக்கிறது. இவ்வாறு பதில் தெரியாத பிரம்மனை நான்கு தலைகளும் குலுங்கும் படிக் குட்டினான் என நகைப்புடன் கந்தபுராணம் உரைக்கிறது. இதனை,

**" எட்டொ ணாதவக் குடிலையின் பயன் இணைத் தென்றே**

**கட்டு ரைத்திலன் மயங்களும் இதன் பொருள் கருதாய்**

**சிட்டி செய்வதித் தன்மைய தோவெனச் செவ்வேள்**

**குட்டி னான் அவன் நான்குமா முடிகளும் குலுங்க"[54]**

(க.பு.பா1218)

என வரும் பாடல் மூலம் உணரலாம். இப்புராணச் செய்திக்கு விளக்கம் அளிக்கும் அருட்திரு கிருபானந்தவாரியார்,

**“சிவன் வேறு, முருகன் வேறு அன்று. சிவனும் முருகும் ஒன்று என்பதை உணர்த்தவே இவ்விளையாட்டினை செய்தார்.”[55]**

எனக் கூறுகிறார். இவ்வாறு முருகன் பிரமனைச் சிறையிட்டச் செய்தியைக் கேட்டுத் தேவாதிதேவர்கள் சிவபெருமானிடம் முறையிட கந்த வெற்புதனில் சிறையிடப்பட்ட பிரம்மனைச் சிறை மீட்க சிவபெருமான் முருகனிடம் காரணம் கேட்டதற்குப் பிரணவ மந்திரத்தின் பொருள் தெரியாததினால் தான் அவ்வாறு சிறை செய்ததாகக் கூறுகிறார்.

மறுமொழியாகச் சிவன் உனக்கு அப்பொருள் பற்றி தெரியுமா? எனக் கேட்க அவ்வாறு தெரிந்தால் அதனைத் தனக்கு உரைக்குமாறு கேட்க, உரைப்பவர் ஆசிரியர், கேட்பவர் மாணவர் ஆகவே தாங்கள் மாணவனாகச் சிரம் தாழ்த்திக் கேட்பதானால் பிரணவத்திற்குப் பொருள் உரைப்பதாகக் கூறுகிறார் முருகப்பெருமான். அதனை ஏற்றுக் கொண்ட சிவபெருமான் மாணவன் போன்று உபதேசம் கேட்டார் என்பதைக் கந்தபுராணம் கூறுகிறது. இதனை,

**“ காமரு குமரன் சென்னி கதுமென வுயிர்த்துச் செக்கர்த**
**தாமலை புரையங் கையாற் றழுவியே அயனந் தேற்றா**
**ஓமென வுரைக்கும் சொல்லின் உறுபொருள் உனக்குப்போமோ**
**போமெனின் அதனை யின்னே புகலென இறைவன் சொற்றான்”[56]**

**(க.புரா.பா-1260)**

என வரும். கந்தபுராணப் பாடல் மூலம் அறியலாம். இதனை அருட்திரு. கிருபானந்தவாரியார் ‘சுவாமியாகியச் சிவனுக்கு நாதனாகி உபதேசித்துச் சுவாமி நாதனாகிப் பெருமை பெற்றார்’ எனக் கூறுவார். இதன் மூலம் முருகப் பெருமானின் சிறப்பு, புகழ், தத்துவம் ஆகியவை வெளிப்படுகிறது.

## பரிபாடலும் முருகாற்றுப்படையும்

பரிபாடலின் முதற்பாடல் திருமலைப் பற்றியதாதலின் அதற்கெனத் தனிக்கடவுள் வாழ்த்தில்லை. அது போன்றே பத்துப்பாட்டின் முதற்பாட்டு முருகனைப் பற்றியதாகலின் அதற்கும் தனியாகக் கடவுள் வாழ்த்தில்லை.

பரிபாடல் பாண்டிய நாட்டை மட்டும் சிறப்பித்துக் கூறுகிறது. ஆனால் முருகாற்றுப்படை தமிழகத்திலுள்ள முருகனுடைய ஆறுபடை வீடுகளையும் பாடிப் புகழ்ந்து உள்ளது. முருகாற்றுப்படை பழமுதிர்ச் சோலையை முருகனுக்குரியது என்று விளம்பும் பரிபாடலோ அதனைத் திருமாலுக்குரியதாகக் கூறும்.

முருகனது பிறப்பு அவனது சிறப்புகள் முதலியவற்றை இருநூல்கள் கருத்தொப்புமையுடன் எடுத்தியம்புகின்றன. வெறியாட்டு பற்றிய செய்திகளை முருகாற்றுப்படையில்,

**“சிறுதினை மலரொடு விரைஇ னறி அறுத்து**

**வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ**

**……………………………………………..**

**முருகிய நிறுத்து முரணினர் உட்க**

**முருகாற்றுப் படுத்த உருகொழு வியனகர்”[57] (முருகு-218-244)**

என காணலாம். முருகாற்றுப்படையை விட பரிபாடலே கந்தவேளினது பிறப்பை விரிவாகக் கூறியுள்ளது. முருகனின் ஊர்திகளுள் ஆடும் ஒன்றென,

**“ தகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்”[58] (முருகு-210)**

என திருமுருகாற்றுப்படை கூறுகிறது.

திருமால், சிவன், அயன் முதலிய கடவுள்கள் பரங்குன்றத்திற்கு முருகனை வணங்கச் சென்றனர் என்று பரிபாடல் கூறும். முருகனால்

சிறைப்படுத்தப்பட்ட நான்முகனைச் சிறை வீடு செய்யவே சிவன், திருமால் இந்திரன் முதலிய தேவர்கள் சென்றனர் என்று முருகாற்றுப்படை கூறுகிறது.

முருகாற்றுப்படை மட்டுமே முருகனின் ஆறு தலைகளும், பன்னிரு கைகளும் புரியும் பணிகளை விரிவாகக் கூறுகிறது. பரிபாடலுக்குப் பண் வகுக்கப்பட்டு உள்ளது. முருகாற்றுப்படைக்குப் பண் வகுக்கப்படவில்லை.

## பரிபாடலும் கந்தபுராணமும்

பரிபாடலும் கந்தபுராணமும் முருகனைச் சிவபெருமானின் மகன் எனக் கூறினும் முருகன் பிறந்த கதையைக் கூறுவதில் கந்தபுராணம் பரிபாடலிலிருந்து வேறுபடுகிறது. பிரமனும் தேவர்களும் கைலாயம் சென்று சிவனைக் கண்டு தம்மைச் சூரபதுமனின் கொடுமைகளினின்று விடுவிக்க வேண்டுமென வேண்டினர். ஐந்து முகமுடைய சிவபெருமான், மேலும் ஒருமுகத்தைப் படைத்துக் கொண்டு தம் ஆறு முகங்களிலிருந்தும் ஆறு தீப்பொறிகளை உண்டாக்கினார்.

பின்னர் தீக்கடவுளையும், வாயு தேவனையும் நோக்கி இப்பொறிகளை கங்கையிற் கொண்டு சேர்க்குமாறு கூறினார். அவர்கள் சேர்க்கவே கங்கை அவற்றை சரவணப் பொய்கையில் சேர்த்தது. அங்கு அவ்வாறு தீப்பொறியும் ஆறு குழந்தைகளாக மாறின.

திருமால் உள்ளிட்ட தேவர்கள் வேண்டுகோளுக்கிணங்க கார்த்திகை மகளிர் அறுவரும் அக்குழந்தைகளை வளர்த்தனர். உமையம்மை சரவணப்பொய்கை சென்று ஆறு குழந்தைகளையும் ஒரு சேரத் தழுவியவுடன் அவை ஆறுதலையும் பன்னிருகைகளும் உடைய ஒரு குழந்தையாயின. இதுவே முருகன் பிறப்புப் பற்றிய கந்தப்புராணக் கதையாகும்.

நான்முகனை சிறைப்படுத்தியக் குறிப்பு பரிபாடலில் இல்லை. ஆனால் பிரணவப் பொருளை நான்முகன் அறியாததால் முருகன் அவரைச் சிறை வைத்ததாகக் கந்தபுராணம் கூறுகிறது. சூரபதுமனை கொன்ற வரலாறு

பரிபாடலில் காணப்படுவது போன்று கந்தபுராணத்தில் காணப்படவில்லை. முருகனது வேல் சூரனது மார்பை இருகூறாக்கியதெனவும், ஒரு கூறு மயிலாகவும், மற்றொன்று சேவலாகவும் மாறின என்றும் அவற்றை முருகன் ஊர்தியாகவும், கொடியாகவும் கொண்டான் எனவும் கந்தபுராணம் கூறுகிறது.

இச்செய்தி பரிபாடலுள் வேறாகக் காணப்படுகிறது. கந்தவேளின் ஊர்தியாக ஆடு நாரதர் செய்த வேள்வியினின்று வந்தது எனக் கந்தபுராணம் கூறுவதையும் எமன் ஆட்டினை முருகப்பெருமானுக்குப் பரிசளித்தாகப் பரிபாடல் கூறுவதையும் காணலாம். அது வீரவாகுவின் வரலாறு, சூரபதுமனின் தம்பி தராசுரன் பற்றிய கதை சூரனின் பிறப்பு அவன் வேள்வியில் மறைந்து பின்னர் உடனே தோன்றியது.

சொர்க்கம், சத்தியவுலகம், வைகுந்தம் என்னும் உலகங்களுக்கு சென்றது முருகனுக்கும், சூரனுக்கும் நிகழ்ந்த பெரும்போர். முருகன், வள்ளி, தேவசேனையாரை மணந்தது முதலியவற்றைக் கற்பனையுடன் எடுத்துரைக்கிறது.

## வெறியாடல்

வெறியாடலுக்குரிய முருகன் தம்மை வணங்குபவர்க்கு அருள் தருபவன். முருகனுடன் பல தெய்வங்கள் புகார் நகரில் விழாவின் போது வணங்கப்பட்டன. மகளிரின் பாடல்களுக்கு ஏற்ப துணைக் கருவியாகிய குழல் இசை உண்டாக்கவும், நரம்புக் கருவியாகிய யாழ் முரசுவும், தோல் கருவியாகிய முழவு முழங்கவும், முரசு ஒலிக்கவும், புகார் நகரம் விழா நகரமாக இருந்ததாகப் பட்டினப்பாலை இயம்புகிறது. மேலும் விழா நிகழ்வுகளில் வேலனின் வெறியாட்டும் மகளிரின் குரவைக் கூத்தும் நடந்ததை,

**“ ....................................ஒரு சார்**

**அருங்கடி வேலன் முருகொடு வளைஇ**

**அருக்கூடு இன்இயம் கறங்க நேர் நிறுத்து**

**கார் மலர்க் குறிஞ்சி சூடி கடம்பின்**

**சீர்மிகு நெடுவேட்பேணி தழூஉப் பிணையூஉ**

**மன்று தொறும் நின்ற குரவை"[59] (மது.கா-610-615)**

என்ற மதுரைக் காஞ்சியின் வரிகள் நிறுவுகின்றன. அச்சத்தை செய்யும் வேலனுக்கு அதிர்ந்து எழும் ஓசையுடைய சல்லி, கரடிகை முதலிய கருவிகளோடு இசை உண்டாக்கிக் குறிஞ்சியும், கடம்பும் அணிந்த அழகனை தம் மெய்யில் நிறுத்தி வெறியாட்டுடன் மகளிர் கைகோர்த்து மன்றுகள் தோறும் குரவையாடிக் காணப்படுவர்.

வெறி என்பது தெய்வம் எனப் பொருள்படும். இதனைக் காந்தள் என்றும் கூறுவர்.

**" வெறியறி சிறப்பின் வெல்லாய் வேலன்**

**வெறியாட்டு அயர்ந்த காந்தளும்"[60] ( தொல்.பொருள்.பு.தூ-5:1-5)**

காம வேட்கையின் போது ஆற்ற இயலாதவள் தலைவி. இவளை கொள்ளக் கூடிய இக்காம வேட்கை 'காந்தள்' எனப்படும். இவ்வேட்கை தனிய வெறி எடுப்பர். குறிஞ்சி நிலத்தார் வெற்றி வேண்டி ஆடும் வெறியும் ஆகிய இவ்விரண்டும் வெறியாட்டில் அடங்கும்.

தமிழரின் இயற்கை வணக்கத்தில் வெறியாடல் முக்கிய அங்கம் வகிக்கின்றது. காமத்தால் தாங்க இயலாத பெண்ணின் மீது அணங்கு குடியேறி விடுகின்றது. இவ்வணங்கை அவளிடமிருந்து நீக்க வேண்டும். அதற்காக மேற்கொள்ளப்படும் சடங்குதான் வெறியாடல் என்பதாகும். இவ்வெறியாடல்,

**“ கட்டினுங் கழங்கினும் வெறியெனவருவரும்**

**ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்**

**ஆடிய சென்றுழி அழிவுதலை வரினும்**

**காதல் கைம்மிகக் கனவின் அரற்றாலுந்**

**தோழியை வினாதலுந் தெய்வம் வாழ்த்தாகும்”[61]**

**(தொல்.களவு.நூ-113)**

என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். வெறியாடல் என்பது இயற்கை வணக்கத்தின் சடங்குகளில் ஒன்றாய் இருந்திருக்கிறது. களவு காலத்தில் தலைவன் பிரிவால் வேறுபாடு கொள்கின்றாள் தலைவி. தாய் வெறியாட்டு நிகழ்த்துகின்றாள். அதனைக் கண்ணுற்ற தோழி, வெறியாட்டுக் காரணமாக முருகவேலனுக்கு இந்நோய் அவனால் வந்ததில்லை என்று அறிந்தும் பலியேற்க வரமாட்டான் என நம்புகிறாள். தலைவனால் வந்த நோய் இது என்பதைக் கூறி வெறி விலக்க முற்படுகிறாள்.

**“ அருவிஇன் இயந்து ஆடும் நாடன்**

**மார்புதர வந்த படல்மலி அருநோய்**

**நின் அணங்கு அன்மை அறிந்து அண்ணாந்து**

**கார் நடுங் கடம்பின் கண்ணிகுடி**

**வேலன் வேண்ட வெறிமனை வந்தோம்**

**கடவுள் ஆயினும் ஆக**

**மடவை மன்ற வாழிய முருகே”[62] ( நற்.பா-134)**

வெறியர் களத்தில் வெறியாடுபவன் வேல் கொண்டு ஆடுவதால் வேலன் எனப்பட்டான்.

**“ வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்**

**வெறியாட்டு அயர்ந்த காந்தளும்”[63] (தொல்.பொ.பு.நூ:5:1-2)**

வெறியாட்டில் வரும் வேலன் வழிபாடும் அவனுக்குரிய வேலும் தொல் இயற்கை வணக்கத்தின் வளர்நிலையால் உருப்பெற்றிருக்க வேண்டும். பின்னர் முருகனுக்குரிய கருவிகளாய் மாறியிருக்க வாய்ப்புள்ளது என்பது தெளிவாகிறது.

ஆடவரில் காமம் மிக்கவர் இறுதியில் நாண் துறந்து ஊர் அறிய மேற்கொள்ளும் செயல்களில் மடலேறுதல் பண்பு ஒன்றாக அமைகின்றது. இதனைப் போன்று பெண் காமம் மிக்கவராய்க் கருதப்படும் வேளையில் இவள் கொண்ட காமகாந்தள் எனத் தொல்காப்பிய உரையில் இளம்பூரணர் குறிப்பிடுகின்றார். காந்தள் பொருட்டு நிகழ்த்தப்படும் நிவர்த்தி முறையாக வெறியாட்டு அமைகின்றது.

வெறியாடலின் போது வேலனின் முன் தலைவியை நிறுத்தி அவள் கூந்தல் பூவை எடுத்து வீசுமாறு பரவுக்கடன் செய்தல் மரபு ஆகும். இதனை,

**“ நெடுவேல் ஏந்திய நீளமக்கி யாஅர்**

**தொடுதல் ஓம்பென அரத்தலும் அரற்றம்**

**கடவுள் வேங்கையும் காந்தருளும் மலைந்த**

**தொடலைக் கண்ணி பரியலம் என்னும்”[64] (ஐங்கு.பா-256-4)**

என்ற தொல்காப்பிய வரிகள் சான்றாக விளக்குகின்றது.

# தொகுப்புரை

சங்க இலக்கியங்களில் புறநானூறு பெறுமிடம் அதன் பெருமை, மற்றும் பழைமையை அறிய உதவும் வரலாற்று களஞ்சியமாகத் திகழ்கிறது என்பதை அறியலாம்.

முருகனின் பிறப்பு, வளர்ப்பு பற்றிய செய்திகளையும் அதன் பின்னர் சூரபன்மன் அவனுடைய சகோதரக் கூட்டத்தின் அழிவு போன்ற புராணச் செய்திகளின் அடிப்படையில் கூறப்பட்டுள்ளதை அறிந்து கொள்ளலாம். மேலும் கிரௌஞ்ச மலையைப் பிளத்தல். சூரபதுமன் போர் பற்றி அறிந்து கொள்ள முடிகிறது.

நான்முகனுக்கு பிரணவ மந்திரப் பொருள் பற்றி அறியாததினால் அவன் தலையில் குட்டி சிறையிட்டு, சிவனின் குறுக்கீட்டினால் சிறைவிடுத்த புராணச் செய்திகளும், சிவனுக்கு உபதேசம் அளித்தல் என்பன போன்ற புராண செய்திகளும் உணர்த்தப்பட்டு உள்ளது.

தேவர்கள் பாற்கடலை கடைந்து இந்திரன் இழந்த செல்வத்தை எடுப்பதற்காக இருந்து மேருமலையைத் தாங்கி நின்றார் என்பதையும், திருமால் திருமகளோடு நிலமகளையும் மணந்தார் என்பதையும் ஏழுலகங்களையும் காத்தார் என்பதையும், வராக அவதாரம் எடுத்து உலகை காத்து மக்களின் பயத்தைப் போக்கிய நிலையையும் பரிபாடலில் கூறப்பட்டதை அறியமுடிகிறது.

# சான்றெண்விளக்கம்

1. தொல். புறத் 35 நச்சினார்கினியர் உரை
2. புறம் 9
3. மேலது 28
4. மேலது 35
5. மேலது 50
6. மேலது 183
7. மேலது 187
8. மேலது 191
9. புறம்.378.18.21
10. மேலது - 2
11. தொல். நூ-999
12. மேலது, நூ-1377
13. மேலது, நூ-1418
14. பரி,1:1-14
15. மேலது, 13:15-25
16. மேலது, 3:63-68
17. மேலது, 4:25-32
18. மேலது, 2:13-19
19. ப.திரட்டு, 64-71
20. பரி, 4:10-21

21. மேலது, 2:30-35

22. மேலது, 3:20-30

23. மேலது, 13:34-37

24. மேலது, 3:1-3

25. மேலது, 3:71-72

26. மேலது, 9:4-7

27. மேலது, 8:12-16

28, மேலது, 5:22-54

29. கலி.பா, 81:9

30. மேலது, பா.31:14

31. திருமுருகு. 253-55

32. மேலது, 70-71

33. பரி, 19:7

34. வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள், பழனி பிள்ளைத்தமிழ், தால்-1

35. தவத்திரு.கந்தசாமி சுவாமிகள், தண்டபாணிகடவுள் பிள்ளைத்தமிழ்,

சப்பாணி -7

36. நற், பா-82:4-5

37. ஐங்,பா -250:2-5

38. முருகு, அடி-6

39. மேலது, அடி-264

40. பரி-19:5-6

41. வர்த்தமானன் தமிழ் அகராதி, ப-498

42. சொல், மெய்ப், நூ-1202

43. நற், பா-359:7-9

44. கலி,பா-93:25-26

45. புறம், பா-23:4-5

46. பதிற்: 31:34-35

47. பரி,5:1-9

48. பதிற், 11:4-6

49. தமிழ் மொழியகராதி, ப-689

50. பரி:5:8-10

51. மேலது, 19:101-103

52. மேலது, 5:78-81

53. கச்சியப்பசிவாச்சாரியார், கந்தபுராணம்,பா-1217

54. மேலது, பா-1218

55. கிருபானந்தவாரியர், கந்தவேள் கருணை,ப-130

56. கச்சியப்பசிவாச்சாரியார், கந்தபுராணம், பா-1260

57. முருகு, அடி-218-244

58. மேலது, அடி-210

59. மதுரைக், அடி-610-615

60. தொல்.பொருள்,புறத்தூ-5

61. தொல்.களவு,நூ-113

62. நற்.பா-134

63. தொல்.பொருள்,புறத்,நூ-5

64. ஐங்கு,பா-256.

# இயல் - 4

# சங்க இலக்கியத்தில் கடவுள்கள்

பண்டையத் தமிழகம் வட எல்லையில் மலையினையும் ஏனைய மூன்று எல்லைகளில் கடலினையும் கொண்டு விளங்கியதாகும். இந்த நில எல்லைக்கு உட்பட்ட வாழ்க்கையில் ஐந்திணை ஒழுக்கங்களைக் கொண்டு வாழ்ந்தவர்கள் பண்டையத் தமிழர்கள். இவர்களது நிலம் சார்ந்த கடவுள் வணக்கமும் நிலவியல் சாராத தொன்மை பெருந்தெய்வ வணக்கமும், நானிலத் தெய்வம் கொற்றவை ஐந்தாவது பாலை நிலத்தில் வணங்கப்படுகிறாள். என்பதை குறித்த முழுமையான செய்தியை இவ்வியல் அமைகிறது.

இவ்வுலகில் தோன்றிய உயிர்கள் யாவற்றிலும் உயர்வுடையதான உயிராகக் கருதப்படுவது மனிதப்பிறவி. தேவை கருதி தொடக்கத்தில் இயற்கையினையும், ஐம்பூதங்களையும் மனிதன் வணங்கி உள்ளான். சமூகத்தில் நடுகல் வழிபாடும், சிற்றூர்களில் இறைவடிவங்களான அணங்கு, பாவை என்பன மனிதனால் ஏற்றுக் கொள்ளப்பட்ட உண்மைகளாகும். இவைகள் குறித்தச் செய்திகள் சங்க இலக்கியங்களில் பயின்று வரும் பாங்கினை ஆராயலாம்.

உலகில் வாழும் மக்கள் அவரவர்க்கும் உகந்த வகையில் கடவுள் கொள்கையை உருவாக்கிக் கொண்டனர். தொடக்கத்தில் இயற்கையை வணங்கும் முறையையும், அருவ நிலையிலான ஒலி, ஒளி இவற்றை வணங்கும் பண்பிற்கு மாறினர். மேலெழுந்த உயரிய எண்ணங்களால் கடவுள் குறித்த நம்பிக்கைகள் தோன்றலாயின.

**“இயற்கைச் சீற்றங்களினின்று நம்மைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டுமெனில் அச்ச உணர்வும், அதன் அடிப்படையில் எழுந்த பக்தி**

**உணர்வும் தேவையென்பதை அனுபவத்தால் உணர்ந்து மனிதன் கொண்ட வாழ்வியற் கொள்கை அல்லது கோட்பாடு மதம் என வழங்கலாயிற்று.”**[1]

**என்று கூறுவர்.**

**“இறைக் கொள்கை என்பது இறைவனைப் பற்றி ஒவ்வொரு சமயமும் வைத்திருக்கும் மதிப்பாகும்.”**[2]

என அரங்க. சுப்பையா குறிப்பிடுவதற்கேற்ப,

**“இயற்கையிலமைந்த இடி, மின்னல், பெருமழை, புயற்காற்று, காட்டுத்தீ, பூகம்பம் முதலிய இயற்கைச் சீற்றங்களையும், அத்தகைய சீற்றங்களின்றும் தன்னை விடுவித்துக் கொள்ளும் உத்திகளையும் அவ்வுத்திகளுள் தலையாயது இயற்கை வழிபாடு என்பதையும் காலப்போக்கில் புரிந்து கொள்ளலானான்.”**[3]

என்பதை உணர்த்துகிறது.

## ஐம்பூதங்களை வணங்குதல்

இயற்கையின் கூறுகளான ஐம்பூதங்களின் இயக்கம் மனிதனுக்கு விந்தையாகத் தோன்றியது. எனவே ஐம்பூதங்களின் மீது கொண்ட அச்சத்தின் காரணமாக அவற்றையும் வணங்கத் தலைப்பட்டான்.

இவ்வுலகம் பஞ்ச பூதங்களால் நிறைந்திருக்கிறது. மதம் சார்ந்த வேத நூல்களில் கூட இப்பூதங்கள் தோற்றம் பற்றிக் கூறுமிடத்தும், எந்த சமய நூலாக இருப்பினும் ஒரே மாதிரியான கருத்தையே நிறுவுகின்றன. பஞ்ச பூதங்களால் நிறைந்துள்ள உலகத்தில் அதிலிருந்து உயிர்க்கும், உயிர்கள் யாவும் அப்பூதங்களின் இயக்கவியல் தன்மை பெற்றதாகவே பிறக்கின்றன.

**“வஞ்ச மனத்தான் பற்றொழுக்கம் பூதங்கள்**
**ஐந்தும் அகத்தே நகும்.”**[4]

என்கின்றார்.

ஒருவன் துறவறத்தில் இருந்து கொண்டு வஞ்சமாகத் துறவறத்துக்கு தகாத வாழ்க்கை நடத்துகிறவனுடைய கெட்ட நடத்தையை மற்றவர்கள் அறியா விட்டாலும், அவன் தேகத்திலுள்ள பஞ்ச பூதங்களும் அறிந்து தமக்குள் சிரித்து ஏளனம் செய்யும் என்பது இதன் பொருள்.

ஐம்பூதங்களாக நிலம், நீர், காற்று, ஆகாயம், நெருப்பு எனக்கூறலாம். உலகில் உள்ள ஐம்பூதங்கள் இயல்பாய் அமைந்துள்ளமை போல், உடலியலுக்கு ஐம்புலன்களும் இயல்பாய் அமைந்துள்ளன.

பரிபாடலில் மூன்றாம் பாடல் திருமாலுக்குரியதாகும். இவற்றில்,

**“ தீவளி விசும்பு நில நீர் ஐந்தும்.”**[5]

என்னும் பாடல்வரி தீ, காற்று, நிலம், நீர் என்னும் ஐந்து பூதங்களும், சூரிய சந்திரர்களும், செவ்வாய் முதலிய ஐந்து கோள்களும், அசுரரும், துவாத சாதித்தியரும், வசுக்கள் எண்மரும், ஏகாதச ருத்திரர்களும், அச்சுவினி தேவர்களும்,. யமனும் அவனின் ஏவலன் கூற்றுவனும், மூவேழ் உலகமும் அவற்றின் உயிர்ப்பும் இவை யாவும் திருமாலிடமிருந்:து தோன்றியவை என்பதாகக் கூறுகின்றது.

இவ்வுலகம் தீ, காற்று, வானம், நிலம், நீர், தன்மையத்தாய் அமைந்துள்ளது என்பதற்கு இப்பரிபாடல் வரியே சான்றாக அமைகின்றது. இவையின்றி,

**“ வேதத்து மறை தீ பூதத்து முதலும் நீ”**[6]

**என்**னும் பாடல் வரி, திருமால் ஐம்பூதங்களின் வழிவிற்றாய் நிற்பவன் எனக் குறிப்பிடுகின்றது. மேலும்,

**“ ………..ஒன்றென**

**இரண்டென மூன்றென நான்கென ஐந்தென**

**……………………………………………..**

**……………………..சிறப்பினன்.”** [7]

பூதங்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கன் ஐந்தும், ஞானேந்தியங்கள் ஐந்தும், புலன்கள் ஐந்தும், மனம், முதலிய அந்தக் காரணங்கள் மூன்றும், மூலப்பகுதியும் புருடனும் எனப்பட்ட தத்துவங்கள் இருபத்தைந்தினாலும், நால்வகை யுகங்களாலும் ஆராயப்படும் பெருமையே இறைவன் என்கின்ற கூற்றால் ஐம்பூதங்களும், ஐம்புலன்களும் கொண்டுள்ள இணக்கத்தைக் காண முடிகின்றது. மேலும்,

**“ ஒன்றனிற் போற்றிய விசும்பும் நீயே**

**இரண்டின் உணரும் வளியும் நீயே**

**மூன்றின் உணரும் தீயும் நீயே**

**நான்கின் உணரும் நீரும் நீயே**

**ஐந்துடன் முற்றிய நிலனும் நீயே.”**[8]

என்னும் பாடல் வரிகளில் முன்பு கூறப்பட்ட புலன்கள் ஐந்தினுள் ஒன்றாகிய ஓசையால் அறியப்படும் ஆகாயமும் நீயே ஓசையாலும் பரிசத்தாலும் ஒளியாலும் உணரப்படும் தீயும் நீயே. ஓசை, ஊறு, ஒளி, சுவை, மனம் என்பவற்றால் உணரப்படும்.

நிலமும் நீயே. ஆதலால் மூலப்பகுதியும் அறமும் அநாதியான காலமும், ஆகாயமும், காற்றும் கனலும் கூடிய இம்மூவேழ் உலகத்து உயிர்கள் எல்லாம் திருமாலிடத்தில் உளவாயின எனக் காணும் போது உலக உயிர்ப்புகளின் தோற்றமும் உடல் சூழ் ஐம்புலனும் உலகம் சூழ் ஐம்பூதங்களும் தெளிவாக அறிய முடிகின்றன.

பதிற்றுப் பத்து மூன்றாம் பத்தில் சேரனின் செல்வ வளத்தையும் பெருமையினையும் காணுமிடத்து,

**“ நீர் நிலம் தீவளி விசும்போடு ஐந்தும்,**

**அளந்து கடை அறியினும் அளப்பருங் குரையை”** [9]

நீரும் நிலமும் நெருப்பும் காற்றும் வானுமாகிய ஐந்திணையும் அளந்து அவற்றின் முடிவினை அறிந்தாலும் நின் பெருமையினை அளந்தற்கரிய எனச் சேரன் பல்யானைச் செல்கெழு குட்டுவனை பாலைப் கௌதமனார் ஐம்பூதங்களுடன் ஒப்புமைப்படுத்தி குறிப்பிடுகின்றார்.

மதுரைக் காஞ்சியில் மாங்குடி மருதனார் பாண்டியன் தலையாலங்கானத்து செருவென்ற நெடுஞ் செழியனை போற்றிப் புகழுமிடத்தில்,

**" நீரும் நிலனும் தீயும் வளியும்**

**மாக விசும்போடு ஐம்துடன் இயற்றிய...."**[10]

என்ற வரிகளில் நிலனும், தீயும். வளியும். விசும்புமாகிய ஐம்பெரும் பூதமும் கலந்த உலகினைப் படைத்தருளிய சிவனை முதல் கடவுளாக வணங்குபவனே எனக் கூறுகின்றார். இதன் வழிப் திருமாலைப் போன்று சிவனும், ஐம்பெரும்பூதங்களைப் படைத்து ஆள்பவன் என அறிய முடிகின்றது.

## ஐம்பெரும் பூதத்து இயல்பு

புறநானூற்றில் முரஞ்சியூர் முடிநாகராயர் சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதனின் வீரத்தையும் கொடையையும் புகழ்ந்து பாடுமிடத்தில்,

**" மண்டிணிந்த நிலனும்**

**நிலனேந்திய விசும்பும்**

**விசும்புவதைவரு வளியும்**

**வளித்தலை இய தீயும்**

**தீமுரணிய நீரும் என்றாங்கு நீ**

**ஐம்பெரும் பூதத்து இயற்கை போலப்**

**போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சியது அகலமும்**

**வலியும் தெறலும் அளியும் உடையாய்.”**[11]

அணுக்களால் செறிந்த நிலம், நிலத்தின் கண் ஒங்கி இருக்கும் வானம், வானளவு பொருந்தித் தடவி நிற்கும் காற்றும், காற்றினால் பெருகும் தீ, தீயுடன் மாறுபட்ட நீர் என்று ஐந்து வகையான பெரிய ஆற்றல்களை உடையது இயற்கை.

இயற்கை அமைவுகள் ஐம்பெரும் பூதத்துடன் தோன்றிய காலம் முதல் இணைந்துள்ளது. இவ்வுண்மையினை விளக்குவதாய் இச்சங்க இலக்கியப்பாடல் அமைந்துள்ளது.

## இயற்கையைக் கடவுளாகப் போற்றியமை

கழகத் தமிழ் அகராதி கடவுள், தெய்வம், இறைவன் என்கின்ற சொற்களுக்கு கீழ்க்காணும் பொருளைத் தருகின்றது. கடவுள் என்ற சொல்லிற்கு குரு, நான்முகன், அத்தன், உள்வழி, தெய்வம், நன்மை, முனிவன், வானவன், மேன்மை, இறைவன் உள்ளிட்ட 105 சொற்களைப் பொருளாகத் தருகின்றது.

தெய்வம் என்கிற சொல்லுக்கு ஊழ், எண்வகை மணத்தில் ஒன்று, கடவுள், ஆண்டு எனப் பொருள்கள் காணப்படுகின்றன. இறைவன் என்னும் சொல்லிற்கு தலைவன், கடவுள், குரு, அரசன், மூத்தோன், எப்பொருளினும் தங்குகிறவன், சிவன், சிவனார் வேம்பு, பிதர், பரமன் என்கிற பொருள்களைத் தருகின்றது.

தெய்வம், இறைவன் என்னும் சொற்கள் கடவுள்களைக் குறிக்கும் பொதுப் பெயர்களாகச் சங்க காலத்திற்கு முன்பு இருந்தே வழங்கி வருகின்றன. கடவுள் கோட்பாடு சங்க கால மக்களிடையே தொன்று தொட்டு இருந்து வரும் ஒரு பண்பாட்டுக் கூறாகும்.

மனித சக்திக்கு மேலாக மற்றொரு சக்தி இருப்பதாகக் கருதினர். உலகில் நிகழும் நன்மைக்கும் தீமைக்கும் அடிப்படைக் காரணமாய் கடவுள் சக்கியே இருக்கின்றது என நம்பினர். எனவே பிறப்பு முதலாக இறப்பு வரையில் எந்த வினையிலும் கடவுளை முதன்மைப்படுத்தினர். இயற்கையில் ஏற்படும் திடீர் மாற்றங்கள் மனிதனுக்கு அச்சத்தினைத் தந்தன. இதன் விளைவால் இவற்றை வணங்க முற்பட்டனர்.

**“தெய்வ நம்பிக்கைக்கு அடிப்படை பயந்தான். அது ஒரு மூட நம்பிக்கையாகவும் இருக்கலாம். ஆனால் தெய்வம் உண்டு. அதனால் எதையும் செய்ய முடியும் என்ற எண்ணம் பிறந்த பிறகு தான் மனிதன் நன்மை தீமைகளைப் பகுத்தறியத் தொடங்கினான். கட்டுப்பாட்டுடன் நடக்கத் தொடங்கினான் என்று சாமி.சிதம்பரனார் குறிப்பிடுகின்றார்.”**[12]

மக்கள் தம்மை அன்பினால் வழிபடுவோர்க்கு அருள் சுரந்து துன்பத்தை நீக்கி நலம் புரியும் பெருந் தெய்வத்தையும் வருத்தும் இயல்புடைய அச்சம் தருபனவாகக் கருதப்படும் அணங்கு, பேய், உள்ளிட்ட சிறு தெய்வங்களையும் வழிவழியாய் வணங்கினர். இதனை,

**“ அச்சம் கீழ்கள தாசாரம் எச்சம்**

**ஆவா வுண்டேல் உண்டாம் சிறிதே.”** [13]

என்கிறது திருக்குறள்.

தொல்காப்பியர் கருப்பொருள்களை விளக்கும் பொழுது,

**“ தெய்வம் உணாவே”** [14]

என்று தொடங்கி நிலத்திற்குரிய தெய்வத்தை முதலில் வைத்துள்ளார்

**“மக்களைப் போலவே தெய்வம் சுட்டிய பெயரும் உயர்திணை என்னும் விளக்கத்தையும் தந்துள்ளார்.”**[15]

மேலும்,

**" மொழிப் பொருள் தெய்வம்"**[16]

உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலமெனக் கொள்ளும் வழிபடு தெய்வம்."[17]

என தொல்காப்பியர் **"கடவுள் குறித்த் பொருள்களை வாழ்த்தொடு கண்ணிய வருமே"** [18]

என்னும் வரிகள் தொல்காப்பியரின் கடவுள் கொள்கையினை வெளிப்படுத்துகின்றன.

தொல்காப்பியர் காலத்திற்குமுன் இருந்த உலகியல் வழக்கான இயற்கை வழிபாடே தொல்காப்பியத்தில் இலக்கிய வழக்காக இடம் பிடித்துள்ளதை தெளிவாக அறிய முடிகின்றது. ஞாயிறு, தீ, திங்கள், என்னும் இயற்கைப் பொருள்களைத் தொல்காப்பியக் காலத்து முன்பிருந்த தமிழர்கள் தெய்வமாக வணங்கி இருக்க வேண்டும். எனவே தான் தொல்காப்பியர்,

**" கொடிநிலை கந்தழி வள்ளி என்ற**
**வடுநீங்கு சிறப்பின் மன்னிய மூன்றும்**
**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே."** [19]

என்று புறத்திணை இயல் சூத்திரத்தில் நிறுவுகிறார்.

**"பழங்கால நாகரிகம் படைத்த எந்த நாட்டிலும் தெய்வ வணக்கம் உண்டு. தெய்வ நம்பிக்கையும் உண்டு. பண்டைய கால மக்களை அறநெறியிலே நடப்பதற்கு வழிகாட்டியது தெய்வ வணக்கம் தான்."**[20]

என்று தமிழறிஞர் கூறுவது சாலப் பொருந்துகிறது.

## நடுகல் வழிபாடு

பண்டைத் தமிழரிடம் வேரூன்றியிருந்த இயற்கை வழிபாட்டு முறைகளில் நடுகல் வழிபாடு தொன்மை வாய்ந்ததாகும். வெட்சி, கரந்தை போர்களில் வீர மரணம் எய்திய வீரர்களுக்கு நடுகற்கள் நடப்பட்டன. நடுகல் வழிபாடு நான்கு நிலங்களுக்கும் பொதுவானதாய் இருந்துள்ளது.

**“ நால்வகை நிலத்து தெய்வங்கள் கூட அந்நிலத்து மக்களுக்குத் துணை செய்த வீரர்களின் தலைவர்களாக இருக்கலாம். வீரர் வணக்கத்திலிருந்து தெய்வ வணக்கம் பிறந்தது என்று சொல்வதற்குக் கூட இடமுண்டு.”**[21]

என்று சாமி. சிதம்பரனார் கூறும் கூற்று நம்பகத்தன்மை உடையதாகும்.

நடுகல் என்பது நட்டகல் என்ற பொருளைத் தருகிறது. இக்கல்லானது இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்று முக்காலங்களிலும் நிலைத்து நிற்பதாகும். நடுகல் பற்றிக் கூற விழையும் தொல்காப்பியர்,

**“ காட்சி கால் கோள் நீர்ப்படை நடுகல்**

**சீர்தரு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தலென்**

**றிரு மூன்று வகையிற் கல்லொடு.”**[22]

எனக் குறிப்பிடுகின்றார்.

**“ நட்டகல் “**[23]

என மலைபடுகடாம் குறிப்பிடுகின்றது. நடுகல் குறித்த தொல்காப்பியச் சூத்திரத்திற்கு உரை நவின்ற இளம்பூரணர்,

**“நடுகல் என்னும் வினைத்தொகைக்கு நட்டகல், நடப்பட்டகல், நாட்டியகல்” என்றும், நச்சினார்க்கினியர் ‘நடப்படுங்கல்’ என்றும் பொருள் தருகின்றார்.”** [24]

பண்டைய தமிழ் மக்கள் இறந்துபட்ட நம் முன்னோர்களை வணங்கும் வழக்கத்தைக் கொண்டு இருந்தனர்.

## கல் தேர்ந்தெடுத்தல்

நடுகல் தேர்வினைக் குறிப்பிடும் தொல்காப்பியர் காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுதல், விழா, வாழ்த்துதல் என்கின்ற ஆறு நிலைகளில் நடுகல் நடப்படுவதைக் குறிப்பிடுகின்றார்.

காட்சி- அளவும் அமைதியும் நோக்கில் தேர்ந்தெடுத்தல். இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னர் அக்கல்லிலே ஓர் உருவம் செதுக்கப் பெறும். அவ்வுருவம் சில விதிகளுக்கு உட்பட்டு அமைந்து இருத்தல். கால்கோள் - அக்கல்லை நடுதற்குரிய நன்னிமித்தப் பார்த்தல். நீர்ப்படை – அக்கல்லை நன் நீராட்டுதல், நடுதல் - ஏற்ற இடத்தில் கல்லை நடுதல். விழா – கோயிலுக்கு வேண்டிய கட்டடங்கள் கட்டுவதும், வீரன் செயல்களைக் கல்லிற் பொறித்து விழா நடைபெறும். வாழ்த்துதல் - கல்லை வணங்குதல்.

கல் நட நல்ல உறுதியான கல்லைத் தேர்வு செய்வர். நடப்படும் கல்லை உரிய இடத்திற்குக் கொண்டுச் செல்வர். தேர்வு செய்யப்பட்ட கல் நல்ல நீரால் நீராட்டப்படும். குறித்த இடத்தில் கல்லினை நடுவர். அக்கல்லில் இறந்துப்பட்ட வீரனின் பெயர், புகழ் இவற்றினை பொறிப்பர். பின்பு வணக்கம் செலுத்துவர். இதனை,

**“ நல் அமர்க் செலுத்துவர் நாண் உடை மறவர்**
**பெயரும் பீடும் எழுதி அதர் தொறும்**
**பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல்.”**[25]

என்னும் அகநானூற்றுப் பாடல் எடுத்தியம்புகின்றது.

## அணங்கு

மக்கள் அச்சத்தால் வணங்கிய சிறு தெய்வங்களோ பற்பலவாக உள்ள மலைமுதல் கடல் வரையிலும் காட்டிலும், நாட்டிலும், வீட்டிலும், ஊர் வெளியிலும் என இவை பரந்துக் காணப்பட்டன. மலைகள் யாவுமே வருத்தும் தெய்வங்களைக் கொண்டாதாக இருந்தன. கானகம் கடப்போர் காடுறை தெய்வங்களுக்கு வழிபாடு செய்து சென்றனர். ஆல், மரா, கடம்பு, வேங்கை, ஞானம், வேம்பு, மருது, பனை, கன்னி போன்ற மர வகைகளில் கடவுள் உறைவதாய் நம்பினர்.

நீர்த்துறைகளான சுனை, குளம், ஆறு, கடல், கழிமுகம் ஆகியனவற்றில் அணங்கு உறைவதாய் நம்பிக்கை கொண்டனர். அணங்கு என்பது பொதுவாக ஆண், பெண் இரண்டிற்கும் பொதுவாய் வழங்கும் பெயராய் இருந்தது. அணங்குடன் பேய், பிசாசு, சூர், பூதம் என்பன வருத்தும் தன்மை உடையனவாக இருந்தன.

தமிழ் வாழ் நெடுங்குடி மக்களின் இறை குறித்த கொள்கைகளில் ஓர் உருவம் இல்லாத இறைவனுக்கு ஆயிரம் திருநாமங்கள் இட்டு வழங்கிவந்த மரபுகளை இலக்கிய வழி அறிய முடிகின்றது.

மனித வாழ்வு குறித்த ஆழமான சிந்தனைகளும் கோட்பாடுகளும் கடவுள் என்ற மதிப்புடையப் பொருண்மை குறித்து அமைந்தது எனலாம். சங்க கால மக்களிடையே ஊர்த் தெய்வ வழிபாடு, மலை, ஆறுகள், மரங்கள் பற்றிய வழிபாடுகளையும் காண முடிகின்றது எனக் காமாட்சி சீனிவாசன் குறிப்பிடுகின்றார்.

**“ கடவுள் மரம், தெய்வம் சேர்ந்த பராரை வேம்பு, கடவுள் முதுமரம் என்பனத் தொகை நூல்களில் காணக் கிடக்கின்றன.”**[26]

**“ஆறுகள் தெய்வமெனத் தொழப்பட்டிருக்கின்றன என காமாட்சி சீனிவாசன் குறிப்பிடுகிறார்.”**[27]

வேங்கடம் முதல் தென்குமரி வரை சிற்றரசர்களும் மூவேந்தர்களும் ஆட்சி புரிந்து வந்தனர். அவர்கள் ஆண்ட பகுதிகளை தொண்டை நாடு, நடுநாடு, கொங்கு நாடு என பிரித்து ஆண்டு வந்தனர்.

## நிலவியல் தெய்வங்கள்

**"நிலம் என்பது வெறும் மண்ணை மட்டும் குறிக்காது. மண், நீர், காற்று, மண்ணில் மண்டிக்கிடக்கும் தாதுப் பொருள்கள், தட்ப வெப்பம் முதலிய இயற்கை வளங்கள் எல்லாம் நிலம் என்பதில் அடங்கும்."**[28]

நிலம் என்பது ஐம்பெரும் பூதங்களால் ஆனதாகும். நிலத்தின் நீர்நிலை வளங்களுக்கேற்ப அந்நிலத்தில் வாழும் மக்கட் பிறப்பும் செயலும் அமைந்தது. இதனை ஔவையார் கீழ்க்கண்ட வகையில் விளக்கி உரைக்கின்றார்.

**" நாடா கொன்றோ காடா கொன்றோ**
**அவலா கொன்றோ மிசையா கொன்றோ**
**எவ்வழி நல்லவ ராடவர்**
**அவ்வழி நல்லை வாழிய நிலனே."**[29]

எனவே நிலம் என்பது வெறும் பூகோளத் தன்மைகள் மட்டுமின்றி நிலவியல் சார்ந்த மக்களின் வாழ்வியல் ஒழுக்கங்கள் அவற்றில் அடங்குவதாகும். பழந்தமிழர்கள் நிலத்தைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல். பாலை என ஐவகையாக வகுத்து இருந்தனர். இந்நிலங்களுக்குரிய கடவுள்களைத் தொல்காப்பியர்,

**" மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**

**வருணன் மேய பெருமணல் உலகமும்**

**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**

**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே.”**[30]

என்று முதற்பொருளான நிலத்திற்குக் கருப்பொருள்களில் ஒன்றான தெய்வத்தையும் இணைத்துக் குறிப்பிடுகின்றார்.

தொல்காப்பியர் குறிப்பிடும் நால்வகை நிலங்களும் நிலைத்த நிலங்களாகும். இந்நால் வகை நிலங்களிலும் பாலை என்பது அவ்வப்போது தோன்றும் நிலமாகும். முல்லை நில மக்கள் திருமாலை வணங்கினர். குறிஞ்சி நில மக்கள் முருகனை வணங்கினர். மருத நில மக்கள் இந்திரனை வணங்கினர். நெய்தல் வாழ் மக்கள் வருணனை வணங்கினர். அவ்வப்போது தோன்றும் பாலைக்குரிய தெய்வம் கொற்றவையாகும்.

நான்கு நிலங்களுக்கும் உரிய தெய்வங்களாக இந்நால்வரும் இருந்தாலும் நில வரையறையைக் கடந்து நானில மக்களாலும் நானிலக் கடவுளரும் வணங்கப்பட்டனர் என்பது உண்மை. தொல்காப்பியர் காலத்திலேயே பழந்தமிழரிடமும் பல தெய்வ வணக்க முறை இருந்ததை அறிய முடிகின்றது.

## முல்லை நில தெய்வம்

காடுறை மக்களான ஆயர்களால் வணங்கப்பட்ட தெய்வமாகத் திருமால் இடம்பெறுகின்றார். நிலவியல் கடவுள்களில் முதல் நிலமான காட்டிற்கு உரிமைப் பூண்ட தெய்வம் திருமால் என தொல்காப்பியர்,

**“ மாயோன் மேய காடுறை உலகமும்.”**[31]

என்று குறிப்பிடுகின்றார். மேலும் முல்லை நில மக்களின் கடவுளாகத் திருமால் விளங்குவதை,

**“ ஆயர் வாக்கில் தெய்வமால் காட்டிற்று.”**[32]

எனக் கலித்தொகை இயம்புகின்றது.

**“ மாயோன் மேய மன் பெருஞ்சிறப்பில்**

**தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்.”**[33]

எனப் புறத்திணை நிறுவுவதாலும் முல்லை நில கடவுளாகத் திருமால் அறியப்படுகின்றார்.

## திருமாலுக்கு வழங்கப்படும் பெயர்கள்

ஆயிரம் நாமம் கொண்ட திருமாலுக்கு ஆயிரம் பெயரண்ணல், அச்சுதன், அரவணைச் செல்வன், அரி, ஆதி, உந்தி பூத்தோன், உலக முண்டோன், உலகினையளந்தோன், கண்ணன், கமலக்கண்ணன், காவற்கடவுள், கேசவன், கோவிந்தன், சக்கராயுதன், திருவிக்கரமன், திருமகள் கொழுநன், நரசிங்கன், நாராயணன், பஞ்சாயுதன், பரமன்தாதை, பீதாம்பரன், பூமிகொழுநன், பெருமாள், மதுசூதனன், மதன், மாயோன், முகுந்தன், முராரி, வராகன், வாமணன், விண்டு என்கிற பெயர்கள் வழங்கப்படுகின்றன.

**“நாரா + அயனன் = நாராயணன் என அழைக்கப்பட்டான். நாரா என்ற சொல் நீா் என்ற பொருள் தரும். எனவே பாற்கடலில் பள்ளி கொண்டானாகத் திருமால் கிடந்தக் கோலம் காணப்படுகின்றது. இங்கு நாராயணன் வழிபாடு திருமால் வழிபாட்டின் துணை வழிபாடாக விளங்கியது. என்னும் அறிஞா் கருத்து ஏற்புடையதாக அமைகிறது.”**[34]

**“ இடவல! குடவல! கோவல! குாவல**

**காணாமரப! நீயா நினைவ!**

**மாயமன்ன! உலகு ஆள் மன்னவ!**

**தொல் இயல் புலவ! நல்யாழ்ப் பாண**

**மாவைச் செல்வ! தோலாக் கோட்ட!**

**பொலம் புரி ஆடை! வலம் புரிவண்ண**

**பருதி வலவ! பொருதிறல் மல்ல!**

**திருவின் கணவ! பெருவிறல் மள்ள!**

**மாநிலம் இயலா முதல் முறை அமையத்து!**

**நாம வெள்ளத்து நடுவண் தோன்றிய**

**வாங்மொழி மகனோடு மலா்ந்த**

**தாமரை பொருட்டு நின்நேமி நிழவே’’**[35]

ஆயா் பாடியில் குரவை ஆடும்:போது இட, வலமாக இருந்த திருமால், குடக்கூத்தும் ஆடியவன். திருமால் சொல்களாலும், அருள் வழங்குதலும் பலதிறப் பெயா்ப் பெற்றுக் காணப்படுகின்றான்.

**“ திருமாறு மாா்பன்’’**[36]

என்று திருமாலுக்கு வழங்கும் பெயரைக் கலித்தொகைக் குறிப்பிடுகின்றது. சங்க இலக்கியத்தில் மால், மாயோன் எனும் பெயா்களில் திருமால் காணப்படுகின்றாா். மால் என்பதை **“ பெரியோன் “**[37] எனவும் மாயோன் என்பதை **“ கருமை நிறமுடையவன்’’**[38] எனவும் காண முடிகிறது.

**“நெடியோன் என்னும் சொல் திருமால், வாமனனாக இருந்து நெடியோனாக வளா்ந்ததையும் “**[39]

**“முந்நீா் வண்ணன்’’**[40] என்பது கருநிறம் கொண்ட தன்மையினையும் விளக்குவதாய்க் காணப்படுகின்றன.

ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய தெய்வங்களாக் கடவுள்கள் கருதப்பட்டாலும் மற்ற நிலங்களில் வாழ்ந்த மக்களால் பொதுவாக வணங்கப்பட்டு உள்ளனா். குறிஞ்சி நிலக் கடவுளாக முருகன், **நெய்தல் நிலமான திருச்செந்தூரில் மக்கள் வழிபடப்பட்டதை அறிய முடிகின்றது.**[41]

முல்லை நிலத் தெய்வமான திருமால் **“திருவேங்கடம்”**[42] **“அழகர் மலை”**[43] ஆகிய குறிஞ்சி நில மக்களால் வணங்கப்பட்டதையும் காணமுடிகின்றது.

பண்டைய தமிழ் மக்கள் காடு சார்ந்த மேட்டு நிலமான முல்லையில் ஆடுமாடுகள் மேய்க்கும் தொழிலைக் கொண்டனர். இவர்கள் ஆயர்கள் எனப்பட்டனர். நீரும், புல்வெளியும் தங்கள் கால்நடைக்குரியனவாகத் தேர்ந்தனர். மால் என்னும் சொல் மேகம் என்கின்ற பொருள்படும்.

இவ்வாயர்களுக்கு மாலின் தேவை அடிப்படையாய் அமைந்தது. நீரின் பயன்பாடு மிகையாக இருந்தது. நீண்ட பரப்பைக் கொண்ட கடல் நெடியோன் என்பதற்கு காரணமாக அமைந்தது. எனவே மேகம் போன்றவன் என்பது நிறத்திற்கும் குணத்திற்குமாக பொருள் உணர்த்தி வந்துள்ளது.

## திருவுருவம்

திருமால் காத்தல் கடவுள். திருமகளும் பூ மகளும்  இருபக்கமும் திகழ விளங்கும் தன்மையன். பாற்கடலில் ஆதிசேடன் படுக்கையில் பள்ளி கொள்பவன். இப்படிப்பட்ட திருமால் வேங்கட மலையில் நின்ற கோலத்திலும் திருவரங்கத்தில் கிடந்த கோலத்திலும் காட்சி தருகின்றான். இதனை சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் மாங்காட்டு மறையோன் எடுத்தியம்புகிறார்.

**“ நீலமேகம் நெடும் பொற் குன்றத்துப்**
**பால்விரிந் தகலாது படிந்தது போல**
**ஆயிரம் விரிந்தெழு தலையுடை அருந்திறத்**
**பாயற்  பள்ளிப் பலர் தொழு தேத்த**
**விரிதிரைக் காவிரி லியன் பெருந் துருத்தித்**

**திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்**

**வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்**

**ஓங்குயர் மலையத்து உச்சி மீமிரை."**[44]

மேலும் திருமாலே சங்க கிருஷ்ணன், பிரத்யும்நன், அநிருத்தன், வாசுதேவன் என நால்வேறு வடிவங்களுடன் சேர்ந்து பஞ்ச மூர்த்தியாகவும், தோற்றமளிக்கின்றான்.[45]

திருவுருவக் காட்சியில் பாற்கடலில் பள்ளி கொண்ட நிலை, வராக மூர்த்தியாகவும், நிற்கும் நிலைகளெனவும் அறிய முடிகின்றது.[46]

பலராமனாகவும், கண்ணனுமாகவும் நிற்கின்ற ஈருருவ நிலையினைப்

**" பால்நிற உருவின் பனைக் கொடியோனும்**

**நீல் நிற உருவின் நேமியோனும்**

**இருபெருந் தெய்வம் உடன் நின்றாங்கு"**[47]

என இ:ருவரும் நிற்கின்றனர். மேலும்,

**" பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றியப்**

**செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்"**[48]

திருவரங்கத்தில் அரங்கப் பெருமானின் கிடந்த நிலையினையும் திருவேங்கடத்தில் நெடியோன் நின்ற நிலையினையும் காண முடிகின்றது.

## திருமாலின் வண்ணம்

நீலமும் கருமையுமான வண்ணம் கொண்டவன் திருமால். தீபாவளி, கார்மேகம், கருங்கடல், காரிருள், கரிய காயம்பூ இவை திருமால் நிறங்கள் குறித்து ஆளப்படுவனவாகும்.

**" மண்ணுறு மணிபாய் உருவினை"**[49]

**" மண்ணுறு திருமணி புரையுமேனி "**[50]

**" மாமணி வண்ணன்"**[51]

என்னும் வரிகள் நீலநிறங் கொண்டவன் திருமால் என எடுத்துரைக்கின்றன.

**" அஞ்சன உருவன்"** [52]

**" காரிருள் மயங்கு மணி மேனியின்"**[53]

என வரும் பாடல் வரிகள் திருமாலின் கருமை வண்ணம் குறித்து வழங்குவனவாக வருகின்றன.

**" பறவாப் பூவைப் பூவினோயே"** [54]

**" பூவைப் புதுமலர் வண்ணன்"**[55]

என்னும் வரிகள் காயாம்பூ வண்ணம் பெற்றவன் மால் என்பதனை உணர்த்தி நிற்கின்றன. திருமால் வியூக நிலையில் நால்வகை வண்ணங்களுடன் காணப்படுகிறார்.

**" செங்கட் காரி! கருங்கன் வெள்ளை**

**பொன்கட் பச்சை! பைங்கண் மாஅல்"**[56]

என்னும் வரிகள் திருமாலின் நிறமான நீலத்தோடு பச்சையும் கலந்துள்ளதைக் குறிப்பிடுகின்றன.

## ஊர்தியும் கொடியும்

திருமால் கருடனை ஊர்தியாகக் கொண்டவன். அக்கருடனையே கொடியாகவும் கொண்டவன்.

**“நஞ்சோடே உறைக்குள் கிடந்த துணையினையுடைய வெள்ளிய பல்லையுடையவனும், தீக்கால்வது போன்று நெட்டுயிர்ப்புக் கொள்ளவும், கண்டார்க்கு அச்சம் தோற்றுவிப்பவனுமாகிய கொடிய வலியினை உடைய பாம்புகள் மருளும்படி அடிக்கும், பலவரிகளை உடைய வளைந்த சிறகினுடைய கருடனை அணிந்த நெடிய கொடியினை உடையவன்”**[57]

என திருமுருகாற்றுப் படை கூறுகின்றது.

**“ ஏலர் வயங்கு பூண் அமரரை வெளவிய அமிழ்தில்**

**பயந்தோள் இருக்கண் களைந்த புள்ளியனை**

**பயந்தோள் இடுக்கண் களைந்த புள்ளின்**

**நிலந்து ஓங்கு உயர் கொடிச் சேவலோய்!”**[58]

தாயாகிய வனிதையின் துன்பத்தைப் போக்கிய திருமால் கருடக் கொடியினைக் கொண்டவன் எனப் பாடல் சான்று பகர்கின்றது. மேலும்,

**“ சேவல் ஓங்கு உயர் கொடியோயே!**

**சேவல் ஓங்கு உயர் கொடி**

**நின் ஒன்று உயர் கொடி பனை**

**நின் ஒன்னு உயர் கொடி நாஞ்சில்**

**நின் ஓன்று உயர் கொடி யானை**

**நின் ஒன்றா உயர்கொடி ஒன்று இன்று”**[59]

திருமாலுக்கு உரிய கொடிகள் கருடக்கொடி. பனைக் கொடி, நாஞ்சில் கொடி, யானைக் கொடி, ஆகிய பல கொடிகள் இருப்பினும் அவை சிறப்புக் கொடியாகிய கருடக் கொடிக்கு ஒப்பாக அமைந்துள்ளது.

## திருமாலின் ஐவகை நிலங்கள்

திருமால் உலகத்தோற்றத்திற்குக் காரணமாக விளங்குகிறான். தூலமாய் நிற்கும் கரியப் பொருளாகவும், சூச்சுமமாய் நிற்கும் காரணப் பொருளாகவும் திகழ்கின்றான். பல ஊழிக் காலங்களைக் கடந்த தொன்மையுடையவனாய் திருமால் இருக்கின்றான். ஒவ்வொரு ஊழியின் போதும் அவனது திருவிளையாடல்கள் நிகழப்படும். இப்படியாகப் பல ஊழிகளைக் கண்டவன். திருமால் தத்துவ நோக்கில் ஐந்து நிலைகளை உடையவனாகத் திகழ்கிறான்.

## பரத்துவ நிலை

பரத்துவம் என்பது உலகியல் யாவற்றிலும் இருந்தும் விடுபட்டுத் திரும்பப் பிறவாத பெருநிலையாகும்.

**“திரும்ப பிறவாத பெரு:நிலையிலுள்ள அந்தன் குருடன் முதலிய நித்திசூரிகளுக்கு போக்கியனாக இறைவன் எழுந்தருளியிருக்கும் நிலை.”**[60]

என்கிறார். அகமும் புறமும் பற்று நீங்கப் பெற்ற நித்ய சூரிகள் சூழ்ந்திருக்க விடாத பூவினையும் இமையாத கண்களையும் உடையவனாய் திருமால் இருக்கும் நிலை. இதனை,

**“ மாசற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்**

**வாடாப் பூவினிமையா நாட்டத்து**

**நாற்ற வுணவினரு கெழு பெரியோர்க்கு.”**[61]

என மதுரை காஞ்சி குறிப்பிடுகின்றது. மேலும்,

**“ அருந்திறற் கடவுள் வாழ்த்து.”**[62]

எனும் போது திருமாலின் முத்தாய்வுகள் புலப்படுகின்றன.

**“ ஐந்தலை உயிரிய அணங்குடை அருந்திறல்**

**மைந்துடை ஒருவனும் மடங்கலும் நீ.”[63]**

என்னும் வரிகள் காத்தற் கடவுளாகக் கூறப்படும் திருமால் அவனுக்குரிய படைத்தல் தொழிலும், அரனுக்குரிய அழித்தல் தொழிலும் இயற்றும் ஆற்றலுடையவன் என்பதனை வெளிப்படுத்துகின்றன.

## வியூக நிலை

வியூக நிலை என்பது படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழில்களைப் புரியவும், தீமையினை நீக்கி நன்மை உண்டாகக் காத்தருளவும், வீடுபேறு பெற விழைவோர்க்கு உலகியல் வாழ்வை விடுவித்து இறையருளைப் பெற உதவுவதும் ஆகும்.

சங்கருடணன், பிரத்தியுந்தன், அநிருத்தன், வாசுதேவன் என்பவர்களாக திருபாற்கடலில் விளங்கும் நிலையாகும். ஆயிரம் தலையையுடைய ஆதிசேடன் மீது திருமால் பள்ளி கொண்டு உறங்கும் நிலை வியூக நிலையாகும். நெருப்பு, காற்று, விண், மண், நீர் ஆகிய ஐந்து பூதங்களும், கதிரும், மதியும், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ஆகிய கோள்களும் திதி என்பாரின் மக்கள் அரக்கரும் விதி என்பானின் மக்கள் ஆதித்தர் பன்னிருவரும், குற்றமற்ற வசுக்கள் எண்மரும், உருத்திரர் பதினொருவரும், அசுவினி தேவர் இருவரும், மூவேழு உலகங்களும் திருமாலிடமிருந்து தோன்றியவையாகும். எனவே இவை சூழ பள்ளி கொண்டு இருப்பான் திருமால்.

**“ காந்தளூஞ் சிலம்பிற் களிறு பழந்தாங்குப்**

**பாம்பணைப் பள்ளி யமர்ந் தோனாங் காண்.’[64]**

காந்தள் மலர் வெ.்.கா கோயிலில் ஆதிசேடர் மீது தலை கொண்டு திருமால் உள்ளதாக பெரும்பாணாற்றுப்படை இயம்புகின்றது.

## விபவ நிலை

உலகத்து **“ எல்லாப் பொருள்களாகவும் வந்து தோற்றமளிப்பதாகும்.”**[65]

மச்சம், கூர்மம், வராகம், நரசிம்மம், வாமனன், இராமன், பரசுராமன், கண்ணன், பலராமன், கல்கி என அவதார நிலையாகும்.

திருமாலின் அவதார நிலைகளை உணர்த்துவது விபவ நிலையாகும். அவதாரச் செயல்களில் நல்லவர்கள் காக்கப்படுவதும், தீயவர்கள் அழிக்கப்படுவதும் இறைவனின் அருட்செயலாக அமையும். திருமாலின் பத்து அவதார நிலைகளில் நரசிம்ம அவதாரம் ஒன்றாகும்.

**“ பிருங்கலாதன் பல பல பிணி பட**

**வலந்துழி, மலர்ந்து நோய் கூர் கூம்பிய நடுக்கத்து**

**அலர்ந்த புகழோன், தாதை ஆகலின்**

**தடி தடி பல பட வகிர் வாய்த்த உகிரினை.”**[66]

பிரகலாதன் மெய் அம்பினை நயந்து இறைவனான திருமால் எடுத்த அவதாரமாம் இவ்வவதாரம் அமைகின்றது.

மாபலிச் சக்கரவர்த்தியின் பேராசையினை ஒடுக்கும் பொருட்டாகத் திருமால் வாமன அவதாரம் எடுத்தார். இதனை,

**“ நிலந்தரு திருவின் நெடியோன்”**[67] என்ற அடியும்,

**“நீனிற வுருவின் நெடியோன்”**[68]

என்னும் அடியும் எடுத்துரைக்கின்றன. மேலும்,

**“இரு நிலங்கடந்த திருமறு மார்பின் முந்நீர் வண்ணன்”**[69] என்பனவும்,

**" நீர் செலநிமிர்ந்த மா அல் போல "**[70] என்பனவும், வாமன அவதாரத்தை உணர்த்தி நிற்கின்றன. **இவையின்றி அன்ன வடிவம் கொண்டது.**[71]

**இராம அவதாரத்தில் இராவணன் சீதையைக் கவர்ந்தது.**[72] கோடியக் கரையில் தன் துணைவர்களோடு மந்திராலோசனை செய்தது [73] ஆகியன குறிப்பிடப்பட்டு உள்ளன.

## அந்தரிய மித்துவ நிலை

உலகத்து அனைத்து பொருள்களிலும் அனைத்து உயிர்களிலும் உட்கலந்து நிற்பதுடன் அவற்றையெல்லாம் இயங்கி நிற்கும் நிலையாகும் அர்ச்சவதார நிலை திருக்கோயில்களிலும் அடியவர் தம் இல்லங்களிலும் எழுந்தருளி அன்பர்கள் விரும்பும் திருமேனி கொண்டு அன்பர்கள் விருப்பம் போல அமைவதாகும்.

திருமால் சக்கரம், தனு, வாள், தண்டு, சங்கம், என்னும் ஐந்து ஆயுதங்களைக் கொண்டவன். இவற்றுள் சக்கரம் சுதரிசனம் என்றும் வில் சாரங்கம் என்றும் வாள் நாக்தகம் என்றும் தண்டு கௌமோதகி ள்ன்றும் சங்கு பாஞ்ச சன்னியம் என்றும் அழைக்கப்பெறும்.

திருமாலின் சிறப்புடை தெய்வங்களாக,

**"பகை அணங்கு அழியும் பால்வெண் சங்கமும்**

**துகை பெறு தாமரைக் கையில் ஏந்தி"**[74]

சங்கும் சக்கரமும் அமைகின்றன. மேலும்,

**"நோகதிர் நிரைத்த நேமியஞ் செல்வன்."**[75]

**" பொன்னாரி நேமி வலங் கொண்டு ஏந்திய**

**முன்னுயிர் முதல்வன்."**[76]

“ எள்ளுநர்க் கடந்தட்ட இகன் நேமியவை.”[77]

“ செருமிகு நேமியான்.”[78]

என்னும் பாடல்வரிகள் திருமால் கரத்தில் நிலையான இடம் கொண்ட ‘ஆழி’ யினை எடுத்தியம்புகின்றன.

## அர்ச்சை நிலை

இந்நிலையில் வழிபடும் உருவங்களில் திருமால் உறைவதாய் நம்பும் நிலையாகும்.

“ ………..பூமலி பெருந்துறைச்

செல்விகொள் பவரோடசைஇ யல்வயி

னருத்திறற் கடவுள் வாழ்த்தி.”[79]

பெறுவதற்கு அரிய பழம்புகழ் பொருந்திய திருவெ∴கா அணையில் திருஉறை பதி கொண்டு திருமால் காட்சித் தருகின்றான். இயற்கைப் பொருட்களைப் படைத்து அவற்றுள் அதுவாக உள்ளான். இறைவன் எவ்வடிவில் எப்பொருளில் இறைவன் உள்ளான் என நம்பி வணங்குவோர்க்கு அதில் உறையும் பொருளாகத் திருமால் உள்ளான்.

“ நின் வெம்மையும் விளக்கமும் ஞாயிற்று உன்

நின் தன்மையும் சாயிலும் திங்கள் உள்

நின் அரத்தலும் விண்மையும் மாரி உன்

ஏமம் ஆர்ந்த நிற்பிரிந்து

மேவன் சான்றன எல்லாம்.”[80]

உலகில் காணலாகும் யாவற்றிலும் வரும் உள்ளுறைத் தெய்வமாத் திருமால் திகழ்கின்றான் என்பது புலப்படுகின்றது.

## திருமாலும் வைணவமும்

வைணவத்தின் முழுமுதற்கடவுள் திருமால் ஆவான். வடவர் திருமாலை 'விஷ்ணு' என்பர். இதனடியாகப் பிறந்தது வைஷ்ணவம். இதுவே தமிழில் 'வைணவம்' என அழைக்கப்படுகின்றது. 'விண்டு' என்னும் தமிழ் சொல்லிலிருந்து 'வைணவன்' என்னும் சொல் தோன்றியது என்பது புலப்படுகின்றது. பல கடவுளரையும் வணங்குவது ஒரு மரபாகி விட்ட பின்னர் கடவுள், மனிதன் உலகம் இவற்றைப் பற்றியும் இவற்றிடையே உள்ள உறவுகள் பற்றியும் ஆழ்ந்து சிந்திக்கும் நிலை உருவான போது உபநிடதங்கள் தோன்றின என்றும் இவை கடவுளின் மேலான தன்மைகளை நிறுவின என்றும் கூறுவர். எனினும் இத்தத்துவ சிந்தனைகள் மனிதனின் அன்றாடத் தேவைகளை நிறைவு செய்வனவாக இல்லையென்றும் மனிதன் அன்றாடம் வழிபட்டுப் புகழ்தற்கு ஒரு பொருள் தேவைப்பட்டது என்றும் இச்சூழ்நிலையில் மகத நாட்டின் கீழ்ப்பகுதியில் சமணமும், பௌத்தமும் தோன்றின என்றும் அப்போது வடமதுரையைச் சூழ்ந்த மேற்குப் பகுதியில் வாசுதேவ வழிபாடு உருவாயிற்று என்றும் சமண பௌத்தர்கள் கடவுள் நம்பிக்கையற்றோராய் கடுமையான ஒழுக்கத்தையும் அறத்தையுமே முக்திக்கு வாயில்களாக வற்புறுத்த வாசுதேவ சமயத்தினர் முழுமுதற் பொருளிடம் பக்தி செலுத்துதல் மூலமே முக்தி பெறலாம் என வற்புறுத்தினர் என்றும் அறியலாகிறது.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் தமிழகத்தில் பாகவத மதம் இருந்தது என்பதற்கு பரிபாடலில் வாசுதேவன் நாராயணனோடு இணைத்து கூறப்பட்டுள்ளதை சான்றாக காணலாம். திருமாலின் பல இயல்புகள் சங்க இலக்கியங்களில் கூறப்பட்டு உள்ளன. மேலும் அவதாரங்களும் புராணங்களும் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன.

சிலம்பில் திருமாலின் இராமாவதாரமும், கிருஷ்ணவதாரமும் பாராட்டப்படுகின்றன. ஆய்ச்சியர் குரவை திருமாலின் பெருமைகள் பலவற்றையும் குறிப்பிடுகின்றது. இராமன் இலங்கையினை அழித்ததும், அழித்ததும், தாதை ஏவலின் தம்பியொடும் கானகம் சென்றதும் ஆகிய இராமவதார நிகழ்ச்சிகளும் கண்ணன் கன்று குணிலாக் கனியுதிர்த்ததும் குருந்தொசித்ததும் பிறவும் இப்பகுதியில் பாராட்டப்படுகின்றன. 'நாராயணாய நமக' என்னும் எட்டெழுத்து மந்திரத்தினை மாங்காட்டு மறையோன் பேசுகின்றான். திருவரங்கத்திலும், அழகர் மலையிலும், திருவேங்கடத்திலும் திருமால் குடிகொண்டிருந்ததாகவும் இந்நூல் குறிப்பிடுகின்றது.

மாதவியின் பதினோராடல்களில் குடக்கூத்து, பேடு, மல்லாடல், பாண்டரங்கம் முதலிய கண்ணுதற்குரியவையாகும். எனவே சிலப்பதிகாரக் காலத்தில் திருமால் வழிபாடு நன்கு வேரூன்றி இருந்தது என அறிகின்றோம்.

## ஆழ்வார் பாசுரங்கள்

ஆழ்வார் பாக்களில் தலைதூக்கி நிற்பது ஆண்டாள் அடிமையுணர்ச்சியே ஆகும். இதனை வடவர் 'தாச பாவம்' என்பர். இறைவனுக்குரிய கைங்கரியங்களைச் செய்வதிலே இவர்கள் முனைந்து நிற்கின்றனர். தாம் செய்யும் ஒவ்வொரு செயலையும் இறைவற்குரிய தொண்டாகவே கருதுவது இவர் இயல்பு. இறைவனுக்கு அருகிலிருப்பது வீடுபேற்றிலும் மேலானது என்பார் நம்மாழ்வார்.

இறைவனுடைய தொண்டனாக இருப்பதே முக்தி என்பது அவருடைய கோட்பாடாக இருந்தது. இத்தகு பக்தியே பெரியாழ்வாரிடம் தாய் - மகன் உறவாகப் பரிணமித்தது எனினும் நம்மாழ்வாரிடமும், திருமங்கையாழ்வாரிடமும் காதலன் - காதலி உறவே தலைதூக்கி நிற்கின்றது. உண்மையான அன்பன் இறைவனிடம் தன்னை முழுவதும் ஒப்புவிக்கிறான். அவனன்றி ஆன்மாவுக்கு நிலை பேறில்லை. இதனைக் காட்ட நாயகன் நாயகி பாவம் நன்கு பயன்பட்டது.

நாயகன் நாயகி உறவு விளக்குவதில் நம்மாழ்வாருக்கும் திருமங்கைக்கும் வேறுபாடு உண்டென்பர். திருமங்கையாகிய தலைவி இறைவனொடு எப்பொழுதும் இருக்க வேண்டுமென்று விரும்புகிறாள். அவனைத் தேடிச் சென்று அடையும் முயற்சியில் தன்னையே அழித்துக் கொள்ள முன் வருகின்றாள். அவருடைய இரண்டு மடல்களும் இதனையே மொழிகின்றன. நம்மாழ்வாரோடு உடலிலும் உயிரிலும் கலந்து நிற்கும் நிலையை வேண்டுகிறார். அவனுடைய பெருமைகளைப் புகழ்ந்து பாடுகின்றார். காம நோயுற்று கலங்குகின்றார். தூது விடுகிறார்.

அவனால் படைக்கப்பட்ட அனைத்துலகும் அவனுடைய உடலாகக் காண்கின்றார். இறைவனின் பரநிலையை நேரே கண்டு அவனோடு இணைய விரும்புகிறார். இயலாதவர்கள் அவனுடைய அவதார விபாவங்களிலும் அர்ச்ச வடிவத்திலும் ஈடுபட்ட அந்நிலையை அடையலாம் என்கிறார். உண்மை பக்தனுக்கு சடங்குகள் தேவையில்லை என்கிறார். வீடுபேறு அடைவதற்கு முழுமையாகத் தன்னை ஆட்படுத்தும் 'பரபக்தி' நிலையே வேண்டும் என்கிறார்.

பக்திக்கும் பரபக்திக்கும் வேறுபாடுண்டு. இரண்டுமே ஆழ்வார் பாக்களில் இடம் பெறுகின்றன. பரபக்தியே எளிமையானது என்பது நம்மாழ்வார் கருத்தாகும். அது முழுமையாக ஆட்படுத்துவது சிறப்புப் பண்பாகும். அளவு கடந்த துன்ப நிலையில் முழு சரணாகதியே ஒரே வழியாகும்.

ஆழ்வார் பாடல்களில் இடம்பெறும் மூன்றாவது வைணவக் கோட்பாடு ஒன்று உண்டு. அது அருள் பற்றிய கருத்தாகும். இறையருளே முக்திக்கு வழி எனினும் இவ்வருளை நாம் முயன்று பெற முடியாது. அதுவும் அவனே தன் பக்தனுக்குத் தருவதாகும் என்பர்.

பக்தன் கடவுளின் அருளுக்குப் பாத்திரனாகி விட்டால் பின் இறைவனால் அருள் பொழிவினை நிறுத்த முடியாது. அவன் உரிமை கூட அவனுடைய அருளால் விளங்கிடப்படுகிறது என்றார் நம்மாழ்வார். இங்கும் இப்பிரிவினருள்ளே வேறுபாடுண்டு. தென்கலையினர் இறை அருள் ஏதுவற்றது

என்பர். வட கலையினரோ எதுவுள்ளது (சாஹோதுகா) என்றனர். மேலும் இறையருளை நாராயணன் திருமகள் இருவரையும் சேர்த்து வணங்கியே பெற வேண்டும் என்றனர்.

உலகின் முதற்பொருள் உண்மை பொருள் பிரமம் ஆகும். பிரமம் என்பதற்குப் பெருமையுடையது என்று பொருள். இப்பிரமத்தின் இயல்பினை அறியும் ஆழ்ந்த சிந்தனை வேதாந்தமாக மலர்கிறது. ஆன்மீக நெறியில் பிரமத்தை அறிய வேதாந்தம் மூன்று கருத்து முறைகளை உள்ளடக்கியுள்ளது. அவை அத்துவிதம், துவிதம், விசிஷ்டாத்வதம் என்பனவாகும். அத்துவிதம் என்றே அழைக்கப்படுகிறது. துவிதம் மெய்ப்பொருள் முறையில் கடவுள் கொள்கையினை விளக்குகிறது. உலக உண்மைகளை ஏற்கும் விதமாக துவிதம் அமைகின்றது. விசிஷ்டாத்வதம் இறை குறித்த ஒருமைக் கொள்கையினை அன்பு நெறியிலே வழங்குகிறது.

பிரமத்தின் உண்மையினை அறிவது ‘அசித்’ என்றும் ‘சித்’ என்றும் குறிக்கப்படுகின்றது. பிரமத்தை அடையும் நெறி ’ஹிதம்’ எனப்படும். இராமானுஜரிடம் காணப்படுவது விசிஷ்டாத்துவக் கொள்கையாகும். இராமானுஜர் பிரமத்தை பரம்பொருள் எனக் கருதுகின்றார். உள் பொருள் முழுமையான நிலையில் பிரமம் ஆகும்.

**“உண்மை நன்மை, அழகு, பேரின்பம், ஆகிய பண்புகள் (அ) என்றென்றும் நின்று நிலவும் குணங்கள் பிரமத்தைத் தமது மூலமாகப் பிறப்பிடமாகக் கொள்கின்றன. பிரமம் தனக்கு உவமையிலாத நிறைவுடைவோனாக பழுநிலா, குறைவிலா, உள்பொருளாக அமையக் காண்கிறோம்.”**[81]

என்பதிலிருந்து பிரமம் என்பது பூரண நிறைவு என அறிய முடிகின்றது.

ஆழ்வார் பாடல்கள் பிரமத்தை ஸ்ரீ கிருஷ்ணனாக வெளிப்படுத்துவதை அறியலாம். இயற்கையில் காணும் உள்ளது சிறத்தல்படி ஆன்மா முன்னேறுவதற்கும் தெய்வத்தன்மை பெறுவதற்கும் வேதாந்தம் துணை

நிற்கின்றது. ஸ்ரீ வைணவத்தில் இறைவன் நாராயணனாகவும் ஸ்ரீயாகவும் விளங்குகின்றார்.

ஸ்ரீ வைணவம் இருபிரிவுகளுடன் காணப்படுகிறது. பிள்ளை லோகாச்சாரியார் என்பவரால் நிறுவப் பெற்றது தென்கலை வைஷ்ணவம். இறைவனது அருள் நிபந்தனையற்று இயல்பாகவே எழுகின்றது எனக் கூறுகின்றது. வேதாந்த தேசிகரால் நிறுவப் பெற்றது வடகலை வைஷ்ணவம். இறைவனது ஆளும் பக்தனது தகுதியும் சேர்ந்த நிலையாகும்.

பிரமமே இப்பிரபஞ்சத்தின் முதற்காரணமாகவும் நிமித்த காரணமாகவும் விளங்குகிறது. பிரமமே பரந்த இவ்வுலகிற்கும் ஆன்மாக்களுக்கும் காரணம். உலகில் காணப்படும் அறிவுடை அறிவில் பொருள் யாவும் பிரமத்தின் வேறானவை. பிரமம் பிரபஞ்சத்தின் அகமாகவும் புறமாகவும் விளங்குவதாய் வைணவக் கொள்கைப்பாடு உள்ளது.

## குறிஞ்சி நிலத் தெய்வம்

தமிழர்களின் பழமையான தெய்வமாக முருகன் காணப்படுகிறான். முருகன் என்றால் அழகன் எனப் பொருள்படும். முருகு என்பது பல பொருள் குறிக்கும் ஒரு சொல். அப்பல பொருளுள் சிறப்பாகக் குறிக்கத்தக்கன நான்கு. அவை மணம், இளமை, கடவுட்டன்மை, அழகு என்பன[82] என்கிறார். இறைவன் சிவனின் இளைய மகன் இளையோன், அழகன் என்னும் இரு பொருள் தரும் பெயர்களைப் போலவே ‘குழகன்’ என்னும் பெயரையும் பெறுகிறான்.

**“ சேயோன் மேய மைவரையுலகம்”**[83]

என்னும் தொல்காப்பியக் குறிப்பால் குறிஞ்சி நிலக்கடவுள் முருகன் என அறியலாம்.

**“ குன்று தோறாடல் – நின்றதன் பண்பு”**[84]

என வரும் திருமுருகாற்றுப்படை வரிகள் முருகனுக்குரிய இடம் குறித்துப் பேசுகின்றன. முருகனுக்கு வழங்கப்படும் பெயர்கள் தெய்வீக நலன்களை வெளிப்படுத்துவனவாக உள்ளன.

அண்ணல், அடிகள், இளையன், ஐயன், கந்தன், காங்கேயன், கார்த்திகேயன், செட்டி, சேய், செவ்வேள், சேந்தன், பண்ணவன், முருகன், விசாகன், வேலன், வேள் என்னும் பெயர்களைப் பெற்றுச் சிறப்பாக அழைக்கப்படுகின்றான். மேலும் குறிஞ்சி மன், குறிஞ்சி நாதன், குறிஞ்சிக் கிழவன், குறிஞ்சி வேந்தன், குறிஞ்சிக் கடவுள் என்கின்ற பெயர்கள் நிகண்டுகளில் காணப்படுகின்றன. முருகன் வீரம் கொண்ட போர்க்கடவுளாகப் போற்றப்படுகின்றான்.

'வெல்போர்ச் சேய்', வெல்போர் கொற்றவை சிறுவ 'கடம்பவர் நெடுவேள்', திருத்தருசேஎய், செருவெம்சேஎய், செருமிகுசேய், செருவெம்சேஎய், செருமிகுசேய் என்கிற பெயர்களாலும் அழைக்கப்படுகின்றான்.

முருகன் சிவன் உமையவன் மகன் என்பதை நிறுவ கீழ்க்காணும் இலக்கிய வரிகள் சான்றுகளாக அமைகின்றன.

**" கா அய் கடவுட் சேஎய்"**[85]

**" ஆலமர் செல்வன் புதல்வன் வரும்."**[86]

**" ஆலமர் செல்வன் அணிசால் மகன்"**[87]

**" இழையணி சிறப்பின் பழையோள் குழவி"**[88]

**" கொற்றவை சிறுவ"**[89]

**" ஆல்கெழு கடவுட் புதல்வ"**[90]

**" மணிமிடற்று அண்ணற்கு மதியாரல் பிறந்தோய்"**[91]

**“ மறுமிடற்று அண்ணற்கு மாசிலோர் தந்த**

**நெறிநீர் அருவி அசும் புறு செல்வ.”**[92]

முருகன் கடைச் சங்கப் புலவருள் ஒருவனாக இருந்தான் என்பதால் ‘கலையறி புலவன்’ எனவும் தமிழ்க் கடவுள் எனவும் போற்றப்படுகின்றான்.

## முருகன் பிறப்பு

முருகனது பிறப்பு குறித்த பல்வேறு கதைகள் புராணங்களிலும், இலக்கியங்களிலும் பல வகையாகக் காணக் கிடக்கின்றன.

**“ இறைவன் உமையை வதுவை செய்து கொண்ட நாளிலே இந்திரன் சென்று நீ புணர்ச்சி தவிர்க்க வேண்டும் என்று வேண்டிக்கொள்ள அவனும் அதற்கு உட்பட்டு அது தப்பாகிப் புணர்ச்சி தவிர்த்து கருப்பத்தை இந்திரன் கையில் கொடுப்ப, அதனை இருடிகள் உணர்ந்து அவன் பக்கனின்று வாங்கி தமக்கு தரித்தல் அரிதாகை இறைவன் கூறாகிய முத்தீக்கட் பெய்து, அதனை தம் மனைவியற் கையில் கொடுப்ப, அருந்ததி ஒழிந்த அறுவரும் வாங்கிக் கொண்டு விழுங்கிச் சூன்முதிர்ந்து சரவணப் பொய்கையில் பதுமப்பாயலிலே பயந்தாராக ஆறு கூறாகி வளர்கின்ற காலத்து இந்திரன் தான் இருடிகளுக்குக் கொடுத்த நிலையை மறந்து ஆண்டு வந்து வச்சிரத்தான் எறிய, அவ் ஆறு வடிவம் ஒன்றாய் அவனுடனே பொருது அவனைக் கெடுத்துப் பின் சூரபன் மாவைக் கொல்லுதற்கு அவ்வடிவம் ஆறாகி வேறுபட்ட கூற்றாலே மண்டி சென்றதென்று.”**[94]

என்று முருகன் பிறப்பு பற்றி பரிபாடல் கூறுகின்றது.

தாரகனால் பெரும் துயர் அடைந்த தேவர்கள் அக்கினி தேவனை ஒரு புறா வடிவில் சிவபெருமானிடம் செல்லப் பணிக்க அவன் சிவபெருமான் லீலையில் இருந்த போது அந்தப் புர அறையில் செல்ல, சிவன் அந்தப் புறாவே தனது வீரியத்தைத் தாங்க வீரியத்தை விட்டார். அதன் வீரிய வெப்பத்தை தாங்க முடியாத புறா அதனைக் கங்கையில் விட அதை

கங்கை தருப்பப் புல்லில் விட அந்த சிவ வீரியத்திலிருந்து பேரழகன் சகல மேன்மைதரவல்ல முருகன் தோன்றினார்"[95] என முருகன் பிறப்புக் குறித்துப் புராணம் கூறுகின்றது.

பார்வதி பரிணயம் முடித்து பலகாலம் ஆகியும் ஈசன் தனக்கு இணையான ஒரு மகனை தந்தருளாதிருக்க, திருமால், பிரம்மன், இந்திராதி தேவர்கள் மேருமலையில் கூடி அனைவரும் திருக்கயிலாயம் சென்று சிவபெருமானிடம் முறையிட எண்ணினர். அதற்கு முன்பு எம்பெருமான் நிலையினை அறிந்து வர வாயுவை அனுப்பினார். ஆனால் நந்திதேவர் அனுமதி மறுத்துவிட அனைவரும் திருக்கயிலாயம் சென்று சூரபதுமனால் தாம் அடைந்துள்ள துயர் நீக்க ஒரு குமரனை வேண்டி அருள் கேட்க சிவனும் ஸத்யோஜாதம், வாமதேவம், தத்புருஷம், ஈசானம், அகோரம், உள்முகம் என்று ஆறு பொறிகளை வெளிப்படுத்த அதனை வாயு தாங்கி கங்கையில் விட கங்கையும் சரவணப் பொய்கையில் சேர்த்து விடுகின்றாள்.

அப்போது ஆறு திருமுகங்களுடன் பன்னிரண்டு கரங்களுடன் முருகன் திரு அவதாரம் நிகழ்ந்தது. குமரன் ஆறு மலர்களில் தோன்ற கார்த்திகை மகளிர் அறுவர் பாலூட்ட பார்வதி காணும் உவகையால் வாரி அணைக்க ஆறும் ஒன்றாகி கந்தனாகத் தோன்றினான்.

இப்புராண கதையின் உட்பொருளை உணர்த்தும் வகையில்,

**" பாகம் உண்ட பைங்காண் பார்ப்பான்**
**உமையொடு புணர்ந்த காம வதுவையுள்**
**அமையாப் புணர்ச்சி அமைய நெற்றி**
**.......................................**
**எரி உமிழ் வச்சிரம் கொண்டு இகழ்ந்து வந்து எறிந்தென**
**அறு வேறு துணியும் அறுவராகி**
**ஒருவனை வாழி ஓங்குவிறல் சேய்."**[98]

என முருகன் பிறப்புப் பற்றி பரிபாடல் கூறுகின்றது. சிவனின் மைந்தன் முருகன் என்பதனை,

**" ஆலமர் செல்வன் அணிசால் பெருவிறலி**

**போல வருமென் உயிர்."**[99]

**" ஆலமர் செல்வன் அணிசால் மகன் விழாக்**

**கால் கோள்"** [100]

என்னும் வரிகள் சான்று தந்து நிறுவுகின்றன.

## முருகனின் வடிவம்

ஆறுமுகங்களும், பன்னிரு கரங்களும் கொண்டவன் முருகன். நீலக்கடலில் தோன்றும் இளஞ்சுடர் போன்றே செவ்வொளி வீசும் ஆறு திரு முகங்களைக் கொண்டவன். முருகனின் மேனி நிறம் போன்றே அவன் அணிந்துள்ள ஆடை, மாலை முதலியன செம்பிழம்பாய் காட்சி அளிக்கின்றன.[101]

முருகன் அணிந்துள்ள ஆடையினை,

**" நலம் பொது கலிங்கம்"**[102] எனவும் **" வெண் டுகில்"**[103] எனவும் அறிய முடிகின்றது.

## ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களும்

தாமம், முகுடம், பதுமம், கிம்புரி, கோடகம், ஆகிய ஐவடி வினையுடைய முடிகள் முருகன் தலையில் சிறப்புடன் விளங்குகின்றன. பலவகையான தொழிற் கூறுபாடுகள் அமைந்த பொன்னாலான மகரக் குழைகள் மதி சூழ்ந்த விண்மீன்கள் போன்று அசையும். இதனை,

**" மா இருள் ஞாலம் மறு இன்றி விளங்க**

**பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம் ஒருமுகம்**

**ஆர்வலர் ஏத்த அமர்ந்த இனிது ஒழுகி**

**காதலின் உவந்து வரம் கொடுத்தன்றே ஒருமுகம்**

**மந்திர விதியின் மரபுளி வழாஅ**

**அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே ஒருமுகம்**

**எஞ்சிய பொருள்களை ஏமுற நாடி,**

**திங்கள் போலத் திசை விளக்கும்மே, ஒருமுகம்**

**செநர்த தேய்த்து செல்சமம் முருக்கி**

**கறுவு கொள் நெஞ்சமொடு களம் வேட்டடன்றே ஒருமுகம்**

**குறவர் மடமகள் கொடிபோல் நுசப்பின்**

**மடவரல் வள்ளியொடு நகை அமர்ந்தன்றே**

**ஆங்கு அம்மூகிரு முகனும் முறை நவின்று ஓழுகலின்''** [104]

என முருகாற்றுப்படை இயம்புகின்றது.

## பன்னிரு கரங்கள்

முருகனின் ஆறுதிருமுகங்களும் தத்தம் கடமைகளைப் பயின்று நடத்துதலினால் அத்திருமுகங்களுக்கு ஏற்ப பன்னிரு கரங்களும் பல தொழில்களைப் புரிகின்றன.

ஒருமுகம் : மாயிருள் ஞாலம் மறு இன்றி விளங்கப் பல்கதிர் விரிதன்று.

இருகரம் : விண் செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது. ஒரு கை உக்கம் சேர்த்தியது ஒரு கை.

ஒருமுகம் : ஆர்வலர் ஒத்த அமர்ந்து இனிது ஒழுகிக் காதலின் உவந்து வரங்கொடுத்தன்றே.

இருகரம் : நலம் பெறு கலிங்கத்துக் குறங்கின் மிசை அசை இயது

ஒழுகை அங்குசம் கடாவ ஒரு கை.

ஒருமுகம் : மந்திர விதியின் மரபுவளி விழா அந்தணர்க்கு

வேள்வி ஓர்க்குமே.

இருகரம் : இரு கை ஐயிரு விட்டமொடு ஈர்குவலம் திரிப்ப.

ஒருமுகம் : எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித்திங்கள் போலத் திரை

விளக்குமே.

இருகரம் : ஒரு கை மார்பொடு விளங்க ஒரு கை தாரொடு பொலிய

ஒருமுகம் : செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக் கறுவு கொள்

நெஞ்சமொடு களம் வேட்டன்றே.

இருகரம் : கீழ்வீழ் தொடியோடு மீசை கொட்ப ஒரு கை பாடுகின்ற படுமணிஇரட்ட

ஒருமுகம் : குறவர் மட மகள் கொடிபோல் நுசுப்பின் மடவரல் வள்ளியொடு

நகை அமர்ந்தன்றே

இருகரம் : நீலநிற விசும்பின் மலிதுளி பொழிய ஒருகை ஒரு கை வான் அர மகளிர்க்கு வதுவை சூட்ட.

என விளக்கி உரைப்பார் நச்சினார்க்கினியர்.[105] மேலும்,

**“ ஆறு முகத்து ஆறிரு தோளால்”**[106]

**“ ஆறு முக ஒருவனோர் பெறுமுறை இன்றியும்.”**[107]

**“ மூவிரு முகனும் முறை நவின்று ஒழுகலின்”**[108]

என்னும் வரிகளும் முருகனின் ஆறுமுகங்களைக் குறிப்பிடுகின்றன.

## முருகனின் ஊர்தியும் கொடியும்

முருகன் வெற்றியையே விரும்புபவன், அவன் ஊர்ந்து செல்லும் மயில் **“ஊர்மயில்”**[109] என அழைக்கப்படும். இம்மயிலானது ‘மஞ்ஞை’ எனவும் பொருள் படும். பிணிமுகம் என்று சொல்லப்படும் யானையும் முருகனது வாகனமாக அமைகின்றது.[110] பிணி முகம் என்பது மயிலினையும் குறிக்கும்.[111]

**“ கால் கிளர்ந்தன்ன வேழமேல் கொண்டு.”**[112]

**“ ஓடாப் பூட்கை பிணிமுகம் வாழ்த்தி.”**[113]

**“ சேயுயர் பிணிமுகம் ஊர்ந்து.”**[114]

என வருகின்ற அடிகளும்

**“ பிணிமுக ஊர்தி ஒன் செய்யோன்”**[115]

**“ பிணிமுக மேற்கொண்டு அவுணர்**

**மணிவிசும்பிற் கோனேத்த மாறுபட்ட வெள்வேனே.”**[116]

என வருகின்ற அடிகளும் பிணிமுகம் என்னும் சொல் மயில், யானை ஆகிய இரண்டையும் குறிக்கும் வகையில் ஆளப்பட்டுள்ளன. பரிபாடலில் பரிமேலழகர் யானையினைக் குறிப்பதாகவும் புறநானூற்றில் அடியார்க்கு நல்லார் மயிலினைக் குறிப்பதாகவும் விளக்கம் தருவர்.

முருகன் பதுமனை வதம் செய்தபோது அவனது ஒரு கூறு மயிலாக வந்ததெனவும் பதுமனை அழிப்பதற்கு முருகனுக்கு இந்திரன் வழங்கியது மயில் எனவும் புராண வழி அறியலாகிறது.

**“ நீலப் பறவைமேல் நேரிழை தன்னோடும்**

**ஆலமர் செல்வன் புதல்வன் வரும்”**[117]

மயில் ஊர்தி கொண்ட முருகன் அவன் ஊர்ந்த மயில் ஆண் மயில் எனப் பேராசிரியர் கூறுகின்றார். முருகன் ஊர்ந்த மயில் ஆண்பாலானது என்று கூறி அது சேவல் என்னும் பெயர்க்குரியது என்கின்றார்.

**“ சேவல் பெயர்க் கொடை சிறகொடு சிவனும்**

**மாயிருந் தூவி மயிலைங் கடையே”**[118]

என்னும் தொல்காப்பிய நூற்பாவை சான்று தந்து நிறுவுகின்றார். பறப்பனவற்றுள் ஆண்பாற்கெல்லாம் சேவற்பெயர் உரித்து என்பது பேராசிரியர் தரும் விளக்கமாகும். மேலும் மயில் மட்டுமின்றி முருகனுக்கு ஆடு, தேர், இவ்விரண்டும் வாகனமாக இருந்துள்ளதையும் காண முடிகின்றது. தீக்கடவுள், இந்திரன், இமயன், ஆகிய இம்மூவரும் முருகனுக்கு கொடுத்த தம் ஆற்றல்களே ஊர்தியாக அமைந்துள்ளன என்று பரிபாடல் கூறுவது நோக்கத் தக்கதாகும்.

**“ திருந்து கோல் ஞமன் தன் மெய்யின் பிரிவித்து**

**இருங்கண் வெள்யாட்டு எழில்மறி கொடுத்தோன்**

**ஆஅங்கு அலரும் பிறரும் அமர்ந்து படை அணிந்த**

**மறியும் மஞ்ஞையும் வாரணச் சேவலும்”**[119]

தீக்கடவுள் தன் ஆற்றலின் ஒரு பகுதியைப் பிரித்துக் கோழிச் சேவலாகவும், இந்திரன் தன் கூற்றிலிருந்து ஒரு பகுதியை அழகிய மயிலாகவும் இயமன்(எமன்) தன் ஆற்றலிருந்து ஒரு பகுதியை வெள்ளாட்டுக் குட்டியாகவும் கொடுத்தனர். இவையே முருகனுக்கு ஊர்தியாகவும் அமைந்தன என்பதை பரிபாடலின் மூலம் அறியலாம்.

**“ ஆய் தேரான் குன்ற இயல்பு”**[120]

என்னும் வரி எடுத்துரைக்கின்றது.

## கொடி

முருகனுக்குரிய கொடியாகக் கோழியும், மயிலும் காணப்படுகின்றன. முருகன் பதுமனை அழித்த போது அவனது ஒரு கூறு மயிலாகவும் பிறிதொரு கூறு கோழியாகவும் முருகனுக்கு அமைந்ததில் கோழியினை முருகன் கொடியாகக் கொண்டான் என புராணங்கள் குறிப்பிடுகின்றன. கோழி முருகனுக்கு கொடியாக அமைந்ததனை,

**“ குரல் கேட்ட கோழி குன்றதிரக் கூவ”**[121]

**“ புள்ளணி நீள்கொடிச் செல்வன்”**[122]

**“ தகரன் மஞ்ஞையன், புகரில் சேவலங்**

**கொடியன்……………..”**[123]

**“ வாரனக் கொடியோடு வாயிற் படநிறீஇ”**[124]

**“ மணிநிற மஞ்ஞை ஓங்கிய புட்கொடி”**[125]

**“ கோழி ஓங்கிய வென்றகு விறற்கொடி”**[126]

போன்ற பாடல் வரிகள் சான்று பகர்கின்றன. மேலும் முருகனுக்கு மயிலும் கொடியாக அமைந்துள்ளதை,

**“ பல்லொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய”**[127]

**“ பல்பொறி மஞ்ஞை வெல்கொடி அகல”**[128]

என்னும் வரிகள் சான்று தந்து நிற்கின்றன. முருகனுக்கு மயில் ஊர்தியாக மட்டுமல்லாமல் கொடியாகவும் அமைந்தது என்பதனை,

**“ மணிமயிர் உயரிய மாறா வென்றிப்**

**பிணிமுக ஊர்தி ஒண்செய்யோனும்”** [129]

என்னும் புறநானூற்றுப் பாடல் வரிகள் நிறுவுகின்றன.

## முருகன் உறைவிடங்கள்

முருகன் பண்டு தொட்டு திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன் குடி (பழனி), திருவேரகம் (சுவாமிமலை), பழமுதிர்ச்சோலை, குன்றுதோறாடல் ஆகிய ஆறு இடங்களில் கோயில்கள் கொண்டு மக்களுக்கு அருள்பாலிப்பவன் என்பதனை அறியமுடிகின்றது.

சிலப்பதிகாரம் முருகன் உறைவிடமும் கொண்ட இடங்களைக் குறிப்பிடும் பொழுது

**“ சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்**

**ஏரகமும் நீங்கா இறைவன் கை வேலன்றே.”**[130]

எனக் கூறுகின்றது. நீக்கமற நிறைந்து நிற்கும் முருகன் குன்றுகள் தோறும் நீங்கா இடம் கொண்டிருப்பவன் என்று புலப்படுகின்றது. மேலும்,

**“ வரையுறை தெய்வம்”**[131]

எனக் குறிஞ்சிக்கலி குறிப்பிடும் கூற்றிலிருந்து பரங்குன்றத்தில் உறைவிடம் கொண்டவன் முருகன் என அறிய முடிகின்றது. எழும் பல்வேறு ஓசைகளைக் கொண்ட திருப்பரங்குன்றத்திலும் உறைவிடம் கொண்டு அருள்பாளிக்கின்றான். இதனை பரிபாடல்,

**“ ஒருதிறம் பாணர் யாழின் தீங்குரல் எழ**

**ஒருதிறம் யாணர் வண்டின் இயிர்இசை ஊத,**

**ஒருதிறம் கண் ஆர் குழலின் கரைபு எழ,**

**ஒருதிறம் பண் ஆர் தும்பி பரந்து இசை வளர,**

**ஒருதிறம் மண் ஆர் முழவின் இசை எழ,**

**ஒருதிறம் அண்ணம் நெடுவரை அருவி நீர் ததும்ப"**[132]

எனக் கூறுகின்றது. மேலும்,

**" சூர் மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்**

**சினமிகு முருகன் தன் பரங்குன்றம்"**[133]

என்னும் பாடல் வரிகளும்,

**" கொடி நுடங்கு மறுகிற் கூடற்குடா அது**

**பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய**

**ஒடியா விழவின் நெடியோன் குன்றம்."**[134]

என்னும் பாடல் வரிகளும் முருகன் உறையும் திருப்பரங்குன்றத்தினை 'தண்பரங்குன்றம்' , 'நெடியோன் குன்றம்' எனக் குறிப்பிடுகின்றன. மேலும் செவ்வேள் உறையும் பரங்குன்றத்து முருகனைக் காண,

**" மண்மிசை.......அவிழ்துழாய் மலர்தரு செல்வத்துப்**

**புன்மிசைக் கொடியோனும் புங்கவம் ஊர்வோனும்**

**மலர்மிசை முதல்வனும் மற்று அவனிடைத் தோன்றி**

**உலக இருள் அகற்றிய பதின்மரும்"**[135]

**" பிறங்கு மலை மீமிசைக் கடவுள்"**[136]

**" ஒன்னா தார்க் கடந்த டூஉம்உரவு நீர்மா கொன்ற**

**வெள்வேலான் குன்றின் மேல் விளையாட்டும் விரும்பார் கொல்"**[137]

திருமால், நான்முகன், தேவகணங்கள் உள்ளிட்ட தேவர்கள் வந்து வணங்கும் தன்மையுடையவனாய் காட்சியளிக்கின்றான்.

## திருப்பரங்குன்றம்

முருகன் கடவுள்களுக்கெல்லாம், வணங்கும் கடவுளாகக் காணப்படுகின்றான். இவன் அறுபடை வீடுகளில் ஒன்றான திருப்பரங்குன்றத்தில் உறைவிடம் கொண்டு பக்தர்களுக்கு அருள் தருகின்றான். திருப்பரங்குன்றம் இன்றுள்ள மதுரைக்குத் தென்மேற்கில் ஏறத்தாழ ஐந்து கல் தொலைவில் உள்ளது என்பர்.

**" திருவீற் றிருந்த தீது நீர் நியமத்து**

**மாடம் மலி மறுகின் கூடற் குடற்வயின்**

**குன்று அமர்ந்து உறைதலும் உரியன் அதாஅன்று"**[139]

மதுரைக்கும் திருப்பரங்குன்றுக்கும் இடையே வயல்கள் மிகுதி உண்டு. வயலில் உள்ள தாமரை மலரில் தங்கிய வண்டுகள், வைகறை பொழுதில் தேன் உண்டு ஞாயிறு தோன்றியதும் பரங்குன்று சுனைப்பூவில் ஆரவாரிக்கும் வளங்கொண்ட பகுதியாய்த் தோற்றமளிக்கின்றது. இப்படி சுனைநீர் வளம் கொண்ட மலைக்கு உரியவன் முருகன் என்பதால் இவனது திருமுகம் காண திருமால், சிவன், பிரம்மன், இந்திரன் உள்ளிட்ட தேவர் கூட்டம் பரங்குன்றம் வந்து தங்கினர். அதனால் பரங்குன்றம் இமய மலையை ஒத்துக் காணப்படுவதாய் பாடல் பொருள் விளக்கம் தருகின்றது.

## திருச்சீரலைவாய் ( திருச்செந்தூர் )

திருச்செந்தூர் என்று அழைக்கப்படும் இவ்வூர் செந்தி, செந்தில், செந்தூர் என மரூஉப் பெயர்களைக் கொண்டு விளங்குகின்றது. இது கடலலைகள் மோதும் கரையோரத்தில் அமைந்துள்ளதால் 'அலைவாய்'[140] என அழைக்கவும் படுகின்றது, இவ்வுண்மையினை,

**“ திருமணி விளக்கின் அலைவாய்ச்**

**செருமிகு சேஎம்.”**[141]

என்னும் அகநானூற்றுப் பாடல் வரிகளும்,

**“ வெண்டலைப் புணரி மலைக்கும் செந்தில்**

**நெடுவேள் நிலைஇய காமர் வியன்றுறை”**[142]

என்னும் புறநானூற்றுப் பாடல் வரிகளும் வெளிப்படுத்துகின்றன. மேலும் ஆறுமுகம் கொண்ட முருகன் பக்தர்களுக்கு காட்சி கொடுக்கும் போது,

**“ அந்தரப் பல்லியம் கறங்க, திண்காழ்**

**வயிர் எழுந்து இசைப்ப, வால்வளை ஞரல,**

**உரம் தலைக் கொண்ட உரும் இடி முரசமொடு**

**பல் பொறி மஞ்ஞை வெல்கொடி அகவ.**

**விசும்பு ஆறு ஆக விரை செலல் முள்ளி,**

**உலகம் புகழ்ந்த ஓங்கு உயர் விழுச்சீர்**

**அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே, அதாஅன்று”**[143]

தேவதுந்துபி முழங்கவும் கொம்புகள் மிக்க ஒலிப்பும், வெள்ளிய சங்குகள் முழங்கவும், இடியை ஒப்ப முழங்கும் முரசுடன் வெல் கொடியிலிருந்து மயில் அகவும், ஆன்றோர்களால் பலகாலம் புகழப்படும்.

## திருவாவினன் குடி (பழனி)

இன்றைக்கு ‘பழனி’ என வழங்கப்பெறும் முருகனது திருத்தலமே சங்கப் பாடல்களில் திருவாவினன் குடி என அழைக்கப்படுகின்றது. ஆவி என்னும் வேளிர் தலைவனுக்குரிய இவ்வூர், பொதினி முருக்க் கடவுள் உறையும்

உறைவிடமாகவும் திகழ்கின்றது. அசுரர்களை வதம் செய்த முருகன் யாவரும் விரும்பும் வகையில் அன்புப் பெருக்கால் ஆவினன் குடியில் காட்சி அளிக்கின்றான். இதனை,

**“ …………..மழவர் ஓட்டிய**

**முருகன் நற்போர் நெடுவேள் ஆவி**

**அறுகோட்டு யானைப் பொதினி”**[144]

என்னும் வரிகள் நிறுவுகின்றன. முருகன் உறைகின்ற இப்பொதினியே பிற்காலத்தில் பழனி என மாறி வழங்கி வருகிறது என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.[145] மேலும் பொதினி மலை ஆவிக்குரியது என்பதனை,

**“ முழவுறழ் திணிதோள் நெடுவேள் ஆவி**

**பொன்னுடை நெடுநகர்ப் பொதினி”**[146]

என்னும் வரிகள் புலப்படுத்துகின்றன.

**“சங்க காலத்தில் பழனிமலை ஆவியின் குடியினர் ஆண்டு வந்தனர். அவருள் வையாவிக் கோப்பெரும் பேகன் என்பவன் மயிலுக்குப் போர்வை தந்த வள்ளல் இத்தகைய ஆவி குடியினர் வாழ்ந்த ஊர், ஆவிகுடி.”**[147] எனப்பட்டது.

பரங்குன்று என்பது நண்பரங்குன்று என்று தான் இலக்கியங்களில் குறிப்பிடப்படுகிறது. ‘திரு’ என்றும் அடைமொழி சேர்த்துத் திருப்பரங்குன்றம் எனக் கூறப்பெறவில்லை. இதனைப் போன்றே ‘செந்தில்’ ‘ அலைவாய்’ என்று தான் காணப்படுகின்றது. ‘திரு’ என்னும் அடைமொழி சேர்த்து திருச்செந்தூர், திருச்சீரலைவாய் என்று கூறப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். இதனைப் போன்றே ஆவினன் குடி என்று தான் கூறப்பெறுகிறது. ‘திரு’ என்னும் அடைமொழி சேர்ந்து திரு ஆவினன் குடி என்று கூறப்பெறவில்லை.

எனவே இறைவனான முருகன் உறைகின்ற இடம் என்பதால் திரு என்கின்ற அடையினைப் பெற்று விளங்குகின்றது.

இங்கு பலதிறத்து முனிவர்களும், கந்தர்வர்களும், கருடக் கொடியோனும் மழுவாள் நெடியோனும், ஆயிரங்கண்ணோனும், முப்பத்து மூன்று தேவர்களும். பதினெண்கணத்தவரும், வந்து காணும் படியாக முருகன் வீற்றிருக்கின்றான்.[148] என முருகாற்றுப்படை கூறுகின்றது.

## திருவேகரம் (சுவாமிமலை)

ஏரகம் - திருவேரகம் என்பதாகும். இது முருகனது உறைவிடத்தைக் குறிக்கும். இதனை 'மலை நாட்டகத்தொரு திருப்பதி' என்று நச்சினார்க்கினியர் கூறுவர். சிலப்பதிகார அரும்பத உரையாசிரியர் வெண்குன்றத்தைக் குறிப்பிடும் பொழுது 'சுவாமி மலை' எனலாம். 'ஏரகம்' மற்றொரு திருப்பதி என்று கருதினாராதல் வேண்டும். அருணகிரியார் சோழ நாட்டில் உள்ள " சுவாமி மலை" என்னும் தலமே ஏரகம் "[149] என்று கொண்டனர் என்று கூறுவார்.

ஏரகம் என்றால் அழகிய அகம் என்று பொருள்படும். ஏரகம் என்பது கோரைப்புல் என்னும் பொருளையும் உணர்த்தும் மிகுதியான கோரைப் புற்களைக் கொண்டமையால் திரு என்னும் அடையைப் பெற்றிருக்க வாய்ப்புள்ளது. இப்படிப்பட்ட திருவேரகத்தில் முருகன்,

**" இருமூன்று எய்திய இயல்பினின் வழாஅது**

**இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி,**

**அறு நான்கு இரட்டி இளமைநல யாண்டு**

**ஆறினில் கழிப்பிய அறன் நவில் கொள்கை**

**மூன்று வகைக் குறித்த முததீச் செல்வத்து**

**இரு பிறப்பாளர்,பொழுது அறிந்து நுவல"**[150]

ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றம் என்னும் அறுதொழிலின் வழுவாத வரும், நற்குடிப் பிறந்தவரும் நாற்பத்தெட்டாண்டு வரை பிரமச்சரிய விரதம் காத்தவரும், அறம் கூறும் கோட்பாட்டினையும் முத்தீச் செல்வத்தையும் உடையவருமாகிய அந்தணர் முருகப்பெருமானை வழிபடும் காலமறிந்து மந்திரங்களைக் கூற நீராடுங்கால் தோய்க்கப்பட்ட ஆடை உடம்பிலே கிடந்து காயும்படி உடுத்து முருகனை தலைமேற்குவித்த கையினராய்த் துதித்து ஆறெழுத்து மந்திரத்தை நாவில் உச்சரித்து மலர்களை எடுத்து அர்ச்சனை புரிவர்.

## குன்று தோறாடல்

குன்றிருக்கும் இடம் எல்லாம் குமரன் இருக்கும் இடங்களாகும். திருமுருகாற்றுப் படையிலோ ஏனைய சங்கப் பனுவல்களிலோ இவ்விடம் பற்றிய குறிப்புகள் காணப்படவில்லை என்றாலும் ‘ சேயோன் மேய மைவரை யுலகமும்’ என்னும் தொல்காப்பியக் கூற்றுப்படி குறிஞ்சிக்குரிய கடவுள் முருகன் என அறிய முடிகின்றது. குன்றுதோறாடலை கொண்ட முருகனை,

**“ மன்ற வேங்கை மலர்சில் கொண்டு**
**மலையுறை கடவுள் குலமுதல் வழுத்தித்**
**தேம்பிலிச் செய்த ஈர்நறுங் கையன்”**[151]

**“ கொடிச்சியர் கூப்பி வரை தொழு கைபோல”**[152]

**“ குன்றமர்ந்து உறைதலும் உரியன்…..”**[153]

**“ குறிஞ்சிக்கிழவ ……………”** [154]

என்று பாடல்வரிகள் குறிக்கின்றன.

கையில் வேள் ஏந்தி சிவந்த உடையுடுத்தி குளிர் பொருந்திய தன்மையுடன் முருகன் காணப்படுகின்றான். இவன் மலைதோரும் சென்று விளையாடுவதை,

**“ செய்யன், சிவந்த ஆடையன், செல்வரைச்**

**சேயலைத் தண் துளிர் துயல்வரும் காதினன்**

**குன்று தொறு ஆடலும் நின்றதன் பண்பே.”**[155]

என்னும் திருமுருகாற்றுப்படை பாடல்வரிகள் குறிப்பிடுகின்றன.

## பழமுதிர்ச்சோலை (பழனி)

தற்காலத்தில் திருப்பதியாக விளங்கும் திருமாலிருஞ் சோலையே பழமுதிர்ச்சோலை என அழைக்கப்படுகின்றது. மதுரையை அடுத்துள்ள அழகர் மலை அடிவாரத்தில் அழகர் கோயில் இருக்கின்றது. ‘அழகர்மலை’ ‘திருமால் இருஞ்சோலை’ மலை என்றும் ‘பழமுதிர்ச்சோலை மலை’ என்றும் அழைக்கப்படுகின்றது.

தற்போது உள்ள அழகர் கோயில் முன்பு முருகன் கோவிலாய் இருந்தது என்றும் அழகர் கோவிலுக்கு எதிரில் முருகன் கோவில் இருந்து அழிந்து விட்டது என்றும் கூறப்படுகின்றன.[156] என அறிஞர் கூறுவர். மேலும் இப்பழமுதிர்ச்சோலை திருமால் கோவில் இருந்த குன்றாதலில் இருங்குன்றம் எனப்பட்டது. அதன் மீது திருமால் கோவில் உண்டான பிறகு மால் திருப்பரங்குன்றம் எனப்பட்டது. அதன் மீது சோலைகள் மிக்கிருந்த காரணத்தால் மாலிருஞ் சோலை மலை என்னும் பெயர் பெற்றது. இதுகாறும் கூறப்பட்டச் சான்றுகள் மதுரைக்கு ஒருபால் முருகனுக்குரிய பரங்குன்றமும் மற்றொரு பால் திருமாலுக்குரிய இருங்குன்றமும் இருந்தமையையே வற்புறுத்துகின்றன என்று கூறும் கூற்று ஏற்புடையதாக உள்ளது. மேற்குறிப்பிட்ட அறுபடை வீடுகள் மட்டுமல்லாது முருகன் தங்கி இருக்கும் இடங்களாக,

**“ காடும் காவும் கவின்பெறு துருத்தியும்**

**யாறும் குளனும் வேறு பல் வைப்பும்**

**சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்**

**மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்”[158]**

என அறிய முடிகின்றது.

## வேலனின் பெருமைக் கூறுகள்

அறுபடை வீடு கொண்ட முருகனுக்குப் பல நிற பெயர்கள் காணப்பட்டாலும் ‘வேலன்’ என்பதே பெருமைக்குரியதாகக் கருதப்படுகின்றது. ‘வேள்’ என்னும் சொல்லுக்கு விழைதல் என்பது பொருளாகும். தொல்காப்பியரால் விளித்த “சேயோன்” எனும் பெயரும் பரிபாடலில் ‘சேய்’ என விளக்கப்படுகிறது.[159]

தொடக்க காலத்தில் முருக வழிபாட்டில் அவனது அடையாளமான வேல் வைத்தே மக்கள் வணங்கி உள்ளனர். வேட்டையாடும் சமூகத்தின் அடையாளமான இவ்வேலைத்தாங்கி வெறியாட்டுக் காலத்தில் ஆடுபவனும் வேலன் என்றே அழைக்கப்படுகிறான். இதனை,

**“ ஆறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்”[160]**

என்னும் சிலப்பதிகார வரியால் அறியலாம்.

அகத்தியருக்குத் தமிழ் மொழியினை அறிவுறுத்தியவன் முருகன். மேலும் சிவனுக்கு ‘பிரணவப் பொருளைத் தமிழில் உபதேசம் செய்து சாமிநாதனாக விளங்கியவன். இவையன்றி சங்க காலச் சங்கத் தலைமைப் புலவனாகவும் தமிழ்க் கடவுள் என அழைக்கப்படுகிறான். இதனை தெளிவுறுத்தும் விதமாக அருணகிரியார்,

**“ கொன்றைச் சடையாருக்கு ஒன்றைத் தெரியக்**

**கொஞ்சித் தமிழாற் பகர்வோனே.”**[161]

என திருப்புகழ் வழி புலப்படுத்துகின்றார். இவ்வாறாகக் குறிஞ்சி நிலக்கடவுளாகவும் தமிழ்க் கடவுளாகவும் இருக்கின்ற முருகன் தமிழர்களின் தொன்மை வழி பாராட்டுக்குரியவனாக விளங்குகிறான்.

## இந்திரன்

தேவர் உலகில் அரசன் இந்திரன். இவனது நகரம் அமராவதி என்னும் பொன்னகர். இவனது உலகில் மந்தாரம், சந்தானம், தேவதாரம், கற்பகம், பாரிசாதம் என்னும் ஐவகை மரங்கள் உள்ளன. காமதேனு என்னும் பசுவும் இவ்விந்திர உலகில் உண்டு. இந்திரன் பற்றிய குறிப்பினைத் தொல்காப்பியம்,

**“ வேந்தன் மேய தீம்புனல் உலகமும்”**[162]

எனக் குறிப்பிடுகின்றது. தீம்புனல் உலகின் (மருதநிலம்) தலைவனான இந்திரனுக்கு வேந்தன் என்றும் அரசன் என்றும் பெயர் உண்டு. நிலையான மன்னர் ஆட்சி நிறுவப்பட்ட நிலம் மருதம். சிறந்த அரசாட்சி முறைக்கு வேந்தர் தேவைப்பட்டார். எனவே வேந்தன் இறைவனாகக் கருதப்பட்டான்.

## தேவர் தலைவன்

இந்திரனுக்கு அசுரவயிரி, விருத்திராரி, வலன் அரி, ஆகண்டலன், காமன், கோசிகன், கோபதி, கோமன், கௌசிகன், சுநாசி, சுனாசீரன், தருமன்,. பாகசாதனன், புரந்தன், புருகூதன், போகி, மகவாணன், வாசவன், அமரர்கோன், அயிராணி, கேள்வன், ஆயிரங்கண்ணன், இமையவர் வேந்தன், சதக்கிருது, புரந்தன் புனிதன், பொன்னகர்க்கினவன், பகவான், மருத்துவன் மால், முதிலூர்தி, வச்சரபாணி, வலாரி, வாசவன் விண் முழுதாளி, வெள்ளை வாரணன், வேள்வி நாயகன் என்கின்ற பெயர்கள் உண்டு.

அசுரரை வென்றமையால் அசுரவயிரி என்கின்ற பெயரினையும், விருத்திராசுரன் என்கிற பெயர்களைப் பெறுகிறான். வலன் என்கின்ற அரக்கர்களைக் கொன்றமையால் விரித்திராரி விலாரி என்கின்ற பெயர்களையும் யாகங்களில் மிகுதியாக அழைக்கப்படுவதால் புருகூதன் என்கிற பெயரினையும் இன்பம் நுகர்பவன் என்பதால் போகி என்ற பெயரினையும் வசுக்களின் தலைவன் என்பதால் வாசவன் என்கின்ற பெயரினையும் காரணத்தின் அடிப்படையில் பெற்றிருக்கிறான்.

**“ அமரா பதிகாத்து அமரனின் பெற்றுத்**

**தமரில் தந்து நகை சால் பிறப்பு”**[163]

**“ தேவர் கோமான் காவன் மாநகர்”**[163]

என வரும் பாடல் வரிகள் இந்திரனின் அமராவதி நகரினையும் அந்நகர்க்குத் தலைவன் என்பதனையும் கூறுகின்றன. மேலும்,

**“ அமரர் கோன்”**[165]

**“ தேவர் கோமான்”**[166]

**“ விண்ணவர் கோமான்”**[167]

**“ அமரர் தலைவனை வணங்குதும் யாம்”**[168]

என்னும் வரிகளும் அமரர் தலைவன் இந்திரன் என நிறுவுகின்றன.

**“ வச்சிரத் தடக்கை நெடியோன் கோயினுள்”** [169]

என்னும் புறநானூற்றுப் பாடல் வரி இந்திரனுக்குக் கோயில் இருந்ததைக் குறிப்பிடுகின்றது. வேதகாலக் கடவுளாகவும் காணப்படும் இந்திரன் தமிழ் வழிபாட்டில் நிலவியலுக்குரியவனாகக் காணப்படுதல் நோக்கத்தக்கதாகும்.

## ஆயிரங்கண்ணன்

இந்திரன் தன் ஐம்புலன் ஆசைக்கு அடிமையானான். அகலிகையைக் கூடிவிட கௌதமரின் சாபத்திற்கு ஆளாகியவன். இந்தப் புராண நிகழ்ச்சி திருப்பரங் குன்றத்தில் ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளதை காணும் மக்கள்,

" **இந்திரன் பூரை இவன் அகலிகை இவண்**

**சென்ற கவுதமன் சினன் உறக்கல் உரு**

**ஒன்றிய படிஇது என்று**"[170]

எனக் கூறி உரையாடுவதைக் காண முடிகின்றது. மேலும்,

" **வச்சி ரத்தோன் ஆயிரங் கண்ணேய்க்கும்** "[171]

" **ஐயிரு நூற்று மெய்ந் நயனத்தவன்**"[172]

" **ஆயிரம் கண்ணோன்**"[173]

" **காமங் கள்ளாட்கு இடைமயக் குற்றன**

**தேவர்க்கு ஆயினுஞ் சிலவோ செப்பின்**

**மாதவன் மடந்தைக்கு வருந்துயர் எய்தி**

**ஆயிரம் செங்கண் அமரர் கோன் பெற்றது.**"[174]

ஆகிய பாடல்வரிகள் புராணச் செய்திகளுக்கு வலுச்சேர்க்கின்றன.

இந்திரன் கொண்டிருக்கும் பதவியினை அடைவது மிக கடினமான செயல் ஆகும். பதவியினைப் பெற விரும்புவர் நூறு அசுவமேத யாகங்களைச் செய்து முடித்திருக்க வேண்டும். ஒரு குதிரையை திசைகள் தோறும் அனுப்பி திசைதோறும் உள்ள அரசர்கள் வென்ற பின்பே அசுவமேத யாகம் செய்தல் வேண்டும். இவ்வகையில் இந்திரன் நூறு யாகங்கள் செய்தான். அதனால்

சதமகன் என்கின்ற பெயரினையும் கொண்டான். இவன் செய்த யாகச் செயலை,

“ **நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டத்து நூறு பல்**

**வேள்வி முற்றிய வென்று அடு கொற்றத்து**

**ஈர் இரண்டு ஏந்திய மருப்பின் எழில் நுடைத்**

**தாழ் பெருந் தடக்கை.........**”[175]

என அடிகள் உணர்த்துகின்றன.

## இந்திரன் வாகனம்

இந்திரனுடைய வாகனம் நான்கு தந்தங்களைக் கொண்ட வெள்ளை யானையாகும். இதனை ஐராவதம் என்றும் கூறுவர்.

“ **ஈரிண்டு ஏந்திய மருப்பின் எழில் நடைத்**

**தாழ்பெருந் தடக்கை உயர்ந்த யானை**

**எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்**”[176]

என்னும் திருமுருகாற்றுப் படை வரிகள் ஐராவத இயல்பினையும் அது இந்திரனுக்கு உரிமை உடையதையும் இயம்புகின்றன. புராணங்களிலும், இலக்கியங்களிலும் இது குறித்த செய்திகள் பரவலாகக் காணப்படுகின்றன.

இதனை,

**“ பெருமால் களிற்றுப் பெயர்வோன்”**[177]

**“ வால் வெண் களிற்றரசு”**[178]

என எடுத்தியம்புவதைக் காணலாம்.

## கொடி

இந்திரனது ஊர்தியாய் ஐராவதம் மட்டுமின்றி மேகமும் விளங்குகிறது. இவனுக்கு உரிய கொடி இடியாகும். ஐராவத யானையும் கொடியாக அமையும். இவனது குதிரை உச்சயிற்சிரவம் எனப்படுகிறது. இந்திர விழா நிகழ்வின் போது ஐராவதம் எழுதிய கொடியினை ஏற்றுவர். ஐராவதம் ஊர்தியாகவும், கொடியாகவும் திகழ்கிறது. இவ்வுண்மையினை,

**“ தங்கிய கொள்கைத் தருநிலைக் கோட்டத்து**

**மங்கல நெடுங்கொடி வானுற எடுத்து”**[179]

என வரும் வரிகளால் அறியலாம்.

## இந்திரன் தோற்றம்

வானுலக அதிபதியான இந்திரன் வச்சிராயுதத்தைக் கையில் ஏந்தியவன். நெடியோன் என்ற பெயரினையும் கொண்டவன்.[180] தேவமைந்தரும் மகளிரும் புடைசூழ ஆகாய கங்கைகளில் நீராடி இன்பமாகப் பொழுது போக்குபவன் இந்திரன் திருமாலைப் போலக் கருநிறம் கொண்டவன்.[181] குணதிசைக் காவலனாக விளங்குபவன். இந்திரனன்றி பிறர் யாரும் அணிய இயலாத பூணாரம் அணிந்தவன் என்பதனை,

**“ தந்திர கரணம் என்னுவி ராயின்**

**இந்திரன் மார்பத்து ஆரமும் எய்துவர்”**[182]

என வரும் சிலப்பதிகார வரிகள் உணர்த்துகின்றது.

## இந்திர வில்

இது பல வண்ணடங்களைக் கொண்டது. இதனை ‘குறைவில்’[183] என பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது. இவ்வில்லிற்கு நாண் இல்லாமையால் இப்பெயர் பெற்றது எனலாம்.

**“யஜீர் வேத தாருண முதற் பிரசினத்துள்ள ஐந்தாம் பகுதியில் இந்திரவில உண்டான வரலாறு கூறியவிடத்தில் அது முதலில் உருத்திரன் வில் என்றும் உருத்திரன் அக்கினியும் அவ்வில்லை வளைத்துத் தரையில் ஊன்றி நின்று இந்திரனும் பலமானும் (வாயுவும்) தன்னை எதிர்க்க வல்லார் இல்லை என்று வஞ்சினம் கூறியதாகக் கேட்டு, இந்திரன் பொறுக்காது கரையான் ஆகி அவ்வில்லை அறுத்தான். அது கிளம்பி தலையோடு வானில் போய் நின்றது என்று பின்பு தேபரவர்க்கியம் என்னும் வேள்வியை இயற்றி இந்திரனைத் தலைமை உடையவன் ஆக்கினான் என்றும் கூறப்பட்டுள்ளது.”**[184]

என புலவர் அ. மாணிக்கனார் விளக்கம் தருகின்றார். இந்திர வில்லினைப் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில்,

**“ சிலைத்தார் முரசங் கறங்க”**[185]

**“ தேர் செல்வு அழுங்கத் திருவில் கோலி**
**ஆர்கலி எழிலி சோர் தொடங்கின்றே”**[186]

**“ வரை சேர்புவில் கிடந்தன்ன “** [187]

**“ உரைகால் மாறிய ஓங்குயர் நனந்தலை**
**அகலிரு வானத்துக் குறைவில ஏய்ப்ப”**[188]

எனக் காணப்படுகின்றன. மேற்கு திசைக்கு வருணன் வடதிசைக் காவலனாக குபேரன் தென் திசைக் காவலனாக யமன் இருப்பது போல் இந்திரன் கிழக்குத் திசைக்கு காவலன் ஆவான். தென் கிழக்குத் திசைக்கு அக்னி காவலன் ஆகவும், தெற்கு திசைக்கு எமன் காவலனாகவும், வடமேற்குத்

திசைக்கு வாயு காவலனாகவும் வடகிழக்குத் திசைக்கு ஈசானன் காவலனாகவும் இருப்பதைக் காண முடிகின்றது.

## இந்திர விகாரம்

இந்திரனால் நிறுவப் பெற்ற அரங்கு இந்திர விகாரம் எனப்படும். இந்திரனால் நிறுவப்பட்ட இவ்வரங்குகள் பூம்புகாரில் ஏழு இருந்தன. இதில் முந்நூறு சாரணர் இருந்து பௌத்த ஆகத்தின் பொருளை வழங்கினர் என்பதை சிலம்பு, மேகலை ஆகிய மருவிய கால இலக்கியங்கள் கூறுகின்றன. இதனை,

**“ இந்திர விகாரம் ஏழுடன் புக்கு அங்கு**

**அந்த சாரிகள் ஆறைம் பதின்மர்”** [189]

**“ பணையைத் தோங்கிய பாசிலைப்போதி**

**அணிதிகழ் நீழல் அறவோன் திருமொழி**

**அந்தர சாரிகள் அறைந்தனர் சாற்றும்**

**இந்திர விகாரம் என எழில் பெற்று”** [191]

எனும் பாடல் வரிகள் சான்றுதந்து நிறுவுகின்றன.

## வருணன்

கடலும் கடல் சார்ந்த நிலமும் நெய்தல் எனப்பட்டது. அந்நிலத்தில் வாழ்ந்தவர்கள் வருணன் என்னும் தெய்வத்தை வழிப்பட்டனர். இதனை,

**“ வருணன் மேய பெருமணல் உலகமும்”** [192]

என்னும் தொல்காப்பிய நூற்பாவால் அறிய இயலுகிறது. பாவாணர் வருணனை **“ வாரணன்”** [193] என்று கூறுகிறார்.

“கடற்கரையில் வாழ்ந்தவர்களின் வாழ்வு நீரில் நிலைத்திருந்தது அவர்கள் நீர்க்கடவுளை வழிப்பட்டனர். அதுவே நாராதயணன் நாரா + அயனன் = நாராயணன்.

நாரா = நீர் கடலில் நீண்ட பரப்பைக் குறிக்க நெடியோன் என்றனர். வருணன் என்பதன் பொருளும் நெடியோன் என்பதாகும். வார் நெடுமையைக் குறிக்கும். நீளமான தோர் பொருள் வார் எனப்படுகின்றது. பண்டைத் திராவிடர் பண்பாட்டு மண்டலங்களில் கிடைத்த தொல்பொருள் சான்றுகளின்படி வருணன் திராவிடர்களின் வழிபாட்டினையும் நீர்த் தொடர்பானவருமாகும். பின்னர் வைதீக சமயத்தில் இணைத்துள்ளனர். பிற்காலத்தில் நாராயணன் வழிபாடு திருமால் வழிபாட்டின் துணை வழிபாடாக விளங்கியது. இது வைதீக சமயத்தால் வெறுக்கப்பட்டதாகும். இருக்கு வேதத்தில் வருணன் ( வருணன்- நெடியோன்) அசுரனாக காட்டப்பட்டு இருப்பதால் வருணன் ( வாரணன் ) திராவிடர்களின் கடல் தெய்வம் என்பது தெளிவு.” [194] என்கின்றார்.

ஆரிய வேதத்தில் குறிப்பிடப்படும் வர்ணனுக்கும் இலக்கியங்களில் காணப்படும் வருணனுக்கும் வேறுபாடுகள் மிகையாகக் காணப்படுகின்றன. வேதத்தில் காணப்படும் வருணன் வானத்து இறைவனாகக் காணப்படுகிறான். தமிழர் வணங்கிய வருணன் கடல் தெய்வமாக காணப்படுகின்றான்.

சங்க கால மக்கள் தாம் வணங்கிய கடவுள்க்கு உருவம் அமைக்காமல் அத்தெய்வங்களின் அடையாளச் சின்னங்களைக் கொண்டே வணங்கி உள்ளனர். இவ்வகையில் வருணன் வணக்கத்திற்குச் சுறாமீன் கொம்பை நட்டு வணங்கியும் உள்ளனர்.

**“ சினைச் சுறாவின் கோடு நட்டு**

**முனைச் சேர்த்திய வல்லணங்கினன்”**[195]

எனப் பட்டினப்பாலை கூறுகின்றது.

பலயாக சாலைகளை நிறுவிய முதுகுடுமிப் பெருவழுதியின் முன்னோனான பாண்டிய மன்னன் ப∴றுளி ஆறு கடலில் மூழுகும் காலத்திற்கு முன்பு

வாழ்ந்தவன். இவன் முந்நீர்விழா ( கடல்விழா ) செய்து கடல் தெய்வமான வருணனை வணங்கியுள்ளான். இதனை,

**" எங்கோ வாழிய குடுமி தங்கோச்**

**செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க்குத்**

**முந்நீர் விழவின் நெடியோன்**

**நன்னீர்ப் ப.ஃ.றுளி மணலினும் பலவே."**[196]

என்ற புறப்பாடல் நிறுவுகின்றது. எனவே தொல்காப்பியத்தில் குறிப்பிடப்படும் வருணன் தமிழர்க்குரிய கடவுளே என்பது புலப்படுகின்றது. மழைபெய்ய வருணனுக்கு மக்கள் வழிபாடு செய்ததினை,

**"அணங்கொடு நின்றது மலை, வான் கொள்க எனக்**

**கடவுள் ஓங்கு வரை பேண்மார், வேட்டு எழுத்து**

**கிளையொடு மகிழும் குன்றாடல்."**[197]

வருணன் மழைக்கு அதிபதியாய் உள்ளான். என்பதை இப்பாடல் வழி அறிய முடிகின்றது.

## கொற்றவை

திராவிட இனத்தில் முதலில் தோன்றிய தாய் வழிபாடு கொற்றவை வழிபாடு ஆகும். செழிப்பிற்கும், வனத்திற்கும், வீரத்திற்கும் காரணமான தெய்வமாக கொற்றவை திகழ்கின்றாள். கொற்றவைக்குத் துர்க்கை என்ற பெயரும் உண்டு. துர்க்கை என்ற பெயருக்கு ஆபத்துக்களை நீக்குபவள் என்று பொருள். மேலும் ஆறலைக் கள்வர்களுக்குக் கொற்றம் தருபவள். வெற்றி தருபவள் என்கின்ற பெயர்களும் அவளுக்கு உண்டு.

**" மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த**

**கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே"** [198]

என்ற நூற்பா கொற்றவை வெற்றி தருபவளாக உள்ளதைப் புலப்படுத்துகின்றது. இளம்பூரணர்,

> **"குறிஞ்சித்திணைக்கு முருகவேளே அன்றிக் கொற்றவையும் தெய்வம் என்பது பெற்றாம்."**[199]

எனக் குறிப்பிடுகின்றார். இக்கொற்றவை நிலைக்கு எடுத்துக் காட்டை தர முயலும் இளம்பூரணர்,

**"ஆளி மணிக் கொடிப் பைங்கிளிப் பால்கலைக்**

**ஆரண் முருங்க ஆகோன் கருதின் அடையார்**

**முரண் முருங்கத் தான் முந்நூறும்"**[200]

எனக் குறிப்பிடுகின்றார்.

**" காடமர் செல்வி"**[201]"

**" பழையோள் "**[202]

**" காடுகெழு செல்வி"**[203]

**" சூலி"**[204]

பாய்கலப்பாவை எனவும் இக்கொற்றவை காணப்படுகிறாள். பழந்தமிழரால் வணங்கப்பட்டக் கொற்றவை அயிரை மலையில் இருந்ததாகப் பதிற்றுப்பத்து கூறியுள்ளது. இந்தக் கொற்றவைச் சேரர்க்குரிய குலதெய்வமாகப் போற்றப்பட்டுள்ளது. இதனை,

**“ நிறம் படு குருதி புறம் படினல்லது**

**முடை யெதிர் கொள்ளா வஞ்சுவடு மரபிற்**

**கடவுளயிரை நிலை இக்”**[205]

எனக் காண முடிகின்றது.

**“சங்க இலக்கியத்தில் கொற்றவை பற்றிய பாடல்கள் பாலை நிலத் தொடர்புடையனவாக இருக்கின்றன. கடற்கரை வரையுள்ள பிறவிடங்களிலும் கொற்றவை வழிபாட்டிருந்தது என்பதற்கு ஆதாரம் உள்ளது. கடற்கரையில் கொற்றவையைக் கடல்கெழு செல்வி என்று வழிபட்டனர்.”**[206]

நானிலத் தெய்வங்கள் பெற்ற நிலையான இடத்தினை கொற்றவை ஒரு நிலத்துக்கு மட்டும் உரியவனாக இடம் பெறவில்லை. நான்கு நிலத்துக்கும் காணப்படுகின்றாள். பாலை நிலம் நிலையானது இல்லை என்பதாலும் முல்லையும், குறிஞ்சியும் வெம்மை காலத்தில் கொள்ளும் சிறிது மாற்றமே, பாலை என்பதாலும் நானிலங்களிலும் இருந்ததை தொல்காப்பியர் வழி அறிய முடிகின்றது. இதனை,

**“ முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து**

**நல்லியல் இழந்து நடுந்துயர் உறுத்துப்**

**பாலை என்பதோர் படிவம் கொள்ளும்.”**[207]

என்னும் வரிகள் இதனை நிறுவுகின்றன. சங்கப் பாடல்களில் முருகன் காடுகிழான் (கொற்றவை) மகளாகவே காணப்படுகின்றாள். முருகன் சேய் என அழைக்கப்படுதல் செம்மை என்பதனை நிறம் என்று கொள்வதைப் போல், மகன் என்ற முறை பெயரும் பொருத்தமாக அமைகின்றது.

**“ காடு கெழு நெடுவேள்”**[208]

**“ அழைக்கப்படும் முருகன் கொற்றவையின் சேய்”**[209]

என்பன சான்றுகளாக அமைகின்றன.

## கொற்றவைக்கு வழங்கப்படும் பெயர்கள்

பாலை நிலக்கிழத்தியான இவளுக்குத் துர்க்கை, அந்தரி, அம்பணத்தி, அயிராணி, ஆரியை, ஐயை, ஓவப்பணி, லத்தி, கவுரி, காத்தியாயனி, கார்த்திகை, சண்டிகை, நாரணி, விமலை, சூலி, குமரி, நீலி, என்கின்ற பெயர்கள் வழங்கப்படுகின்றன. கொற்றவைக்கு வழங்கப்படும் பெயர்களை,

**“ அமரி, குமரி கவுரி சமரி**

**சூலி நீலி மாவைற்கு இளங்கிளை**

**ஐயை செய்யவன் வெய்யவள் தடக்கைப்**

**பாய்கலைப் பாலை பெருந்தொடிப் பாவை**

**ஆய்கலைப் பாலை அருங்கலிப் பாலை**

**ஆடியல் கொள்கை அந்தரி கோலம்”**[210]

எனச் சிலப்பதிகாரம் பட்டியலிட்டுக் கூறுகின்றது.

காட்டில் உறைபவள்; காடுகள். ஏழு கன்னியர்கள் (சப்த மாதர்கள்) சிவசக்தியின் தங்கைகளாய் பேதங்களாய் அமைந்தவர்கள் பிராமணி, நாராயணி, மகேஸ்வரி, கவுமாரி, வராகி, இந்திராணி, உருத்திராணி என்னும் இந்த ஏழு பேரில் உருத்திரனின் அழிப்பாற்றலைப் பெற்ற உருத்திராணியே காளியாகக் காணப்படுகிறாள். எழுவரோடு யோகேஸ்வரியும் சேர்ந்து எட்டு கன்னியர் என்பாரும் உளர். பெரும்பாலான ஊர்களில் வட எல்லையில் காளிக்கு கோயில் அமைகின்றது.

**“கொற்றவை, காளி எனப் பெருஞ்சக்தியின் ஒருவகை வடிவமே வன துர்க்கையாகும்.”**[211] என்னும் அறிஞர் கூற்று இருப்பினும் காளியும், கொற்றவையும் ஒன்றானவர் அல்லர். இவ்விருவரும் வேறானவர் என்பதை கீழ்காணும் சிலப்பதிகார வரிகள் விளக்குகின்றன.

**“ அடர்த்தெழு குருதி அடங்காப் பசுந்துணிப்**

**பிடர்த்தலை பீட மேறிய மடக்கொடி**

**வெற்றிவேற் றடக்கை கொற்றவை யல்லல்**

**அறுவர்க்கிளை நங்கை இறைவனை**

**ஆடல் கொண்டருளிய அணங்கு சுருடைக்**

**குாகை முகந்த காளி தாருகன்**

**பேருரங் கிழிந்த பெண்ணு மல்லள்”**[212]

தலைவிரி கோலமாய் ஒற்றை சிலம்புடன் அரண்மனை வாயில் வந்து நிற்கும் கண்ணகியை மன்னனுக்கு அறிவிக்கும் காவலன் முதலில் கொற்றவை அல்லள் எனக் கூறுகின்றான். மேலும் காளியும் அல்லள் எனக் கூறுவதால் கொற்றவையும் காளியும் வேறுபாடு ஆனவர் என்பதை அறிய முடிகின்றது.

## கொற்றவை திருக்கோலம்

கார்காலத்தில் தை நீராடல் ஆடிய கன்னிப் பெண்கள் பலவகையான மலர்களை காதில் சூடி மகிழ்ந்திருந்தனர். அவர்களில் ஒருத்தி கொற்றவை போலத் தோன்ற வேண்டும் என்பதற்காக ஒப்பனைச் செய்து கொண்டாள் என்பதனை,

**“ குவளைக் குழைக் காதின் கோலச் செவியின்**

**இவள் செரீஇ நான்கு விழிபடைத்தாள் என்று**

**நெற்றி விழியா நிறை திலகம் இட்டாளே**

**கொற்றவை கோலம் கொண்டு.”**[213]

என்னும் பரிபாடல் வழி காணலாம். சிலப்பதிகாரத்தில் வரும் வேட்டுவ வரியில் துர்க்கையானவள் எருமைத் தலையின் மீதும், காளையின் மீதும், சிங்கத்தின் மீதும் காட்சி தருபவளாகத் தோன்றுகின்றாள். வானோர்கள் வணங்கவும் வரிவாள் ஏந்தி நிற்கின்றனர். கங்கை முடி கொண்டானின் ஒரு பாகத்தைக் கொண்டு தோன்றும் இவளை,

**“ ஆனைத்தோல் போர்த்தப் புலியினுரியுடுத்திக்**

**கானத் தெருமை கருந்தலை மேல் நின்றாயால்**

**வானோர் வணங்க மறைமேல் மறையாகி**

**மங்கை உருவாய் மறையேத்தவே நிற்பாய்.”**[214]

என்னும் இப்பாடல் வரிகள் மூலம் கொற்றவையின் தோற்றத்தை அறியலாம்.

சிவபெருமானுக்குரிய தோற்றம் இவளுக்கும் கூறப்படுகின்றது. திருமாலைப் போன்ற நீண்ட உருவம் கொண்டு சங்கு சக்கரத்தையும் ஏந்தி நிற்கின்றாள். நீண்ட வாளினையும் ஏந்தி நிற்கின்றாள். காளி போன்று சிங்க வாகனத்தையும் கொண்டு இருக்கின்றாள். காளி போன்றே கடுமையான நிறத்தினைக் கொண்டவள். வடதிசை நோக்கி நின்ற வண்ணம் காட்சி தருகின்றாள்.

கொற்றவை உறையும் இடங்களாக அயிரை மலை, விந்தமலை என இரண்டினையும் காண முடிகின்றது. அயிரை என்பது கொற்றவை உறையும் ஒரு மலையாகும்.

**“ நிறம்படு குருதி புறம்படின் அல்லது**

**கேடு இலவாக பெரும! நின் புகழே”**[215]

என்னும் வரிகள் எடுத்தியம்புகின்றன. மேலும் விந்தாடவி என்னும் காட்டில் உயர்ந்து நிற்கும் மலையில் வாழும் துர்க்கையாகவும் கொற்றவை காணப்படுகின்றாள். மேலும்,

**“கடவுட் பெயரிய காள மொடுகல் உயர்ந்து”** [216]

என வரும் பாடல் வரிகள் காணப்படும் ‘கடவுள்’ என்னும் சொல் மலையில் உறையும் கொற்றவையினைக் குறித்தே நிற்கின்றது. பண்டைய பெரு மக்கள் பாலை நிலத்திற்குரிய பாலைப்பண் பாடி கொற்றவையை மகிழ்வித்து வணங்கி வாழ்ந்தனர் என்பதையும் அறிய முடிகின்றது.

## சிவன்

தமிழர்களின் வழிபாடுகளில் சிவவழிபாடு மிகத் தொன்மை வாய்ந்ததாகும். சிந்துவெளிச் சிவனும் சங்க இலக்கியத்தில் காணப்படும் சிவனது சிறப்பு அடையாளங்களும் ஒன்றாகவே உள்ளன. சங்க இலக்கியத்தில் காணப்படும் சிவன் வேதகால குறிப்பிலிருந்து முற்றிலும் வேறுபடுகின்றான். முக்கண் பெற்று முத்தொழில் புரிந்து தமிழரின் சிவனாகவே காணப்படுகின்றான்.

## தொன்மை

சிவன் உலக உயிர்கள் யாவற்றிற்கும் பழமையானவன். சிவன் உமை திருமணத்தின் போது தென்திசை உயர்ந்த நிலையை நீங்கிப் பொதிய மலையில் இருந்தவர் அகத்தியர்; இறைவனோடு ஒப்ப இருந்தமையால் அகத்தியரும் கடவுள் எனக் குறிக்கப் பெறுகிறார். எனவே புராண இதிகாச காலங்களுக்கு முற்பட்டவன் சிவன் என்பதை மதுரைக் காஞ்சி உணர்த்துகின்றது.

**“ அமர்கடக்கும் வியன் தானைத்**

**தென்னவன் பெயரிய துன்னருந் துப்பின்**

**தொன்முது கடவுட் பின்னர் மேய**

**வரைத்தாழ் அருவிப் பொருப்பிற் பொருந.”**[217]

மேலும்,

**“ நீரும் நிலனும் தீயும் வளியும்**

**மாசு விசும்பொடு ஐந்துடன் இயற்றிய**

**மழுவான் நெடியோன் தலைவனாக.”[218]**

ஐம்பூதங்களையும் படைத்தவன். ஏனைய தெய்வங்களுக்கு மட்டுமல்லாது இயற்கைக்கு முன்னும் தோன்றியவன் என்பதால் இவனின் தொன்மையும் முதன்மையும் எளிதில் புலப்படுகின்றது.

## சிவனுக்கு வழங்கப்படும் பெயர்கள்

சிவன் என்னும் பெயர் தொல்காப்பியத்திலோ, சங்கப் பாடல்களிலோ காணப்படவில்லை. ஆனால் பல்வேறு சிறப்புப் பெயர்களால் அழைக்கப் பெறுவதைக் காண முடிகின்றது.

எட்டுத் தொகை, பத்துப்பாட்டு நூல்களில் முதுமுதல்வன், இறைவன், தொல்முதுகடவுள், இமையவன், முக்கட் செல்வா், முக்கணான், முக்கண்ணான், நெட்டிருவுங் கூந்தற் கடவுளா், தாழ்சடை அந்தணன், திரிபுரம் எரித்த விரிசடைக்கடவுள், கறைமிடற்று அண்ணல், நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன், மாதொருபாதியன் மழுவாள் நெடியோன், ஆலமா் கடவுள், ஆலமா் செல்வன், மழைதலை வைத்தவா், அரும்பெறல் ஆதிரையான், பைங்கண் பாா்ப்பன், ஏற்று ஊா்தியான், புங்கம் ஊா்பவன், புதுத்திங்கட் கண்ணியான், காலக்கடவுள், கணிச்சியோன் போன்ற தொடா்கள் சிவன் குறித்து வருவனவாகத் தெரிகின்றன. சிவனின் உருவ அமைப்பின் அடிப்படையிலும் நிகழ்வுகளின் அடிப்படையிலும் சிவனை அடையாளப் படுத்தும் சில சொற்களை சங்கப் பாடல்களில் காண முடிகின்றன.

## திருவுருவம்

சிவ பெருமானின் திரு உருவக் காட்சியானது முழுமையுமாக சங்க இலக்கிய கடவுள் வாழ்த்துப் பாக்களில் காண முடிகின்றது. உமையொரு பாகனாகத் திகழும் சிவனின் காட்சியானது ஐங்குறுநூற்றில்,

**“ நீலமேனி வாலிழை யாகத்து**

**ஒருவன் இருதாள் நிழற்கீழ்**

**மூவகை உலகும் முகிழ்ந்தன முறையே”**[219]

எனக் காண முடிகின்றது. சிவனது திருவுருக் காட்சியினை அகநானூற்றுக் கடவுள் வாழ்த்துப் பாடல் போற்றிக் கூறும் பொழுது,

**“ கார் விரி கொன்றை பொன்தேர் புதுமலர்**

**தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்**

**மார்பின் ஃதே மைஇன் நுண்ஞாண்**

**நுதலது இமையா நாட்டாய்**

**தாவில் தான் நிழல் தவிர்ந்தன்றால் உலகுக “**[220]

மூன்று உலகமும் சிவனின் திருவடிக் கீழ் தங்கியுள்ளதாகும். செவ்வானம் போன்ற மேனி கொண்ட சிவன் மூன்றாம் பிறையை தலையில் சூடியவன். அவனது சடைபோன்ற பிறையும் ஒளிர்கிறது. கொன்றைத்தாரும். கண்ணியும் அணிந்துள்ளான் கையில் கணிச்சியும் மழுவினையும் முத்தலைச் சூலமும் கொண்டு உள்ளான் என சிவனது திருக்கோலம் பற்றிக் கூறப்படுகின்றது.

## நிறம்

'சிவன்', 'சிவம்' என்னும் சொற்கள் செம்மை என்னும் சொல்லை அடியாகப் பிறந்தது. எனவே சிவந்த நிறங் கொண்டவன் சிவன் என்பது புலனாகின்றது.

**" முக்கண்ணான் உருவே போல் முரண்மிகு குரலும்"** [221]

**" அரும் பெறல் ஆதிரையான் அணிபெற"**[222]

**" பெருந்தண் சண்பகம் போல"**[223]

என்னும் வரிகள் எடுத்தியம்புகின்றன.

## திருச்சடை

சிவனின் திருச்சடை பெரும் அழகுடையது. இவனது திருமேனி போன்றே திருமுடியும் நெருப்பை ஒத்துக் காணப்படும். இச்சடையினில் கங்கையினைக் கொண்டுள்ளதால் ஈரச் சடையினாகத் தோன்றுகின்றான்.

**" ஏற்று வலன் உயரிய எரிமருள் அவிர்சடை"**[224]

**" மிக்கொளிர் தாழ்சடை மேலரும் பிறைநுதல்"**[225]

**" ஈர்ஞ்சடை அந்தணர் "**[226]

என்னும் வரிகளால் அறியலாம்.

## நுதல்விழி

சிவன் இயற்கையில் உள்ள ஞாயிறு, திங்கள், நெருப்பு என்னும் இம்மூன்றையும் தமது திரு நுதல் விழிகளாகப் பெற்றவன்.

**" முக்கட் செல்வர் நகர்வலம் செயற்கே**

**இறைஞ்சுக பெரும நின் சென்னி"** [227]

என்னும் புறநானூற்றுப் பாடல்வரி மூன்று கண்களில் மூன்றாவது நெற்றிக்கண்ணையும் சிறப்பிக்கின்றது. இவை மட்டுமின்றி இறைவனின் நுதல்விழி நாட்டத்தினை,

**“ நுதல் விழி நாட்டத்”**[228]

எனச் சிலப்பதிகாரமும்,

**“ கடந்தடு முன்பொடு முக்கண்ணன்”**[229]

பாலைக்கலியும்,

**“ முக்கண்ணான் உருவே போல்”** [230]

முல்லைக் கலியும் எடுத்தியம்புகின்றன.

## நீலமணி மிடறு

சிவன் நஞ்சை உண்டமையால் ‘கறை’, ‘மிடறு’ என்றும் ‘மணிமிடறு’ என்றும் சிறப்பிக்கப்படுகின்றான். மேலும் மலைபடுகடாம்,

**“ நீரகம் பணிக்கும் அஞ்சு வரு கடுந்திறல்**
**பேரிசை நவிரம் மேஎ உறையும்**
**காரி உண்டிக் கடவுளது இயற்கை”**[232]

பெரும் புகழ் கொண்ட நவிரமலையில் உறைந்த காரியுண்டிக் கடவுளைக் (நஞ்சுண்டான் ) குறிப்பிடுகின்றது.

## ஊர்தியும் கொடியும்

சிவபெருமான் ஆனேறு பொறித்த உருவக் கொடியினைக் கொண்டவன். பலரும் புகழ்தேற்றும் திண்ணிய தோள்களை உடையவன். உமையினை

ஒரு கூறாகக் கொண்டும் திகழ்கின்றான். அவனது ஊர்தியும் கொடியுமாக வெண்காளை விளங்குகிறது. பாலைக்கலியானது,

**“ ஆனேற்றுக் கொடியோன் போல் எதிரிய இவைமும்”**[233]

எனக் குறிப்பிடுகின்றது. இவையன்றி,

**“ உருவ வேற்று ஊர்தியான் ஒள்ளணிநக் கண்ண “**[234]

**“ ஆனேறு ஊர்ந்தோன் அருவில் தோன்றி”**[235]

என்னும் பாடல்வரிகளும் சான்று தந்து உதவுகின்றன.

## சைவம்

தமிழகத்தில் விளங்கும் சைவ சமயம் சைவ சித்தாந்தம் என்னும் பெயரில் உணரப் பெறுகிறது. சைவ சித்தாந்த நூல்கள் சிவனை அடைவதற்குரிய நெறியை விளக்கிக் காட்டுகின்றன. கடவுளை நாடிச் செல்லும் நெறிகள் பலவற்றினும் தலை சிறந்ததாய் அமைவது முதற் சைவநெறி என சேக்கிழார் குறிப்பிடுகின்றார். திருமூலர் இறைவனோடு கலந்தலாகிய இந்நெறியினை ‘திருநெறி’ எனவும் கூறுகிறார்.

சைவம் என்பது சிவம் என்னும் செந்தமிழ் சொல்லடியாய் பிறந்து சிவனொடு தொடர்புடைமை என்னும் பொருளில் வழங்குவது. சிவனைப் பற்றிய நிலையையும் சைவ நூல்களையும் சிவனடி சேர்தற்குரிய நெறியையும் அச்சொல் குறிக்கும். சித்தாந்தம் என்பது சித்த அந்தம் என்ற திருசொற்களால் ஆகி முடிபின் முடிபு என்பது பொருள் பெறும். சைவ நூற்களின் முடிந்த முடியைக் கூறும் நூல்களைச் சைவ சித்தாந்தம் என்பர்.[236]

சைவம் அல்லாத சமயங்களையும் சைவ சமயத்தில் காணப்படும் உட்பிரிவுகளையும் எளிதில் விளக்கிக் கொள்ள சித்தாந்தம் என்னும் பெயர் உதவுகிறது. சித்தாந்தம் அல்லாத கொள்கையுடைய சமயங்களை நான்கு வகையுள் அடக்குவர். அவை 1.புறப்புறச்சமயம், 2.புறச்சமயம்,

3.அகப்புறச்சமயம், 4.அகச்சமயம் என்பனவாகும். உலகாயுதம், சமணம், பௌத்தம், சித்தாந்தத்தோடு முரண் கொண்ட புறப்புறச்சமயங்கள் ஆகும்.

சமயங்கள் வேதம், கடவுள் இவையிடத்து நம்பிக்கையில்லாதவையாகும். நியாயம், மீமாம்சம், ஏகான்ம வாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் என்னும் இவை வேதத்தைப் பிரமாணமாகக் கொள்ளினும் சில ஆகமங்களைப் பிரமாணமாகக் கொள்ளாத இவற்றைப் புறச்சமயம் என்பர். சிவத்தைப் பரம்பொருள் எனக் கொண்டு, சித்தாந்தத்துள் கூறிய சில பொருள்களின் உண்மையை ஏற்றுக் கொள்ளாதவை அகப்புறச் சமயங்களாகும். அவை பாசுபதம், மாவிரதம், காளம் (காபாலம்) வாமம், பைரவம் (வைரவம்) ஐக்கிய வாதம் என்பனவாகும். அகச்சமயம் என்பது பல வகையான சைவ சமயமாகும். இவை சித்தாந்தத்துள் கூறப்பெறும் எல்லாப் பொருள்களையும் ஏற்றுக் கொண்டு காணப்படும், அவை பாஷாணவாத சைவம், பேதாவாத சைவம், சிவசமவாத சைவம், சிவாத்துவித சைவம் என்பனவாகும்.

சைவ சமயத்திற்கு மூலமான முதன்மையான நூல்கள் சில ஆகமங்கள் இருபத்தெட்டாகும். இதில் காமாகம் மிக முக்கியமாகத் திகழ்கின்றது. வேதமும் ஆகமும் இறைவனது திருவாக்கு என திருமூலர் கருதுவார்.

**“தென்னிந்தியாவில் தமிழ் மொழியில் சங்ககாலத்து நூல்களாகிய பழையதும் இன்றுமுள்ளனவாகிய இலக்கியங்களில் சிவனாரைப் பற்றியும் அவருக்குச் செய்யப்படும் வழிபாடு பற்றியும் குறிப்புகளாக உள்ளன. சைவ சமயத்தின் சிறந்த காலமாவது அறுபத்து மூன்று அடியாரென்றும் அல்லது நாயன்மாரென்றும் அழைக்கப்படும். திருத்தொண்டத் தொகையில் வகைப்படுத்தப்பெற்ற அடியார்கள் வாழ்ந்த சிவபெருமானுக்கு அன்பு செய்யும் முறைமையைக் காட்டிய காலமேயாகும்”**[237] என சர்வ பள்ளி இராதாகிருஷ்ணன் குறிப்பிடுகின்றார்.

சைவ சித்தாந்தத்திற்கு குறிப்பிடும் முப்பொருள் உண்மைகள் பதி ( இறைவன் ), பசு ( உயிர் ) பாசம் ( கட்டு ) என்பதாகும். சித்தாந்தத்தில் இறைவன் உயர்ந்த உண்மைப் பொருளாகும்.

இறைவனின் அவதாரம் என்ற கொள்கையைச் சித்தாந்தம் ஏற்பதில்லை, பிற கடவுளர்கள், தேவர்கள், பிறப்பு, இறப்பு, இன்ப துன்பங்கள் இவற்றிற்கு ஆட்படுவர். சிவன் இவற்றிலிருந்து வேறானவன், சிவன் கர்மம் உடையவன் அல்லன். கருமம் என்பது அவதரித்தலுக்கே உரியதாகும். பிறப்பும் இறப்பும் கருமத்தின் காரணமாக அமைவதாகும்.

பதிக்கும், பசுவிற்கும் உள்ள ஒருமைப்பாடு உடலுக்கும் உயிர்க்கும் உள்ளது போலாகும். உயிரின் முக்தி நிலை நான்கு நெறிகளால் அடைய முடியும் என்கிறது. நெறிகளாவன சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பனவாகும். தாச, சற்புத்திர சக சன்மார்க்கங்களால் இறைவனை அடைபவர் இறைவனை நெருங்க மட்டும் முடியும்.

சிவஞான போதம் உட்படத் தமிழில் உள்ள மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்காகும். அவற்றுள் திருவுந்தியாரும், திருக்களிற்றுப்படியாறும், தவிர ஏனையவை யாவும் சிவ ஞான போதத்திற்கு விளக்கமாகப் பின்னால் எழுந்தனவாகும். கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில் தான் சிவஞான போதம் தோன்றியது என்றாலும் அதற்கு முன்பே சித்தாந்தம் என்னும் வழக்கு இருந்துள்ளது. சங்க நூல்களில், நாயன்மார்களின் பாடல்களிலும் திருமூலரின் திருமந்திரத்திலும் சித்தாந்தக் கோட்பாடுகள் விரவிக் கிடக்கின்றன. திருமந்திரத்தில்,

**“ கற்பனை கற்றுக் கலைமன்னு மெய்யோக**

**முற்புத ஞான முறை நண்ணியே**

**தோற்பத மேவித் துரிசற்று மேலான**

**துற்பரங் கண்டுனோர் சைவ சித்தாந்தரே”** [238]

என்று ‘சைவ சித்தாந்தம்’ என்னும் பெயரையே குறிப்பிட்டு உள்ளார். பதி, பசு, பாசம் என்னும் மூன்றில் உலகம் ஒன்றே காணப்படுவது, இதன் வழியே தான் ஏனைய இரண்டும் அறியப்படும், உலகம் காரியம் இதனை உண்டாக்கியவன் கடவுளாகிய கருத்தா என்னும் சிவ ஞான போதக்கருத்தினைத் திருமூலர்,

**“ குசவனைப் போலெங்கள் கோன்நந்தி வேண்டின்**

**ஆசைவில் உலகம் அதுஇது வாமே”** [239]

என்று கூறுவார். பதியினைப் போலவே பசு, பாசம் இரண்டும் அநாதியென்பதனைப்,

**“ பதி பசு பாசம் எனப் பகவர் மூன்றில்**

**புதியிணைப் போற்பசு பாசம் அநாதி”** [240]

என்கின்றார். உயிர்களின் வினையாகிய கன்ம மலத்தைப் பக்குவப்படுத்தவும், அறியாமையாகிய ஆணவத்தைப் போக்கவும் இறைவன் உயிர்கள் பொருட்டு அழிக்கிறான். மீண்டும் படைக்கிறான். இங்ஙனம் முத்தொழிலையும் அவன் செய்வதனை அப்பர்

**“ தோற்றம் நிலையிறுதிப் பொருளாய்**

**வந்த மருந்தவன் காண்”** [241]

என்கிறார். இறைவன் அருவாய் அனைவரையும் இயக்குகிறான். உருவற்ற உயிர் உருவுள்ள உடலை இயக்குதல் போல உருவமற்ற கடவுள் உருவுள்ள பொருள்களை இயக்குகிறான். எல்லாப் பொருளினும் ஊடுருவி ஒன்றாகவும் பலவாகவும் உள்ளான் என்பதனை,

**“ பரத்திலே ஒன்றாய் உள்ளாய்ப் புறமாகி**

**வாத்தினுள் மாயவனாய் அயனாகித்**

**தரத்தினுள் தான்பல தன்மையனாகி**

**சுரத்தினுள் நின்று கழிவு செய்தோனை"** [242]

என்கிறார் திருமூலர் இறைவன் தானாய், வேறாய், உடனாகி நிற்பவன் என்பதனை,

**" ஈறாய் முதல் ஒன்றாய் இருபெண்ணான் குணமூன்றாய்**

**முறா மறை நான்காய் வருபூதம் அவை ஐந்தாய்**

**ஆறாச்சுவை ஏழோசையொடெட்டுத் திசை தானாய்**

**வேறாய் உடன் ஆனாள் இடம் வீழிம்மிழலைமே"** [243]

என்றார் சம்பந்தர். இதனையே சிவஞான போதமும்,

**" அவையே தானே யாயிரு வினையிற்**

**போக்கு வரவு புரிய வானையி**

**வீக்க மின்றி நிற்கு மன்றே"** [244]

என்கின்றார். ஆன்மாக்கள் எண்ணற்றவை என்ற சைவ சித்தாந்தக் கொள்கையை,

**" உரை சேரும் எண்பத்து நான்கு நூறாயிரம் யோனி பேதம்**

**நுரை சேரப் படைத்த வற்றின் உயிர்க்குயிராய்**

**அங்கங்கே நின்றாள்"** [245]

என்னும் சம்பந்தர் வாக்கால் உணரலாம். இதே கருத்தை வாங்கி சிவஞான சித்தியார்,

**“ அண்டசம் சுவேதசங்கள் உற்பிச்சம் சாராயு சத்தோ**

**டேண்டரு நாலெண்பத்து நான்குநூறாயிரத்தால்**

**உண்டு பன் யோனி யெல்லாம்”** [246]

என்கிறது. எனவே சங்க இலக்கியங்களிலே இடையிடையே காணப்படும் சித்தாந்தக் கருத்துக்கள், நான்காம் நூற்றாண்டுக்கும் பன்னிரண்டாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தவையாகிய திருமுறைகள் எனப்படும் தோத்திர நூல்களில் அனுபூதிமான்களுடைய அனுபவ வாக்காக இடம்பெற்றுப் பதின்மூன்றாம் நூற்றாண்டில் தமிழிலே முதன் முறையாக தத்துவ சாஸ்திர நூல்களாக வெளிப்பட்டன எனக்காண முடிகின்றது.

## அன்புநெறி

சைவம் உலகு உணர்த்தியது அன்பு நெறியே. அன்பு சிவம் என்பது சைவத்தின் உயிர் நாடிக் கொள்கை,

**“ அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்**

**அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்**

**அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்**

**அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே”** [247]

என்கிறார் திருமூலர். பிறர்துன்பம் கண்டு இரங்கி உதவிட முந்துவதே சமயநெறி. மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்று வலியுறுத்தினர். மேலும்,

**“ படமாடும் கோயில் பரமர்க் கொன் றீயில்**

**நடமாடும் கோயில் நம்பர்க்கா காதே**

**நடமாடும் கோயில் நம்பர்க் கொன்றீயில்**

**படமாடும் கோயில் பரமர்க்கங்காகும்''** [248]

என்கிறார் திருமூலரும்.

**" இரப்பவர்க் கீய வைத்தார் ஈரவர்க்கருளும் வைத்தார்**

**கரப்பவர் தங்கட் கெல்லாம் சுடுநாகங்கள் வைத்தார்''** [249]

என்கிறார். அப்பர் வஞ்சனையும், வன்சொல்லும் கூடாது என்று வலியுறுத்தினர்.மேலும்,

**" வஞ்சமின்றி வணங்கு மின் வைகலும்**

**வெஞ் சொலின்றி விளங்கு மின் வீடுற''** [250]

என்கிறார் அப்பர்.

உயர்ந்த குறிக்கோள் ஒன்றைக் கொண்டு அதற்காக எதனையும் தியாகம் செய்ய முன்வரும் உறுதிப்பாட்டை வலியுறுத்துவதே சைவம் சுருக்கமாகக் கூறினால் சைவ சமயம் தமிழருடைய அடிப்படைப் பண்பாட்டைக் காத்ததோடு தமிழகக் கலைகளையும் வளர்த்து தமிழா் நாகரிகத்தையும் வளப்படுத்தி வாழ வைத்துள்ளது எனலாம்.

உயிர் இறைவனது தன்மையினை தன்னுடையதால் பெறலாம். ஆனால் இறைவனாக முடியாது என்பது சைவ சமயத்தின் கொள்கையாகும்.

## காஷ்மீர சைவம்

அறுபத்து நான்கு ஒருமைக் கொள்கை உடைய சிவ ஆகமங்களிலிருந்து தோன்றிய சமயம் காஷ்மீர சைவம். இது வேதத்தை ஏற்றுக் கொள்வதில்லை, சுதந்திர இச்சையையே அடிப்படையான நூல் பொருளால் மேற்கொள்வதாய் சுதந்தியாதவாதம் எனவும் அழைக்கப்படும்.

எல்லாத் தோற்றமும் அடிப்படையான நாற்பொருளின் அடிப்படை என்பதால் இதனை ஆபாசவாதம் என்று கூறுவர். இறைவன் ஒருவன் என்ற ஒருமைக் கொள்கையினை உருவாக்கியவர். பெரும்பான்மை காஷ்மீரத்தில் இருப்பதால் இச்சமயம் காஷ்மீரச் சைவம் எனப்பட்டது. வாசுகுப்தர் ஆகமக் கொள்கைகளைச் சாத்திர முறையால் விளக்கியவர் ஆவார். காலத்தபட்டர் என்பவர் இவரது மாணவர். இவர் தன் ஆசிரியரின் “ஸ்வந்தகாரிகையை எழுதினார். காஷ்மீர சைவர்களின் ஒரு பிரிவினராக இருந்த **“சாக்ததவைய்”** வாகத்தையும் பத்ருஹரி கூறிய பைசந்தி விளக்கத்தையும் மறுத்து உண்மையை உணர்த்தி நின்றார்.

காஷ்மீரம் பௌத்தத்தின் ஆதிக்கத்தில் இருந்த வேளையில் உத்பாலாச்சாரியார் ஒருமைக்கொள்கையை நிலை நிறுத்தினார். அபிநவ குப்தர் ஆற்றிய உரைகள் சில ஆகமங்களில் காணப்படும் அறுபத்து நான்கு தத்துவங்களையும் ஒருமைக் கொள்கையோடு தொடர்புபடுத்தியது.

**“ காஷ்மீர சைவம் ஓர் அனுபூதி அனுபவ நிலையுடையது. அது உண்மை பொருள் வரம்பில்லாத முழுமுதற்பொருள் எனும் கருத்துடையது”**[251] எனக் கூறுவதிலிருந்து அனுபூதி அனுபவ நிலை என்பது உண்மைப் பொருள் தனக்கு மேல் ஒன்றும் இல்லாத உறுதி பொருளைக் குறிப்பதாகும். கண்களால் காணவும், நினைத்துப் பார்க்கவும் இயலாது ஒன்று எனக் காண முடிகின்றது. அனுபவத்தால் அறியப்படும் பொருள், புலன்கடந்து எங்கும் நிறைந்து நிற்கும் பொருள். இதன் உண்மையினை அறிய தெய்வீக சாதனப் பயிற்சியாளர் மட்டுமே அறிய முடியும் என்கிறது. கடவுளிடத்திலிருந்து உயிரை வேறுபடுத்தவும், சிறுமைப்படுத்தவும் மலங்களிலிருந்து உயிரை விடுவிக்கவும் தெய்வீக அறிதல் சாதனம் துணைநிற்கிறது என விளம்புகின்றது.

## வீர சைவம்

வீர சைவத்தை லிங்காயுதம் என்று கூறுவர். இச்சமயத்தார் உடம்பில் பரம்பொருளின் அடையாளமாக இலிங்கத்தைத் தரிப்பர். ஆசாரம், சாஸ்திரங்கள் நெறியினைக் கொண்டதாகும். உயிரைத் தெய்வத் தன்மையாக்குவது இதன் கொள்கையாகும்.

வீரசைவத்தை நிறுவியவர்கள் ஐந்து ஆச்சாரியர்கள் என்ற மரபு உண்டு. இவர்கள் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்டவர். இவ்வாச்சார்யார்களில் சிலர் வாசவர் காலத்தவர் என்பர். வசவர் சமண அரசனுக்கு பிரதம மந்திரியாக இருந்தபோதும் வீர சைவசமயத்தை தோற்றுவித்தார் என அறியலாகிறது.

சைவரால் வீர சைவம் ஒரு சமயமாகப் பிறந்தது. அது சிவாநுபவ மண்டபத்தால் விரைவுடன் இயங்கியது. அம்மண்டபம் சமயாநுபவத்திற்கு இல்லமாயும், சமய சமூக நிலைக் கழகமாகவும் விளங்கியது. இவ்வுலகில் ஒவ்வொரு மனிதனும் தன்னிலையறிதல் வேண்டி கி.பி.1160 ம் வருடத்தில் சைவர் இக்கழகத்தை நிறுவினர் என அறிய முடிகின்றது.

வீர சைவ சமயத்தினருக்கு வடிவமின்றி மூல முதற் பொருளே எல்லா உண்மைப் பொருள்களையும் ஒற்றுமைப்படுத்தற்கு உறுதி செய்யும் தத்துவமாகியது. பரம் பொருளுக்கும் அறிவுக்கும் உள்ள தொடர்பினை தலம என்னும் கருத்துடன தொடங்குகிறார். உண்மையான அக நோக்கத்தால் அறிவின் வழி மூலப்பொருள் நிலையினையும் உணர்தல் வீர சைவ நெறியாகும். இலிங்கம் என்பது வெளிவருவது இதன் அடிப்படையில் பரம்பொருளிடத்து உலக உயிர்கள் யாவும் ஒடுங்குகின்றன. அதனின்று மீண்டும் தோன்றுகின்றன என வீரசைவம் தமது கொள்கையினை உறுதி செய்கின்றது.

## காமன்

காம இச்சை உள்ளத்திலிருந்து தோன்றுவது எனவே காமனின் பிறப்பிடம் உள்ளமாகும். இச்சையினைத் தோற்றுவிக்கும் கடவுளாக இக்காமன் கருதப்படுகின்றான் மதன், மதனன், மன்மதன் என்கின்ற பெயர்களால் அழைக்க படுகின்றான் உயிர்களிடத்து மோகத்தைக் தோற்றுவிக்கும் ஆற்றலால் மோகன் என்றும் அழைக்கப்படுகின்றான்.

## உருவம் இல்லாதவன்

மன்மதன் ஈசனை அணுகித் தனது மணம் மிக்க மலர்க்கணைகள் ஐந்தையும் சிவபெருமான் மீது பிரயோகிக்க ஈசன் அதனை அறிந்து தனது நெற்றிக் கண்ணைத் திறந்து மன்மதனை எரித்திட அவன் சாம்பலானான். அது கண்ட தேவர்கள் மேலும் இறைவனைப் பிரார்த்தித்துத் தங்கள் துயரத்தைக் கூறி முறையிட்டதோடு காமனையும், உயிர்ப்பிக்க வேண்டினர், கருணைக் கடலாகிய சிவபெருமான் மறுத்து தேவர்களை அனுப்பிவிட்டார்.

அப்போது காமனை இழந்த அவன் மனைவி ரதிதேவி தவறை மன்னித்து உயிர்பித்து அருள வேண்டி பிரார்த்தித்தாள். ஈசனும் கௌரி, கல்யாணத்தின் போது மன்மதனை அளிப்பதாகக் கூறிடவும் அவளும் இறைவன் கருணையைப் போற்றினாள், மேலும் உருவமில்லாத காமனை சிலப்பதிகாரம்,

**“உருவிலான் ஒரு பெருங்கரும்புவில்”** [252]

எனக் கூறுகின்றது. மேலும்,

**“ உருவிலாலின் ஒரு பெருஞ்சேனை”** [253]

என்று கூறுகின்றது.

## கொடி, படை

காமனுக்குரிய கொடி மீன் கொடியாகும். இதனை,

**"மீனேற்றுக் கொடியோன்"** [254]

எனவும்,

**" மகர வெல்கொடி மைந்தன் சேனை"** [255]

எனவும், சிலப்பதிகாரம் கூறுகின்றது. மேலும் காமனுக்குரிய கொடியினை,

**" மீனேற்றுக் கொடியோன் போல் மிஞிறு ஆர்க்கும் காஞ்சிளம்"** [256]

என்று சுறாமீனைக் கொடியாகக் கொண்ட மன்மதனை கலித்தொகை எடுத்தியம்புகின்றது. இவையன்றி,

**"குறியறிந்தேன் காமன் கொடி எழுதி என்றும்"**[257]

கூறுகிறது**.**

காமன் பொழிலையே பாசறையாக கொண்டவன். அவனுக்குரிய படை வெண்படையேயாகும். கரும்பு வில்லில் வண்டினத்தை நாணாகக் கோர்த்து மலர் அம்புகளை எய்யும் தன்மையுடையவன். இவ்வுண்மையினை,

**" - - - - - - - - - அரிபடு ஜவிரை மாண்பகழி**

**அரத்தின் வாய் போன்ம் போன்ம் போன்ம்"** [258]

**" வேலாற்று மொய்ட்பனின் வரைமலர் அம்பினோன்**

**போலாற்று முன்பிற் புனைகழல் மைந்தரொடு"** [259]

என்னும் பரிபாடல் எடுத்தியம்புகின்றது.

**"சலப்படை யான் இரவில் தாக்கியது எல்லாம்**

**புலப்பட..................................."** [260]

**" ஆர்த்ததும் அயில் அம்பு நிறைநாழி**

\- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

**கார்ததும்பும் நீர்ததும் புவன சுணை**

**ஏர்ததும் புவன பூவனி செறிவு"** [261]

என்னும் பாடல் வரிகள் தனித்து உள்ளவர்களை வருத்தும் வஞ்சனை மலர்க்கணையாக தாமரைப்பூ, மாம்பூ, அசோகம், முல்லை, குவளை என ஐந்து அம்புகளைக் கொண்டவன் காமன் என்கிறது. இவனது முரசம் கடல்: வெண்கொற்றக்குடை சந்திரன்: இவனது பட்டத்து யானை இருள்: இவனது குதிரை கிளி. அடையாள சின்னம் குயில். இவனது போர் வாள் தாழம்பூ. பவனிவரும் தேர் தென்றல் தேரில் உள்ள கொடி மீன் என இவற்றினை அறிய முடிகின்றது.

## நெடியோன் மைந்தன் :

காமன் திருமாலின் மகன் என்றும் திருமகள் மைந்தன் என்றும் பூமகள் மைந்தன் எனவும் போற்றப்படுகிறான். திருமால் போன்ற கருநிறம் கொண்டவன் காமன். இதனை,

**" நெடியோன் மகன் நயந்து தந்தாங்கு அனைய**

**வுடிய வடிந்த வனப்பின் என் நெஞ்சம்"** [262]

என்று கலித்தொகை கூறுகிறது. காமனின் தம்பி சாமன் ஆவான்.

**“ - - - - - - - - - - - - - - - - - சுவர்களை**

**சாமனார் தம்முன் செலவு காண்”** [264]

என்னும் வரிகளால் இவ்வுண்மையினை உணர்த்துகிறது.

## நான்முகன்

உலகில் படைக்கும் தொழிலைக் கொண்டவன் நான்முகன். இவன் பிரம்மன் என்றும் அழைக்கப்படுகின்றான். இவன் படைக்கும் தொழில் புரிவதை

**“ பல்வயின் உயிரெல்லாம் படைத்தான் “** [265]

**“ ……………………………….. பொதுவர்**

**உருகெழு மாநிலம் இயற்றுவான்**

**விரிதிரை நீக்குவான் வியன் குறிப்பு ஒத்தனர் “** [266]

**“ ஒர் இல் நெய்தல் கறங்க ஒர்இல்**

**ஈர்ந்தார் முழுவின் பாறித துப்பப்**

**…………………………………**

**படைத்தோன் மன்ற அப்பண்பிலானன்**

**இன்னா தம்ம இல் உலகம் “** [251]

என்னும் சங்கப் பாடல் வரிகள் மூலம் அறியலாம்.

## திருமால் மகன்

நான்கு முகங்கள், எட்டு கண்கள், எட்டு தோள்கள் கொண்ட நான்முகன் திருமாலின் உந்தித் தாமரையில் தோன்றியவன் என்பதனை,

**" நீல்நிற உருவின் நெடியோன் கொப்பூழ்**

**நான்முக ஒருவற் பயந்த பல்லிதழ்த்**

**தாமரைப்பொருட்டிற் காண் வரத் தோன்றி"** [268]

என பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது.

**" மாநிலம் இயலா முதன்முறை அமையத்து**

**நாம வெள்ளத்து நடுவண தோன்றிய**

**வாய்மொழி மகனொடு மலர்ந்த**

**தாமரைப் பொருட்டு நின் நேமி நிழலே"** [269]

என்று நான்முகன் தோற்றம் பற்றி பரிபாடலும் குறிப்பிடுகின்றது.

**" புலமும் பூவனும் நாற்றமும் நீ"** [270]

**" தாமரைப் பூவினுட் பிறந்தோன் தாதையும்**

**நீ என மொழியுமாம் ....................."** [271]

என்கின்ற பாடல் வரிகளும் தாமரையிலிருந்து பிறந்தவன் பிரமன் என்பதற்குச் சான்றுகளாக அமைகின்றன.

## மறை காவலன்

நான்கு மறைகளை அருளியவன் சிவன் அம்மறைகளை ஓதி காத்து வருபவன் நான்முகன். எனவே ஆதி அந்தணன் முதியவன் என்பதை,

**" ஆதி அந்தணன் அறிந்து பரி கொளுவ"** [272]

**" தொடங்கற்கண் தோன்றிய முதியவன் முதலாக "** [273]

**" வாய்மொழி மகன் என்றும்**

**முாநில மியலா முதன்மறை அமயத்து**

**நாடி வெள்ள நடுவண் தோன்றிய**

**வாய்மொழி மகனொடு மலர்ந்த**

**தாமரை ……………………..''** [274]

என நான்முகன் அழைக்கப்படுகின்றான்.

## உமை

சிவபெருமானின் இடப்பாகத்தே பொருந்தி இருப்பவள். அறத்தின் செல்வி. அறம் வளர்த்த செல்வி என்னும் பெயர்களும் இவளுக்கு உண்டு. இறைவன் முதுமுதல்வன் என்பதினால் இறைவியான உமை பழையோள் எனவும் அழைக்கப்படுகின்றாள். இவ்வுண்மையினை,

**" இழையணி சிறப்பிற் பழையோன் குழலி''** [275]

என்ற திருமுருகாற்றுப்படை நிறுவுகின்றது. இவன் மலையரசனின் மகன் என்பதால் உமையின் மகனான முருகன்,

**" மலைமகள் மகனே ……………….''** [276]

என அழைக்கப்படுவதை அறிய முடிகின்றது.

முத்தொழில் இயற்றும் இறைவன் அகிலங்கள் அனைத்தையும் அழிக்க எண்ணி ஆடும் " ஊழிக்கூத்து ஆடும் போது அருகே உருவான உமை , இறைவனது அழித்தல் நடனத்திற்குப் பாவை, சீர், தூக்கு என்னும் தாள அறுதிகளை வழங்குவாள் என்பதை,

**" கொடிபுரை நுசப்பினாள் கொண்ட சீர் தருவாளோ''** [277]

**"'' வண்டரற்றுங் கூந்தலால் வளர்த்தூக்குத் தருவாளோ''** [278]

**" முலையணிந்த முறுவலாள் முதற்பாணி தருவாளோ"** [279]

என்ற வரிகள் விளக்கி உரைகின்றன.

## திருமகள்

செல்வங்களைத் தருபவள் இவள். பாற்கடலை தேவரும் அசுரரும் இணைந்து கடைந்த போது அமுதத்துடன் தோன்றியவள் இலக்குமி, செல்வி, திரு, திருமகள், பொன், பொன்னி என்றெல்லாம் அழைக்கப்படுகிறாள். மன்மதனின் தாய் என்பதனால் 'மதன்றாய்', ' மலரம்பன் தாய்' என்பதனால் 'மதன்றாய்', 'மலரம்பன் தாய்' எனவும் பண்டைய வழக்கில் காணப்படுகின்றாள்.

## திருமால் மார்பில் இடம் கொண்டவள்

இருநிலம் கடந்தவன் மால், திருமகளான இலக்குமி, திருமால் மார்பில் உடையவள். இதனை,

**" திருமறு மார்பநீ அருளல் வேண்டும்"** [280]

**" செய்யோள் சேர்ந்தநின் மாசில் அகலம்"** [281]

**" இருநிலம் கடந்த திருமாறு மார்பின்"** [282]

**" திருமவர் மார்பன் கிடந்த வண்ணம்"** [283]

ஆகிய பாடல் வரிகள் எடுத்து இயம்புகின்றன.

## வெற்றி திருமகள்

சோழ வள நாட்டில் காடாக உள்ள இடங்களைத் திருத்தி மக்கள் வாழும் பகுதியாக மாற்றியவன் திருமாவளவன். திருமகள் நிலை பெற்றுத் தங்கும் பெருஞ்செல்வம் உடைய உறையூரின் மதிலில் மறைந்து அம்பு

எய்யும் அம்புக்கட்டுக்களை தொடுத்தவன். அப்படிப்பட்ட மதில்களில் வெற்றி தரும் திருமகள் தங்கும் வாயில் நிலைகள் இருந்தன. இதனை,

**" திருநிலை இய பெருமன் எயில்"** [284]

**" திருவுடை மன்னரைக்காணின் திருமாலைக் கண்டேனே"** [285]

என நம்மாழ்வார் குறிப்பிடும் திரு என்பதன் பொருளும்,

**" திருவீழ் மார்பில் தென்னவர் கோவே"** [286]

என இளங்கோவடிகள் குறிப்பிடும் திரு என்னும் பொருளும் செல்வம் வளம் கொண்ட திருமகளைக் குறித்தே ஆளப்பட்டுள்ளன என்பது தெளிவாகிறது.

## கணபதி வழிபாடு

சங்க இலக்கியங்களில் கணபதி பற்றியக் குறிப்பு எங்கும் இடம் பெறவில்லை. பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றான ஐந்திணை எழுபதில் கடவுள் வாழ்த்தில் முதன்முதலாக ஒரு கணபதி வாழ்த்துப் பாடல் இடம்பெற்றுள்ளது. முதலாம் இராஜேந்திர சோழன் ( 1012 – 1044 ) கங்கை வரைப் படையெடுத்து வெற்றி பெற்றான். இதனால் அந்த எல்லை வரை இருந்த குறுநில மன்னர்கள் சோழனுக்கு வரி செலுத்தியுள்ளனர். முதலாம் இராஜேந்திரனுக்குப் பிறகு முதலாம் குலோத்துங்க சோழன் முடி சூடிக் கொண்டான். அதே காலகட்டத்தில் கலிங்க நாட்டை அனந்த வர்மன் சோடகங்கன் ( கி.பி.12 நூற்றாண்டு ) ஆட்சி செய்தான். அவன் முன்னோர்கள் சோழ நாட்டுக்குக் கட்டி வந்த வரியைக் கட்ட மறுக்கிறான். இதனால் கோபம் அடைந்த குலோத்துங்க சோழன் தன் படைத்தளபதி கருணாகரத் தொண்டைமான் தலைமையில் படை அனுப்பி கலிங்க மன்னனைத் தோற்கடித்தான், வெற்றிக்குப் பிறகு அங்கிருந்து கொண்டு வந்த கலைப்பொருள்களில் ஒரு விநாயகர் சிலையையும் கொண்டு வந்து தொண்டைமானின் ஊரான திருச்செங்காட்டாங்குடியில் நிலை நிறுத்தினார். இதன் பிறகு தென்னிந்தியாவில் கணபதி வழிபாடு நடைபெற்று வருகின்றது.

## தொகுப்புரை

சங்க இலக்கியத்தில் கடவுள்கள் என்னும் இவ்வியலில் ஆய்தறிந்த செய்திகள் இயற்கை வழிபாடு தோன்றிய காலத்திலேயே கடவுள் குறித்த ஏற்புக் கருத்துக்களும் மறுப்பு கருத்துக்களும் தோன்றிவிட்டதைக் காண முடிகின்றது. ஐம்புலன்களுடன் தொடர்புபடுத்தப்பட்டு புலனறிவால் இறைவனைக் காணும் முயற்சி மக்களால் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றது.

இயற்கை கடந்த ஆற்றல்களாகக் காணப்படும் இன்றைக்கும் வானுலகில் சஞ்சரிப்பதாய் நம்பி வருகின்றோம். இயற்கை வழிபாட்டில் காணப்படும் சூரியன், திங்கள் என்பன தமிழ் மக்கள் வாழ்வியல் பண்பாட்டோடு இரண்டறக் கலந்த முறையை உய்த்துணரப்படுகின்றது.

நிலவியல் தெய்வங்களும் பெரும் கடவுளர்களும் என்னும் முல்லை நிலத் தெய்வமான திருமால் நிரை மேய்த்தலுக்கு நீரைத் தரும் தலைவனாக காணப்படுகிறான். எனவே நீண்ட நீர்நிலைகளான கடல் 'நெடியோன்' என்பதற்கு காரணமாக அமைகின்றது. திருமால் முல்லை நிலத்திற்குரியனவனாகக் கருதப்பட்டாலும் திருமால் நில எல்லைகளைக் கடந்து திருவேங்கடம், அழகர்மலை என்னும் குறிஞ்சி நிலங்களிலும் வணங்கப்படுகின்றான்.

குறிஞ்சி நிலக் கடவுளான முருக வழிபாடு தொடக்கத்தில் வேல் என்னும் அடையாளக்குறி வைத்து வணங்கப்பட்டுள்ளதைக் காண முடிகின்றது. காலப்போக்கில் பெருந் தெய்வ ஆக்கங்களால் நிலைத்த உருவவழிபாட்டுக்கு உரியவனாக முருகன் காணப்படுகின்றான். தமிழ்ச் சங்கத்தில் அங்கத்தினனாக இருந்தமையாலும் தந்தையான சிவனுக்கு உபதேசம் செய்தமையாலும் தமிழ்கடவுள் என அழைக்கப்படுவதை அறிய முடிகின்றது. முருகனுக்கு குறிஞ்சி நிலம் மட்டுமல்லாமல் நெய்தல் நிலமான திருச்செந்தூரிலும் உறைவிடம் கொண்டு அருள்பாலிக்கும் இறைவனாகக் காணப்படுகின்றான். வேந்தன் என்னும் தமிழ்த்தெய்வம் ஆரிய கலப்பிற்குப்

பிறகு இந்திரன் என்கின்ற பெயரினைப் பெற்றுள்ளான். மருத நிலம் வேந்து முறை ஆட்சிக்கு அடிகோலிய நிலம் என்பதால் வேந்தன் என்னும் மன்னனே பின்னர் கடவுளாகக் கருதப்படுகின்றான் என்பதனை ஆய்வு புலப்படுத்துகின்றது.

வருணன் ஆரியக் கடவுள் எனத் துணிய இயலவில்லை. வேதகால வருணன் தேவர்களின் தலைவனாக வானத்து அதிபதியாகக் காணப்படுகின்றான். தமிழர் வணங்கிய வருணன் கடல் தெய்வமாகக் காணப்படுகின்றான். கொற்றவை வழிபாடு தாய்த் தெய்வ வழிபாட்டின் தொடக்கமாகக் காண முடிகின்றது. குறிஞ்சி நிலத்திற்கு முருகனன்றி கொற்றவையும் கடவுளாகக் கருதப்படுகின்றாள்.

தமிழர்களின் வழிபாடுகளில் சிவவழிபாடு மிகவும் தொன்மையானதாகும். சிந்து வெளியில் காணப்படும் சிவனும், சங்க இலக்கிய சிவனும் ஒன்றாகவே காணப்படுகின்றனர். தமிழர் வணங்கும் வளமைக்குரியவன். வேதகால சிவன் உருத்திரன் என அழைக்கப்பட்டான். இவன் அழிவிற்குரியவன். பிற்காலத்தில் இருவரும் ஒருவராய் இணைந்து காணப்படுகின்றனர்.

காமன் குறித்த செய்திகள் யாவும் புராணம் தாங்கிய நிலையே காணப்படுகின்றன. காமன் மறைகாவலனாகவும், திருமால் மகனாகவும், காணப்படுகின்றான். உமை சிவனின் துணைவியாகக் காணப்படுகின்றாள். உக்கிர நிலையில் காணப்படும் கொற்றவையே அமைதி நிலையில் உமையாகத் தோன்றுகிறாள். திருமகள் திருமால் மார்பில் உறைபவள். செல்வம் தரும் தாயாகக் காணப்படுகின்றாள் என்பதை அறிய முடிகிறது.

## சான்றெண் விளக்கம்

1. செ.வைத்தியலிங்கம், தமிழ் பண்பாட்டு வரலாறு ( தொகுதி 2 ) ப.164
2. அரங்க.சுப்பையா. இலக்கியத் திறனாய்வு ப.155
3. செ.வைத்தியலிங்கம். தமிழ் பண்பாட்டு வரலாறு ( தொகுதி 2 ) ப.164
4. குறள் : 271
5. பரிபாடல். பா:3:4
6. மேலது. பா.3:66
7. மேலது. பா.3.77-80
8. மேலது. பா.13.18.23
9. பதிற்று. பா.24:15:16
10. மதுரை. அடி.453-454
11. புறம். பா.2
12. சாமி.சிதம்பரனார் பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும் ப.26
13. குறள். 1075
14. தொல். பொருள் நூ.1:4
15. மேலது. இளம்பூரணர். உரை.நூ.1:9
16. மேலது. நூ.27
17. மேலது.புறத்.நூ.23
18. தொல். பொருள். புறத்.நூ.627
19. தொல், புறத். நூ.2.1-8

20. சாமி. சிதம்பரனார். பழந்தமிழர் வாழ்வும், வளர்ச்சியும்.ப.26-27

21. சாமி.சிதம்பரனார், பழந்தழிழர் அரசியல், ப-45

22. தொல், பொருள், நூ. 117

23. மலைபடு. அடி.389

24. க.கைலாசபதி, பண்டைய தமிழர் வாழ்வும்வழிபாடும், ப-55-56

25. அகம், பா-67

26. மேலது, பா-270-2

27. காமாட்சி சீனிவாசன், குறள் கூறும் சமயம், ப-13

28. தமிழ் கலைக்களஞ்சியம், ப-682

29. புறம், பா-187,

30. தொல். பொருள், ˙அகத், நூ-5

31. மேலது, நூ-5

32. கலி, பா-107:32

33. தொல், பொருள், புறத், நூ-5

34. வே.தி,செல்லம், தமிழக வரலாறும் பண்பாடும், ப-135

35. பரி, பா.83

36. கலி, பா. 104

37. முல்லை, அடி-3

38. மதுரைக், அடி-590

39. மேலது, அடி-591

40. பெரும்பாண், அடி-402

41. மேலது, அடி- 29-30

42. அகம், பா-260

43. முருகு, பா -125

44. சிலம்பு. நாடுகாண் காதை, அடிகள். 35-42

45. பா.பா, பா:3:81-83.

46. மேலது, பா:13:26-27, ப-72

47. புறம், பா-58

48. பரிபா, பா-56

49. புறம், பா-59

50. பரிபா, பா,1-59

51. மேகலை, காதை, 18:65

52. புறம், பா:174

53. பரிபா, பா, 15:50

54. மேலது, 3-73

55. சிலம்பு, காதை, 18-47

56. பரிபா, பா: 81-83

57. நச்சினார்க்கினியர், முருகு, 48:151, ப-67

58. பரிபா,பா 314-7

59. மேலது, பா 14:17

60, இரா.சீனிவாசன், சங்க இலக்கியத்தில் உவமை, ப-92

61. மதுரைக், அடி, 456-458

62. பெரும்பாண், அடி,391

63. பரிபா,பா-46-47

64. பெரும்பாண், அடி. 372-373

65. செ.வைத்தியலிங்கன், தமிழ்பண்பாட்டு வரலாறு, ப-690

66. பரிபா, பா:4:12-20

67. மதுரைக், அடி-763

68. பெரும்பாண், அடி,402

69. மேலது, அடி,389-391

70 முல்லை, அடி.3

71. பரிபா, பா-3, 25-26

72. புறம், பா-378

73. அகம், பா-70

74. சிலம்பு, பா, 47-48

75. அகம், பா, 175

76. பரிபா, பா:1:52-53

77. மேலது, பா: 1:58

78. நெய்தற்கலி, பா.10

79. பெரும்பாண், அடி. 389-391

80. பரிபா, பா,4: 25-35

81. சா்வ பள்ளி ராதா கிருஷ்ணன், கீழை மேலை நாடுகளில் மெய்ப்பொருளியல் வரலாறு, ப-559

82. திரு.வி.கல்யாணசுந்தரனார், முருகன் ( அ ) அழகு, ப-1

83. தொல், பொருள், அகத், நூ-5

84. முருகு, அடி-217

85. பரிபா, பா, 5:13

86. சிலம்பு, காதை, 24:13

87. மருதக்கலி, பா-18

88. முருகு, அடி-259

89. மேலது, அடி-235

90. மேலது. அடி-256

91. பரிபா, பா-9:7

92. மேலது, பா-8, 127-128

93. பரிபா, ப-24

94. கிருஷ்ணமாச்சாரியாா், பதினெண் புராணங்கள், ப-127

95. மேலது, ப-128

96. செ. வைத்தியலிங்கன், தமிழ் பண்பாட்டு வரலாறு, பக்-813-816

98. பரிபா, பா.5, 27-54

99. கலி, பா, 81:9

100. மேலது, பா,31:14

101. பரிபா, அடி-9

102. முருகு,அடி-109

103. கலி, பா,105-17

104. முருகு, அடி, 91-103

105. மேலது, ப.29-30

106. பரிபா, பா.14:21

107 சிலம்பு, காதை 2-49

108. பரிபா, பா-8:67

109. புறம், பா-56

110. பரிபா, பா. 14:59

111. முருகு அடி. 81-82

112. மேலது, அடி. 82

113. மேலது, அ-247

114. பரிபா, பா-5-2

115. புறம், பா-96

116. சிலம்பு, காதை, 24-15

117. மேலது, பா.24:15

118. தொல், பொருள், மரபு, நூ. 465

119. பரிபா,பா-5:61-64

120. மேலது.பா,18:14

121. மேலது, பா, 8:19

122. முருகு, அடி-151

123. மேலது, அடி. 210-211

124. மேலது, அடி-219

125. பரிபா, பா-17-48

126. முருகு, அடி. 38

127. அகம், பா-149

128. முருகு, அடி,122

129. புறம், பா-56

130. சிலம்பு, கா, 24:9

131,குறிஞ்சி, பா,208-209

132. பரிபா, பா, 17:9-14

133. அகம், பா-216

134. மேலது, பா-149

135. பரிபா, பா, 8:1-4

136. குறிஞ்சி, பா, 208-209

137. பாலைக்கலி, பா-27

138. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப-221

139. முருகு, அடி, 70-711

140. ரா. சேதுப்பிள்ளை, தமிழ் இன்பம், ப-46

141. அகம், பா-366

142. புறம், பா-55

143. முருகு, அடி, 119-225

144. அகம், பா-2-4

145. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப-5

146. அகம், பா-2-4

147. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப-203

148. முருகு, அடிகள்-125-151

149. முனைவர் இரா. மோகன், சங்க இலக்கியம், தொகுதி, 1 , ப-58

150. முருகு, அடி, 177:187

151. ஐங்குறுநூறு, பா-253

152. கலி, பா, 40:11

153. முருகு, அடி, 79

154. மேலது, அடி-86

155. முருகு, அடி, 206:2017

156. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப-21

157. மேலது, அடி-211

158. முருகு, அடி, 223:226

159. பாடநூற்குழு, தமிழ் நாட்டு வரலாறு, ப-301

160. சிலம்பு, இந்திரவிழா, அ-170

161. திருப்புகழ், பா-133

162. தொல். பொருள், அகத். நூ-5

163. சிலம்பு, காதை, 6:16

164. மேகலை, பா-28:166

165. மேலது, பா 18 -19

166. சிலம்பு, காதை, 5-:66

167. மேலது, காதை 5:240

168. மேலது, காதை 6 :27

169. புறம், பா:241

170. பரிபா, பா.19, 50-53

171. முல்லை, அடி-5

172. பரிபா, பா-99

173. சிலம்பு, காதை, 6:20

174. பரிபா, பா: 18:88-91

175. முருகு, அடி-1:155-158

176. மேலது, அடி-157-159

177. சிலம்பு, 25:16

178. மேலது, பா:5:143

179. மேலது, பா-5:14:146

180. ஔவை. சு.துரைசாமிபிள்ளை, புறநானூறு உரை, ப-216

181. மேலது, ப-216

182. சிலம்பு, காதை-13, அ-18181

183. பெரும்பாண், 292

184. அ.மாணிக்கனார்,(உ.ஆ) பத்துப்பாட்டு, ப-522

185. புறம், பா-36

186. ஐங்குறு, பா-425

187. நெடுநல், இ-105

188. பெரும்பாண், அ-291-292

189. சிலம்பு, காதை-10-11-14

190. சிலம்பு, காதை-27: 92-93

191. மேகலை, 28, 69-70

192. தொல், பொருள், அகத், நூ-119

193. அ.தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.201

194. வே.தி.செல்லம், தமிழக வரலாறும் பண்பாடும், ப-135

195. பட்டினப், அ-86-87

196. புறம், பா-9

197. நற், பா-165

198. தொல், பொருள், புறத்,நூ-4

199. இளம்பூரணார் (உ.ஆ) தொல்,பொருள், நூ-101

200. மேலது, மேற்கோள், புறப்பொருள்வெண்பாமாலை, நூ-173

201. அகம், பா-345

202. முருகு, அடி. 259

203. மேகலை, பா 6:53

204. குறுந், பா -218

205 பதிற்று 79: 16-18

206. வே.தி.செல்வம்.தமிழக வரவாறும் பண்பாடும் , ப – 137

207. தொல்.பொருள்.நூ.10

208. அகம்.பா.382

209. மேலது.பா.266

210. சிலம்பு காதை – 1:66-70

211. செ.வைத்தியலிங்கன், தமிழ் பண்பாட்டு வரலாறு. ப.360

212. சிலம்பு வழக்குரை காதை.20 அடி 34-40

213. பரிபா.பா.11.97-100

214. சிலம்பு. வேட்டுவவரி.அடி.8.

215. பதிற்று.பா.79:18.19

216. மேலது.பா-88:2

217. மதுரை. அடி.39.42

218. மேலது.அடி.453 – 55

219. ஐங்குறு.பா – 453-55

220. அகம்.பா.74

221. முல்லைக்.பா-4

222. நெய்தற்கலி. பா-33

223. புறம்.பா.56

224. மருதக்கலி.பா.1

225. குறிஞ்சிக்கலி.பா.2

226. மருதக்கலி.பா.8

227. புறம்.பா.6:18

228. சிலம்பு.காதை:14:7

229. பாலைக்கலி.பா-1

230. முல்லைக்கலி,பா-3

231. புறம்.பா.55

232. மலைபடு.அடி.81-83

233. பாலைக்கலி.பா.25

234. நெய்தற் கலி.பா.33

235. சிலம்பு, வரம் தரும் காதை.30-41

236. கா.சுப்ரமணியப்பிள்ளை,சைவ சித்தாந்த வரலாறு.ப.1

237. சர்வ பள்ளி இராதாகிருஷ்ணன்,கீழை மேலை நாடுகளில் மெய்ப்பொருளியியல்வரலாறு, ப-683

238. திருமந்திரம், ப-14.22

239. மேலது. பா-1121

240. மேலது, பா-443

241. மேலது, பா-2412

242. திருஞான சம்பந்தர், தேவாரம், பா-979

243. திருமந்திரம், ப-211

244. சிவஞான போதம், சூ, -2

245. சம்பந்தர், தேவாரம், பா, 14-19

246. சிவஞான சித்தியார், பா-2

247. திருமந்திரம், பா-270

248. மேலது, பா-7270

249. மேலது, பா-1857

250. திருநாவுக்கரசர், தேவாரம், பா-383

251. சர்வ பள்ளி, இராதா கிருஷ்ணன், கீழை மேலை நாடுகளில் மெய்பொருளியல் வரலாறு, ப-705

252. சிலம்பு, புகார், மனையறம், பா-44

253. சிலம்பு, புகார், இந்திரவிழா, பா-224

254. சிலம்பு, இந்திரவிழா, பா-210

255. சிலம்பு, வேனிற், பா-10

256. கலி, பா-26

257. கலி, பா--84:24

258. பரிபா, பா 19:48-49

259. மேலது.பா.22,26-27

260. மேலது.பா.6,57-58

261. மேலது.பா.18:30-33

262. கலி.பா.8:9

263. கலி.பா.26:4

264. மேலது.பா.106,117-119

265. கலி.பா.129:2

266. மேலது.பா-106,117-119

267. புறம்.பா.194

268. பெரும்பாண்.அடி-402-404

269. பரிபா.பா.3:9.94

270. பரிபா.பா.1:46

271. மேலது.பா.3:13-14

272. மேலது.பா.5:22

273. கலி.பா.2.1

274. பரிபா.பா.3:91-94

275.முருகு.அடி.259

276. மேலது.பா.257

277. கலி.கடவுள் வாழ்த்து.ப.1

278. மேலது.பா-10

279. கலி. கடவுள் வாழ்த்து-பா.13

280. பரிபா.பா.1:36

281. பரிபா.2:31

282. பெரும்.பாண்.அடி.29

283. சிலம்பு காதை.11:40

284. பட்டினப்.பா-291

285. திருவாய் மொழி நான்காம் பத்து.30-47

286. சிலம்பு காதை:20:23.

# முடிவுரை

- பண்டைய தமிழர்களின் வாழ்க்கை முறையினையும், பண்பாட்டுக் கூறுகளையும் என்றைக்கும் அனைவரும் அறிந்து கொள்ளும் வகையில் சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன என்பதை அறிய முடிகிறது.
- சங்க இலக்கியம் தொகுப்பும், புராணக் கருத்தக்களும் என்னும் இவ்வியலில் ஆய்ந்தறிந்த செய்திகளான தமிழின் பழமையினை அறியும் பொழுது இதிகாசக் காலங்களுக்கு முற்பட்டதாய் இருந்திருக்கிறது.
- சங்க இலக்கியங்களைத் தனியொருவர் முயற்சியினால் இன்றி பல புலவர்கள் சேர்ந்து அப்பணியினை மேற்கொண்டனர் என்பது தெளிவாக தெரிகின்றது.
- புராண மரபுக்கதைகளை பிற தொகை நூல்களை விட மிகுதியாகப் பெற்று வரும் செய்திகளை கலித்தொகையில் குறிப்பிடப்பட்டு உள்ளன.
- தமிழரது மணமுறை, கடவுள் வழிபாட்டு முறைகள், இல்லற இன்பம், ஏறு தழுவுதல் போன்ற தமிழர்க்கே உரிய செய்திகளைப் பற்றி காண முடிகிறது.
- கலித்தொகைப் பாடல்கள் மட்டுமே திணைப்பெயர் வழக்கினை ஒட்டி பாலைக்கலி, முல்லைக்கலி, குறிஞ்சிக்கலி, மருதக்கலி, நெய்தற்கலி என அமைந்துள்ளது சிறப்பான ஒன்றாகக் கருத முடிகிறது.
- கலித்தொகையும், பரிபாடலும் சங்க இலக்கியக் காலத்திற்கு பிற்பட்டதெனக் கருத முடிகிறது. மற்ற இலக்கியத்தைக் காட்டிலும் பாடுபொருள் வேறுபட்டுக் காணப்படுவதும் இதற்குச் சான்றாக விளங்குகிறது.
- கலித்தொகைப் பாடல்கள் உரையாடல், நாடக வடிவிலேயே அமைந்துள்ள நிலையை எடுத்துரைக்கின்றன.

- சங்க காலத்தில் ஆடவர் முன்னிலையில் பெண்கள் பேசக்கூடாது என்ற நிலையில் இருந்து மரபை மாற்றி கலித்தொகைப் பாடல்களில் தலைவனொடு சொல்லெதிர் சாற்றும் அளவிற்கு உயர்ந்த தலைவியை இந்நூலில் காண முடிகிறது.
- கலிப்பாவை இசைப்பாட்டு என மு.சண்முகப்பிள்ளை கூறியுள்ளது பொருத்தமுடையதாக உள்ளது.
- கலித்தொகையில் முல்லைக்கலியில் புராண இதிகாச கருத்துக்களான வீமனின் வஞ்சினம், உருத்திரனின் வீரம், துரோணரை கொன்ற சிகண்டிகை, கண்ணன் கம்சனை அழித்தல் போன்ற புராணக் கருத்துக்கள் ஆராய்ந்து கூறப்பட்டுள்ளது.
- பாலைக்கலி அரக்கு மாளிகைக்குத் தீயிட்டது பற்றிய புராணக் கருத்துக்களை எடுத்தியம்புகிறது.
- குறிஞ்சிக்கலியில் இராவணன் கைலை மலையைப் பெயர்த்த செய்தி, துரியோதனனின் தொடையினை பீமன் அறுக்கும் செய்தி பற்றி குறிப்பிடப்பட்டு உள்ளது.
- கலித்தொகையில் திலோத்தமைக்கதை, சூரபதுமன் போர் பற்றி அறிய முடிகிறது.
- சங்க இலக்கியங்களில் புறநானூறு இடம்பெறுவதும் அதன் பெருமைகளையும், பழமையையும் பற்றிக் கூறுவதோடு அவை வரலாற்றுக் களஞ்சியமாகவும், பண்பாட்டு ஆவணமாகவும் இருக்கிறது என்பதை அறியலாம்.
- ஒருவனது உயர்வு அவன் ஈட்டும் பொருளில்லாது அவனுடைய ஒழுக்கத்திலே தான் உள்ளது என்பதை வெளிப்படுத்துகிறது.
- சங்க கால வேந்தர்கள் வீரத்தில் மட்டுமல்லாது கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கியமையைப் புறநானூறுப் புலப்படுத்துகிறது. மண்ணில்

வாழும் மனிதர்கள் எத்தனை இடர்பாடுகள் ஏற்பட்டாலும் கல்வி கற்காமல் இருக்கக் கூடாது என்ற உண்மையை வலியுறுத்துகிறது.

- அக்காலப் புலவர்கள் அரசர்களைப் புகழ்ந்து பாடுபவர்களாக இல்லாமல் தவறு கண்டபோது இடித்துரைப்பவர்களாகவும், தன்மானம் மிக்கவர்களாகவும் வாழ்ந்துள்ளனர் என்பதைப் புறநானூறு மனித உயர்வின் வாழ்வியல் நெறிகளைச் சுட்டிக் காட்டுகிறது.

- பண்டையத் தமிழர்கள் முதன்முதலில் மேற்கொண்ட கடவுள் இயற்கையாகத் திகழ்கிறது. பின்பு உழைப்பின் மேன்மைக்கென கையாண்ட கருவிகளைத் தாங்கிய கடவுளர்களை ஏற்றுக் கொண்டு வாழ்ந்தனர்.

- தம்மால் ஏற்றுக் கொள்ளப்பட்ட இறை மதிப்புகளை வழியினர்க்கும் உணர்த்தும் வகையில் கடவுள் பெயரினை தம் குழந்தைகளுக்கு இட்டுள்ளதை ஆய்வு வழி அறிய சங்க இலக்கியங்கள் இடமளிக்கின்றன. பண்டைய மக்களிடம் கடவுள் நம்பிக்கைகளும், அதற்கான சடங்குகளும் விழாக்களும் நீங்காது இடம் கொள்ளும் என்பதில் ஐயமில்லை.

- சங்க இலக்கியங்களில் காலந்தோறும் கடவுள் குறித்த கருத்துக்கள், சிந்தனைகள் மேம்பட்டு வருவதை ஆய்வின் வழி அறிய முடிகின்றது.

- பத்துப்பாட்டில் உள்ள திருமுருகாற்றுப்படை முருகன் வழிபாட்டையும், அவனுக்கு அளிக்கப் பெறும் பல பொருள்களைப் பற்றிக் கூறும் போது, ஆடு, கோழி, போன்ற உயிர்ப் பலிகளையும் முருகன் பெற்றதை அறிய முடிகின்றது. இன்றைக்குக் கார்த்திகேயன் என்ற பெயரில் ஆரிய கலப்பில் இப்பலி வழங்கப்படுவதில்லை என்பது புலப்படுகின்றது.

- சிறுபாணாற்றுப்படையில் காணப்படும் திருமால் வணக்கம் பெருந்தெய்வத் தன்மைக்கு மாறியதைக் குறிப்பிடுகின்றது. இதில் இயற்கை வழிபாட்டின் கூறாக உள்ள மர நிழலில் காணப்படும் முருகன் தமிழ் கடவுளாகக் தெரிய வருகின்றது.

- நெடுநல்வாடை, இல்லத்தில் உறையும் இல்லுறை தெய்வ வழிபாடும், கடவுள் மரம், கடவுள் குன்றம் ஆகியன பற்றிய செய்திகளைத் தந்து இயற்கை வழிபாட்டை நிலைநிறுத்துவனவாக உள்ளதை ஆய்வு உணர்த்துகின்றது.

- மலைபடுகடாம் சிவன் பற்றிய குறிப்பினையும், நாக வழிபாட்டையும் அணங்குகள் பற்றியும் கூறுகின்றது. நில எல்லையில் அடங்காத சிவன் முக்கண்ணனாக இடம் பெறுகிறது என்பதை அறிய முடிகிறது.

- நற்றிணை மற்றும் புறநானூறு, மரம், மலை இவற்றில் உறையும் தெய்வங்களைக் குறிப்பிடுகின்றது.

- நகரங்களிலும் சிற்றூர்களிலும், முச்சந்தியிலும், காவல் தெய்வமாய் உறைவதாய் நம்பினர். இன்றைக்கும் ஊர் எல்லைகளில் காவல் தெய்வமாய் சிலையாக நிறுத்தப்பட்டு வழிபடுவதை ஒப்பிட்டு ஆராயப்படுகிறது.

- இயற்கை வழிபாட்டுக் கூறுகளை இன்றைய தமிழச் சமூகம் பின்பற்றி வருதலை அன்றாட வாழ்வில் நாம் கண் கூடாகக் காண்கிறோம். சிறு மண்ணலான உருண்டைகள், சாண வடிவங்கள், செங்கல், அருகம்புல், குங்குமம் போன்றவை இறை குறித்த உடனடி அடையாளங்களாகப் பயன்பட்டு வருவதை ஒப்பிட்டு அறியமுடிகின்றது.

- மக்களுக்கு ஏற்படும் துன்பங்களைக் கடவுள்களின் பெயரிட்டு நீக்கும் மனப்பக்குவம் உளவியல் ரீதியாக உணர முடிகின்றது.

## துணை நூற்பட்டியல்


1. **அடைக்கலச்சாமி** : **தமிழ் இலக்கிய வரலாறு**
கழக வெளியீடு,
சென்னை-18,
பதிப்பு-1989.

2. **அங்கமுத்து முதலியார்.,** : **அகநானூறு (களிற்றியானை நிரை)**
அய்யனார் பதிப்பகம்
சென்னை-603 202
பதிப்பு-2017.

3. **அகத்தியலிங்கம்.ச.,** : **சங்க இலக்கியம் செவ்வியல் பார்வை**
மெய்யப்பன் பதிப்பகம்
சிதம்பரம்-608 001.
பதிப்பு-2004.

4. **அகத்தியலிங்கம்.ச.** : **சங்கஇலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே**
கழக வெளியீடு,
154, டி.டி.கே சாலை,
சென்னை-18,
பதிப்பு-1991

5. **அறவேந்திரன்.இரா,** : **குறுந்தொகை பதிப்பு வரலாறு,**
காவியா பதிப்பகம்,
சென்னை,
பதிப்பு-2010.

6. **இராகவையங்கார்.ரா(உ.ஆ) : குறுந்தொகை விளக்கம்**
அண்ணாமலை பல்கலைக்கழகம்,
பதிப்பு-1993.

7. **இராஜகோபாலன்.எம்., : திருநீர்மலை திருக்கோயில்கள்**
பெசன்ட் நகர், சென்னை-600 090.

8. **இளவழுதி.வீ., : கலித்தொகை (முல்லைக்கலி)**
தனலட்சுமி பதிப்பகம்,
சென்னை-600 017.

9. **இளவழுதி.வீ., : கலித்தொகை (பாலைக்கலி)**
தனலட்சுமி பதிப்பகம்,
சென்னை-600 017.

10. **இராசமாணிக்கனார், : பத்துப்பாட்டு ஆராய்ச்சி,**
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை.

11. **இராமசுப்ரமணியம்.வ.த, : நற்றிணை, சங்க இலக்கிய நூல்,**
மூலமும் உரையும்
திருமகள் நிலையம்,
தி.நகர், சென்னை-17,
பதிப்பு-2009.

12. **கபிலர், : குறிஞ்சிப்பாட்டு,**
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்பு கழகம்
லிமிடெட்,
சென்னை-18. பதிப்பு-1956.

13. **கதிரேசன்.குழ.,** : **எளிய தமிழில் பத்துப்பாட்டு**

ஐந்திணை பதிப்பகம்

சென்னை-5

14. **சண்முகப்பிள்ளை,** : **சங்கத் தமிழர் வாழ்வியல்,**

உலக தமிழாய்வு நிறுவனம்,

சென்னை-600 113.

15. **சந்திரசேகர்.இரா.,** : **தமிழகக் கோயில் கலை**

நாம் தமிழர் பதிப்பகம்

திருவல்லிக்கேணி, சென்னை-5.

பதிப்பு-2008.

16. **சத்திய வேல்முருகனார்.மு.பெ.,:** **திருமுருகாற்றுப்படை**

சகுந்தலை நிலையம்,

மண்ணடி, சென்னை-01.

மு.ப-2004.

17. **சாமிநாதையர்.உ.வே.,** : **குறுந்தொகை,**

அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,

அண்ணாமலை நகர்,

பதிப்பு-1983.

18. **சாமிநாதையர்.உ.வே.,** : **ஐங்குறு நூறு**

உ.வே.சா.நிலையம்

பெசன்ட் நகர்,

சென்னை-90.

பதிப்பு-2012.

19. **சாமி.பி.எல்.,** : **தாய்த்தெய்வ வழிபாடு,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை-90
பதிப்பு-2011.

20. **…………..** : **புறநானூறு**
பெசன்ட் நகர்,
சென்னை-90.
மு.ப-1936.

21. **……………** : **குறுந்தொகை,**
நீதியாகராச விலாசம் வெளியீடு
கபீர் அச்சுக்கூடம்,
சென்னை.
ஆறாம் பதிப்பு-1962.

22. **…………………..** : **தமிழியல் ஆராய்ச்சி**
புலமை மன்றம்
சென்னை-20.
பதிப்பு-2002.

23. **சிலம்பு முனைவர் நா.செல்வராசு:** **ஆய்வுக்கோவை-1969**
முனைவர் இரா.அரவிந்தன்
தமிழ் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

24. **சிதம்பரனார்.சாமி.,** : **பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும்**
முகில் பதிப்பகம்
தேனாம்பேட்டை, சென்னை.

25. **சீனிவாசன்.ரா., : சங்க இலக்கியத்தில் உவமைகள்**
அணியகம் பதிப்பகம்,
செனாய் நகர், சென்னை-30.
பதிப்பு-1997.

26. **சீனிவேங்கடசாமி.மயிலை.வே,: தமிழர் சமயம்**
நாம் தமிழர் பதிப்பகம்,
சென்னை
பதிப்பு-2011.

27. **சீனிவாசன்.இரா., : சங்க இலக்கியத்தில் உவமைகள்,**
அணியகம்,
சென்னை-30
பதிப்பு-1973.

28. **சுப்ரமணியன்.ச.வே., : சங்க இலக்கியம் எட்டுத்தொகை**
மூலமும் தெளிவுரையும் - தொகுதி-3
மணிவாசகர் பதிப்பகம்,
பாரிமுனை, சென்னை-08.
பதிப்பு-2014.

29. **சுப்ரமணியம் பிள்ளை.க., : தமிழ் நாட்டு இந்து சமயங்களின் சுருக்கவரலாறு**
சைவ சித்தாந்த வரலாறு,
சாரதா பதிப்பகம்,
சென்னை,
பதிப்பு-2012.

30. **சுப்ரமணியன்.ச.வே.,** : **சங்க இலக்கியம் பதிற்றுப்பத்து**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம்-60800.
பதிப்பு-2009.

31. **சுப்ரமணியன்.ச.வே.,** : **சங்கப் பாட்டில் புதியப்பார்வை,**
அகநானூறு
சேகர் பதிப்பகம்,
சென்னை-18.
பதிப்பு-1984.

32. **சுபாஷ் சந்திரபோஸ்.,** : **தமிழ் இலக்கிய வரலாறு**
பாவை பப்ளிகேஷன்
இராயபேட்டை, சென்னை-600 014.

33. **சுவாமி சிவராம்ஜி.,** : **திருமுறைத் திருத்தலங்கள்**
செண்பகா பதிப்பகம்
சென்னை-600 017.
மு.ப-2006.

34. **செயபால்.இரா.(உ.ஆ),** : **அகநானூறு மூலமும் உரையும்,**
தொகுதி-1, தொகுதி-2,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
அம்பத்தூர், சென்னை-08.

35. **சோமசுந்தரன்.பொ.வே.,** : **அகநானூறு**
தென்னிந்திய சைவ சித்தாந்த
நூற்பதிப்பு கழகம்,
சென்னை
பதிப்பு-1962.

36. **சோமசுந்தரன்.பொ.வே.,** : **ஐங்குறுநூறு,**
தென்னிந்திய சைவ சித்தாந்த
நூற்பதிப்புக்கழகம்,
சென்னை-18.
பதிப்பு-1959.

37. **சோமசுந்தரன்.பொ.வே.,** : **நற்றிணை**
கழக வெளியீடு
சென்னை,
பதிப்பு-1976.

38. **………..** : **குறிஞ்சிப்பாட்டு**
கழக வெளியீடு
சென்னை,
பதிப்பு-1973.

39. **………..** : **பரிபாடல்,**
திருநெல்வேலி சைவ சித்தாந்த
நூற்பதிப்பு கழகம் லிமிடெட்,
சென்னை-1. பதிப்பு-1957.

40. **ஞானசுந்தரம்.தெ.,** : **குறுந்தொகைத் தெளிவு,**
தாயம்மை பதிப்பகம்,
சென்னை-600 001.
பதிப்பு-1996.

41. **ஞான மூர்த்தி.தா.ஏ.,** : **இலக்கியத் திறனாய்வு**
யாழ் வெளியீடு,
சென்னை-40.

42. **தமிழண்ணல்.,** : **சங்க இலக்கிய ஒப்பீடு,**
இலக்கியக் கொள்கைகள்
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை-625001.
பதிப்பு-2003.

43. **தமிழமுதன்.,** : **கலித்தொகை (மூலமும் உரையும்)**
சாரதா பதிப்பகம்,
சென்னை-600 014.
மு.ப-2012.

44. **தமிழ் வாணன்.,** : **குறுந்தொகை**
மணிமேகலை பிரசுரம்,
தியாகராய நகர்,
சென்னை-17.

45. **திராவிட மணி.பொ.,** : **அகநானூற்றில் இல்லற மாண்பு,**
சாந்தா பப்ளிகேஷன்ஸ்,
சென்னை-600 014.

46. **துரைசாமிப்பிள்ளை ஔவை.சு.,:** **பதிற்றுப்பத்து**
கழக வெளியீடு,
சென்னை-1.
பதிப்பு-1995.

47. **தையல்நாயகி.எஸ்.,** : **சிவமந்திரம்,**
சாமி புக்ஸ்,
சென்னை-600 004.
பதிப்பு-2007.

48. **நக்கீரர்.,** : **திருமுருகாற்றுப்படை,**
திருநெல்வேலி சைவ சித்தாந்த
நூற்பதிப்பு கழகம் லிமிடெட்,
டி.டி.கே.சாலை,
சென்னை-108.

49. **நம்மாழ்வார்.,** : **திருமால் பெருமை**
ஆருத்ரா பதிப்பகம்
சென்னை-17.
பதிப்பு-2003.

50. **நாகராஜன்.வி.,** : **குறுந்தொகை**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
பி லிமிடெட்
அம்பத்தூர், சென்னை-98,
மு.ப-2004.

51. **நாகராசன்.வி.முனைவர்,** : **பத்துப்பாட்டு, இரண்டாம் பகுதி,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
பி லிமிடெட்
அம்பத்தூர், சென்னை-98,
மு.ப-2004.

52. **நாராயண வேலுப்பிள்ளை.எம்.,:** **பரிபாடல்**
நாற்கவி பிரசுரம்,
தியாகராய நகர்,
சென்னை.

**53. நாஞ்சில் ஸ்ரீவிஷ்ணு : திருமாலின் திவ்யதேசங்கள் (108)**
இலக்குமி நிலையம்,
இராயப்பேட்டை, சென்னை-14.
பதிப்பு-2013.

**54. நாராயணசாமி.அ., : நற்றிணை நானூறு**
திருநெல்வேலி சைவ சித்தாந்த
நூற்பதிப்பு கழகம் லிமிடெட்,
டி.டி.கே.சாலை, பதிப்பு-1957.

**55. நித்யா அரவிந்தன்.கோ., : முல்லைப் பாட்டு பதிப்பு வரலாறு**
காவியா பதிப்பகம்
சென்னை.
பதிப்பு-2011.

**56. நிர்மலா மோகன், சுந்தரி சிவக்கண்ணன் : சங்க இலக்கிய சால்பு,**
தாமரை பதிப்பகம்,
தியாகராய நகர்,
சென்னை-600 017.
மு.ப-2013.

**57. ………………. : தேவாரத் திரட்டு,**
சரஸ்வதி புத்தக நிலையம்,
ரொறொன்ரோ,
கனரா.
பதிப்பு-2004.

58. **நீலகண்டவித்துவான்.பேரா.கே.டி.,: திருமுருகாற்றுப்படை,**
பத்துப்பாட்டு-பாடலும் பொருளும்
சிவசக்கி நிலையம்,
காமராசர் நகர், ஆவடி.
பதிப்பு-2000.

59. **பாலசுப்ரமணியன்.சி., : தமிழ் இலக்கிய வரலாறு,**
மணமலர்ப் பதிப்பகம்,
சென்னை,
பதிப்பு-2003.

60. **பாலசுப்ரமணியன்.கு.வை., : சங்க இலக்கியத்தில்**
**கலையும்கலைக்கோட்பாடும்**
உலக தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை-1
பதிப்பு-1980.

61. **பிரபாகரன்.வே., : சங்கத் தமிழ் விருந்து**
அழகம்மை பதிப்பகம்,
சென்னை-600 085.

62. **பி.ஸ்ரீ., : அறுபடை வீடுகள்**
வி.கே.புக்ஸ் இண்டர்நேஷனல்
மயிலாப்பூர், சென்னை-600 004.

63. **புலவர்.அடியன் மாணிக்கவாசகன்.,: திருவாசகத் தேன்துளிகள்**
சங்கர் பதிப்பகம்,
வில்லிவாக்கம், சென்னை-600 049.
பதிப்பு-2013.

**64. புலியூர் கேசியகன்.,** : **பரிபாடல் (மூலமும் உரையும்)**
வி.பப்ளிக்கேசன்ஸ்
சென்னை-
பதிப்பு-2012.

**65. பெருமாள்.தே.ப.,** : **தேவாரத் திருச்செல்வர்கள்**
குவிக்குயில் அச்சகம்,
திருவல்லிக்கேணி,
சென்னை-5.

**66. மகராணி.,** : **திருமுருகாற்றுப்படை,**
அண்ணாநகர் மேற்கு விரிவு,
சென்னை -600 101.
மு.ப-2006.

**67. மாணிக்கனார்.வ.சு.ப.,** : **தமிழ்க்காதல்**
பாரி நிலையம்,
சென்னை- 600 001.
பதிப்பு-1980.

**68. மாணிக்கவாசகன்.ஞா.,** : **பதிற்றுப்பத்து (மூலமும் உரையும்)**
உமா பதிப்பகம்
சென்னை-600 001.
பதிப்பு-2008.

**69. மாணிக்கனார்.வ.சு.ப.,** : **அகநானூறு,**
வர்த்தமான் பதிப்பகம்,
தி.நகர், சென்னை-600017,
மு.ப-1999.

70. **முனீஸ் மூர்த்தி.மு., : கலித்தொகை பதிப்பு வரலாறு,**
காவியா பதிப்பகம்,
சென்னை
பதிப்பு-2010.

71. **வரதராசன்.மு., : இலக்கிய மரபு,**
பாரி நிலையம்,
சென்னை-600 108.
பதிப்பு-1996.

72. **வரதராசன்.மு., : தமிழ் இலக்கிய வரலாறு**
சாகித்ய அகாடமி,
சென்னை
பதிப்பு-1963.

73. **விசுவநாதன்.கி.சு.மு., : கலித்தொகை,**
திருநெல்வேலி சைவ சித்தாந்த
நூற்பதிப்பு கழகம் லிமிடெட்,
சென்னை.

74. **வெங்கடசாமி நாட்டார்.ந.மு., வேங்கடாசலம்பிள்ளை.ஆர் : அகநானூறு (களிற்று யானை நிரை)**
கழக வெளியீடு
முதற்பதிப்பு-1947.

75. **வெங்கடசாமி நாட்டார்.ந.மு., வேங்கடாசலம்பிள்ளை.ஆர் : அகநானூறு (மணி மிடைப்பவளம்)**
கழக வெளியீடு
முதற்பதிப்பு-1946.

76. **வெங்கடசாமி நாட்டார்.ந.மு., வேங்கடாசலம்பிள்ளை.ஆர்** : **அகநானூறு (நித்திலக்கோவை)**
கழக வெளியீடு
முதற்பதிப்பு-1944.

77. **வேங்கடராமன்.,** : **நற்றிணை மூலமும் உரையும்**
டாக்டர்உ.வே.சாமிநாதையர்
நூல் நிலையம்.
சென்னை.

78. **லோகேஸ்வரன்.ம.,** : **பரிபாடல் பதிப்பு வரலாறு**
காவியா பதிப்பகம்
சென்னை.
மு.ப-2010.

79. **ஜெகதா.,** : **பன்னிரு ஆழ்வார்களின் அருள் வரலாறு**
சாரு பிரபா பப்ளிக்கேசன்ஸ்
ராயப்பேட்டை, சென்னை-14.
பதிப்பு-2006.

80. **……………..** : **சங்க இலக்கியத்தில் குடும்பம்**
ராஜசெல்வி பப்ளிகேசன்ஸ்
சூளைமேடு, சென்னை-94.
பதிப்பு-2004.






▪ மலர் 4 ▪ சிறப்பிதழ் 1 ▪ டிசம்பர், 2019

# சான்லாக்ஸ் பன்னாட்டுத் தமிழியல் ஆய்விதழ்

SHANLAX #SINCE1990

P-ISSN 2454-3993 | E-ISSN 2582-2810



ஸ்ரீ எஸ். இராமசாமி நாயுடு ஞாபகார்த்தக் கல்லூரி (தன்னாட்சி), சாத்தூர்



தமிழ் வளர்ச்சி மன்றம், சிட்னி ஆஸ்திரேலியா



தமிழ்மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு தலைமையகம் ஜெர்மனி



சான்லாக்ஸ் பன்னாட்டுத் தமிழியல் ஆய்விதழ், மதுரை

இணைந்து நடத்தும்

## பன்னாட்டுக் கருத்தரங்கம்

## இலக்கிய வகைமை மாற்றத்திற்கான வளர்ச்சிக்கு சமுதாயப் பின்புலத்தின் பங்களிப்பு

தொகுதி – II

VOLUME 4 | SPECIAL ISSUE 1 | DECEMBER 2019
Shanlax International Journal of Tamil Research
A Peer-reviewed-Scholarly Indexed Quarterly Journal





SHANLAX
INTERNATIONAL JOURNALS
editor@shanlaxjournals.com | www.shanlaxjournals.com

# ஐங்குறு நூறு – ஐவகை நில கடவுள் வழிபாடு

த. பிரேமா
முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதி நேரம்)
தமிழ்த்துறை, அரசு கலைக்கல்லூரி,சேலம்

மலர்: 4
சிறப்பிதழ்: 1
மாதம்: டிசம்பர்
வருடம்: 2019
P-ISSN: 2454-3993
E-ISSN: 2582-2810

## முன்னுரை

சங்க இலக்கிய நூல்களில் ஒன்றான ஐங்குறுநூறு அகம் பற்றியன. இதில் காணப்படும் செய்யுளில் இயற்கையைச் சார்ந்து மக்கள் ஐவகை நில அடிப்படையில் தெய்வத்தின் பெயரால் வழிபாடு நடத்திய நிலையினைச் சித்திரிப்பதாக அமைகின்றது. இதனை உறுதிப்படுத்தும் வகையில் தொல்காப்பிய நூற்பா அமைந்துள்ளது.

**"மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லைக் குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**
**சொல்லிய முறையான் சொல்லவும் படுமே"** *(தொல்.5)*

திருமால். முருகன் இந்திரன். வருணன். கொற்றவை ஆகிய தெய்வங்களின் நிலங்கள் முறையே முல்லை. குறிஞ்சி. மருதம். நெய்தல். பாலை எனவும். "சொல்லிய முறையால் சொல்லவும் படுமே" என்றதனால் இம்முறை மாற்றிச் சொல்லவும் பெறும். இங்கு குறிப்பிட்ட ஐவகை நிலத் தெய்வங்களின் வழிபாட்டு முறைகளை திணைநிலை அடிப்படையில் விரித்துரைப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## மருதம்

அகத்திணை ஐந்தினுள் ஒன்று மருதம். இந்நிலத்து மக்களாக உழுதும் உழுவித்தும் வாழும் வேளாண் குடிகள். இக்குடிமக்களின் தெய்வமாக இந்திரன் வழிபடப்படுகிறான்.

**துறைஎவன் அணங்கும், யாமுற்ற நோயே?**
**சிறையழி புதுப்புனல் பாய்ந்தெனக் கலங்கிக்**
**கழனித் தாமரை மலரும்**
**பழன ஊர! நீயுற்ற சூளே!** *(பா.53)*

தலைவி நீர்த்துறையில் புனலாடச் சென்றாள். அங்கு உறைந்திருக்கும் தெய்வத்தை வழிபடாமல் நீராடினாள். எனவே அத்தெய்வம் அவளை அச்சுறுத் -தியது. நீர்த்துறை தெய்வத்தை வணங்கும் வழக்கம் இருந்துள்ளது. அதன் பயனாக குலத்தெய்வத்தை அல்லது முன்னோர்களை கிணற்றங்கரையில் கரகம் பாலித்து எடுத்து வருவதை அறிகிறோம். கரகத்தில் உள்ள நீர் தெய்வத்தன்மை பொருந்தியதாக கருதப்படுகிறது.

இந்திரனுக்குச் செய்யும் விழாவில் வெவ்வேறு ஊர்களில் இருந்து மலர்களைக் கொண்டுவந்து வெவ்வேறு வகை மாலைகளாகத் தொடுத்து வழிபாடு நடத் தியமையும். இந்திர விழாவின் பொருட்டு எடுத்தத் தேர் ஒவ்வொரு ஊரிலும் நிறுத்தி வழிபட்டச் செய்தியையும் அறிகிறோம். (பா.62) இன்றும் கிராமத் திருவிழாக்களின் போது முதற்தெய்வம் ஒவ்வொரு தெருக்களின் வழியாகவும். துணைத் தெய்வங்கள் ஒவ்வொரு வீட்டிற்கும் வந்து செல்வதைக் காணமுடிகின்றது.

**"பஞ்சாய்க் கூந்தல் பசுமலர்ச் சுணங்கில்**
**தண்புனல் ஆடித் தன்நலம் மேம்பட்டனள்**
**ஒன்தொடி மடவரல் நின்னொடு**
**அந்தர மகளிர்க்குத் தெய்வமும் போன்றே!"**

(பா. 76)

பஞ்சாப் என்பது தண்டான் கோரை ஆகும். இதன் நாரைக் கொண்டு கண்ணியும் மாலையும் கட்டித் தெய்வத்திற்கு அளிப்பதை மரபாகக் கொண்டிருந்தனர். இத்தெய்வத்தை தேவலோக மகளிரும் வணங்கி வழிபட்டிருக்க வாய்ப்புள்ளது.

## நெய்தல்

நெய்தல் என்பது ஐவகைத் திணைகளுள் ஒன்று. இந்நிலத்து மக்களுள் தொல்குடி மக்க ளானவரைப் பரதவர். நுழையர். அளவர் என்பர். இவர்களுள் தலையானவரைச் சேர்ப்பன், புலம்பன் என்று கூறுவர். இவர்கள் வணங்கிய தெய்வம் வருணன் ஆவான்.

**"அணங்குடைப் பனித்துறைத் தொண்டி அன்ன**
**மணங்கமழ் பொழில்குறி நல்கினள் - நுணங்குஇழை**
**பொங்கரி பரந்த உண்கண்**
**அம்கலிழ் மேனி அசைஇய எமக்கே"**

(பா. 174)

இங்கு அணங்குடை என்பது நீர்த்து றைகளில் உறையும் தெய்வம் என்பது பெறப்படும். தொண்டி என்னும் துறைமுகத்தில் இத்தெய்வம் நிலை பெற்றிருக்கலாம். மணங்கமழும் தன்மையை வைத்து இத்தெய்வம் உள்ள இடத்தை அறியலாம். சான்றாக சுனை இருக்கும் இடத்தில் மல்லிப் பூ வாசம் வந்தால் கன்னிமார் மஞ்சள் அரைத்தும் பூசி விளையாடுவதாகக் கூறுகிறார். (முனியன் வயது 80 கீழ்சிறுப்பாக்கம். நாள் 22.12.08)

நெய்தல் மலர் நீல நிறம் உடையது. செருந்தி மலர் பென்னிறம் உடையது. இரண்டையும் கலந்து கட்டியபோது அம்மாலை மணியும் பொன்னும் கலந்து தொடுக்கப்பட்ட மாலை போல் விளங்குகிறது. அம்மாலையை அரிய ஆற்றலை உடைய கடவுளுக்கு அணிவித்து வழிப்பட்டனர் எனலாம்.

## குறிஞ்சி

ஐவகை நிலப்பாகுபாடுகளுள் ஒன்று குறிஞ்சி. இந்நிலத்து மக்களை குறவர் எனவும். வேடுவர் எனவும் வழங்குவர். இவர்கள் முருகனை வணங்கி வழிபடுகின்றனர்.

**"நம்முறு துயர் நோக்கி அன்னை**
**வேலன் தந்தனளாயின், அவ்வேலன்**
**வேறிகமழ் நாடன் கேண்மை**
**அறியுமோ தல்ல? - செறி எயிற்றோயே."**

***(பா. 241)***

தலைவி மேனி வேறுபட்டாள் ஆனாள். அது தெய்வக்குற்றம் என எண்ணி வேலனை வருவித்து அவனிடம் உற்றார் உறவினிடம் குறையைக்கூறி வழிபட்ட செய்தியை அறிய முடிகிறது. ஏதாவது ஒரு காரணத்தினால் நோய்வாய்ப்பட்டாலும் அது தெய்வத்தால் ஏற்பட்டது என எண்ணுகிறோம். வீட்டில் ஒவ்வொரு ஆண்டும் குலத்தெய்வத்திற்காக கொம்புகாரனை (வைணியர்) அழைத்து பூசை செய்வது வழக்கம். இந்த ஆண்டு பூசை செய்யவில்லையாதலால் வீட்டிலுள்ள ஆடுகளுக்கு கோமாரி எனும் நோய் ஏற்பட்டுவிட்டது. எனவே. இந்நோய் தெய்வக்குற்றத்தால் ஏற்பட்டு விட்டது எனக்கூறி கொம்புகாரனை அழைத்து பூசை செய்தோம் எனக் கூறுகிறார்.

**"அறியாமையின் வெறியென மயங்கி**
**அன்னையும் அருந்துயர் உழுந்தனள்: அதனால்**
**எய்யாது விடுதலே கொடிதே- நிரையிதழ்**
**ஆய்மலர் உண்கண் பசப்பச்**
**சேய்மலை நாடன் செய்த நோயே !"**

***(பா.242)***

தொலைவில் தோன்றும் மலையை உடைய நாடன் தனது பிரிவினால் செய்த துன்பத்தை அறியாமையால் வெறியாடித் தீர்க்க முயன்று அன்னையும் வருந்தினாள். அவ்வாறு தெய்வத்தை நினைக்காமல் விட்டாலும்மிகக்கொடியது. இங்குஅன்னையின் அறியாமையும். வெறியாட்டின்மேல் இருந்த நம்பிக்கையும் புலப்படுகிறது.

**"பொய்யா மரபின் ஊர்முதுவேலன்**
**கழங்குமெய்ப் படுத்துக் கன்னம் தூக்கி**
**முருகென மொழிபு மாயின்**
**கெழுதகை கொல் - இவள் அணற்கியோர்கே"**

***(பா.245)***

வேலன் வெறியாடி சொல்வதை எல்லாம் உண்மை என்று நம்புவர். ஆதலால் பொய்யாமரபு எனப்பட்டது. வேலன் ஊர்க்கு ஒருவனாய் முதுகுடியில் தோன்றியவன். அவன் தன் தலையில் ஆடைகட்டி, சிறிய பைகள் தொங்கவிடப்பட்ட பலகிளைகளை உடைய வளைந்த கொம்பொன்றினால், கழற்காய்களை முன்வைத்து அள்ளி எடுக்கும் போது கண்டு சொல்லும் ஒருவகைக் குறி. இப்பாடலின் வழி முருகனுக்கு கழற்சிகாய் படைத்து வழிபாட்டையும், அக்காய்களை எண்ணி குறி சொல்லவும் தெரிந்து வைத்திருந்தார்கள் என அறியமுடிகிறது. இக்காலத்திலும் கிராமங்களில் தன்னுடைய தெய்வத்தை வணங்கி துடைப்பங்குச்சியைத் தோராயமாக எடுத்து, அவற்றை எண்ணிதான் நினைத்தது நிறைவேறும் அல்லது நிறைவேறாது என சொல்கின்றனர்.

**"வெறிசெறித் தனனே வேலன் - கறிய**
**கன்முகை வயப்புலி கழங்கு மெய்ப்படூஉ**
**புன்புலம் வித்திய புனவர் புணர்ந்த**
**மெய்ம்மை யன்ன பெண்பாற் புணர்ந்து**
**மன்றில் பையுள் தீரும்**
**குன்ற நாடன் உறீஇய நோயே!"**

***(பா.246)***

மலையில் புன்செய் நிலங்களில் தினைப்பயிரை விதைத்த குறவர் விலங்குகள் வந்து அழிக்காதபடி வேலனை வேண்டுவர். அதன் பயனாக நிலங்களில் பயிரிடப் -பட்டுள்ள பயிர்களைக் காட்டுப்பன்றி. மான். குள்ளநரி முதலிய விலங்குகள் அழிக்காமல் இருக்க பொங்கல் வைத்தும். பலியிட்டும் வழிபடுகின்ற வழக்கத்தனை இன்றும் நாட்டுப்புறங்களில் காணப்படுகிறது.

**"அன்னை தந்தது ஆகுவ தறிவன்**
**பொன்னகர் வரைப்பில் கன்னம் தூக்கி**
**முருகென மொழியு மாவின்**
**அருவரை நாடன் பெயர்கொலோ அதுவே"**

***(பா.247)***

தாய் வெறியாடற் பொருட்டு வேலனைக் கொணர்ந்தமையும் அவ்வேலன் எடுக்கும் வெறியாட்டினால் விளையும் பயனையும் நான் நன்கு அறிவேன். ஆதலின் அழகிய இல்லத்தில் வெறியாடி கன்னத்தை அணிந்து இவளை வருத்தியவன் முருகன் என்று அவன் சொல்வானாயின், அம்முருகு என்னும் பெயர் அவனைத் தன்டிக்கும் என்பது பெறப்படுகிறது.

**"பெய்ம்மணல் முற்றம் கவின்பெற இயற்றி
மலைவாள் கொண்ட சினைஇய வேலன்
கழங்கினான்' அறிகுவ தென்றால்
நன்றால் அம்ம நின்றஇவள் நலனே"**

*(பா.248)*

கிரௌஞ்ச மலையினையும். இந்திரன் முதலியோரையும் வெற்றி கொண்ட முருகப் பெருமானின் வேலை ஏந்திய வேலன் புதுமணல் பரப்பப்பட்ட முற்றம். அழகு பெற அமைத்து, அதில் கழற்சிக் காயை அமைத்து வழிபட்ட முறையையும் அறிய முடிகிறது.

**"பெய்ம்மணல் வரைப்பில் கழங்குபடுத்து அன்னைக்கு
முருகென மொழியும் வேலன். முற்றவன்
வாழிய - இலங்கும் அருவிச்
சூர்மலை நாடனை அறியா தோனே"**

*(பா.249)*

புதுமணல் பரப்பிய இடத்தே கழங்கும் வைத்து 'இவளுக்கு உண்டான மெலிவுக்குக் காரணம் முருகப்பெருமான்' என்று வெறியாடும் வேலன் தாயிக்குச் சொன்னான், தாயும் அதை மெய்யென்று நம்பினாள். ஆதலால் இந்த வேலன் வாழ்க என வாழ்த்தி வணங்கினாள். வேலன் பெயர் கூறினாலும் அவன் தாய் அதை அறியாமையால் ஏற்றுக் கொண்டாலும் அம்முருகப் பெருமானுக்குத் தெள்ள தெளிவாகத் தெரியும் என்பது புலப்படுகின்றது.

**பாலை**

அன்பின் ஐந்திணைகளுள் ஒன்று பாலை. இந்நிலத்துக்கு உரியவர் எயினர். எயிற்றியர். மறவர். மறத்தியர் ஆகியோவாராவர் இந்நிலத்தைத் தெய்வம் கொற்றவையாகும்.

**"பல்லிருங் கூந்தல் மெல்லிய லோள்வயின்
பிரியா யாயினும் நன்றே. விரிணர்க்
காலெறுழ் ஒள்வீ தாஅய
முருகமர் மாமலை பிரிந்தெனப் பிரிமே"**

*(பா.308)*

முருகன் விரும்பி உறையும் இடம் மலையாகும். அம்மலையில் உள்ள முருகனுக்கு எறுழ் மலர்கள் வைத்து வணங்கும் வழக்கம் இருந்துள்ளது. குறிஞ்சி நிலமும். முல்லை நிலமும் திரிந்து பாலையாவதற்கு முன்னரே முருகன் வழிபாடு இருந்துள்ளது. இரண்டு நிலமும் திரிந்த பொழுது பாலையானது. பாலை நிலத்திற்கான கொற்றவையைப் பற்றிய பாடல் ஒன்றுகூட இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**முல்லை**

அகத்தினை ஐந்தனுள் முல்லையும் ஒன்று. இந்நிலத்து மக்கள் கோவலர் இடையர். இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர் என்போராவர். ஆயரைப் பொதுவர் எனவும் உரைப்பர். இவர்களது செய்கை களாக கால்நடை மேய்த்தல். ஏறுதழுவுதல் முதலியனவாக அமைகின்றன. இவர்கள் வணங்கிய தெய்வம் திருமால். இத்தெய்வத்தின் எச்சமாக நாட்டுப் புறங்களில் பெருமாளப்பன் என்ற பெயரில் வழிபட்டு வருகின்றனர்.

**முடிவுரை**

சங்க இலக்கிய அகம் சார்ந்த நூலான ஐங்குறுநூற்றில் மருதம், நெய்தல், குறிஞ்சி பாலை முல்லை எனச் சொல்லப்பட்ட ஐந்திணைகளிலும் தெய்வங்களை வழிபட்ட

செய்திகளை எடுத்தியம்புகின்றன. இவை வழிபாட்டு முறையின் அடித்தளமாகவும். பழந்தமிழரின்வழிபாட்டைவலுப்படுத்தும் வகையிலும் உள்ளன. இச்சிறப்பு வாய்ந்த பழந்தமிழரின் வழிபாடானது ஏட்டளவில் மட்டுமே குறிக்கப் பெற்றுள்ளன. இதன் தாக்கம் நாட்டுப்புறங்களில் மட்டுமே சில எச்சங்களாகக் காணப்படுகின்றன. இந்திரன், வருணன், முருகன், கொற்றவை, திருமால் ஆகிய தெய்வங்களின் வழியாக மாலைஅணிவித்தல், கழற்சிக்காய் வைத்தல். பயிர்களைக் காக்கும் முறை, பலியிடல், குறிசொல்லுதல், பிள்ளைப்பேறு வேண்டுதல் முதலியவைகள் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. இதன் மாற்றம் சமுதாயத்தில் உள்ள வருங்கால இளைஞர்கள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்ற வழிபாட்டு முறைகளைத் தொகுத்து வழிபட்டும் காத்தும் வருவோமானால் பழங்காலத் தமிழரின் பண்பாட்டை நிலைநிறுத்த முடியும்.

மலர் 4 சிறப்பிதழ் 1 டிசம்பர் 2019 P ISSN: 2454 - 3993 E ISSN: 2582 - 2810




**SHANLAX**
INTERNATIONAL JOURNALS
editor@shanlaxjournals.com | www.shanlaxjournals.com

A Peer-reviewed- Refereed Scholarly Quarterly Journal


ஸ்ரீ எஸ். இராமசாமி நாயுடு
ஞாபகார்த்தக் கல்லூரி (தன்னாட்சி), சாத்தூர்


தமிழ் வளர்ச்சி மன்றம், சிட்னி ஆஸ்திரேலியா


தமிழ்மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு
தலைமையகம் ஜெர்மனி


சான்லாக்ஸ் பன்னாட்டுத் தமிழியல் ஆய்விதழ், மதுரை

இணைந்து நடத்தும்

பன்னாட்டுக் கருத்தரங்கம்

## இலக்கிய வகைமை மாற்றத்திற்கான வளர்ச்சிக்கு சமுதாயப் பின்புலத்தின் பங்களிப்பு

# Certificate
OF PUBLICATION

We hereby certify that

க. பிரேமா, முனைவர் பட்ட ஆய்வாளர்

In recognition of the Publication of the Paper Entitled

ஐங்குறுநூறு - ஐவகை நில கடவுள் வழிபாடு

Published in

சான்லாக்ஸ் பன்னாட்டுத் தமிழியல் ஆய்விதழ்

ந. முருகேசபாண்டியன்
முதன்மை ஆசிரியர்

Er. S. Lakshmanan
The Publisher








# Certificate of Appreciation

This is to certify that

த.பிரேமா, முனைவர் பட்ட ஆய்வாளர்.

has attended and presented a paper on the Tittle

ஐங்குறுநூறு - ஐவகை நில கடவுள் வழிபாடு

in the

INTERNATIONAL SYMPOSIUM ON
CONTRIBUTION OF COMMUNITY BACKGROUND TO THE
DEVELOPMENT OF LITERARY TAXONOMY

organized by

Department of Tamil, Sri S.R.N.M. COLLEGE, Sattur,
Tamil Valarchi Mandram, Sydney, Australia.
Tamil Heritage Foundation International Organization, Germany
Shanlax International Tamil Research Journal,
P-ISSN 2454 - 3993 / E-ISSN 2582 - 2810

Held On
23rd December 2019 at
Sri S.R.N.M. COLLEGE, (Autonomous)
Sattur, Tamilnadu, India

**Dr. V. Dhanuja**
Convener &
Asst. Prof of Tamil
Sri S.R.N.M. College,
(Autonomous), Sattur

**Dr. P. Sri Devi**
Convener & Head
Department of Tamil (S.F)
Sri S.R.N.M. College,
(Autonomous), Sattur




**Dr. V. Renugadevi**
Former Head,
Department of Linguistics,
Former Chair Person,
School of Linguistics and Communication,
Madurai Kamaraj University,
Madurai

**Dr. S. Ganeshram**
Principal
Sri S.R.N.M. College,
(Autonomous),
Sattur

# தமிழ் இலக்கியங்களில்
## அறமும் அருளும்

தொகுதி 1








பதிப்பாசிரியர்கள்

முனைவர் ஆ. மகாலட்சுமி

திருமதி சுகந்தி நாடார்

முனைவர் இலட்சுமி கார்மேகம்



தமிழ்த்துறை (அரசு உதவி), என்.ஜி.எம். கல்லூரி (தன்னாட்சி)

பாலக்காடு ரோடு, பொள்ளாச்சி – 642 001



44

# கலித்தொகை - ஏறுதழுவலில் அறவுணர்வுகள்

த. பிரேமா
முனைவர்பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை
அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி)
சேலம் - 7.

## முன்னுரை

தமிழர்களின் பண்பாட்டு நிகழ்வுகள் அவர் தம் வாழ்வியலோடு பின்னிப் பிணைந்தவை ஆகும். பழங்காலத்தில் காடுகளில் வாழ்ந்த மக்கள் முல்லை நிலத்தவர் என்று அழைக்கப்பட்டனர். விலங்குகளோடு காட்டில் வாழ்ந்த மனிதன் தன்வாழ்வியலை வகை செய்து கொண்டு, தன்னை தன் கட்டுக்குள் கொண்டு வந்த இனம் ஆணினம். ஆணினத்தின் துணைகொண்டு வேளாண் தொழிலில் ஈடுபட்ட தமிழன் வளர்ச்சிக்கு கால்நடைகளே பெருஞ்செல்வமாக அமைந்தன. தமிழில் "மாடு" என்ற சொல் செல்வம் என்ற பொருளைத் தரும். அந்த அளவுக்கு கால்நடைகளை செல்வமாக கருதிய தமிழினம், பழங்கால நிகழ்வுகளை நினைவுட்டும் வண்ணம் ஏறுதழுவுதல் விளையாட்டை வீரத்தின் வெளிப்பாடாக விளக்கியது. ஒவ்வொரு ஆண்டும் கால்நடைகளை சிறப்பிக்கும் விதத்தில் ஏறுதழுவுதல் எனும் நிகழ்வினை ஊரின் பொது மன்றத்தில் நிகழ்த்தப்பட்டது. அவ்வாறு நிகழ்த்திய ஏறுதழுவல் வீர விளையாட்டின் சிறப்புகள், விளையாட்ட நிகழ்வுகள் பற்றி முல்லைக்கலியில் சிறப்புற இடம்பெற்றுள்ளன. முல்லைக்கலி உணர்த்தும் ஏறுதழுவுதல் நிகழ்வுகளைப் புராண இதிகாசங்களோடு உவமைப்படுத்திக் கூறியுள்ளனர்.

## ஏறுதழுவல் - வீர உணர்வின் வெளிப்பாடு

முல்லைத்திணை மக்கள் ஏறுதழுவல் வீரவிளையாட்டை வாழ்வின் முக்கிய நிகழ்வாக கருதுகின்றனர். முல்லைக்கலிப் பாடல்கள் பதினேழனுள் ஆறு பாடல்கள் ஏறுதழுவலைப் பற்றியும், அதன் சிறப்பினை பற்றியும் எடுத்துரைக்கும். முல்லைக்கலியின் நோக்கம் ஏறுதழுவுதலை வெளிப்படுத்துவதாக அமைந்து இருக்கும் இதுவே பின்னாளில் மஞ்சுவிரட்டு, ஜல்லிக்கட்டு என்னும் பெயர்களில் வருவதை தெரிந்து கொள்ளலாம்.

## குரவையாடுதல்

சங்கத் தமிழர்களின் அகவாழ்விலும் புறவாழ்விலும் வீரப்பண்பு முதன்மை பெற்று விளங்கியது. அகவாழ்வில் வீர உணர்வு பெரிதும் போற்றப்பட்டது என்பதற்கு ஏறுதழுவல் மிகச்சிறந்த சான்றாகும். இது ஆயர்குல மக்களின் சடங்காக போற்றப்படுகிறது. இதனை ஏறுகோள் என்றும் அழைப்பர். இவ்விளையாட்டில் பறைஅறைந்து மக்களுக்கு உணர்த்துதலும், குரவையாடுதலும் முக்கிய நிகழ்வாக இருந்துள்ளன.

*"அவ்வழிப் பறையெழுந்திசைப்பப் பல்லவரார்ப்பக்*
*குறையா மைந்தர் கோளெதி ரெடுத்த*
*நறைவலஞ் செயவிடா இறுத்தன ஏறு"*
*(கலி.பா-104:29-31)*

எனவும்,

*"ஆங்கு -*
*குரவை தழீஇயாம் மரபுளி பாடிக்*
*தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுதும்"*
*(மேலது, பா-103-74-76)*

என்றும் முல்லைக்கலி கூறுகின்றது.

### வீரனுக்கு மணம் முடித்தல்

ஏறுதழுவல் என்பது வீரத்திற்கு ஓர் அடையாளமாக அமைந்தது. ஆயர்குலத்தில் மிகச்சிறப்பான நிகழ்வாக கருதப்பட்டுள்ளது. காளையை அடக்கும் வீரன் ஒருவனுக்கே தனது மகளை மணமுடித்து தருவேன் என்று முல்லைநில மக்கள் கூறுவதனை,

*"பகலிடக் கண்ணியன் மைதற் குழலன்*
*சுவல்மிசைக் கோலசைத்த கையன் அயலது*
*கொல்லேறு சாட இருந்தார்க்கெம் பல்லிருங்*
*கூந்தலனை கொடுப்போம் யாம்"*
*(மேலது, பா-109:39-42)*

எனவரும் அடிகளால் உணரமுடிகின்றது. முல்லைநில வாழ்வில் ஏறுதழுவுதல் என்னும் வீரவிளையாட்டு மிகச் சிறப்பாக நடத்தப்பட்டுள்ளது.

ஏறுதழுவும் களம் தொழு எனப்படும் வலிமையுற வளர்க்கப் பெற்ற காளையின் கொம்புகளை சிவபெருமானின் மழுவாயுதம் போலக் கூர்மையாகச் சீவுவர். புலநிறங்களைக் கொண் காளைகள் தொழுவினுள் மடியிலும், மாமரத்தின் கீழும் உறையும் தெய்வங்களை வழிபட்ட பின்னர் ஏறுதழுவப் புகுவர்.

*"துறையும் ஆலமும் தொல்வலி மராமும்*
*முறையுளி பராஅய் பாய்ந்தனர்"* *(கலி.பா-103)*

மேற்கண்ட பாடல் அடிகளின் மூலம் இரண்டுவிதமான முல்லை நில மக்கள் வாழ்வியல் கூறுகளை அறயமுடிகிறது. ஒன்று தெய்வம் உறையும் இடம் பற்றிய செய்தி, மற்றொன்று இறைவனை வழிபட்டபின்பே எந்த செயலையும் செய்யும் பண்பு ஆகும்.

### ஏறுதழுவலும் முல்லை நில வாழ்வியலும்

ஒரு ஆடவன் முல்லைநிலப் பெண்ணை மணக்க விரும்பினால் அவர்கள் வளர்த்து வரும் காளையை அடக்க வேண்டும் அவ்வாறு அடக்கியவனுக்கே ஆயர்கள் தம் மகளை கொடுப்பர். அவ்வாறு அப்பெண்ணை மணக்க வேண்டும் எனில்,



*".....அவனை நீ*
*ஆயர் மகளிரியல்புரைத் தெந்தையும்*
*யாயுமறிய உரைத்தீயின் யானுற்ற*
*நோயும் களைகுவை மன்"* *(மேலது, பா-111:28-29)*

என்பதனால் ஆயர்மகளிரை மணக்க அவர்களின் இயல்புகளை அறிந்திருக்க வேண்டும் என்று தலைவி எடுத்துரைப்பதனைக் காணலாம். இதனை,

*"கொல்லேற்றுக் கோடஞ்சுவானை மறுமையும்*
*புல்லாளே ஆய மகள்"* *(மேலது, பா-103:63-64)*

என்னும் குறிப்பின் வழி காளையை அடக்க அஞ்சும் ஆயனை மறுமையிலும் கூட ஆய்மதகள் தழுவாள் என்பதனால் மணக்க விரும்பும் ஆயன் ஏறுதழுவுவதற்கு தயாராக இருக்க வேண்டும் என்று உறுதிப்படுத்துகின்றது. அதனால் விரும்பிய ஆயமகளிரை மணக்க வேண்டும் என்ற உந்துதல், மனவெழுச்சி ஆகியவை அவனிடம் மேலோங்கியதால் அவனுடைய வீரம் புலப்படுத்தப்படுகின்றது.

### வீர உணர்வு

ஏறுதழுவலில் ஈடுபடும் காளைகளும், காளையை அடக்கும் வீரர்களும் ஒருவருக்கொருவர் வீரத்தில் சிறந்து விளங்குவர். இருவரும் தத்தம் வீரத்தை வெளிப்படுத்தும் விதமாக போட்டியில் பங்கேற்கின்றனர். இதனை,

*"எழுந்தது துகள்*
*ஏற்றனர் மார்பு*
*கவிர்ந்தன மருப்பு*
*கலங்கினர் பலர்"* *(மேலது, பா-106:23-24)*

என்னும் பாடலில் ஏறுதழுவும் காட்சி புலப்படுகிறது. காளைகள் தொழுவத்திலிருந்து வெளியே வரும்போது தூசி பறக்க ஓடிவந்த காளைகளுக்கு எதிராகத் தன் மார்பை பொடுத்து தடுத்தனர் வீரர்கள். காளைகள் தன் கொம்புகளை முட்டி மோதி குத்த வருவதைக் கண்டவர்கள் சோர்ந்தனர். வீரனும் காளையும் மாறிமாறி போரிட்டு இரத்தம் வர கொம்புகள் வழுக்குகின்றன. அவ்வாறு வழுக்கும் கொம்புகளை பிடிக்க தரையில் இருக்கும் மண்ணை அள்ளி கைகளில் பிசைந்து கொண்டு தனது உடம்பில் தடவிக் கொள்கிறான். அவ்வாறு தடவியபின் பரதவர்கள் கடலினுள் மீன்பிடிக்க படகில் ஏறுவது போல அவன் செயல்பட்டான் என்பதனை,

*"தொட்ட தம் புண்வார் குருதியாற்*
*கைபிசைந்துமெய்திரிந்*
*தங்கார் பொதுவர் கடலுட் பரதவர்*
*அம்பியூர்ந் தாங்கூர்ந்தா ரேறு."*
*(மேலது, பா-106:28-29)*

என்னும் அடிகள் எடுத்துரைக்கின்றன.

*"கோட்டோடு சுற்றிக் குடர் வலந்த ஏற்றின்முன்*
*ஆடிநின்றக் குடர் வாங்குவான் பீடுகாண்*
*(மேலது, பா-103:28-29)*

காளையின் முன் தொங்குகின்ற குடரானது அவன் பயிற்றில் கொம்பு பாய்ந்ததை கண்டு மீண்டும் வயிற்றிலிடுபவனை காண் என்பதில் துன்பத்தை மீறிய வீரம் வெளிப்படுகிறது. உயிர்போகும் நிலையிலும், தன்குடர் வெளிவந்த நிலையிலும், காளையை அடக்குவதிலேயே அவன் குறியாக இருக்கிறான் என்பதை காணமுடிகிறது. அந்த வீரன் ஏற்றின் நோக்கம் எதுவென அறியாமல் அஞ்சாதவனாய் அதன்மேல் பாய்ந்து செல்லும் இடையனை சாவக்குத்தி கொம்பினிடத்தே எடுத்துக் கொண்டு குடலை கிழிக்கின்றதை பார் என்று நம் முன் ஏறுதழுவிய காட்சியைப் புலவர்,

*"நோக்கஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாக்குத்திக்*
*கோட்டிடைக் கொண்டு குலைப்பதன் தோற்றங்காண்"*
*(மேலது, பா-101:16-17)*

*"விடரியங் கண்ணிப் பொதுவனைச் சாடி*
*குடச்சொரியக் குத்திக் குலைப்பதன் தோற்றங்காண்"*
*(மேலது, பா-101:22-23)*

*"கதனஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாடி*
*நுதிநுனைக் கோட்டாற் குலைப்பதன் தோற்றங்காண்"*
*(மேலது, பா-101:39-42)*

எனவரும் பாடலடிகளில் காட்டுகிறார். இதனால் ஏறுதழுவும் ஆயர்கள் தம் உயிரை ஒருபொருட்டாக நிலையாது தம் காதலியை மணக்க வேண்டும் என்பதிலேயே கண்ணும் கருத்துமாய் இருந்துள்ளதை காணமுடிகிறது.

## ஏறுதழுவலில் அறம்

உயர்ந்த கொம்பிடத்தே வைத்த உலண்டினது நிறத்தை யொக்கும் புல்லிய நித்தைத் தன்னிடத்தே உடைய எருத்தினை கண்டு அஞ்சாமல் அதன் மேலே பாய்ந்து அதன் கொம்புகள் இடையை சாவக்குத்திய உடலைக் குலைக்கின்ற தோற்றம் அழகிய தலைமையினையுடைய மனமசைந்த இயல்பின உடையவளாகிய துரோபதியை தீண்ட கூந்தலிலே கையை நீட்டிய துச்சாதனுடைய நெஞ்சைப் பிளந்த வீமசெனனைப் போல இருந்தது என்ற பாரத புராணக் காட்சி ஒப்புமைப்படுத்தப்பட்டுள்ளது. அடுத்தவர் மனைவியை தீண்டுதல் குற்றமற்ற செயல் என்பதால், வீமன் துச்சாதனின் நெஞ்சை பிளந்த செய்தி அறச்செயலாகும். இதனை,

*"அஞ்சீ ரசையியல் கூந்தற்கை நீட்டியான்*
*நெஞ்சம் பிளந்திட்டு நேரார் நடுவண்தன்*
*வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்*
*சுடர்விரிந் தன்ன சுரிநெற்றிக் காரி (கலி.101:18-21)*

என்னும் அடிகள் புலப்படுத்துகின்றன.



ஆயர்களின் எருத்தின் மேலே பாய்ந்த பொதுவனை தன் கொம்பினால் குலைப்பதன் தோற்றம் தன் தந்தை துரோணாசாரியனைக் கொன்ற சிகண்டியைத் தன் முயற்சியாலே வென்று கொன்று தன் தோளால் தலையைத் திருகும் அச்சுவத்தாமாவைப் போல் உள்ளது என்பதை,

*"செவிமறை நேர்மின்னு நுண்பொறி வெள்ளைக்*
*கதனஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாடி*
*நுதிநுனைக் கோட்டாற் குலைப்பதன் தோற்றங்காண்*
*ஆரிரு ளென்னா னருங்கங்குல் வந்துதன்*
*தாளிற் கடந்தட்டுத் தந்தையைக் கொன்றானைத்*
*தோளிற் றிருகுவான் போன்ம்" (கலி.101:27-32)*

இவ்வரிகள் விளக்குகின்றன.

## வீரன் பெறும் பரிசு

ஏறுதழுவும் வீரன் தான் விரும்பும் பெண்ணைப் பரிசாக பெறவும், அவளோ தான் விரும்பும் ஆடவனையே அடையவும் விரும்புவர். ஆடவன் அவளை அடைய, அவள் வளர்க்கும் காளையை அடக்கவேண்டம் என் விரும்புவதனை,

*"முள்ளெயிற்று ஏள்இவளைப் பெறுமிதோர்*
*வேள்ளேற் றெருத்தடங்குவான்" (மேலது,பா-111:28-29)*

*"ஒள்ளிழை வாருறு கூந்தல் துயில்பெறும்*
*வைமருப்பிற்*
*காரிகதனஞ்சான் கொள்பவன்" (மேலது, பா-103:63-64)*

*"கொலையேறு கொள்வான் வரிக்குழை*
*வேயுறழ் மென்தோல் துயில்பெறும்"*
*(மேலது, பா-106:23-25)*

*"கொல்லேறு சாட இருந்தார்க்கெம் பல்லிரும்*
*கூந்தலைணை கொடுப்போம் யாம்"*
*(மேலது, பா-106:28-29)*

எனவரும் கலித்தொகைப் பாடல்களால் வலிமைமிக்க காளையைத் தழுவுகின்றவனே இந்த முல்லைமலரைச் சூடிய பெண்ணுக்கு உரிமையானவன் என்று குறிப்பு இடம்பெற்றுள்ளதைக் காணலாம்.

## ஏறுதழுவலும் சமய நம்பிக்கையும்

சங்கத் தொல்குடிகளிடம் தெய்வ நம்பிக்கை நிறைந்திருந்தது. அது இயற்கையோடு இயைந்த ஒன்றாக விளங்கியது. இயற்கையை இறைவன் கொடுத்த கொடை என அவர்கள் நம்பினர். இயற்கையின் மீதிருந்த நம்பிக்கை மற்றும் பக்தி உணர்வு இயற்கையை இறைவன் என்று எண்ணும்படியாக இருந்தது. எனவே தான் இயற்கையை வாழ்த்துகின்ற சங்கட் செய்யுட்கள் தெய்வ நம்பிக்கைத் தொடர்பானவையாகப் பதிவு செய்யப்பட்டன.

## முடிவுகள்

சங்ககாலத் தமிழர் பண்பாட்டில் காதலும் வீரமும் தனிச்சிறப்புப் பெற்று விளங்கின. காதலுக்கு வீரமே அடிப்படையாக அமைந்திருந்தது. வீரப்பண்புடைய தலைவனைப் பெறுவதையே சங்க மகளிர் விரும்பினர். வீரர்களைப் பெறுவதனையே சங்க மகளிர் சிறப்பாக போற்றினர். ஏறுதழுவுதல் (சல்லிக்கட்டு) விளையாட்டு சங்ககாலம் முதல் இக்காலம் வரை விழாவாக எல்லா இடங்களிலும் நடத்தப்பட்டு வருகிறது. அவ்வாறு அவர்தம் வீர நிகழ்வுகளை வெளிப்படுத்தி அறவுணர்வை வலியுறுத்துவதாக ஏறுதழுவல் நிகழ்வுகள் மகாபாரத கதைகளோடு ஒப்பிடப்பட்டு அமைந்துள்ளன.





இணையத் தோழி

# நல்லமுத்துக்கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி (தன்னாட்சி) பொள்ளாச்சி

## தமிழ்த்துறை (அரசு உதவி),

தமிழ் அநிதம் (அமெரிக்க நிறுவனம்),

இணையத்தோழி மின்னிதழ்,

தினமலர் கல்வி மலர்

இணைந்து நடத்தும்

# தமிழ் இலக்கியங்களில் அறமும் அருளும்

## பன்னாட்டுக் கருத்தரங்கம்

## (INTERNATIONAL CONFERENCE)

### சான்றிதழ்

04.01.2019

திரு/திருமதி/செல்வி/முனைவர் க. பிரேமா

கலித்தொகை – ஏறுதழுவலில் அறவுணர்வுகள் அவர்கள்

நல்லமுத்துக்கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி தமிழ்த்துறை (அரசு உதவி), தமிழ் அநிதம் (அமெரிக்க நிறுவனம்), இணையத்தோழி மின்னிதழ், தினமலர் கல்வி மலர் இணைந்து நடத்திய **தமிழ் இலக்கியங்களில் அறமும் அருளும்** என்னும் பன்னாட்டுக் கருத்தரங்கில் கட்டுரையாளராகக்/பார்வையாளராகக் கலந்து கொண்டார் எனச் சான்றளிக்கப்படுகிறது.

| | | | | |
|---|---|---|---|---|
| முனைவர் பொ.மா. பழனிசாமி | திருமதி சுகந்தி நாடார் | முனைவர் இலட்சுமி கார்மேகம் | கலாநிதி சாந்தி கேசவன் | முனைவர் ஆ. மகாலட்சுமி |
| முதல்வர் | தமிழ் அநிதம் (அமெரிக்க நிறுவனம்) | ஆசிரியர், இணையத்தோழி | இந்து நாகரிகத் துறைத்தலைவர், கிழக்குப் பல்கலைக்கழகம், இலங்கை | ஒருங்கிணைப்பாளர் |

ISSN 2454-3993





SHANLAX
#SINCE1990

■ மலர் 3 ■ சிறப்பிதழ் 1 ■ அக்டோபர், 2018

# சான்லாக்ஸ் பன்னாட்டுத் தமிழியல் ஆய்விதழ்

காலாண்டிதழ்




தமிழ்த்துறை
நடத்தும்
பன்னாட்டுக் கருத்தரங்கம்

தொகுதி - 2

# தமிழ் இலக்கியங்களில் அறநெறிக் கூறுகள்

சிறப்பு வெளியீட்டு ஆசிரியர்கள்

முனைவர் மா. சதாசிவம்
திருமதி ம. அனிதா
முனைவர் இரா. செந்தில்ராணி
முனைவர் வே. சசிகலா

பச்சமுத்து கலை மற்றும் அறிவியல் மகளிர் கல்லூரி
(பெரியார் பல்கலைக்கழக இணைவு பெற்றது)
தருமபுரி – 636 701



UGC Approved Journal Number: 40729
VOLUME 3 | SPECIAL ISSUE 1 | OCTOBER 2018

Shanlax International Journal of Tamil Studies

A Peer-reviewed- Refereed Scholarly Quarterly Journal
Globally Indexed with Impact Factor

# பரிபாடல் - புராணக் கருத்துக்களில் அறநெறி (திருமால்)

த.பிரேமா
*முனைவர் பட்ட ஆய்வாளர், (தமிழ்த்துறை)*
*அரசு கலைக் கல்லூரி, சேலம்*



**முன்னுரை**

பழம் பெருமை மிக்க எட்டுத்தொகை நூல்கள் ஐந்தாவதாக அமைந்தது பரிபாடல். ''ஓங்கு பரிபாடல்'' என்று புகழப்பட்டும், பரிந்து செல்லும் ஓசையைப் பெற்றும் பண்ணோடு பாடப்பட்ட எட்டுத்தொகை நூல்களுள் பரிபாடல் தனிச்சிறப்பு பெறுகிறது. கடவுள்களைப் பற்றி பாடுவதால் 'ஓங்கு' என்ற அடைமொழி பெற்று அமைகிறது.

**''பரிபாடலே தொகைநிலை வகையின்**
**இது பா என்னும் இயனெறி இன்றிப்**
**பொதுவாய் நற்றற்கும் உரிதொன மொழிப''**

என தொல்காப்பியம் பரிபாடலைப்பற்றி குறிப்பிடும்போது சிற்றெல்லை 25 அடியும் பேரெல்லை 400 அடியும் பெற்று வரும் என்கிறது. எனவே இலக்கணப்படி பரிபாடல் அகப்பாடலாயினும், புறப்பாடல்கள் மிகுதியாக உள்ளமையால் அகமும், புறமும் சார்ந்த நூலாகும்.

இறையனார் அப்பொருளுரையில் பரிபாடல்களின் தொகுப்பு 70 எனக் குறிக்கப்பட்டு இருந்தாலும் இவற்றில் கிடைத்து இருக்கும் பாடல்களின் எண்ணிக்கை 22 ஆகும்.பரிபாடலில் ஆறும், புறத்திரட்டில் ஒன்றுமாக ஏழு பாடல்களில் திருமால் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன.

உலக மக்களை நல்வழிப்படுத்தவும், தீமைகளைக் களைந்து நன்னெறிகளை நிலைநாட்டவும் பல்வேறு வகையான அவதாரங்களில் உள்ள புகழையும் சிறப்புகளையும் பரிபாடல் விளக்கி உள்ளது. அவற்றை எடுத்து இயம்புவதாக இவ்வாய்வு கட்டுரை விளங்குகிறது.

**திருமாலின் அவதாரம்**

உலக உயிர்களைப் படைத்தவன் இறைவன், படைக்கப்பட்ட உயிர்களைப் பரிவுடன் காத்து அருள்புரிபவன் இறைவன். உலகை நிலை நிறுத்தி ஆளுகின்ற இறைவன் தன் நிலையிலிருந்து இறங்கி வந்து அருள்புரிவதை அவதாரமாகக் இவ்வாய்வுக் கட்டுரை விளக்குகிறது.

விண்ணுலகில் உறையும் இறைவன் மண்ணுலகில் வாழும் மக்களைக் காக்கவும், தீயவர்களை அழிக்கவும், தர்மத்தையும், அறத்தையும் நிலைநாட்டி மக்களை நல்வழிப்படுத்தவும் அவதாரம் எடுக்கிறார் என்றும் இதை

**''நல்லோரைக் காப்பதற்கும் கெட்டவரைக்**
**கரந்தொடுக்குவதற்கும் அறத்தை நிலை**
**நாட்டுவதற்கும் யுகந்தோறும் நான்**
**அவதரிக்கிறேன்.''**

என்று கண்ணன் கீதையில் கூறுவதை அறியலாம்.

**திருமால் என்கின்ற விஷ்ணுவின் அவதாரங்களும் அதன் சிறப்புகளும்**

திருமாலின் திரு அவதாரங்கள் பத்து. இவை தசாவாதாரம் எனப்படுகிறது. அவை, 1.மச்ச அவதாரம் 2.கூர்ம அவதாரம் 3.வராக அவதாரம் 4.நரசிம்ம அவதாரம் 5.வாமன அவதாரம்6. பரசுராம அவதாரம் 7. இராம அவதாரம் 8. புலராம அவதாரம் 9.கிருஷ்ண அவாதரம் 10.கல்கி அவதாரம் என்பனவாகும். ஆழ்வார்களில் பெரியாழ்வாரும், தம் திருமொழியில் திருமாலின் தசாவாதாரச் சிறப்பினைப் பாடியிருப்பதை,

**''தேவிடைய மீனமாய் ஆமையாய்**
**ஏனமாய் அரியாயக் குறளாய்**
**முருவுருவில் ராமனாய் கண்ணனாய்க்**
**கற்கியாய் முடிப்பான் கோயில்''**

என்ற இப்பாசுர வரிகள் மூலம் அறிய முடிகிறது. விலங்கு நிலையில் எடுத்த அவதாரங்கள் மச்ச, கா்ம, வராக என்பன. விலங்கு, மனிதன் இரண்டும் இணைந்த நிலையில் தோன்றிய அவதாரங்களாக வாமன, பரசுராம, இராம, பலராம, கிருஷ்ண மற்றும் கல்கி அவதாரம் என்பனவாகும்.

சிற்றறிவுடைய உயிரினமாகிய மச்ச(மீன்) அவதாரத்திலிருந்து படிப்படியாக வளா்ந்து பேரறிவுடைய கண்ணன் அவதாரமென பரிபூரணமான மனித அவதாரம் எடுத்து திருமால் உயா்ந்து நிற்கிறாா். உலகு தோன்றிய காலத்திலிருந்து உயிரினங்கள் படிப்படியாகத்தான் வளா்ந்து வந்து இருக்கின்றன என்னும் அறிவியல் உண்மையை இவ் அவதாரங்கள் மக்களுக்கு எடுத்துக் காட்டுகின்றன. உயிா்கள் படிப்படியே வளா்ந்த முறையினை மாணிக்கவாசகரும் தன் திருவாசகத்தில்,

**"புல்லாகிப் பூடாய் புழுவாய் மரமாகிப்**
**பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிப்**
**கல்லாய் மனிதராய்ப் பேயாய் கணங்களாய்**
**வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்**
**செல்லா அ நிறைவித் தாவர சங்கமத்துள்**
**எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்"**

எனக் குறிப்பிட்டு உள்ளாா்.

**திருமாலின் மறு உருவமான வராக அவதாரம்**

இரண்யாட்சன் (பிரகலாதனின் பெரியப்பா) என்ற அரக்கன் மற்றும் தேவா்களிடம் வேண்டுமென்றே சண்டைக்கு சென்றான். வாயு, அக்கினி, யமன், நிருதி மற்றும் வருணபகவான் முதலானவா்களோடும் போரிட்டான். உலக மக்களுக்கு பல இன்னல்களை விளைவித்தான். படைக்கும் கடவுளின் ஆற்றலுக்கு களங்கம் உண்டாக்க எண்ணிய அவன் பூமியைப் பாய் போலச் சுருட்டினான். சுருட்டிய பூமியை யாருக்கும் தெரியாமல் கடலுக்கு கீழே சிறை வைத்தான். பூமியையும், பூதேவியையும் காக்க வேண்டுமென தேவா், முனிவா்கள் முதலானோா் திருமாலிடம் வேண்டி முறையிட்டனா். அவா்கள் வேண்டுகோளினை ஏற்று இறைவன் வராக உருவமெடுத்து (பன்றி) கடலுக்குள் சென்று தம் கோட்டினால் (கொம்பு) பூமியை மீட்டு வெளிக்கொண்டு வந்தாா். இப்புராண செய்தியை, நாச்சியாா் திருமொழியும்,

**"பாசி தூா்த்துக் கிடந்த பாா்மகட்டும் பண்டொருநாள்**
**மாசு உடம்பின் நீா் வாரா மனைமிலாப் பன்றி ஆம்**
**தேசு உடைய தேவா் திருவரங்கச் செல்வனாா்**
**பேசி இருப்பதை போா்த்திறம் பேராவே"**

என்ற இப்பாசுர வரிகள் மூலம் விளங்குகிறது.

**"பழிப்பில் பெருஞ்சீருற்ற செங்கட் கரும்பன்றி"**

என்று பிள்ளைப் பெருமாள் ஐயங்காா் வராக மூா்த்திக்கு இழிபிறப்பு என்ற குற்றம் இல்லை என்கிறாா். பூமி முழுவதும் கடலுக்கடியில் சென்று விட்டதால் அனைத்துயிா்களையும் மீடேற்றும் நோக்கம் கொண்டதே இவ் அவதாரமென்பதை

**"நானிலந் துளக்கற முழு முத னாற்றிப்**
**போலம் புனை யிதழின மணிமடற் பேரணி**
**பாருக்கு…….. தவிா்ப்பதற்காக**

என்று திருசரங்க மாலையும் இவ்வவதார நோக்கத்தினை விளக்குகிறது.

**ஊழிக்கே பெயா் (வராக கற்பம்) பெற்ற அவதாரம்**

திருமாலின் அவதாரம் ஊழக்கே பெயா் பெற்ற அவதாரமாகத் திகழ்கிறது. இதனை,

**"நெய்தலும்,குவளையும், ஆம்பலும், சங்கமும்**
**மைஇல் கமலமும், வெள்ளமும், நுதலிய**
**…………………………………………..**
**ஊழி ஒருவினை உணா்த்தலின், முதுமைக்கு**
**ஊழி யாவரும் உணரா**
**ஆழி முதல்வ! நீற் பேணுதும், தொழுது"** (பரிபாடல் 2. 13-19)

என்ற பாடல் குறிப்பிடுகிறது. நெய்தல், குவளை, ஆம்பல், சங்கம், வெள்ளம் முதலான எண்களுக்குள் அடங்காது, எவராலும் தெரிந்துகொள்ள இயலாத எண்ணற்ற ஊழிக்காலங்கள் (உலக அழிவுறும் காலங்கள்) பல கழிந்துள்ளன. ஊலகைக் காக்கும் பொருட்டு திருமால் ஊழிதோறும் எண்ணற்ற திருவிளையாடல்கள் நிகழ்த்தி உள்ளனர். திருமால் நிகழ்த்திய திருவிளையாடல்களுள் ஒன்று தான் நீரினுள் மூழ்கிக்கிடந்த நிலவுலகத்தை, பன்றியாக (வராக) அவதாரம் எடுத்து மேலே கொண்டு வந்தது. ஆதலால் அவ்வூழிக்காலம் ''வராக கற்பம்'' என்னும் பெயர் பெற்றது. இந்த ஒரு திருவிளையாடலிலே கணகற்ற ஊழிகள் அடங்கி உள்ளன. திருமால் தனது கைகளில் சக்ராயுதத்தை ஏற்றி ஊழிக்களுக்கெல்லாம் முதல்வனாகவும், உலக உயிர்களுக்கெல்லாம் தலைவனாகவும் சிறந்து விளங்கினார் என்பதை அறியலாம்.

**திருமால் திருமகளோடு நிலமகளையும் மணந்த அவதாரம்**

திருமகளோடு நிலமகளையும் மணந்த அவதாரமாக திருமகளின் அவதாரம் குறிப்பிடப்பட்டுள்ளது.

**''நித்தில மதாணி அத்தகு மதி மறுச்**
**செய்யோன் சேர்ந்து நின் மாக இல் அகலம்**
**..............................................**
**..............................................**
**புள்ளி நிலனும் புரைபடல் அரிதுஎன,**
**உள்ளுர் உரைப்போர் உரையொடு சிறந்தன்று'' (பரிபாடல் 2. 30-35)**

என்ற பாடல் வெளிப்படுத்துகிறது. வானவில்லை போன்ற பல நிறங்களை உடைய அணிகலன்கள் திருமாலின் திருமார்பை அழகு செய்கின்றன. வெண்முத்துக்களால் தொடுக்கப்பட்ட மாலைகளுடன் ஒளி வீசக்கூடிய முத்துப்பதக்கமானது நிலவில் உள்ள கலங்கத்தைப் போன்று காட்சி அளிக்கிறது. அத்தகைய திருமார்பில் சிவந்த நிறமுடைய திருமகள் வீற்றிருக்க செய்தலன்றி வேறொடு கலங்மில்லாதவராக விளங்குகின்றார். அவர் இரண்யாடசனால் கடலுக்கு அடியில் இருந்த நிலமகளை மீட்டுக் கொண்டு வருவதற்காக அலைகடலில் மூழ்கினார். அந்நீரில் மூழ்கியதால் தூய்மை செய்யப்பட்டதம் கொம்புகளால் நிலமகளைத் தாங்கி மேலே கொண்டு வந்தார். இப்புராண செய்தானது திருமகளை மணந்த திருமால் நிலமகளையும் மணந்தார் என்ற பொருளைத் தருகின்றது என்பர்.

**திருமால் ஏழுலகங்களையும் எஞ்சாது காத்த அவதாரம்**

திருமால் வராக அவதாரத்தின்வழி ஏழு உலகையும் காத்து அருள்புரியும் நிலை வெளிப்படுத்துகிறது.

**''கீழேழ் உலகமும் உற்ற அடியினை**
**தீ செங்நெய்தல், கனலியும், குற்றமும், ஞமனும்**
**மாசு இல ஆயிரம் கதிர் ஞாயிறும், தொகுஉம்**
**ஊழி ஆழிக்கண், இருநிலம், உருகெழு**
**கேழலாய் பருப்பின் உழுதோய் எனவும்**
**.................... நயநடது நிற்பாடுவோர்**
**பாடும் வகையே: எம்பாடல் தாம் அப்**
**பாடுவார்பாடும் வகை'' (பரிபாடல் 2. 30-35)**

விண், மண், பாதாளம் எனும் மூவகைப்பட்ட உலகங்களும் பாதாளம் என்பது கீழ் உலகம் என்று குறிப்பிடப்படுகிறது. அவை 1.அதலம் 2.விதலம் 3.சுதலம் 4.தராதலம் 5.மகாதலம் 6.இராசாதலம் 7.பாதலம் என்பன. ஊழிக் காலத்தின் முடிவானது பஞ்ச பூதங்களால் உருவாகும். அத்தருணத்தில் உலக முழுவதையும் ஒருசேர அழித்து விடும்படியான பெருந்தீயும், உலக உயிர்களை அவற்றின் வினை பயன்களுக்கு ஏற்ப அழியக்கூடிய அயமனும், அவனது ஏவலர்களாகிய கூற்றவனும், உலக இயக்கத்திற்கு காரணமாகிய ஞாயிறும் திங்களும் இவையாவும் ஒன்றுடன் ஒன்று கூடிய நிலையில் ஏழு உலகங்களும் கடலுக்குள் மூழ்கி அழியும் என்று பரிபாடல் குறிப்பிடப்பட்டு உள்ளது. புட்கலம், சம்வர்த்தம், ஆவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நிலவருணம் என்று ஏழுமேகங்களும் ஒன்று சேர்ந்து பொழிந்த மழையினால் கடலின் கண் மூழ்கிய நிலப்பகுதியை, பன்றியாக அவதாரமெடுத்து திருமால் மீட்டு கொண்டு வந்தார். இந்த பெருமைக்குரிய தெய்வமான திருமாலை மண்ணுலகில் வாழும் முனிவரும் அந்த மரபில் வந்த மக்களும் வாழ்த்தி வணங்குவதாக அமைந்து உள்ளது.

**மேருமலைக்கு ஒப்பாகிய வராக அவதாரம்**

முற்காலத்தில் நிலவுலகம் முழுவதும் வெள்ளத்தில் மூழ்கிய பொழுது திருமால் பன்றியாக அவதாரம் எடுத்து கருமையும், வலிமை மிக்க கழுத்தினால் தாங்கியவன். தன் ஒற்றை கொம்பால் நிலமகளை நெம்பி மேலே கொண்டு வந்து நிலை நிறுத்தினான். அச்செயல் மண்ணுலக நடுவில் ஓங்கி உயர்ந்து அதனை தாங்கிநிற்கும் மேருமலையின் செயலுக்கு ஒப்பாகும் என்று பரிபாடல் கூறுகின்றது.

திருமால் வராக அவதாரம் எடுத்து நிலவுலக தாங்கிய செயல் பலராலும் போற்றப்படும் மேருமலையின் செயலுக்கு உவமையாக குறிப்பிடப்பட்டு உள்ளதை,

**"புருவத்துள் கருவல் கந்தரத்தால்**
**தாங்கி, இவ்வுலகம் தந்து அடிப்படுத்ததை**
**.........................................நடுவண்**
**ஓங்கிய பலர் புகழ் குன்றினோடு ஒக்கும்"**

என்ற பாடல் வரிகள் மூலம் நன்கு உணர்த்தப்படுகிறது. நில உலகை வெள்ளத்திலிருந்து காத்து நிலை நிறுத்திய பெருமை திருமாலின் வராக அவதாரத்திற்கு உரியது என்பது இதன் வழி பெறப்படுகிறது.

**நானில மாந்தர்களையும் நடுக்கத்திலிருந்து உயிர்ப்பித்த அவதாரம்**

திருமால் வராக அவதாரமெடுத்து உலகை காத்து மக்களின் பயத்தை போக்கிய நிலை பரிபாடல் வெளிப்படுத்துவது,

**"நானிலம் துளக்கு அறமுழு முதல் நாற்றிய**
**பொலம் புனை அதழ் அணி மணி ............**
**இலங்கு ஒளி மருப்பின் களிறும் - ஆகி**
**மூவுரு ஆகிய தலைபிரி ஒருவனை! (பரிபாடல் 13. 34-37)**

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என நானிலங்களில் வாழும் உயிர்களின் நடுக்கம் நீங்கி திருமால் அந்நில உலகைக் கடலிலிருந்து வெளியே நெம்பிக் கொண்டு வர வராக அவதாரம் எடுத்தார்.

உருத்திர சிவனாக அழித்தல், நான்முகனாக படைத்தல், திருமாலாகக் காத்தல் எனும் முத்தொழிலை மூவேறு உருக்கொண்டு செய்பவராகவும் ஒப்பற்ற முழுமுதற் கடவுளாகவும் விளங்குகின்றார் என்பதைப் பரிபாடல் எடுத்துரைக்கின்றது. வராக அவதாரமெடுத்து நானில மக்களையும் நடுக்கத்திலிருந்து காத்து உயிர்ப்பித்த பெருமைக்குரியவர் என்பது சிறப்பிற்குரியதாகும்.

**முடிவுரை**

எனவே திருமால் வராக அவதாரத்தில் வழி ஏழு உலகங்களை காத்து அருள்புரிந்தார். ஊலகை வெள்ளத்திலிருந்து காத்து நிலை நிறுத்திய பெருமை நானில மக்களின் பயத்தை போக்கி அருள்புரிந்த பாங்கு பற்றி வராக அவதாரத்தில் கூறப்படுகிறது. திருமாலின் பத்து அவதாரங்களில் கல்கி அவதாரம் எடுக்கவில்லை. இவ்வவதாரம் மக்களிடத்தில் அதர்மம் மேலோங்கிய காலத்தில் வந்து அழிப்பதாக எச்சரித்துள்ளார் என்பது புராணக் கருத்தாகும். மீதமுள்ள ஒன்பது அவதாரங்களில் வராக அவதாரம் பற்றி பரிபாடலில் மிகுதியாக உள்ளன என்பதை இக்கட்டுரை மூலம் உணர்த்தப்படுகிறது.




# பச்சமுத்து கலை மற்றும் அறிவியல் மகளிர் கல்லூரி
## தருமபுரி - 636 701





**தமிழ்த்துறை**
**பன்னாட்டுக் கருத்தரங்கம்**
**சான்றிதழ்**





பச்சமுத்து கலை மற்றும் அறிவியல் மகளிர் கல்லூரி தமிழ்த்துறையின் சார்பில் திருவள்ளுவராண்டு 2049 புரட்டாசித் திங்கள் 18 ஆம் நாள் (04-10-2018) "தமிழ் இலக்கியங்களில் அறநெறிக் கூறுகள்" என்னும் பொருண்மையில் நடைபெற்ற பன்னாட்டுக் கருத்தரங்கில் செல்வி / திருமதி / திரு / முனைவர் த. பிரேமா, முனைவர் பட்ட ஆய்வாளர் அரசு கலைக் கல்லூரி சேலம் அவர்கள் பேராளராக / பார்வையாளராக கலந்து கொண்டு / கொண்டார் பரிபாடல் - புராணக் கருத்துக்களில் அறநெறி (திருமால்) என்னும் தலைப்பில் ஆய்வுக்கட்டுரை வழங்கினார் என்று சான்றளிக்கப்படுகிறது.

கருத்தரங்க ஒருங்கிணைப்பாளர் /
தமிழ்த்துறைத் தலைவர்

கருத்தரங்கத் தலைவர்

ISSN: 2454 - 3993 மலர் 3 சிறப்பிதழ் 1 அக்டோபர், 2018




SHANLAX
INTERNATIONAL JOURNALS
editorsij@shanlaxjournals.in | www.shanlaxjournals.in

A Peer-reviewed- Refereed Scholarly Quarterly Journal Globally Indexed with Impact Factor

தமிழ்த்துறை நடத்தும்
பன்னாட்டுக் கருத்தரங்கம்
தமிழ் இலக்கியங்களில் அறநெறிக் கூறுகள்



பச்சமுத்து கலை மற்றும் அறிவியல் மகளிர் கல்லூரி
(பெரியார் பல்கலைக்கழக இணைவு பெற்றது)
தருமபுரி – 636 701

# Certificate
OF PUBLICATION

We hereby certify that

ந. பிரேமா, முனைவர் பட்ட ஆய்வாளர்

In recognition of the Publication of the Paper Entitled

பரிபாடல் - புராணக் கருத்துக்களில் அறநெறி - (திருமால்)

Published in

சான்லாக்ஸ் பன்னாட்டுத் தமிழியல் ஆய்விதழ்

UGC Approved Journal Number: **40729**

N. [signature]

ந. முருகேசபாண்டியன்
முதன்மை ஆசிரியர்

[signature]

Er. S. Lakshmanan
The Publisher



# ஆய்த எழுத்து

பன்னாட்டுத் தமிழியல் ஆய்விதழ்

# AYIDHA EZHUTHU

AN INTERNATIONAL JOURNAL OF TAMIL STUDIES - ISSN : 2278 - 7550

UGC - பல்கலைக்கழக மானியக் குழுவின் அங்கீகாரம் பெற்றது

UGC RECOGNISED JOURNAL

UGC NO : 42330 / IMPACT FACTOR : 4.118

## பத்மவாணி மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி

பல்கலைக்கழக மானியக்குழுவால் 2(f) மற்றும் 12(B) அங்கீகாரம் பெற்றது

சேலம்.

தமிழ்த்துறை

இணைந்து நடத்தும்

7

பன்னாட்டுக் கருத்தரங்கம் டிசம்பர், 12 - 2018

## தமிழ் இலக்கியங்களில் அறச்சிந்தனைகள்



டிசம்பர் – 2018

visit us: www.pallavipathippakam.in

https://ayidhaezhuthu.in

# சங்க இலக்கியம் காட்டும் அறம்

*த.பிரேமா, முனைவர் பட்டஆய்வாளர் (பகுதிநேரம்), அரசுகலைக்கல்லூரி, சேலம்-7.

**முன்னுரை**

மனிதவாழ்க்கை ஒழுங்காகவும் சுமுகமாகவும் நடைபெறவேண்டும் என்பதற்காகச் சான்றோர்கள். சில விதிகளை வகுத்தார்கள். அந்தவிதிகளைத் தான் அறம் என்பர். அறம் என்பதற்கு "மக்கள் நல்வாழ்வுவாழச் சான்றோர்களால் வரையறுக்ககப்பட்ட நன்னெறி, தருமம், இல்லறம், துறவறம், இன்பம், ஏற்றது, இதழ், தகுதியானது, குற்றம் தீர்ந்த நன்மை என்னும் பொருள்களைப் பெருஞ்சொல்லகராதி தருகின்றது.

**அறத்தின் பொருள்**

அகம் மற்றும் புறவாழ்க்கை சீராக இயங்கிட ஒருவர் தாம் கடைப்பிடித்திடும் சமயச் சார்பான நெறிமுறைகள் என்று அறம் என்னும் சொல்லுக்கு நர்மதாவின் தமிழகராதி விளக்கம் அளிக்கிறது.

அறம் என்பது பிற உயிர்களைச் கொல்லாமையும் பிற உயிர்களுக்கு தீங்கு செய்யாமையும் ஆகும். மேலும் அறங்கள் காலத்திற்கும் காலச் செறியும் நெகிழ்ச்சியும் பெறுகின்றன. மாறிமாறிப் புதுமைபெற்றுப் பழமைகழிகின்றன.

நிலையறங்கள் என்பவை காலத்தினால் வேறுபடாதவை. நான்மணிக்கடிகை அறத்திற்கு அடிப்படை இரக்கமே. இரக்கம் மிகுந்தால் அறச்செயல் மிகும். ஒழுக்கத்தைத் தமிழ் இலக்கியங்கள் அறமென போற்றுவன நான்மணிக்கடிகையும் நல்லொழுக்கமே அறமென பேசுகின்றது என்பதனை ச.முத்துலட்சுமியின் தமிழ் அகராதி விளக்கம் அளிக்கின்றது.

**சங்க இலக்கியத்தில் அறம்**

இலக்கியங்கள் படைக்கப்படுவது மனிதனை மனிதனாக வாழ வழிகாட்டுவதற்கும், அவனுடைய வாழ்வை செம்மையாக்குவதற்குமே சங்க இலக்கியங்கள் அமைந்துள்ளன. அதனாலே அவை செவ்வியல் இலக்கியங்களாகப் போற்றப்படுகின்றன. 'உலகில் தோன்றிய அனைத்து உயிர்களின் நின்று பகுத்தறிவால் வேறுபட்டவன் மனிதன். அவன் இனம், மொழி, பண்பாடு, செல்வம், அடிமை வாழ்க்கை இன்று வரை இருந்து வருகின்றது. அவற்றை ஒருங்கிணைப்பதே சிறந்த அறமாகும்.

'குடும்ப அறம் காக்ககப்படும் போது சமுகத்தில் கொலை, கொள்ளை, காமம் குறையும் பெண்ணை பேணும் போது சமுகம் சீராக இயங்கும். இதற்கு அடித்தளம் அமைத்து தருவதே அகவாழ்கை என்பது அறவாழ்க்கை' ஆகும்.

இது குடும்பத்தையும் சமுகத்தையும் காக்கும் குடும்ப சமுக அரசியலை தீர்மானிக்க அறம் அடிப்படை பண்பாகிறது. அறப்பண்புகள் இன்றைய இளையோரிடம் வளரவேண்டும். அப்போது தான் நல்ல ஒரு எதிர்கால உலகத்தை உருவாக்க முடியும் என்ற உண்மைகளை ம.ராமநாதன் குறிப்பிடுகிறார்.

**புறநானூற்றில்போர் அறம்**

**"ஆவும் ஆணியாற் பார்ப்பனமாக்கறும்**

------------------------------------------------------------

------------------------------------------------------------

------------------------------------------------------------

**ஏம் அம்புகடிவிடுதும் நூம் அரண்" (புறம் 96)**

பசுவும் பசுவின் இயல்பை கொண்ட அந்தணரும் மகளிரும் பிணிவுடையவரும் பாதுகாத்து தெற்கு திசைவாழ்பவரான குடியில் இறந்தவர்க்கு செய்யவேண்டியக் கடன்களை செய்தற்குரிய பிள்ளைகளைப் பெறாதவரும் கேளுங்கள் யாம் எம் அம்புகள் விரைவாகச் செலுத்திபோரிட இருக்கின்றோம்.

எனவே நீங்கள் இங்கிருந்து நீங்கி உங்கட்கும் பாதுகாவலரான இடத்தை அடைவீராக என்று அறநெறியைக் கூறும் மேற்கோளையும் குறிப்பிடப்படுகின்றது.

அதற்கேற்ற வீரத்தையும் உடைய கொல்லும் இயல்பு கொண்ட யானையின் மீது எடுக்கப்பட்ட கொடிகள் வானில் நிழலைச் செய்யும் எம் மன்னன் முதுகுடுமி வாழ்க என்ற அறிந்து மகிழலாம்.

போரிடுவோரைத் தவிர்த்து ஏனையோர் பாதுகாப்பாக வாழும்படி அறிவிப்பு தந்து போரிடும் அரிய அறத்தை சங்க தமிழர் மேற்கொண்டுள்ளனர்.

**நன்றியறிதல்**

ஒருவர்க்கு ஒருவர் உதவி செய்வதும் நன்றி மறவாமல் இருப்பதும் அறப்பண்பாகும். பிறர் செய்த நன்மையை மறவாது வாழும் பண்பே நன்றியறிதலாகும். பிறரோடு கூடிவாழும் சமுக வாழ்க்கையில் சிறந்தவை என கருதப்படும்.

**"ஆன்முலையறுத்தவறனிலோர்க்கும்**
**மாணிமைமகளிர் கருச்சிதைத் தோர்க்கும்**
**பார்ப்பார்த் தப்பியகொடுமையோர்க்கும்**
**வழுவாய் மருங்கிற் கழுவாயுமுளவென**
**நிலம்புடைபெயர்வதாயினும் மொருவன்**
**அறம் பிற்றெயாயிழைகணவ"** (புறம் 34)

இது குறித்து அறமற்றசெயல் ஒருவர் செய்த நன்றியை மறத்ததலாகும். அவ்வாறு செய்தோர்க்கு வயதில்லை என்பது அறநூலார் கொள்கை என்று இக்கருத்திற்கு வழுசேர்கிறார் ராமநாதன்.

**ஈதல் அறம்**

அறம் என்பதற்கு ஈகை என்று பொருள் கொள்ளுமாறு ஈகை அறத்தினை சங்க இலக்கியம் போற்றுகின்றது. மனித வாழ்வில் ஈகை உயர்ந்த அறமாகக் கருதப்படுகிறது.

**"செல்வத்துப் பயனே ஈதல்**
**தூய்ப்பே மென்னே தப்புறந பலவே".** (புறம் 181)

எந்த பயனும் கருதாமல் ஒருவருக்கு ஒருபொருளை அளித்தலே ஈகை எனப்படும் இதனை

**"ஆற்றுதலென்பதொன் றலர்தவர்க் குதவுமல்"** (கலி 133)

ஒருவருடைய துன்பத்திற்கு அவன் வேண்டுவன அளித்து உதவுவதே ஈகை.

**"எவ்வித எதிர்பார்ப்புமின்றி ஒருவருக்கு அளித்தலே ஈகை"**

என்றுவாழ்வியல் அறங்கள் என்ற நூலில் ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

**"இம்மை செய்தது மறுமைக் பகாமெறும்**
**ஆறவிலை வணிகனாயலன் பிறரும்**
**சான்றோர் சென்ற நெறியென**
**ஆங்குட்பட்டனறவன் கைவண்மையே"** (புறம் 134)

பண்டையத் தமிழர் மறுமைப் பயன் நோக்காது பிறர் வறுமையை போக்குதலைக் கடமையாகக் கொண்டு ஈகை செய்தனர். பொருள் உடையவரின் கடமை பொருள் இல்லார்க்கு கொடுத்து உதவுதல் என்பது சான்றோரின் செந்நெறி ஈதலைச் செய்து இல்லறம் நிகழ்த்துவோனின் செல்வம் பெருகும் ஈகைக் குணத்தைக் கடைப்பிடித்து தனக்குப் போக மீதிதானம் என்பதை மனதில் கொண்டு வாழ்வோமாக என்று பா.மகேஸ்வரி குறிப்பிடுகின்றார்.

**நற்றிணையில் அறம்**

நற்றிணை சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களில் முதல் நூலாக விளங்கக் கூடிய பெருமைக்குரியது இது சிறிய பாடல்களும் இன்றி அளவான பாடல்களை பெற்றமையால் இத்திணை நல்ல அடைமொழி பெற்ற நற்றிணை என்று வழங்கலாயிற்று நற்றினை புலவர்கள் நேர்மையான அகத்திணை மரபுகளை மக்களிடையே பரப்பும் கண்ணோட்டம் உடையவர்களாகவும் போலி உறவுகளை கண்டிக்கும் தன்மை கொண்டவர்களாகவும் இருந்ததை காண முடிகிறது.

**"வாழைஈர்த்தடி வல்கிநின் வகை"** (நற் 120)

இந்த பாடல் வரிகளில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. இதிலிருந்து ஊடல் தீர்ப்பதைவிட விருந்தினரைப் பேணுவது சிறந்த அறமாகும் என தலைவி செயல்பட்டுள்ளதை இந்நூலின் ஆசிரியர் சி.வாசுகி அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

**பதிற்றுப்பத்து காட்டும் அறம்**

பதிற்றுப்பத்தில் ஏழு பாடல்கள் ஆற்றுப்பத்துறையில் அமைந்துள்ளன. கபிலர் இயற்றிய ஏழாம் பத்தின் ஏழாவது பாடல் பாணாற்றுப்படை என்னுந்துறையில் அமைந்துள்ளது. நான்காம் பத்தின் 10வது பாடல்களும் 5ம் பத்தின் 9வது பாடலும் ஆறாம் பத்தின் 7 10வது பாடல்களும் எட்டாம் பத்தின் 8வது பாடலும் ஒன்பதாம் பத்தின் 7வது பாடலும் ஆகிய ஆறு பாடல்களும் விறலியாற்றுப் படை என்னும் துறையில் அறக்கோட்பாடுகள் அமைந்துள்ளன.

**யானைக் கொடை**

நார் முடிச்சேரல் என்னும் சேரமன்னனின் கொடைத் திறத்தை சுட்டுவதாக நான்காம்பத்தின் 10வது பாடல் அமைந்துள்ளது. சினத்தினை வெளிப்படுத்தி போர் செயல்களை விரும்பும் பலயானைகளைக் கொடையாகத் தந்தசெய்தி இங்குகாட்டப்படுகிறது. இதனை

**"அழல்விடுபுமரீஇயமைந்தின்**

**தொழில் புனையானைநல்குவன் பலவே"**

என்னும் வரிகள் உணர்த்தி நிற்கின்றன.

**உணவுக் கொடை**

பரணர் இயற்றிய 5ம் பத்தின் 9வது பாடல் விறலி மற்றொரு விறலியை ஆற்றுப்படுத்துவதாக உள்ளது. இங்கு சேரன் செங்குட்டுவன் விறலிக்கும் விறலியின் சுற்றதார்க்கும் உணவளிக்கும் தன்மையுடையவன் என்னும் கருத்து உணர்த்தப்படுகிறது. இதனை

**"யாமும் சேறுகம்: நீயிரும் வம்மின்**

**துயிலும் கோதைத் துளங்கியல் விறலியர்**

**கொளைவல் வாழ்க்கைநும் கிளை இனிதுஉணீஇயர்"**

எனும் அடிகளால் அறியலாம். இங்கு உணவளிப்பதே சிறந்த அறம் என்னும் கருத்து வலியுறுத்தப்படுகிறது.

**முடிவுரை**

உலகில் தோன்றிய அனைத்து உயிர்களிடத்து பகுத்தறிவால் வேறுபட்டவன் மனிதன். அவன் இனம், மொழி, பண்பாடு, செல்வம், அடிமை, வாழ்வு என்ற பிரிவு நிலையில் அவனது வாழ்க்கை இன்று வரை இருந்து வருகின்றது.






# ஆய்த எழுத்து
தமிழியல் ஆய்வு இதழ்
AYIDHA EZHUTHU
AN INTERNATIONAL JOURNAL OF TAMIL STUDIES - ISSN : 2278 - 7550
பன்னாட்டுத் தமிழியல் ஆய்விதழ் - ISSN - 2278-7550
UGC - பல்கலைக் கழக மானிய குழுவின் அங்கீகாரம் பெற்றது
UGC RECOGNISED JOURNAL
UGC NO : 42330 / IMPACT FACTOR : 4.118




## பத்மவாணி மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி

பல்கலைக்கழக மானியக்குழுவால் 2(f) மற்றும் 12(B) அங்கீகாரம் பெற்றது
சேலம்.

தமிழ்த்துறை
இணைந்து நடத்தும்

### பன்னாட்டுக் கருத்தரங்கம் டிசம்பர், 12 - 2018
### தமிழ் இலக்கியங்களில் அறச்சிந்தனைகள்

# சான்றிதழ்

திரு / திருமதி / செல்வி/ த.பிரேமா என்பவர்/ என்பவர்களால் எழுதப்பட்ட

சங்க இலக்கியம் காட்டும் அறம்

என்ற ஆய்வுக் கட்டுரையானது ஆய்த எழுத்து - பன்னாட்டுத் தமிழியல் ஆய்வு இதழில் ( டிசம்பர் - 2018, மலர்-6, இதழ்-12, ISSN 2278-7550 )

பிரசுரிக்கப்பட்டுள்ளது எனச் சான்றளிக்கப்படுகிறது.



| | | | | |
|---|---|---|---|---|
| ஒருங்கிணைப்பாளர் & துறைத்தலைவர் | முதல்வர் | செயலாளர் | தாளாளர் | பதிப்பாசிரியர் ஆய்த எழுத்து |

# சங்க இலக்கியத்தில் புராணக்கூறுகள்

**முனைவர் பட்டத்திற்காக பெரியார் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெறும் ஆய்வேடு**


**ஆய்வாளர்**

**த.பிரேமா,எம்.ஏ.,பி.எட்.,**

முனைவர்பட்ட ஆய்வாளர் (பகுதி நேரம்),

தமிழ்த்துறை,

அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி),

சேலம் - 636 007.

**நெறியாளர்**

**முனைவர் இரா.அச்சுதன்,எம்.ஏ.,எம்..ஃ.பில்.,பிஎச்.டி.,**

உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,

அரசு கலைக்கல்லூரி(தன்னாட்சி),

சேலம் - 636 007





**தமிழ்த்துறை**

**அரசு கலைக்கல்லூரி(தன்னாட்சி),**

**சேலம் - 636 007.**

**ஆகஸ்ட் – 2020**

# இயல் - 4

## சங்க இலக்கியத்தில் கடவுள்கள்

பண்டையத் தமிழகம் வட எல்லையில் மலையினையும் ஏனைய மூன்று எல்லைகளில் கடலினையும் கொண்டு விளங்கியதாகும். இந்த நில எல்லைக்கு உட்பட்ட வாழ்க்கையில் ஐந்திணை ஒழுக்கங்களைக் கொண்டு வாழ்ந்தவர்கள் பண்டையத் தமிழர்கள். இவர்களது நிலம் சார்ந்த கடவுள் வணக்கமும் நிலவியல் சாராத தொன்மை பெருந்தெய்வ வணக்கமும், நானிலத் தெய்வம் கொற்றவை ஐந்தாவது பாலை நிலத்தில் வணங்கப்படுகிறாள். என்பதை குறித்த முழுமையான செய்தியை இவ்வியல் அமைகிறது.

இவ்வுலகில் தோன்றிய உயிர்கள் யாவற்றிலும் உயர்வுடையதான உயிராகக் கருதப்படுவது மனிதப்பிறவி. தேவை கருதி தொடக்கத்தில் இயற்கையினையும், ஐம்பூதங்களையும் மனிதன் வணங்கி உள்ளான். சமூகத்தில் நடுகல் வழிபாடும், சிற்றூர்களில் இறைவடிவங்களான அணங்கு, பாவை என்பன மனிதனால் ஏற்றுக் கொள்ளப்பட்ட உண்மைகளாகும். இவைகள் குறித்தச் செய்திகள் சங்க இலக்கியங்களில் பயின்று வரும் பாங்கினை ஆராயலாம்.

உலகில் வாழும் மக்கள் அவரவர்க்கும் உகந்த வகையில் கடவுள் கொள்கையை உருவாக்கிக் கொண்டனர். தொடக்கத்தில் இயற்கையை வணங்கும் முறையையும், அருவ நிலையிலான ஒலி, ஒளி இவற்றை வணங்கும் பண்பிற்கு மாறினர். மேலெழுந்த உயரிய எண்ணங்களால் கடவுள் குறித்த நம்பிக்கைகள் தோன்றலாயின.

**“இயற்கைச் சீற்றங்களினின்று நம்மைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டுமெனில் அச்ச உணர்வும், அதன் அடிப்படையில் எழுந்த பக்தி**

**உணர்வும் தேவையென்பதை அனுபவத்தால் உணர்ந்து மனிதன் கொண்ட வாழ்வியற் கொள்கை அல்லது கோட்பாடு மதம் என வழங்கலாயிற்று.''**[1]

**என்று கூறுவர்.**

**"இறைக் கொள்கை என்பது இறைவனைப் பற்றி ஒவ்வொரு சமயமும் வைத்திருக்கும் மதிப்பாகும்.''**[2]

என அரங்க. சுப்பையா குறிப்பிடுவதற்கேற்ப,

**"இயற்கையிலமைந்த இடி, மின்னல், பெருமழை, புயற்காற்று, காட்டுத்தீ, பூகம்பம் முதலிய இயற்கைச் சீற்றங்களையும், அத்தகைய சீற்றங்களின்றும் தன்னை விடுவித்துக் கொள்ளும் உத்திகளையும் அவ்வுத்திகளுள் தலையாயது இயற்கை வழிபாடு என்பதையும் காலப்போக்கில் புரிந்து கொள்ளலானான்.''**[3]

என்பதை உணர்த்துகிறது.

## ஐம்பூதங்களை வணங்குதல்

இயற்கையின் கூறுகளான ஐம்பூதங்களின் இயக்கம் மனிதனுக்கு விந்தையாகத் தோன்றியது. எனவே ஐம்பூதங்களின் மீது கொண்ட அச்சத்தின் காரணமாக அவற்றையும் வணங்கத் தலைப்பட்டான்.

இவ்வுலகம் பஞ்ச பூதங்களால் நிறைந்திருக்கிறது. மதம் சார்ந்த வேத நூல்களில் கூட இப்பூதங்கள் தோற்றம் பற்றிக் கூறுமிடத்தும், எந்த சமய நூலாக இருப்பினும் ஒரே மாதிரியான கருத்தையே நிறுவுகின்றன. பஞ்ச பூதங்களால் நிறைந்துள்ள உலகத்தில் அதிலிருந்து உயிர்க்கும், உயிர்கள் யாவும் அப்பூதங்களின் இயக்கவியல் தன்மை பெற்றதாகவே பிறக்கின்றன.

**"வஞ்ச மனத்தான் பற்றொழுக்கம் பூதங்கள்**
**ஐந்தும் அகத்தே நகும்.''**[4]

என்கின்றார்.

ஒருவன் துறவறத்தில் இருந்து கொண்டு வஞ்சமாகத் துறவறத்துக்கு தகாத வாழ்க்கை நடத்துகிறவனுடைய கெட்ட நடத்தையை மற்றவர்கள் அறியா விட்டாலும், அவன் தேகத்திலுள்ள பஞ்ச பூதங்களும் அறிந்து தமக்குள் சிரித்து ஏளனம் செய்யும் என்பது இதன் பொருள்.

ஐம்பூதங்களாக நிலம், நீர், காற்று, ஆகாயம், நெருப்பு எனக்கூறலாம். உலகில் உள்ள ஐம்பூதங்கள் இயல்பாய் அமைந்துள்ளமை போல், உடலியலுக்கு ஐம்புலன்களும் இயல்பாய் அமைந்துள்ளன.

பரிபாடலில் மூன்றாம் பாடல் திருமாலுக்குரியதாகும். இவற்றில்,

**“ தீவளி விசும்பு நில நீர் ஐந்தும்.”**[5]

என்னும் பாடல்வரி தீ, காற்று, நிலம், நீர் என்னும் ஐந்து பூதங்களும், சூரிய சந்திரர்களும், செவ்வாய் முதலிய ஐந்து கோள்களும், அசுரரும், துவாத சாதித்தியரும், வசுக்கள் எண்மரும், ஏகாதச ருத்திரர்களும், அச்சுவினி தேவர்களும்,. யமனும் அவனின் ஏவலன் கூற்றுவனும், மூவேழ் உலகமும் அவற்றின் உயிர்ப்பும் இவை யாவும் திருமாலிடமிருந்:து தோன்றியவை என்பதாகக் கூறுகின்றது.

இவ்வுலகம் தீ, காற்று, வானம், நிலம், நீர், தன்மையத்தாய் அமைந்துள்ளது என்பதற்கு இப்பரிபாடல் வரியே சான்றாக அமைகின்றது. இவையின்றி,

**“ வேதத்து மறை தீ பூதத்து முதலும் நீ”**[6]

**எ**ன்னும் பாடல் வரி, திருமால் ஐம்பூதங்களின் வழிவிற்றாய் நிற்பவன் எனக் குறிப்பிடுகின்றது. மேலும்,

**“ ………..ஒன்றென**

**இரண்டென மூன்றென நான்கென ஐந்தென**

**……………………………………………..**

**……………………சிறப்பினன்.”** [7]

பூதங்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கன் ஐந்தும், ஞானேந்தியங்கள் ஐந்தும், புலன்கள் ஐந்தும், மனம், முதலிய அந்தக் காரணங்கள் மூன்றும், மூலப்பகுதியும் புருடனும் எனப்பட்ட தத்துவங்கள் இருபத்தைந்தினாலும், நால்வகை யுகங்களாலும் ஆராயப்படும் பெருமையே இறைவன் என்கின்ற கூற்றால் ஐம்பூதங்களும், ஐம்புலன்களும் கொண்டுள்ள இணக்கத்தைக் காண முடிகின்றது. மேலும்,

**“ ஒன்றனிற் போற்றிய விசும்பும் நீயே**

**இரண்டின் உணரும் வளியும் நீயே**

**மூன்றின் உணரும் தீயும் நீயே**

**நான்கின் உணரும் நீரும் நீயே**

**ஐந்துடன் முற்றிய நிலனும் நீயே.”**[8]

என்னும் பாடல் வரிகளில் முன்பு கூறப்பட்ட புலன்கள் ஐந்தினுள் ஒன்றாகிய ஓசையால் அறியப்படும் ஆகாயமும் நீயே ஓசையாலும் பரிசத்தாலும் ஒளியாலும் உணரப்படும் தீயும் நீயே. ஓசை, ஊறு, ஒளி, சுவை, மனம் என்பவற்றால் உணரப்படும்.

நிலமும் நீயே. ஆதலால் மூலப்பகுதியும் அறமும் அநாதியான காலமும், ஆகாயமும், காற்றும் கனலும் கூடிய இம்மூவேழ் உலகத்து உயிர்கள் எல்லாம் திருமாலிடத்தில் உளவாயின எனக் காணும் போது உலக உயிர்ப்புகளின் தோற்றமும் உடல் சூழ் ஐம்புலனும் உலகம் சூழ் ஐம்பூதங்களும் தெளிவாக அறிய முடிகின்றன.

பதிற்றுப் பத்து மூன்றாம் பத்தில் சேரனின் செல்வ வளத்தையும் பெருமையினையும் காணுமிடத்து,

**“ நீர் நிலம் தீவளி விசும்போடு ஐந்தும்,**

**அளந்து கடை அறியினும் அளப்பருங் குரையை”** [9]

நீரும் நிலமும் நெருப்பும் காற்றும் வானுமாகிய ஐந்திணையும் அளந்து அவற்றின் முடிவினை அறிந்தாலும் நின் பெருமையினை அளந்தற்கரிய எனச் சேரன் பல்யானைச் செல்கெழு குட்டுவனை பாலைப் கௌதமனார் ஐம்பூதங்களுடன் ஒப்புமைப்படுத்தி குறிப்பிடுகின்றார்.

மதுரைக் காஞ்சியில் மாங்குடி மருதனார் பாண்டியன் தலையாலங்கானத்து செருவென்ற நெடுஞ் செழியனை போற்றிப் புகழுமிடத்தில்,

**“ நீரும் நிலனும் தீயும் வளியும்**

**மாக விசும்போடு ஐம்துடன் இயற்றிய....”**[10]

என்ற வரிகளில் நிலனும், தீயும். வளியும். விசும்புமாகிய ஐம்பெரும் பூதமும் கலந்த உலகினைப் படைத்தருளிய சிவனை முதல் கடவுளாக வணங்குபவனே எனக் கூறுகின்றார். இதன் வழிப் திருமாலைப் போன்று சிவனும், ஐம்பெரும்பூதங்களைப் படைத்து ஆள்பவன் என அறிய முடிகின்றது.

## ஐம்பெரும் பூதத்து இயல்பு

புறநானூற்றில் முரஞ்சியூர் முடிநாகராயர் சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதனின் வீரத்தையும் கொடையையும் புகழ்ந்து பாடுமிடத்தில்,

**“ மண்டிணிந்த நிலனும்**

**நிலனேந்திய விசும்பும்**

**விசும்புவதைவரு வளியும்**

**வளித்தலை இய தீயும்**

**தீமுரணிய நீரும் என்றாங்கு நீ**

**ஐம்பெரும் பூதத்து இயற்கை போலப்**

**போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சியது அகலமும்**

**வலியும் தெறலும் அளியும் உடையாய்.”**[11]

அணுக்களால் செறிந்த நிலம், நிலத்தின் கண் ஓங்கி இருக்கும் வானம், வானளவு பொருந்தித் தடவி நிற்கும் காற்றும், காற்றினால் பெருகும் தீ, தீயுடன் மாறுபட்ட நீர் என்று ஐந்து வகையான பெரிய ஆற்றல்களை உடையது இயற்கை.

இயற்கை அமைவுகள் ஐம்பெரும் பூதத்துடன் தோன்றிய காலம் முதல் இணைந்துள்ளது. இவ்வுண்மையினை விளக்குவதாய் இச்சங்க இலக்கியப்பாடல் அமைந்துள்ளது.

## இயற்கையைக் கடவுளாகப் போற்றியமை

கழகத் தமிழ் அகராதி கடவுள், தெய்வம், இறைவன் என்கின்ற சொற்களுக்கு கீழ்க்காணும் பொருளைத் தருகின்றது. கடவுள் என்ற சொல்லிற்கு குரு, நான்முகன், அத்தன், உள்வழி, தெய்வம், நன்மை, முனிவன், வானவன், மேன்மை, இறைவன் உள்ளிட்ட 105 சொற்களைப் பொருளாகத் தருகின்றது.

தெய்வம் என்கிற சொல்லுக்கு ஊழ், எண்வகை மணத்தில் ஒன்று, கடவுள், ஆண்டு எனப் பொருள்கள் காணப்படுகின்றன. இறைவன் என்னும் சொல்லிற்கு தலைவன், கடவுள், குரு, அரசன், மூத்தோன், எப்பொருளினும் தங்குகிறவன், சிவன், சிவனார் வேம்பு, பிதர், பரமன் என்கிற பொருள்களைத் தருகின்றது.

தெய்வம், இறைவன் என்னும் சொற்கள் கடவுள்களைக் குறிக்கும் பொதுப் பெயர்களாகச் சங்க காலத்திற்கு முன்பு இருந்தே வழங்கி வருகின்றன. கடவுள் கோட்பாடு சங்க கால மக்களிடையே தொன்று தொட்டு இருந்து வரும் ஒரு பண்பாட்டுக் கூறாகும்.

மனித சக்திக்கு மேலாக மற்றொரு சக்தி இருப்பதாகக் கருதினர். உலகில் நிகழும் நன்மைக்கும் தீமைக்கும் அடிப்படைக் காரணமாய் கடவுள் சக்கியே இருக்கின்றது என நம்பினர். எனவே பிறப்பு முதலாக இறப்பு வரையில் எந்த வினையிலும் கடவுளை முதன்மைப்படுத்தினர். இயற்கையில் ஏற்படும் திடீர் மாற்றங்கள் மனிதனுக்கு அச்சத்தினைத் தந்தன. இதன் விளைவால் இவற்றை வணங்க முற்பட்டனர்.

**“தெய்வ நம்பிக்கைக்கு அடிப்படை பயந்தான். அது ஒரு மூட நம்பிக்கையாகவும் இருக்கலாம். ஆனால் தெய்வம் உண்டு. அதனால் எதையும் செய்ய முடியும் என்ற எண்ணம் பிறந்த பிறகு தான் மனிதன் நன்மை தீமைகளைப் பகுத்தறியத் தொடங்கினான். கட்டுப்பாட்டுடன் நடக்கத் தொடங்கினான் என்று சாமி.சிதம்பரனார் குறிப்பிடுகின்றார்.”**[12]

மக்கள் தம்மை அன்பினால் வழிபடுவோர்க்கு அருள் சுரந்து துன்பத்தை நீக்கி நலம் புரியும் பெருந் தெய்வத்தையும் வருத்தும் இயல்புடைய அச்சம் தருபனவாகக் கருதப்படும் அணங்கு, பேய், உள்ளிட்ட சிறு தெய்வங்களையும் வழிவழியாய் வணங்கினர். இதனை,

**“ அச்சம் கீழ்கள தாசாரம் எச்சம்**

**ஆவா வுண்டேல் உண்டாம் சிறிதே.”** [13]

என்கிறது திருக்குறள்.

தொல்காப்பியர் கருப்பொருள்களை விளக்கும் பொழுது,

**“ தெய்வம் உணாவே”** [14]

என்று தொடங்கி நிலத்திற்குரிய தெய்வத்தை முதலில் வைத்துள்ளார்

**“மக்களைப் போலவே தெய்வம் சுட்டிய பெயரும் உயர்திணை என்னும் விளக்கத்தையும் தந்துள்ளார்.”**[15]

மேலும்,

**" மொழிப் பொருள் தெய்வம்"**[16]

உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலமெனக் கொள்ளும் வழிபடு தெய்வம்."[17]

என தொல்காப்பியர் **"கடவுள் குறித்த் பொருள்களை வாழ்த்தொடு கண்ணிய வருமே"** [18]

என்னும் வரிகள் தொல்காப்பியரின் கடவுள் கொள்கையினை வெளிப்படுத்துகின்றன.

தொல்காப்பியர் காலத்திற்குமுன் இருந்த உலகியல் வழக்கான இயற்கை வழிபாடே தொல்காப்பியத்தில் இலக்கிய வழக்காக இடம் பிடித்துள்ளதை தெளிவாக அறிய முடிகின்றது. ஞாயிறு, தீ, திங்கள், என்னும் இயற்கைப் பொருள்களைத் தொல்காப்பியக் காலத்து முன்பிருந்த தமிழர்கள் தெய்வமாக வணங்கி இருக்க வேண்டும். எனவே தான் தொல்காப்பியர்,

**" கொடிநிலை கந்தழி வள்ளி என்ற**

**வடுநீங்கு சிறப்பின் மன்னிய மூன்றும்**

**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே."** [19]

என்று புறத்திணை இயல் சூத்திரத்தில் நிறுவுகிறார்.

**"பழங்கால நாகரிகம் படைத்த எந்த நாட்டிலும் தெய்வ வணக்கம் உண்டு. தெய்வ நம்பிக்கையும் உண்டு. பண்டைய கால மக்களை அறநெறியிலே நடப்பதற்கு வழிகாட்டியது தெய்வ வணக்கம் தான்."**[20]

என்று தமிழறிஞர் கூறுவது சாலப் பொருந்துகிறது.

## நடுகல் வழிபாடு

பண்டைத் தமிழரிடம் வேரூன்றியிருந்த இயற்கை வழிபாட்டு முறைகளில் நடுகல் வழிபாடு தொன்மை வாய்ந்ததாகும். வெட்சி, கரந்தை போர்களில் வீர மரணம் எய்திய வீரர்களுக்கு நடுகற்கள் நடப்பட்டன. நடுகல் வழிபாடு நான்கு நிலங்களுக்கும் பொதுவானதாய் இருந்துள்ளது.

**" நால்வகை நிலத்து தெய்வங்கள் கூட அந்நிலத்து மக்களுக்குத் துணை செய்த வீரர்களின் தலைவர்களாக இருக்கலாம். வீரர் வணக்கத்திலிருந்து தெய்வ வணக்கம் பிறந்தது என்று சொல்வதற்குக் கூட இடமுண்டு."**[21]

என்று சாமி. சிதம்பரனார் கூறும் கூற்று நம்பகத்தன்மை உடையதாகும்.

நடுகல் என்பது நட்டகல் என்ற பொருளைத் தருகிறது. இக்கல்லானது இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்று முக்காலங்களிலும் நிலைத்து நிற்பதாகும். நடுகல் பற்றிக் கூற விழையும் தொல்காப்பியர்,

**" காட்சி கால் கோள் நீர்ப்படை நடுகல்**

**சீர்தரு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தலென்**

**றிரு மூன்று வகையிற் கல்லொடு."**[22]

எனக் குறிப்பிடுகின்றார்.

**" நட்டகல் "**[23]

என மலைபடுகடாம் குறிப்பிடுகின்றது. நடுகல் குறித்த தொல்காப்பியச் சூத்திரத்திற்கு உரை நவின்ற இளம்பூரணர்,

**"நடுகல் என்னும் வினைத்தொகைக்கு நட்டகல், நடப்பட்டகல், நாட்டியகல்" என்றும், நச்சினார்க்கினியர் 'நடப்படுங்கல்' என்றும் பொருள் தருகின்றார்."** [24]

பண்டைய தமிழ் மக்கள் இறந்துபட்ட நம் முன்னோர்களை வணங்கும் வழக்கத்தைக் கொண்டு இருந்தனர்.

## கல் தேர்ந்தெடுத்தல்

நடுகல் தேர்வினைக் குறிப்பிடும் தொல்காப்பியர் காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுதல், விழா, வாழ்த்துதல் என்கின்ற ஆறு நிலைகளில் நடுகல் நடப்படுவதைக் குறிப்பிடுகின்றார்.

காட்சி- அளவும் அமைதியும் நோக்கில் தேர்ந்தெடுத்தல். இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னர் அக்கல்லிலே ஓர் உருவம் செதுக்கப் பெறும். அவ்வுருவம் சில விதிகளுக்கு உட்பட்டு அமைந்து இருத்தல். கால்கோள் - அக்கல்லை நடுதற்குரிய நன்னிமித்தப் பார்த்தல். நீர்ப்படை – அக்கல்லை நன் நீராட்டுதல், நடுதல் - ஏற்ற இடத்தில் கல்லை நடுதல். விழா – கோயிலுக்கு வேண்டிய கட்டடங்கள் கட்டுவதும், வீரன் செயல்களைக் கல்லிற் பொறித்து விழா நடைபெறும். வாழ்த்துதல் - கல்லை வணங்குதல்.

கல் நட நல்ல உறுதியான கல்லைத் தேர்வு செய்வர். நடப்படும் கல்லை உரிய இடத்திற்குக் கொண்டுச் செல்வர். தேர்வு செய்யப்பட்ட கல் நல்ல நீரால் நீராட்டப்படும். குறித்த இடத்தில் கல்லினை நடுவர். அக்கல்லில் இறந்துப்பட்ட வீரனின் பெயர், புகழ் இவற்றினை பொறிப்பர். பின்பு வணக்கம் செலுத்துவர். இதனை,

**“ நல் அமர்க் செலுத்துவர் நாண் உடை மறவர்**

**பெயரும் பீடும் எழுதி அதர் தொறும்**

**பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல்.”**[25]

என்னும் அகநானூற்றுப் பாடல் எடுத்தியம்புகின்றது.

## அணங்கு

மக்கள் அச்சத்தால் வணங்கிய சிறு தெய்வங்களோ பற்பலவாக உள்ள மலைமுதல் கடல் வரையிலும் காட்டிலும், நாட்டிலும், வீட்டிலும், ஊர் வெளியிலும் என இவை பரந்துக் காணப்பட்டன. மலைகள் யாவுமே வருத்தும் தெய்வங்களைக் கொண்டாதாக இருந்தன. கானகம் கடப்போர் காடுறை தெய்வங்களுக்கு வழிபாடு செய்து சென்றனர். ஆல், மரா, கடம்பு, வேங்கை, ஞானம், வேம்பு, மருது, பனை, கன்னி போன்ற மர வகைகளில் கடவுள் உறைவதாய் நம்பினர்.

நீர்த்துறைகளான சுனை, குளம், ஆறு, கடல், கழிமுகம் ஆகியனவற்றில் அணங்கு உறைவதாய் நம்பிக்கை கொண்டனர். அணங்கு என்பது பொதுவாக ஆண், பெண் இரண்டிற்கும் பொதுவாய் வழங்கும் பெயராய் இருந்தது. அணங்குடன் பேய், பிசாசு, சூர், பூதம் என்பன வருத்தும் தன்மை உடையனவாக இருந்தன.

தமிழ் வாழ் நெடுங்குடி மக்களின் இறை குறித்த கொள்கைகளில் ஓர் உருவம் இல்லாத இறைவனுக்கு ஆயிரம் திருநாமங்கள் இட்டு வழங்கிவந்த மரபுகளை இலக்கிய வழி அறிய முடிகின்றது.

மனித வாழ்வு குறித்த ஆழமான சிந்தனைகளும் கோட்பாடுகளும் கடவுள் என்ற மதிப்புடையப் பொருண்மை குறித்து அமைந்தது எனலாம். சங்க கால மக்களிடையே ஊர்த் தெய்வ வழிபாடு, மலை, ஆறுகள், மரங்கள் பற்றிய வழிபாடுகளையும் காண முடிகின்றது எனக் காமாட்சி சீனிவாசன் குறிப்பிடுகின்றார்.

**“ கடவுள் மரம், தெய்வம் சேர்ந்த பராரை வேம்பு, கடவுள் முதுமரம் என்பனத் தொகை நூல்களில் காணக் கிடக்கின்றன.”**[26]

**“ஆறுகள் தெய்வமெனத் தொழப்பட்டிருக்கின்றன என காமாட்சி சீனிவாசன் குறிப்பிடுகிறார்.”**[27]

வேங்கடம் முதல் தென்குமரி வரை சிற்றரசர்களும் மூவேந்தர்களும் ஆட்சி புரிந்து வந்தனர். அவர்கள் ஆண்ட பகுதிகளை தொண்டை நாடு, நடுநாடு, கொங்கு நாடு என பிரித்து ஆண்டு வந்தனர்.

## நிலவியல் தெய்வங்கள்

**“நிலம் என்பது வெறும் மண்ணை மட்டும் குறிக்காது. மண், நீர், காற்று, மண்ணில் மண்டிக்கிடக்கும் தாதுப் பொருள்கள், தட்ப வெப்பம் முதலிய இயற்கை வளங்கள் எல்லாம் நிலம் என்பதில் அடங்கும்.”**[28]

நிலம் என்பது ஐம்பெரும் பூதங்களால் ஆனதாகும். நிலத்தின் நீர்நிலை வளங்களுக்கேற்ப அந்நிலத்தில் வாழும் மக்கட் பிறப்பும் செயலும் அமைந்தது. இதனை ஔவையார் கீழ்க்கண்ட வகையில் விளக்கி உரைக்கின்றார்.

**“ நாடா கொன்றோ காடா கொன்றோ**

**அவலா கொன்றோ மிசையா கொன்றோ**

**எவ்வழி நல்லவ ராடவர்**

**அவ்வழி நல்லை வாழிய நிலனே.”**[29]

எனவே நிலம் என்பது வெறும் பூகோளத் தன்மைகள் மட்டுமின்றி நிலவியல் சார்ந்த மக்களின் வாழ்வியல் ஒழுக்கங்கள் அவற்றில் அடங்குவதாகும். பழந்தமிழர்கள் நிலத்தைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல். பாலை என ஐவகையாக வகுத்து இருந்தனர். இந்நிலங்களுக்குரிய கடவுள்களைத் தொல்காப்பியர்,

**“ மாயோன் மேய காடுறை உலகமும்**

**சேயோன் மேய மைவரை உலகமும்**

**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**

**வருணன் மேய பெருமணல் உலகமும்**

**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**

**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே.”**[30]

என்று முதற்பொருளான நிலத்திற்குக் கருப்பொருள்களில் ஒன்றான தெய்வத்தையும் இணைத்துக் குறிப்பிடுகின்றார்.

தொல்காப்பியர் குறிப்பிடும் நால்வகை நிலங்களும் நிலைத்த நிலங்களாகும். இந்நால் வகை நிலங்களிலும் பாலை என்பது அவ்வப்போது தோன்றும் நிலமாகும். முல்லை நில மக்கள் திருமாலை வணங்கினர். குறிஞ்சி நில மக்கள் முருகனை வணங்கினர். மருத நில மக்கள் இந்திரனை வணங்கினர். நெய்தல் வாழ் மக்கள் வருணனை வணங்கினர். அவ்வப்போது தோன்றும் பாலைக்குரிய தெய்வம் கொற்றவையாகும்.

நான்கு நிலங்களுக்கும் உரிய தெய்வங்களாக இந்நால்வரும் இருந்தாலும் நில வரையறையைக் கடந்து நானில மக்களாலும் நானிலக் கடவுளரும் வணங்கப்பட்டனர் என்பது உண்மை. தொல்காப்பியர் காலத்திலேயே பழந்தமிழரிடமும் பல தெய்வ வணக்க முறை இருந்ததை அறிய முடிகின்றது.

## முல்லை நில தெய்வம்

காடுறை மக்களான ஆயர்களால் வணங்கப்பட்ட தெய்வமாகத் திருமால் இடம்பெறுகின்றார். நிலவியல் கடவுள்களில் முதல் நிலமான காட்டிற்கு உரிமைப் பூண்ட தெய்வம் திருமால் என தொல்காப்பியர்,

**“ மாயோன் மேய காடுறை உலகமும்.”**[31]

என்று குறிப்பிடுகின்றார். மேலும் முல்லை நில மக்களின் கடவுளாகத் திருமால் விளங்குவதை,

**“ ஆயர் வாக்கில் தெய்வமால் காட்டிற்று.”**[32]

எனக் கலித்தொகை இயம்புகின்றது.

**“ மாயோன் மேய மன் பெருஞ்சிறப்பில்**

**தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்.”**[33]

எனப் புறத்திணை நிறுவுவதாலும் முல்லை நில கடவுளாகத் திருமால் அறியப்படுகின்றார்.

## திருமாலுக்கு வழங்கப்படும் பெயர்கள்

ஆயிரம் நாமம் கொண்ட திருமாலுக்கு ஆயிரம் பெயரண்ணல், அச்சுதன், அரவணைச் செல்வன், அரி, ஆதி, உந்தி பூத்தோன், உலக முண்டோன், உலகினையளந்தோன், கண்ணன், கமலக்கண்ணன், காவற்கடவுள், கேசவன், கோவிந்தன், சக்கராயுதன், திருவிக்கரமன், திருமகள் கொழுநன், நரசிங்கன், நாராயணன், பஞ்சாயுதன், பரமன்தாதை, பீதாம்பரன், பூமிகொழுநன், பெருமாள், மதுசூதனன், மதன், மாயோன், முகுந்தன், முராரி, வராகன், வாமணன், விண்டு என்கிற பெயர்கள் வழங்கப்படுகின்றன.

**“நாரா + அயனன் = நாராயணன் என அழைக்கப்பட்டான். நாரா என்ற சொல் நீா் என்ற பொருள் தரும். எனவே பாற்கடலில் பள்ளி கொண்டானாகத் திருமால் கிடந்தக் கோலம் காணப்படுகின்றது. இங்கு நாராயணன் வழிபாடு திருமால் வழிபாட்டின் துணை வழிபாடாக விளங்கியது. என்னும் அறிஞா் கருத்து ஏற்புடையதாக அமைகிறது.”**[34]

**“ இடவல! குடவல! கோவல! குாவல**

**காணாமரப! நீயா நினைவ!**

**மாயமன்ன! உலகு ஆள் மன்னவ!**

**தொல் இயல் புலவ! நல்யாழ்ப் பாண**

**மாவைச் செல்வ! தோலாக் கோட்ட!**

**பொலம் புரி ஆடை! வலம் புரிவண்ண**

**பருதி வலவ! பொருதிறல் மல்ல!**

**திருவின் கணவ! பெருவிறல் மள்ள!**

**மாநிலம் இயலா முதல் முறை அமையத்து!**

**நாம வெள்ளத்து நடுவண் தோன்றிய**

**வாங்மொழி மகனோடு மலர்ந்த**

**தாமரை பொருட்டு நின்நேமி நிழவே''**[35]

ஆயர் பாடியில் குரவை ஆடும்:போது இட, வலமாக இருந்த திருமால், குடக்கூத்தும் ஆடியவன். திருமால் சொல்களாலும், அருள் வழங்குதலும் பலதிறப் பெயர்ப் பெற்றுக் காணப்படுகின்றான்.

**" திருமாறு மார்பன்''**[36]

என்று திருமாலுக்கு வழங்கும் பெயரைக் கலித்தொகைக் குறிப்பிடுகின்றது. சங்க இலக்கியத்தில் மால், மாயோன் எனும் பெயர்களில் திருமால் காணப்படுகின்றார். மால் என்பதை **" பெரியோன் "**[37] எனவும் மாயோன் என்பதை **" கருமை நிறமுடையவன்''**[38] எனவும் காண முடிகிறது.

**''நெடியோன் என்னும் சொல் திருமால், வாமனனாக இருந்து நெடியோனாக வளர்ந்ததையும் "**[39]

**''முந்நீர் வண்ணன்''**[40] என்பது கருநிறம் கொண்ட தன்மையினையும் விளக்குவதாய்க் காணப்படுகின்றன.

ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய தெய்வங்களாக் கடவுள்கள் கருதப்பட்டாலும் மற்ற நிலங்களில் வாழ்ந்த மக்களால் பொதுவாக வணங்கப்பட்டு உள்ளனர். குறிஞ்சி நிலக் கடவுளாக முருகன், **நெய்தல் நிலமான திருச்செந்தூரில் மக்கள் வழிபடப்பட்டதை அறிய முடிகின்றது.**[41]

முல்லை நிலத் தெய்வமான திருமால் **“திருவேங்கடம்”**[42] **“அழகர் மலை”**[43] ஆகிய குறிஞ்சி நில மக்களால் வணங்கப்பட்டதையும் காணமுடிகின்றது.

பண்டைய தமிழ் மக்கள் காடு சார்ந்த மேட்டு நிலமான முல்லையில் ஆடுமாடுகள் மேய்க்கும் தொழிலைக் கொண்டனர். இவர்கள் ஆயர்கள் எனப்பட்டனர். நீரும், புல்வெளியும் தங்கள் கால்நடைக்குரியனவாகத் தேர்ந்தனர். மால் என்னும் சொல் மேகம் என்கின்ற பொருள்படும்.

இவ்வாயர்களுக்கு மாலின் தேவை அடிப்படையாய் அமைந்தது. நீரின் பயன்பாடு மிகையாக இருந்தது. நீண்ட பரப்பைக் கொண்ட கடல் நெடியோன் என்பதற்கு காரணமாக அமைந்தது. எனவே மேகம் போன்றவன் என்பது நிறத்திற்கும் குணத்திற்குமாக பொருள் உணர்த்தி வந்துள்ளது.

## திருவுருவம்

திருமால் காத்தல் கடவுள். திருமகளும் பூ மகளும் இருபக்கமும் திகழ விளங்கும் தன்மையன். பாற்கடலில் ஆதிசேடன் படுக்கையில் பள்ளி கொள்பவன். இப்படிப்பட்ட திருமால் வேங்கட மலையில் நின்ற கோலத்திலும் திருவரங்கத்தில் கிடந்த கோலத்திலும் காட்சி தருகின்றான். இதனை சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் மாங்காட்டு மறையோன் எடுத்தியம்புகிறார்.

**“ நீலமேகம் நெடும் பொற் குன்றத்துப்**

**பால்விரிந் தகலாது படிந்தது போல**

**ஆயிரம் விரிந்தெழு தலையுடை அருந்திறத்**

**பாயற் பள்ளிப் பலர் தொழு தேத்த**

**விரிதிரைக் காவிரி லியன் பெருந் துருத்தித்**

**திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்**

**வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்**

**ஓங்குயர் மலையத்து உச்சி மீமிரை.”**[44]

மேலும் திருமாலே சங்க கிருஷ்ணன், பிரத்யும்நன், அநிருத்தன், வாசுதேவன் என நால்வேறு வடிவங்களுடன் சேர்ந்து பஞ்ச மூர்த்தியாகவும், தோற்றமளிக்கின்றான்.[45]

திருவுருவக் காட்சியில் பாற்கடலில் பள்ளி கொண்ட நிலை, வராக மூர்த்தியாகவும், நிற்கும் நிலைகளெனவும் அறிய முடிகின்றது.[46]

பலராமனாகவும், கண்ணனுமாகவும் நிற்கின்ற ஈருருவ நிலையினைப்

**“ பால்நிற உருவின் பனைக் கொடியோனும்**

**நீல் நிற உருவின் நேமியோனும்**

**இருபெருந் தெய்வம் உடன் நின்றாங்கு”**[47]

என இ:ருவரும் நிற்கின்றனர். மேலும்,

**“ பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றியப்**

**செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்”**[48]

திருவரங்கத்தில் அரங்கப் பெருமானின் கிடந்த நிலையினையும் திருவேங்கடத்தில் நெடியோன் நின்ற நிலையினையும் காண முடிகின்றது.

## திருமாலின் வண்ணம்

நீலமும் கருமையுமான வண்ணம் கொண்டவன் திருமால். தீபாவளி, கார்மேகம், கருங்கடல், காரிருள், கரிய காயம்பூ இவை திருமால் நிறங்கள் குறித்து ஆளப்படுவனவாகும்.

**“ மண்ணுறு மணிபாய் உருவினை”**[49]

**“ மண்ணுறு திருமணி புரையுமேனி “**[50]

**“ மாமணி வண்ணன்”**[51]

என்னும் வரிகள் நீலநிறங் கொண்டவன் திருமால் என எடுத்துரைக்கின்றன.

**“ அஞ்சன உருவன்”** [52]

**“ காரிருள் மயங்கு மணி மேனியின்”**[53]

என வரும் பாடல் வரிகள் திருமாலின் கருமை வண்ணம் குறித்து வழங்குவனவாக வருகின்றன.

**“ பறவாப் பூவைப் பூவினோயே”** [54]

**“ பூவைப் புதுமலர் வண்ணன்”**[55]

என்னும் வரிகள் காயாம்பூ வண்ணம் பெற்றவன் மால் என்பதனை உணர்த்தி நிற்கின்றன. திருமால் வியூக நிலையில் நால்வகை வண்ணங்களுடன் காணப்படுகிறார்.

**“ செங்கட் காரி! கருங்கன் வெள்ளை**

**பொன்கட் பச்சை! பைங்கண் மாஅல்”**[56]

என்னும் வரிகள் திருமாலின் நிறமான நீலத்தோடு பச்சையும் கலந்துள்ளதைக் குறிப்பிடுகின்றன.

## ஊர்தியும் கொடியும்

திருமால் கருடனை ஊர்தியாகக் கொண்டவன். அக்கருடனையே கொடியாகவும் கொண்டவன்.

**“நஞ்சோடே உறைக்குள் கிடந்த துணையினையுடைய வெள்ளிய பல்லையுடையவனும், தீக்கால்வது போன்று நெட்டுயிர்ப்புக் கொள்ளவும், கண்டார்க்கு அச்சம் தோற்றுவிப்பவனுமாகிய கொடிய வலியினை உடைய பாம்புகள் மருளும்படி அடிக்கும், பலவரிகளை உடைய வளைந்த சிறகினுடைய கருடனை அணிந்த நெடிய கொடியினை உடையவன்”**[57]

என திருமுருகாற்றுப் படை கூறுகின்றது.

**“ ஏலர் வயங்கு பூண் அமரரை வெளவிய அமிழ்தில்**

**பயந்தோள் இருக்கண் களைந்த புள்ளியனை**

**பயந்தோள் இடுக்கண் களைந்த புள்ளின்**

**நிலந்து ஓங்கு உயர் கொடிச் சேவலோய்!”**[58]

தாயாகிய வனிதையின் துன்பத்தைப் போக்கிய திருமால் கருடக் கொடியினைக் கொண்டவன் எனப் பாடல் சான்று பகர்கின்றது. மேலும்,

**“ சேவல் ஓங்கு உயர் கொடியோயே!**

**சேவல் ஓங்கு உயர் கொடி**

**நின் ஒன்று உயர் கொடி பனை**

**நின் ஒன்னு உயர் கொடி நாஞ்சில்**

**நின் ஓன்று உயர் கொடி யானை**

**நின் ஒன்றா உயர்கொடி ஒன்று இன்று”**[59]

திருமாலுக்கு உரிய கொடிகள் கருடக்கொடி. பனைக் கொடி, நாஞ்சில் கொடி, யானைக் கொடி, ஆகிய பல கொடிகள் இருப்பினும் அவை சிறப்புக் கொடியாகிய கருடக் கொடிக்கு ஒப்பாக அமைந்துள்ளது.

## திருமாலின் ஐவகை நிலங்கள்

திருமால் உலகத்தோற்றத்திற்குக் காரணமாக விளங்குகிறான். தூலமாய் நிற்கும் கரியப் பொருளாகவும், சூச்சுமமாய் நிற்கும் காரணப் பொருளாகவும் திகழ்கின்றான். பல ஊழிக் காலங்களைக் கடந்த தொன்மையுடையவனாய் திருமால் இருக்கின்றான். ஒவ்வொரு ஊழியின் போதும் அவனது திருவிளையாடல்கள் நிகழப்படும். இப்படியாகப் பல ஊழிகளைக் கண்டவன். திருமால் தத்துவ நோக்கில் ஐந்து நிலைகளை உடையவனாகத் திகழ்கிறான்.

## பரத்துவ நிலை

பரத்துவம் என்பது உலகியல் யாவற்றிலும் இருந்தும் விடுபட்டுத் திரும்பப் பிறவாத பெருநிலையாகும்.

**“திரும்ப பிறவாத பெரு:நிலையிலுள்ள அந்தன் குருடன் முதலிய நித்திசூரிகளுக்கு போக்கியனாக இறைவன் எழுந்தருளியிருக்கும் நிலை.”**[60]

என்கிறார். அகமும் புறமும் பற்று நீங்கப் பெற்ற நித்ய சூரிகள் சூழ்ந்திருக்க விடாத பூவினையும் இமையாத கண்களையும் உடையவனாய் திருமால் இருக்கும் நிலை. இதனை,

**“ மாசற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்**

**வாடாப் பூவினிமையா நாட்டத்து**

**நாற்ற வுணவினரு கெழு பெரியோர்க்கு.”**[61]

என மதுரை காஞ்சி குறிப்பிடுகின்றது. மேலும்,

**“ அருந்திறற் கடவுள் வாழ்த்து.”**[62]

எனும் போது திருமாலின் முத்தாய்வுகள் புலப்படுகின்றன.

**" ஐந்தலை உயிரிய அணங்குடை அருந்திறல்**

**மைந்துடை ஒருவனும் மடங்கலும் நீ."[63]**

என்னும் வரிகள் காத்தற் கடவுளாகக் கூறப்படும் திருமால் அவனுக்குரிய படைத்தல் தொழிலும், அரனுக்குரிய அழித்தல் தொழிலும் இயற்றும் ஆற்றலுடையவன் என்பதனை வெளிப்படுத்துகின்றன.

## வியூக நிலை

வியூக நிலை என்பது படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழில்களைப் புரியவும், தீமையினை நீக்கி நன்மை உண்டாகக் காத்தருளவும், வீடுபேறு பெற விழைவோர்க்கு உலகியல் வாழ்வை விடுவித்து இறையருளைப் பெற உதவுவதும் ஆகும்.

சங்கருடணன், பிரத்தியுந்தன், அநிருத்தன், வாசுதேவன் என்பவர்களாக திருபாற்கடலில் விளங்கும் நிலையாகும். ஆயிரம் தலையையுடைய ஆதிசேடன் மீது திருமால் பள்ளி கொண்டு உறங்கும் நிலை வியூக நிலையாகும். நெருப்பு, காற்று, விண், மண், நீர் ஆகிய ஐந்து பூதங்களும், கதிரும், மதியும், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ஆகிய கோள்களும் திதி என்பாரின் மக்கள் அரக்கரும் விதி என்பானின் மக்கள் ஆதித்தர் பன்னிருவரும், குற்றமற்ற வசுக்கள் எண்மரும், உருத்திரர் பதினொருவரும், அசுவினி தேவர் இருவரும், மூவேழு உலகங்களும் திருமாலிடமிருந்து தோன்றியவையாகும். எனவே இவை சூழ பள்ளி கொண்டு இருப்பான் திருமால்.

**" காந்தளூஞ் சிலம்பிற் களிறு பழந்தாங்குப்**

**பாம்பணைப் பள்ளி யமர்ந் தோனாங் காண்.'[64]**

காந்தள் மலர் வெ.·.கா கோயிலில் ஆதிசேடர் மீது தலை கொண்டு திருமால் உள்ளதாக பெரும்பாணாற்றுப்படை இயம்புகின்றது.

## விபவ நிலை

உலகத்து **" எல்லாப் பொருள்களாகவும் வந்து தோற்றமளிப்பதாகும்."**[65]

மச்சம், கூர்மம், வராகம், நரசிம்மம், வாமனன், இராமன், பரசுராமன், கண்ணன், பலராமன், கல்கி என அவதார நிலையாகும்.

திருமாலின் அவதார நிலைகளை உணர்த்துவது விபவ நிலையாகும். அவதாரச் செயல்களில் நல்லவர்கள் காக்கப்படுவதும், தீயவர்கள் அழிக்கப்படுவதும் இறைவனின் அருட்செயலாக அமையும். திருமாலின் பத்து அவதார நிலைகளில் நரசிம்ம அவதாரம் ஒன்றாகும்.

**" பிருங்கலாதன் பல பல பிணி பட**

**வலந்துழி, மலர்ந்து நோய் கூர் கூம்பிய நடுக்கத்து**

**அலர்ந்த புகழோன், தாதை ஆகலின்**

**தடி தடி பல பட வகிர் வாய்த்த உகிரினை."**[66]

பிரகலாதன் மெய் அம்பினை நயந்து இறைவனான திருமால் எடுத்த அவதாரமாம் இவ்வவதாரம் அமைகின்றது.

மாபலிச் சக்கரவர்த்தியின் பேராசையினை ஒடுக்கும் பொருட்டாகத் திருமால் வாமன அவதாரம் எடுத்தார். இதனை,

**" நிலந்தரு திருவின் நெடியோன்"**[67] என்ற அடியும்,

**"நீனிற வுருவின் நெடியோன்"**[68]

என்னும் அடியும் எடுத்துரைக்கின்றன. மேலும்,

**"இரு நிலங்கடந்த திருமறு மார்பின் முந்நீர் வண்ணன்"**[69] என்பனவும்,

**" நீர் செலநிமிர்ந்த மா அல் போல "**[70] என்பனவும், வாமன அவதாரத்தை உணர்த்தி நிற்கின்றன. **இவையின்றி அன்ன வடிவம் கொண்டது.**[71]

**இராம அவதாரத்தில் இராவணன் சீதையைக் கவர்ந்தது.**[72] கோடியக் கரையில் தன் துணைவர்களோடு மந்திராலோசனை செய்தது [73] ஆகியன குறிப்பிடப்பட்டு உள்ளன.

## அந்தரிய மித்துவ நிலை

உலகத்து அனைத்து பொருள்களிலும் அனைத்து உயிர்களிலும் உட்கலந்து நிற்பதுடன் அவற்றையெல்லாம் இயங்கி நிற்கும் நிலையாகும் அர்ச்சவதார நிலை திருக்கோயில்களிலும் அடியவர் தம் இல்லங்களிலும் எழுந்தருளி அன்பர்கள் விரும்பும் திருமேனி கொண்டு அன்பர்கள் விருப்பம் போல அமைவதாகும்.

திருமால் சக்கரம், தனு, வாள், தண்டு, சங்கம், என்னும் ஐந்து ஆயுதங்களைக் கொண்டவன். இவற்றுள் சக்கரம் சுதரிசனம் என்றும் வில் சாரங்கம் என்றும் வாள் நாக்தகம் என்றும் தண்டு கௌமோதகி ன்றும் சங்கு பாஞ்ச சன்னியம் என்றும் அழைக்கப்பெறும்.

திருமாலின் சிறப்புடை தெய்வங்களாக,

**"பகை அணங்கு அழியும் பால்வெண் சங்கமும்**

**துகை பெறு தாமரைக் கையில் ஏந்தி"**[74]

சங்கும் சக்கரமும் அமைகின்றன. மேலும்,

**"நோகதிர் நிரைத்த நேமியஞ் செல்வன்."**[75]

**" பொன்னாரி நேமி வலங் கொண்டு ஏந்திய**

**முன்னுயிர் முதல்வன்."**[76]

**“ எள்ளுநர்க் கடந்தட்ட இகன் நேமியவை.”**[77]

**“ செருமிகு நேமியான்.”**[78]

என்னும் பாடல்வரிகள் திருமால் கரத்தில் நிலையான இடம் கொண்ட ‘ஆழி’ யினை எடுத்தியம்புகின்றன.

## அர்ச்சை நிலை

இந்நிலையில் வழிபடும் உருவங்களில் திருமால் உறைவதாய் நம்பும் நிலையாகும்.

**“ ………..பூமலி பெருந்துறைச்**

**செல்விகொள் பவரோடசைஇ யல்வயி**

**னருத்திறற் கடவுள் வாழ்த்தி.”**[79]

பெறுவதற்கு அரிய பழம்புகழ் பொருந்திய திருவெ.்.கா அணையில் திருஉறை பதி கொண்டு திருமால் காட்சித் தருகின்றான். இயற்கைப் பொருட்களைப் படைத்து அவற்றுள் அதுவாக உள்ளான். இறைவன் எவ்வடிவில் எப்பொருளில் இறைவன் உள்ளான் என நம்பி வணங்குவோர்க்கு அதில் உறையும் பொருளாகத் திருமால் உள்ளான்.

**“ நின் வெம்மையும் விளக்கமும் ஞாயிற்று உன்**

**நின் தன்மையும் சாயிலும் திங்கள் உள்**

**நின் அரத்தலும் விண்மையும் மாரி உன்**

**ஏமம் ஆர்ந்த நிற்பிரிந்து**

**மேவன் சான்றன எல்லாம்.”**[80]

உலகில் காணலாகும் யாவற்றிலும் வரும் உள்ளுறைத் தெய்வமாத் திருமால் திகழ்கின்றான் என்பது புலப்படுகின்றது.

## திருமாலும் வைணவமும்

வைணவத்தின் முழுமுதற்கடவுள் திருமால் ஆவான். வடவர் திருமாலை 'விஷ்ணு' என்பர். இதனடியாகப் பிறந்தது வைஷ்ணவம். இதுவே தமிழில் 'வைணவம்' என அழைக்கப்படுகின்றது. 'விண்டு' என்னும் தமிழ் சொல்லிலிருந்து 'வைணவன்' என்னும் சொல் தோன்றியது என்பது புலப்படுகின்றது. பல கடவுளரையும் வணங்குவது ஒரு மரபாகி விட்ட பின்னர் கடவுள், மனிதன் உலகம் இவற்றைப் பற்றியும் இவற்றிடையே உள்ள உறவுகள் பற்றியும் ஆழ்ந்து சிந்திக்கும் நிலை உருவான போது உபநிடதங்கள் தோன்றின என்றும் இவை கடவுளின் மேலான தன்மைகளை நிறுவின என்றும் கூறுவர். எனினும் இத்தத்துவ சிந்தனைகள் மனிதனின் அன்றாடத் தேவைகளை நிறைவு செய்வனவாக இல்லையென்றும் மனிதன் அன்றாடம் வழிபட்டுப் புகழ்தற்கு ஒரு பொருள் தேவைப்பட்டது என்றும் இச்சூழ்நிலையில் மகத நாட்டின் கீழ்ப்பகுதியில் சமணமும், பௌத்தமும் தோன்றின என்றும் அப்போது வடமதுரையைச் சூழ்ந்த மேற்குப் பகுதியில் வாசுதேவ வழிபாடு உருவாயிற்று என்றும் சமண பௌத்தர்கள் கடவுள் நம்பிக்கையற்றோராய் கடுமையான ஒழுக்கத்தையும் அறத்தையுமே முக்திக்கு வாயில்களாக வற்புறுத்த வாசுதேவ சமயத்தினர் முழுமுதற் பொருளிடம் பக்தி செலுத்துதல் மூலமே முக்தி பெறலாம் என வற்புறுத்தினர் என்றும் அறியலாகிறது.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் தமிழகத்தில் பாகவத மதம் இருந்தது என்பதற்கு பரிபாடலில் வாசுதேவன் நாராயணனோடு இணைத்து கூறப்பட்டுள்ளதை சான்றாக காணலாம். திருமாலின் பல இயல்புகள் சங்க இலக்கியங்களில் கூறப்பட்டு உள்ளன. மேலும் அவதாரங்களும் புராணங்களும் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன.

சிலம்பில் திருமாலின் இராமாவதாரமும், கிருஷ்ணவதாரமும் பாராட்டப்படுகின்றன. ஆய்ச்சியர் குரவை திருமாலின் பெருமைகள் பலவற்றையும் குறிப்பிடுகின்றது. இராமன் இலங்கையினை அழித்ததும், அழித்ததும், தாதை ஏவலின் தம்பியொடும் கானகம் சென்றதும் ஆகிய இராமவதார நிகழ்ச்சிகளும் கண்ணன் கன்று குணிலாக் கனியுதிர்த்ததும் குருந்தொசித்ததும் பிறவும் இப்பகுதியில் பாராட்டப்படுகின்றன. 'நாராயணாய நமக' என்னும் எட்டெழுத்து மந்திரத்தினை மாங்காட்டு மறையோன் பேசுகின்றான். திருவரங்கத்திலும், அழகர் மலையிலும், திருவேங்கடத்திலும் திருமால் குடிகொண்டிருந்ததாகவும் இந்நூல் குறிப்பிடுகின்றது.

மாதவியின் பதினோராடல்களில் குடக்கூத்து, பேடு, மல்லாடல், பாண்டரங்கம் முதலிய கண்ணுதற்குரியவையாகும். எனவே சிலப்பதிகாரக் காலத்தில் திருமால் வழிபாடு நன்கு வேரூன்றி இருந்தது என அறிகின்றோம்.

## ஆழ்வார் பாசுரங்கள்

ஆழ்வார் பாக்களில் தலைதூக்கி நிற்பது ஆண்டாள் அடிமையுணர்ச்சியே ஆகும். இதனை வடவர் 'தாச பாவம்' என்பர். இறைவனுக்குரிய கைங்கரியங்களைச் செய்வதிலே இவர்கள் முனைந்து நிற்கின்றனர். தாம் செய்யும் ஒவ்வொரு செயலையும் இறைவற்குரிய தொண்டாகவே கருதுவது இவர் இயல்பு. இறைவனுக்கு அருகிலிருப்பது வீடுபேற்றிலும் மேலானது என்பார் நம்மாழ்வார்.

இறைவனுடைய தொண்டனாக இருப்பதே முக்தி என்பது அவருடைய கோட்பாடாக இருந்தது. இத்தகு பக்தியே பெரியாழ்வாரிடம் தாய் - மகன் உறவாகப் பரிணமித்தது எனினும் நம்மாழ்வாரிடமும், திருமங்கையாழ்வாரிடமும் காதலன் - காதலி உறவே தலைதூக்கி நிற்கின்றது. உண்மையான அன்பன் இறைவனிடம் தன்னை முழுவதும் ஒப்புவிக்கிறான். அவனன்றி ஆன்மாவுக்கு நிலை பேறில்லை. இதனைக் காட்ட நாயகன் நாயகி பாவம் நன்கு பயன்பட்டது.

நாயகன் நாயகி உறவு விளக்குவதில் நம்மாழ்வாருக்கும் திருமங்கைக்கும் வேறுபாடு உண்டென்பர். திருமங்கையாகிய தலைவி இறைவனொடு எப்பொழுதும் இருக்க வேண்டுமென்று விரும்புகிறாள். அவனைத் தேடிச் சென்று அடையும் முயற்சியில் தன்னையே அழித்துக் கொள்ள முன் வருகின்றாள். அவருடைய இரண்டு மடல்களும் இதனையே மொழிகின்றன. நம்மாழ்வாரோடு உடலிலும் உயிரிலும் கலந்து நிற்கும் நிலையை வேண்டுகிறார். அவனுடைய பெருமைகளைப் புகழ்ந்து பாடுகின்றார். காம நோயுற்று கலங்குகின்றார். தூது விடுகிறார்.

அவனால் படைக்கப்பட்ட அனைத்துலகும் அவனுடைய உடலாகக் காண்கின்றார். இறைவனின் பரநிலையை நேரே கண்டு அவனோடு இணைய விரும்புகிறார். இயலாதவர்கள் அவனுடைய அவதார விபாவங்களிலும் அர்ச்ச வடிவத்திலும் ஈடுபட்ட அந்நிலையை அடையலாம் என்கிறார். உண்மை பக்தனுக்கு சடங்குகள் தேவையில்லை என்கிறார். வீடுபேறு அடைவதற்கு முழுமையாகத் தன்னை ஆட்படுத்தும் 'பரபக்தி' நிலையே வேண்டும் என்கிறார்.

பக்திக்கும் பரபக்திக்கும் வேறுபாடுண்டு. இரண்டுமே ஆழ்வார் பாக்களில் இடம் பெறுகின்றன. பரபக்தியே எளிமையானது என்பது நம்மாழ்வார் கருத்தாகும். அது முழுமையாக ஆட்படுத்துவது சிறப்புப் பண்பாகும். அளவு கடந்த துன்ப நிலையில் முழு சரணாகதியே ஒரே வழியாகும்.

ஆழ்வார் பாடல்களில் இடம்பெறும் மூன்றாவது வைணவக் கோட்பாடு ஒன்று உண்டு. அது அருள் பற்றிய கருத்தாகும். இறையருளே முக்திக்கு வழி எனினும் இவ்வருளை நாம் முயன்று பெற முடியாது. அதுவும் அவனே தன் பக்தனுக்குத் தருவதாகும் என்பர்.

பக்தன் கடவுளின் அருளுக்குப் பாத்திரனாகி விட்டால் பின் இறைவனால் அருள் பொழிவினை நிறுத்த முடியாது. அவன் உரிமை கூட அவனுடைய அருளால் விளங்கிடப்படுகிறது என்றார் நம்மாழ்வார். இங்கும் இப்பிரிவினருள்ளே வேறுபாடுண்டு. தென்கலையினர் இறை அருள் ஏதுவற்றது

என்பர். வட கலையினரோ எதுவுள்ளது (சாஹோதுகா) என்றனர். மேலும் இறையருளை நாராயணன் திருமகள் இருவரையும் சேர்த்து வணங்கியே பெற வேண்டும் என்றனர்.

உலகின் முதற்பொருள் உண்மை பொருள் பிரமம் ஆகும். பிரமம் என்பதற்குப் பெருமையுடையது என்று பொருள். இப்பிரமத்தின் இயல்பினை அறியும் ஆழ்ந்த சிந்தனை வேதாந்தமாக மலர்கிறது. ஆன்மீக நெறியில் பிரமத்தை அறிய வேதாந்தம் மூன்று கருத்து முறைகளை உள்ளடக்கியுள்ளது. அவை அத்துவிதம், துவிதம், விசிஷ்டாத்வதம் என்பனவாகும். அத்துவிதம் என்றே அழைக்கப்படுகிறது. துவிதம் மெய்ப்பொருள் முறையில் கடவுள் கொள்கையினை விளக்குகிறது. உலக உண்மைகளை ஏற்கும் விதமாக துவிதம் அமைகின்றது. விசிஷ்டாத்வதம் இறை குறித்த ஒருமைக் கொள்கையினை அன்பு நெறியிலே வழங்குகிறது.

பிரமத்தின் உண்மையினை அறிவது ‘அசித்’ என்றும் ‘சித்’ என்றும் குறிக்கப்படுகின்றது. பிரமத்தை அடையும் நெறி ’ஹிதம்’ எனப்படும். இராமானுஜரிடம் காணப்படுவது விசிஷ்டாத்துவக் கொள்கையாகும். இராமானுஜர் பிரமத்தை பரம்பொருள் எனக் கருதுகின்றார். உள் பொருள் முழுமையான நிலையில் பிரமம் ஆகும்.

**“உண்மை நன்மை, அழகு, பேரின்பம், ஆகிய பண்புகள் (அ) என்றென்றும் நின்று நிலவும் குணங்கள் பிரமத்தைத் தமது மூலமாகப் பிறப்பிடமாகக் கொள்கின்றன. பிரமம் தனக்கு உவமையிலாத நிறைவுடைவோனாக பழுநிலா, குறைவிலா, உள்பொருளாக அமையக் காண்கிறோம்.”**[81]

என்பதிலிருந்து பிரமம் என்பது பூரண நிறைவு என அறிய முடிகின்றது.

ஆழ்வார் பாடல்கள் பிரமத்தை ஸ்ரீ கிருஷ்ணனாக வெளிப்படுத்துவதை அறியலாம். இயற்கையில் காணும் உள்ளது சிறத்தல்படி ஆன்மா முன்னேறுவதற்கும் தெய்வத்தன்மை பெறுவதற்கும் வேதாந்தம் துணை

நிற்கின்றது. ஸ்ரீ வைணவத்தில் இறைவன் நாராயணனாகவும் ஸ்ரீயாகவும் விளங்குகின்றார்.

ஸ்ரீ வைணவம் இருபிரிவுகளுடன் காணப்படுகிறது. பிள்ளை லோகாச்சாரியார் என்பவரால் நிறுவப் பெற்றது தென்கலை வைஷ்ணவம். இறைவனது அருள் நிபந்தனையற்று இயல்பாகவே எழுகின்றது எனக் கூறுகின்றது. வேதாந்த தேசிகரால் நிறுவப் பெற்றது வடகலை வைஷ்ணவம். இறைவனது ஆளும் பக்தனது தகுதியும் சேர்ந்த நிலையாகும்.

பிரமமே இப்பிரபஞ்சத்தின் முதற்காரணமாகவும் நிமித்த காரணமாகவும் விளங்குகிறது. பிரமமே பரந்த இவ்வுலகிற்கும் ஆன்மாக்களுக்கும் காரணம். உலகில் காணப்படும் அறிவுடை அறிவில் பொருள் யாவும் பிரமத்தின் வேறானவை. பிரமம் பிரபஞ்சத்தின் அகமாகவும் புறமாகவும் விளங்குவதாய் வைணவக் கொள்கைப்பாடு உள்ளது.

## குறிஞ்சி நிலத் தெய்வம்

தமிழர்களின் பழமையான தெய்வமாக முருகன் காணப்படுகிறான். முருகன் என்றால் அழகன் எனப் பொருள்படும். முருகு என்பது பல பொருள் குறிக்கும் ஒரு சொல். அப்பல பொருளுள் சிறப்பாகக் குறிக்கத்தக்கன நான்கு. அவை மணம், இளமை, கடவுட்டன்மை, அழகு என்பன[82] என்கிறார். இறைவன் சிவனின் இளைய மகன் இளையோன், அழகன் என்னும் இரு பொருள் தரும் பெயர்களைப் போலவே ‘குழகன்’ என்னும் பெயரையும் பெறுகிறான்.

**“ சேயோன் மேய மைவரையுலகம்”**[83]

என்னும் தொல்காப்பியக் குறிப்பால் குறிஞ்சி நிலக்கடவுள் முருகன் என அறியலாம்.

**“ குன்று தோறாடல் – நின்றதன் பண்பு”**[84]

என வரும் திருமுருகாற்றுப்படை வரிகள் முருகனுக்குரிய இடம் குறித்துப் பேசுகின்றன. முருகனுக்கு வழங்கப்படும் பெயர்கள் தெய்வீக நலன்களை வெளிப்படுத்துவனவாக உள்ளன.

அண்ணல், அடிகள், இளையன், ஐயன், கந்தன், காங்கேயன், கார்த்திகேயன், செட்டி, சேய், செவ்வேள், சேந்தன், பண்ணவன், முருகன், விசாகன், வேலன், வேள் என்னும் பெயர்களைப் பெற்றுச் சிறப்பாக அழைக்கப்படுகின்றான். மேலும் குறிஞ்சி மன், குறிஞ்சி நாதன், குறிஞ்சிக் கிழவன், குறிஞ்சி வேந்தன், குறிஞ்சிக் கடவுள் என்கின்ற பெயர்கள் நிகண்டுகளில் காணப்படுகின்றன. முருகன் வீரம் கொண்ட போர்க்கடவுளாகப் போற்றப்படுகின்றான்.

'வெல்போர்ச் சேய்', வெல்போர் கொற்றவை சிறுவ 'கடம்பவர் நெடுவேள்', திருத்தருசேஎய், செருவெம்சேஎய், செருமிகுசேய், செருவெம்சேஎய், செருமிகுசேய் என்கிற பெயர்களாலும் அழைக்கப்படுகின்றான்.

முருகன் சிவன் உமையவன் மகன் என்பதை நிறுவ கீழ்க்காணும் இலக்கிய வரிகள் சான்றுகளாக அமைகின்றன.

**" கா அய் கடவுட் சேஎய்"**[85]

**" ஆலமர் செல்வன் புதல்வன் வரும்."**[86]

**" ஆலமர் செல்வன் அணிசால் மகன்"**[87]

**" இழையணி சிறப்பின் பழையோள் குழவி"**[88]

**" கொற்றவை சிறுவ"**[89]

**" ஆல்கெழு கடவுட் புதல்வ"**[90]

**" மணிமிடற்று அண்ணற்கு மதியாரல் பிறந்தோய்"**[91]

**“ மறுமிடற்று அண்ணற்கு மாசிலோர் தந்த**

**நெறிநீர் அருவி அசும் புறு செல்வ.”[92]**

முருகன் கடைச் சங்கப் புலவருள் ஒருவனாக இருந்தான் என்பதால் ‘கலையறி புலவன்’ எனவும் தமிழ்க் கடவுள் எனவும் போற்றப்படுகின்றான்.

## முருகன் பிறப்பு

முருகனது பிறப்பு குறித்த பல்வேறு கதைகள் புராணங்களிலும், இலக்கியங்களிலும் பல வகையாகக் காணக் கிடக்கின்றன.

**“ இறைவன் உமையை வதுவை செய்து கொண்ட நாளிலே இந்திரன் சென்று நீ புணர்ச்சி தவிர்க்க வேண்டும் என்று வேண்டிக்கொள்ள அவனும் அதற்கு உட்பட்டு அது தப்பாகிப் புணர்ச்சி தவிர்த்து கருப்பத்தை இந்திரன் கையில் கொடுப்ப, அதனை இருடிகள் உணர்ந்து அவன் பக்கனின்று வாங்கி தமக்கு தரித்தல் அரிதாகை இறைவன் கூறாகிய முத்தீக்கட் பெய்து, அதனை தம் மனைவியற் கையில் கொடுப்ப, அருந்ததி ஒழிந்த அறுவரும் வாங்கிக் கொண்டு விழுங்கிச் சூன்முதிர்ந்து சரவணப் பொய்கையில் பதுமப்பாயலிலே பயந்தாராக ஆறு கூறாகி வளர்கின்ற காலத்து இந்திரன் தான் இருடிகளுக்குக் கொடுத்த நிலையை மறந்து ஆண்டு வந்து வச்சிரத்தான் எறிய, அவ் ஆறு வடிவம் ஒன்றாய் அவனுடனே பொருது அவனைக் கெடுத்துப் பின் சூரபன் மாவைக் கொல்லுதற்கு அவ்வடிவம் ஆறாகி வேறுபட்ட கூற்றாலே மண்டி சென்றதென்று.”[94]**

என்று முருகன் பிறப்பு பற்றி பரிபாடல் கூறுகின்றது.

தாரகனால்  பெரும் துயர் அடைந்த தேவர்கள் அக்கினி தேவனை ஒரு புறா வடிவில் சிவபெருமானிடம் செல்லப் பணிக்க அவன் சிவபெருமான் லீலையில் இருந்த போது அந்தப் புர அறையில் செல்ல, சிவன் அந்தப் புறாவே தனது வீரியத்தைத் தாங்க வீரியத்தை விட்டார். அதன் வீரிய வெப்பத்தை தாங்க முடியாத புறா அதனைக் கங்கையில் விட அதை

கங்கை தருப்பப் புல்லில் விட அந்த சிவ வீரியத்திலிருந்து பேரழகன் சகல மேன்மைதரவல்ல முருகன் தோன்றினார்”[95] என முருகன் பிறப்புக் குறித்துப் புராணம் கூறுகின்றது.

பார்வதி பரிணயம் முடித்து பலகாலம் ஆகியும் ஈசன் தனக்கு இணையான ஒரு மகனை தந்தருளாதிருக்க, திருமால், பிரம்மன், இந்திராதி தேவர்கள் மேருமலையில் கூடி அனைவரும் திருக்கயிலாயம் சென்று சிவபெருமானிடம் முறையிட எண்ணினர். அதற்கு முன்பு எம்பெருமான் நிலையினை அறிந்து வர வாயுவை அனுப்பினார். ஆனால் நந்திதேவர் அனுமதி மறுத்துவிட அனைவரும் திருக்கயிலாயம் சென்று சூரபதுமனால் தாம் அடைந்துள்ள துயர் நீக்க ஒரு குமரனை வேண்டி அருள் கேட்க சிவனும் ஸத்யோஜாதம், வாமதேவம், தத்புருஷம், ஈசானம், அகோரம், உள்முகம் என்று ஆறு பொறிகளை வெளிப்படுத்த அதனை வாயு தாங்கி கங்கையில் விட கங்கையும் சரவணப் பொய்கையில் சேர்த்து விடுகின்றாள்.

அப்போது ஆறு திருமுகங்களுடன் பன்னிரண்டு கரங்களுடன் முருகன் திரு அவதாரம் நிகழ்ந்தது. குமரன் ஆறு மலர்களில் தோன்ற கார்த்திகை மகளிர் அறுவர் பாலூட்ட பார்வதி காணும் உவகையால் வாரி அணைக்க ஆறும் ஒன்றாகி கந்தனாகத் தோன்றினான்.

இப்புராண கதையின் உட்பொருளை உணர்த்தும் வகையில்,

**“ பாகம் உண்ட பைங்காண் பார்ப்பான்**
**உமையொடு புணர்ந்த காம வதுவையுள்**
**அமையாப் புணர்ச்சி அமைய நெற்றி**
**……………………………………**
**எரி உமிழ் வச்சிரம் கொண்டு இகழ்ந்து வந்து எறிந்தென**
**அறு வேறு துணியும் அறுவராகி**
**ஒருவனை வாழி ஓங்குவிறல் சோய்.”**[98]

என முருகன் பிறப்புப் பற்றி பரிபாடல் கூறுகின்றது. சிவனின் மைந்தன் முருகன் என்பதனை,

**“ ஆலமர் செல்வன் அணிசால் பெருவிறலி**

**போல வருமென் உயிர்.”**[99]

**“ ஆலமர் செல்வன் அணிசால் மகன் விழாக்**

**கால் கோள்”** [100]

என்னும் வரிகள் சான்று தந்து நிறுவுகின்றன.

## முருகனின் வடிவம்

ஆறுமுகங்களும், பன்னிரு கரங்களும் கொண்டவன் முருகன். நீலக்கடலில் தோன்றும் இளஞ்சுடர் போன்றே செவ்வொளி வீசும் ஆறு திரு முகங்களைக் கொண்டவன். முருகனின் மேனி நிறம் போன்றே அவன் அணிந்துள்ள ஆடை, மாலை முதலியன செம்பிழம்பாய் காட்சி அளிக்கின்றன.[101]

முருகன் அணிந்துள்ள ஆடையினை,

**“ நலம் பொது கலிங்கம்”**[102] எனவும் **“ வெண் டுகில்”**[103] எனவும் அறிய முடிகின்றது.

## ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களும்

தாமம், முகுடம், பதுமம், கிம்புரி, கோடகம், ஆகிய ஐவடி வினையுடைய முடிகள் முருகன் தலையில் சிறப்புடன் விளங்குகின்றன. பலவகையான தொழிற் கூறுபாடுகள் அமைந்த பொன்னாலான மகரக் குழைகள் மதி சூழ்ந்த விண்மீன்கள் போன்று அசையும். இதனை,

**“ மா இருள் ஞாலம் மறு இன்றி விளங்க**

**பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம் ஒருமுகம்**

**ஆர்வலர் ஏத்த அமர்ந்த இனிது ஒழுகி**

**காதலின் உவந்து வரம் கொடுத்தன்றே ஒருமுகம்**

**மந்திர விதியின் மரபுளி வழாஅ**

**அந்தணர் வேள்வி ஒர்க்கும்மே ஒருமுகம்**

**எஞ்சிய பொருள்களை ஏமுற நாடி,**

**திங்கள் போலத் திசை விளக்கும்மே, ஒருமுகம்**

**செநர்த தேய்த்து செல்சமம் முருக்கி**

**கறுவு கொள் நெஞ்சமொடு களம் வேட்டடன்றே ஒருமுகம்**

**குறவர் மடமகள் கொடிபோல் நுசப்பின்**

**மடவரல் வள்ளியொடு நகை அமர்ந்தன்றே**

**ஆங்கு அம்மூகிரு முகனும் முறை நவின்று ஓழுகலின்''** [104]

என முருகாற்றுப்படை இயம்புகின்றது.

## பன்னிரு கரங்கள்

முருகனின் ஆறுதிருமுகங்களும் தத்தம் கடமைகளைப் பயின்று நடத்துதலினால் அத்திருமுகங்களுக்கு ஏற்ப பன்னிரு கரங்களும் பல தொழில்களைப் புரிகின்றன.

ஒருமுகம் : மாயிருள் ஞாலம் மறு இன்றி விளங்கப் பல்கதிர் விரிதன்று.

இருகரம் : விண் செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது. ஒரு கை உக்கம் சேர்த்தியது ஒரு கை.

ஒருமுகம் : ஆர்வலர் ஒத்த அமர்ந்து இனிது ஒழுகிக் காதலின் உவந்து வரங்கொடுத்தன்றே.

இருகரம் : நலம் பெறு கலிங்கத்துக் குறங்கின் மிசை அசை இயது

ஒழுகை அங்குசம் கடாவ ஒரு கை.

ஒருமுகம் : மந்திர விதியின் மரபுவளி விழா அந்தணர்க்கு

வேள்வி ஓர்க்குமே.

இருகரம் : இரு கை ஐயிரு விட்டமொடு ஈர்குவலம் திரிப்ப.

ஒருமுகம் : எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித்திங்கள் போலத் திரை

விளக்குமே.

இருகரம் : ஒரு கை மார்பொடு விளங்க ஒரு கை தாரொடு பொலிய

ஒருமுகம் : செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக் கறுவு கொள்

நெஞ்சமொடு களம் வேட்டன்றே.

இருகரம் : கீழ்வீழ் தொடியோடு மீசை கொட்ப ஒரு கை பாடுகின்ற படுமணிஇரட்ட

ஒருமுகம் : குறவர் மட மகள் கொடிபோல் நுசுப்பின் மடவரல் வள்ளியொடு

நகை அமர்ந்தன்றே

இருகரம் : நீலநிற விசும்பின் மலிதுளி பொழிய ஒருகை ஒரு கை வான் அர மகளிர்க்கு வதுவை சூட்ட.

என விளக்கி உரைப்பார் நச்சினார்க்கினியர்.[105] மேலும்,

**“ ஆறு முகத்து ஆறிரு தோளால்”**[106]

**“ ஆறு முக ஒருவனோர் பெறுமுறை இன்றியும்.”**[107]

**“ மூவிரு முகனும் முறை நவின்று ஒழுகலின்”**[108]

என்னும் வரிகளும் முருகனின் ஆறுமுகங்களைக் குறிப்பிடுகின்றன.

## முருகனின் ஊர்தியும் கொடியும்

முருகன் வெற்றியையே விரும்புபவன், அவன் ஊர்ந்து செல்லும் மயில் **“ஊர்மயில்”**[109] என அழைக்கப்படும். இம்மயிலானது ‘மஞ்ஞை’ எனவும் பொருள் படும். பிணிமுகம் என்று சொல்லப்படும் யானையும் முருகனது வாகனமாக அமைகின்றது.[110] பிணி முகம் என்பது மயிலினையும் குறிக்கும்.[111]

**“ கால் கிளர்ந்தன்ன வேழமேல் கொண்டு.”**[112]

**“ ஓடாப் பூட்கை பிணிமுகம் வாழ்த்தி.”**[113]

**“ சேயுயர் பிணிமுகம் ஊர்ந்து.”**[114]

என வருகின்ற அடிகளும்

**“ பிணிமுக ஊர்தி ஒன் செய்யோன்”**[115]

**“ பிணிமுக மேற்கொண்டு அவுணர்**

**மணிவிசும்பிற் கோனேத்த மாறுபட்ட வெள்வேனே.”**[116]

என வருகின்ற அடிகளும் பிணிமுகம் என்னும் சொல் மயில், யானை ஆகிய இரண்டையும் குறிக்கும் வகையில் ஆளப்பட்டுள்ளன. பரிபாடலில் பரிமேலழகர் யானையினைக் குறிப்பதாகவும் புறநானூற்றில் அடியார்க்கு நல்லார் மயிலினைக் குறிப்பதாகவும் விளக்கம் தருவர்.

முருகன் பதுமனை வதம் செய்தபோது அவனது ஒரு கூறு மயிலாக வந்ததெனவும் பதுமனை அழிப்பதற்கு முருகனுக்கு இந்திரன் வழங்கியது மயில் எனவும் புராண வழி அறியலாகிறது.

**“ நீலப் பறவைமேல் நேரிழை தன்னோடும்**

**ஆலமர் செல்வன் புதல்வன் வரும்”**[117]

மயில் ஊர்தி கொண்ட முருகன் அவன் ஊர்ந்த மயில் ஆண் மயில் எனப் பேராசிரியர் கூறுகின்றார். முருகன் ஊர்ந்த மயில் ஆண்பாலானது என்று கூறி அது சேவல் என்னும் பெயர்க்குரியது என்கின்றார்.

**“ சேவல் பெயர்க் கொடை சிறகொடு சிவனும்**

**மாயிருந் தூவி மயிலைங் கடையே”**[118]

என்னும் தொல்காப்பிய நூற்பாவை சான்று தந்து நிறுவுகின்றார். பறப்பனவற்றுள் ஆண்பாற்கெல்லாம் சேவற்பெயர் உரித்து என்பது பேராசிரியர் தரும் விளக்கமாகும். மேலும் மயில் மட்டுமின்றி முருகனுக்கு ஆடு, தேர், இவ்விரண்டும் வாகனமாக இருந்துள்ளதையும் காண முடிகின்றது. தீக்கடவுள், இந்திரன், இமயன், ஆகிய இம்மூவரும் முருகனுக்கு கொடுத்த தம் ஆற்றல்களே ஊர்தியாக அமைந்துள்ளன என்று பரிபாடல் கூறுவது நோக்கத் தக்கதாகும்.

**“ திருந்து கோல் ஞமன் தன் மெய்யின் பிரிவித்து**

**இருங்கண் வெள்யாட்டு எழில்மறி கொடுத்தோன்**

**ஆஅங்கு அலரும் பிறரும் அமர்ந்து படை அணிந்த**

**மறியும் மஞ்ஞையும் வாரணச் சேவலும்”**[119]

தீக்கடவுள் தன் ஆற்றலின் ஒரு பகுதியைப் பிரித்துக் கோழிச் சேவலாகவும், இந்திரன் தன் கூற்றிலிருந்து ஒரு பகுதியை அழகிய மயிலாகவும் இயமன்(எமன்) தன் ஆற்றலிருந்து ஒரு பகுதியை வெள்ளாட்டுக் குட்டியாகவும் கொடுத்தனர். இவையே முருகனுக்கு ஊர்தியாகவும் அமைந்தன என்பதை பரிபாடலின் மூலம் அறியலாம்.

**“ ஆய் தேரான் குன்ற இயல்பு”**[120]

என்னும் வரி எடுத்துரைக்கின்றது.

## கொடி

முருகனுக்குரிய கொடியாகக் கோழியும், மயிலும் காணப்படுகின்றன. முருகன் பதுமனை அழித்த போது அவனது ஒரு கூறு மயிலாகவும் பிறிதொரு கூறு கோழியாகவும் முருகனுக்கு அமைந்ததில் கோழியினை முருகன் கொடியாகக் கொண்டான் என புராணங்கள் குறிப்பிடுகின்றன. கோழி முருகனுக்கு கொடியாக அமைந்ததனை,

**“ குரல் கேட்ட கோழி குன்றதிரக் கூவ”**[121]

**“ புள்ளணி நீள்கொடிச் செல்வன்”**[122]

**“ தகரன் மஞ்ஞையன், புகரில் சேவலங்**

**கொடியன்…………….”**[123]

**“ வாரனக் கொடியோடு வாயிற் படநிறீஇ”**[124]

**“ மணிநிற மஞ்ஞை ஓங்கிய புட்கொடி”**[125]

**“ கோழி ஓங்கிய வென்றகு விறற்கொடி”**[126]

போன்ற பாடல் வரிகள் சான்று பகர்கின்றன. மேலும் முருகனுக்கு மயிலும் கொடியாக அமைந்துள்ளதை,

**“ பல்லொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய”**[127]

**“ பல்பொறி மஞ்ஞை வெல்கொடி அகல”**[128]

என்னும் வரிகள் சான்று தந்து நிற்கின்றன. முருகனுக்கு மயில் ஊர்தியாக மட்டுமல்லாமல் கொடியாகவும் அமைந்தது என்பதனை,

**" மணிமயிர் உயரிய மாறா வென்றிப்**

**பிணிமுக ஊர்தி ஒண்செய்யோனும்"** [129]

என்னும் புறநானூற்றுப் பாடல் வரிகள் நிறுவுகின்றன.

## முருகன் உறைவிடங்கள்

முருகன் பண்டு தொட்டு திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன் குடி (பழனி), திருவேரகம் (சுவாமிமலை), பழமுதிர்ச்சோலை, குன்றுதோறாடல் ஆகிய ஆறு இடங்களில் கோயில்கள் கொண்டு மக்களுக்கு அருள்பாலிப்பவன் என்பதனை அறியமுடிகின்றது.

சிலப்பதிகாரம் முருகன் உறைவிடமும் கொண்ட இடங்களைக் குறிப்பிடும் பொழுது

**" சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்**

**ஏரகமும் நீங்கா இறைவன் கை வேலன்றே."**[130]

எனக் கூறுகின்றது. நீக்கமற நிறைந்து நிற்கும் முருகன் குன்றுகள் தோறும் நீங்கா இடம் கொண்டிருப்பவன் என்று புலப்படுகின்றது. மேலும்,

**" வரையுறை தெய்வம்"**[131]

எனக் குறிஞ்சிக்கலி குறிப்பிடும் கூற்றிலிருந்து பரங்குன்றத்தில் உறைவிடம் கொண்டவன் முருகன் என அறிய முடிகின்றது. எழும் பல்வேறு ஓசைகளைக் கொண்ட திருப்பரங்குன்றத்திலும் உறைவிடம் கொண்டு அருள்பாளிக்கின்றான். இதனை பரிபாடல்,

**" ஒருதிறம் பாணர் யாழின் தீங்குரல் எழ**

**ஒருதிறம் யாணர் வண்டின் இயிர்இசை ஊத,**

**ஒருதிறம் கண் ஆர் குழலின் கரைபு எழ,**

**ஒருதிறம் பண் ஆர் தும்பி பரந்து இசை வளர,**

**ஒருதிறம் மண் ஆர் முழவின் இசை எழ,**

**ஒருதிறம் அண்ணம் நெடுவரை அருவி நீர் ததும்ப"**[132]

எனக் கூறுகின்றது. மேலும்,

**" சூர் மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்**

**சினமிகு முருகன் தன் பரங்குன்றம்"**[133]

என்னும் பாடல் வரிகளும்,

**" கொடி நுடங்கு மறுகிற் கூடற்குடா அது**

**பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய**

**ஒடியா விழவின் நெடியோன் குன்றம்."**[134]

என்னும் பாடல் வரிகளும் முருகன் உறையும் திருப்பரங்குன்றத்தினை 'தண்பரங்குன்றம்' , 'நெடியோன் குன்றம்' எனக் குறிப்பிடுகின்றன. மேலும் செவ்வேள் உறையும் பரங்குன்றத்து முருகனைக் காண,

**" மண்மிசை…….அவிழ்துழாய் மலர்தரு செல்வத்துப்**

**புன்மிசைக் கொடியோனும் புங்கவம் ஊர்வோனும்**

**மலர்மிசை முதல்வனும் மற்று அவனிடைத் தோன்றி**

**உலக இருள் அகற்றிய பதின்மரும்"**[135]

**" பிறங்கு மலை மீமிசைக் கடவுள்"**[136]

**" ஒன்னா தார்க் கடந்த டுஉம்உரவு நீர்மா கொன்ற**

**வெள்வேலான் குன்றின் மேல் விளையாட்டும் விரும்பார் கொல்"**[137]

திருமால், நான்முகன், தேவகணங்கள் உள்ளிட்ட தேவர்கள் வந்து வணங்கும் தன்மையுடையவனாய் காட்சியளிக்கின்றான்.

## திருப்பரங்குன்றம்

முருகன் கடவுள்களுக்கெல்லாம், வணங்கும் கடவுளாகக் காணப்படுகின்றான். இவன் அறுபடை வீடுகளில் ஒன்றான திருப்பரங்குன்றத்தில் உறைவிடம் கொண்டு பக்தர்களுக்கு அருள் தருகின்றான். திருப்பரங்குன்றம் இன்றுள்ள மதுரைக்குத் தென்மேற்கில் ஏறத்தாழ ஐந்து கல் தொலைவில் உள்ளது என்பர்.

**“ திருவீற் றிருந்த தீது நீர் நியமத்து**

**மாடம் மலி மறுகின் கூடற் குடற்வயின்**

**குன்று அமர்ந்து உறைதலும் உரியன் அதாஅன்று”**[139]

மதுரைக்கும் திருப்பரங்குன்றுக்கும் இடையே வயல்கள் மிகுதி உண்டு. வயலில் உள்ள தாமரை மலரில் தங்கிய வண்டுகள், வைகறை பொழுதில் தேன் உண்டு ஞாயிறு தோன்றியதும் பரங்குன்று சுனைப்பூவில் ஆரவாரிக்கும் வளங்கொண்ட பகுதியாய்த் தோற்றமளிக்கின்றது. இப்படி சுனைநீர் வளம் கொண்ட மலைக்கு உரியவன் முருகன் என்பதால் இவனது திருமுகம் காண திருமால், சிவன், பிரம்மன், இந்திரன் உள்ளிட்ட தேவர் கூட்டம் பரங்குன்றம் வந்து தங்கினர். அதனால் பரங்குன்றம் இமய மலையை ஒத்துக் காணப்படுவதாய் பாடல் பொருள் விளக்கம் தருகின்றது.

## திருச்சீரலைவாய் ( திருச்செந்தூர் )

திருச்செந்தூர் என்று அழைக்கப்படும் இவ்வூர் செந்தி, செந்தில், செந்தூர் என மருஉப் பெயர்களைக் கொண்டு விளங்குகின்றது. இது கடலலைகள் மோதும் கரையோரத்தில் அமைந்துள்ளதால் ‘அலைவாய்’[140] என அழைக்கவும் படுகின்றது, இவ்வுண்மையினை,

**“ திருமணி விளக்கின் அலைவாய்ச்**

**செருமிகு சேஎம்.”**[141]

என்னும் அகநானூற்றுப் பாடல் வரிகளும்,

**“ வெண்டலைப் புணரி மலைக்கும் செந்தில்**

**நெடுவேள் நிலைஇய காமர் வியன்றுறை”**[142]

என்னும் புறநானூற்றுப் பாடல் வரிகளும் வெளிப்படுத்துகின்றன. மேலும் ஆறுமுகம் கொண்ட முருகன் பக்தர்களுக்கு காட்சி கொடுக்கும் போது,

**“ அந்தரப் பல்லியம் கறங்க, திண்காழ்**

**வயிர் எழுந்து இசைப்ப, வால்வளை ஞரல,**

**உரம் தலைக் கொண்ட உரும் இடி முரசமொடு**

**பல் பொறி மஞ்ஞை வெல்கொடி அகவ.**

**விசும்பு ஆறு ஆக விரை செலல் முள்ளி,**

**உலகம் புகழ்ந்த ஓங்கு உயர் விழுச்சீர்**

**அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே, அதாஅன்று”**[143]

தேவதுந்துபி முழங்கவும் கொம்புகள் மிக்க ஒலிப்பும், வெள்ளிய சங்குகள் முழங்கவும், இடியை ஒப்ப முழங்கும் முரசுடன் வெல் கொடியிலிருந்து மயில் அகவும், ஆன்றோர்களால் பலகாலம் புகழப்படும்.

## திருவாவினன் குடி (பழனி)

இன்றைக்கு ‘பழனி’ என வழங்கப்பெறும் முருகனது திருத்தலமே சங்கப் பாடல்களில் திருவாவினன் குடி என அழைக்கப்படுகின்றது. ஆவி என்னும் வேளிர் தலைவனுக்குரிய இவ்வூர், பொதினி முருக்க் கடவுள் உறையும்

உறைவிடமாகவும் திகழ்கின்றது. அசுரர்களை வதம் செய்த முருகன் யாவரும் விரும்பும் வகையில் அன்புப் பெருக்கால் ஆவினன் குடியில் காட்சி அளிக்கின்றான். இதனை,

**“ …………..மழவர் ஓட்டிய**

**முருகன் நற்போர் நெடுவேள் ஆவி**

**அறுகோட்டு யானைப் பொதினி”**[144]

என்னும் வரிகள் நிறுவுகின்றன. முருகன் உறைகின்ற இப்பொதினியே பிற்காலத்தில் பழனி என மாறி வழங்கி வருகிறது என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.[145] மேலும் பொதினி மலை ஆவிக்குரியது என்பதனை,

**“ முழவுறழ் திணிதோள் நெடுவேள் ஆவி**

**பொன்னுடை நெடுநகர்ப் பொதினி”**[146]

என்னும் வரிகள் புலப்படுத்துகின்றன.

**“சங்க காலத்தில் பழனிமலை ஆவியின் குடியினர் ஆண்டு வந்தனர். அவருள் வையாவிக் கோப்பெரும் பேகன் என்பவன் மயிலுக்குப் போர்வை தந்த வள்ளல் இத்தகைய ஆவி குடியினர் வாழ்ந்த ஊர், ஆவிகுடி.”**[147] எனப்பட்டது.

பரங்குன்று என்பது நண்பரங்குன்று என்று தான் இலக்கியங்களில் குறிப்பிடப்படுகிறது. ‘திரு’ என்றும் அடைமொழி சேர்த்துத் திருப்பரங்குன்றம் எனக் கூறப்பெறவில்லை. இதனைப் போன்றே ‘செந்தில்’ ‘ அலைவாய்’ என்று தான் காணப்படுகின்றது. ‘திரு’ என்னும் அடைமொழி சேர்த்து திருச்செந்தூர், திருச்சீரலைவாய் என்று கூறப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். இதனைப் போன்றே ஆவினன் குடி என்று தான் கூறப்பெறுகிறது. ‘திரு’ என்னும் அடைமொழி சேர்ந்து திரு ஆவினன் குடி என்று கூறப்பெறவில்லை.

எனவே இறைவனான முருகன் உறைகின்ற இடம் என்பதால் திரு என்கின்ற அடையினைப் பெற்று விளங்குகின்றது.

இங்கு பலதிறத்து முனிவர்களும், கந்தர்வர்களும், கருடக் கொடியோனும் மழுவாள் நெடியோனும், ஆயிரங்கண்ணோனும், முப்பத்து மூன்று தேவர்களும். பதினெண்கணத்தவரும், வந்து காணும் படியாக முருகன் வீற்றிருக்கின்றான்.[148] என முருகாற்றுப்படை கூறுகின்றது.

## திருவேகரம் (சுவாமிமலை)

ஏரகம் - திருவேரகம் என்பதாகும். இது முருகனது உறைவிடத்தைக் குறிக்கும். இதனை 'மலை நாட்டகத்தொரு திருப்பதி' என்று நச்சினார்க்கினியர் கூறுவர். சிலப்பதிகார அரும்பத உரையாசிரியர் வெண்குன்றத்தைக் குறிப்பிடும் பொழுது 'சுவாமி மலை' எனலாம். 'ஏரகம்' மற்றொரு திருப்பதி என்று கருதினாராதல் வேண்டும். அருணகிரியார் சோழ நாட்டில் உள்ள " சுவாமி மலை" என்னும் தலமே ஏரகம் "[149] என்று கொண்டனர் என்று கூறுவார்.

ஏரகம் என்றால் அழகிய அகம் என்று பொருள்படும். ஏரகம் என்பது கோரைப்புல் என்னும் பொருளையும் உணர்த்தும் மிகுதியான கோரைப் புற்களைக் கொண்டமையால் திரு என்னும் அடையைப் பெற்றிருக்க வாய்ப்புள்ளது. இப்படிப்பட்ட திருவேரகத்தில் முருகன்,

**" இருமூன்று எய்திய இயல்பினின் வழாஅது**

**இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி,**

**அறு நான்கு இரட்டி இளமைநல யாண்டு**

**ஆறினில் கழிப்பிய அறன் நவில் கொள்கை**

**மூன்று வகைக் குறித்த முததீச் செல்வத்து**

**இரு பிறப்பாளர்,பொழுது அறிந்து நுவல"**[150]

ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றம் என்னும் அறுதொழிலின் வழுவாத வரும், நற்குடிப் பிறந்தவரும் நாற்பத்தெட்டாண்டு வரை பிரமச்சரிய விரதம் காத்தவரும், அறம் கூறும் கோட்பாட்டினையும் முத்தீச் செல்வத்தையும் உடையவருமாகிய அந்தணர் முருகப்பெருமானை வழிபடும் காலமறிந்து மந்திரங்களைக் கூற நீராடுங்கால் தோய்க்கப்பட்ட ஆடை உடம்பிலே கிடந்து காயும்படி உடுத்து முருகனை தலைமேற்குவித்த கையினராய்த் துதித்து ஆறெழுத்து மந்திரத்தை நாவில் உச்சரித்து மலர்களை எடுத்து அர்ச்சனை புரிவர்.

## குன்று தோறாடல்

குன்றிருக்கும் இடம் எல்லாம் குமரன் இருக்கும் இடங்களாகும். திருமுருகாற்றுப் படையிலோ ஏனைய சங்கப் பனுவல்களிலோ இவ்விடம் பற்றிய குறிப்புகள் காணப்படவில்லை என்றாலும் ‘ சேயோன் மேய மைவரை யுலகமும்’ என்னும் தொல்காப்பியக் கூற்றுப்படி குறிஞ்சிக்குரிய கடவுள் முருகன் என அறிய முடிகின்றது. குன்றுதோறாடலை கொண்ட முருகனை,

**“ மன்ற வேங்கை மலர்சில் கொண்டு**

**மலையுறை கடவுள் குலமுதல் வழுத்தித்**

**தேம்பிலிச் செய்த ஈர்நறுங் கையன்”**[151]

**“ கொடிச்சியர் கூப்பி வரை தொழு கைபோல”**[152]

**“ குன்றமர்ந்து உறைதலும் உரியன்…..”**[153]

**“ குறிஞ்சிக்கிழவ ……………”** [154]

என்று பாடல்வரிகள் குறிக்கின்றன.

கையில் வேள் ஏந்தி சிவந்த உடையுடுத்தி குளிர் பொருந்திய தன்மையுடன் முருகன் காணப்படுகின்றான். இவன் மலைதோரும் சென்று விளையாடுவதை,

**“ செய்யன், சிவந்த ஆடையன், செல்வரைச்**

**சேயலைத் தண் துளிர் துயல்வரும் காதினன்**

**குன்று தொறு ஆடலும் நின்றதன் பண்பே.”**[155]

என்னும் திருமுருகாற்றுப்படை பாடல்வரிகள் குறிப்பிடுகின்றன.

## பழமுதிர்ச்சோலை (பழனி)

தற்காலத்தில் திருப்பதியாக விளங்கும் திருமாலிருஞ் சோலையே பழமுதிர்ச்சோலை என அழைக்கப்படுகின்றது. மதுரையை அடுத்துள்ள அழகர் மலை அடிவாரத்தில் அழகர் கோயில் இருக்கின்றது. ‘அழகர்மலை’ ‘திருமால் இருஞ்சோலை’ மலை என்றும் ‘பழமுதிர்ச்சோலை மலை’ என்றும் அழைக்கப்படுகின்றது.

தற்போது உள்ள அழகர் கோயில் முன்பு முருகன் கோவிலாய் இருந்தது என்றும் அழகர் கோவிலுக்கு எதிரில் முருகன் கோவில் இருந்து அழிந்து விட்டது என்றும் கூறப்படுகின்றன.[156] என அறிஞர் கூறுவர். மேலும் இப்பழமுதிர்ச்சோலை திருமால் கோவில் இருந்த குன்றாதலில் இருங்குன்றம் எனப்பட்டது. அதன் மீது திருமால் கோவில் உண்டான பிறகு மால் திருப்பரங்குன்றம் எனப்பட்டது. அதன் மீது சோலைகள் மிக்கிருந்த காரணத்தால் மாலிருஞ் சோலை மலை என்னும் பெயர் பெற்றது. இதுகாறும் கூறப்பட்டச் சான்றுகள் மதுரைக்கு ஒருபால் முருகனுக்குரிய பரங்குன்றமும் மற்றொரு பால் திருமாலுக்குரிய இருங்குன்றமும் இருந்தமையையே வற்புறுத்துகின்றன என்று கூறும் கூற்று ஏற்புடையதாக உள்ளது. மேற்குறிப்பிட்ட அறுபடை வீடுகள் மட்டுமல்லாது முருகன் தங்கி இருக்கும் இடங்களாக,

**“ காடும் காவும் கவின்பெறு துருத்தியும்**

**யாறும் குளனும் வேறு பல் வைப்பும்**

**சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்**

**மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்”**[158]

என அறிய முடிகின்றது.

## வேலனின் பெருமைக் கூறுகள்

அறுபடை வீடு கொண்ட முருகனுக்குப் பல நிற பெயர்கள் காணப்பட்டாலும் ‘வேலன்’ என்பதே பெருமைக்குரியதாகக் கருதப்படுகின்றது. ‘வேள்’ என்னும் சொல்லுக்கு விழைதல் என்பது பொருளாகும். தொல்காப்பியரால் விளித்த “சேயோன்” எனும் பெயரும் பரிபாடலில் ‘சேய்’ என விளக்கப்படுகிறது.[159]

தொடக்க காலத்தில் முருக வழிபாட்டில் அவனது அடையாளமான வேல் வைத்தே மக்கள் வணங்கி உள்ளனர். வேட்டையாடும் சமூகத்தின் அடையாளமான இவ்வேலைத்தாங்கி வெறியாட்டுக் காலத்தில் ஆடுபவனும் வேலன் என்றே அழைக்கப்படுகிறான். இதனை,

**“ ஆறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்”**[160]

என்னும் சிலப்பதிகார வரியால் அறியலாம்.

அகத்தியருக்குத் தமிழ் மொழியினை அறிவுறுத்தியவன் முருகன். மேலும் சிவனுக்கு ‘பிரணவப் பொருளைத் தமிழில் உபதேசம் செய்து சாமிநாதனாக விளங்கியவன். இவையன்றி சங்க காலச் சங்கத் தலைமைப் புலவனாகவும் தமிழ்க் கடவுள் என அழைக்கப்படுகிறான். இதனை தெளிவுறுத்தும் விதமாக அருணகிரியார்,

**“ கொன்றைச் சடையாருக்கு ஒன்றைத் தெரியக்**

**கொஞ்சித் தமிழாற் பகர்வோனே.”[161]**

என திருப்புகழ் வழி புலப்படுத்துகின்றார். இவ்வாறாகக் குறிஞ்சி நிலக்கடவுளாகவும் தமிழ்க் கடவுளாகவும் இருக்கின்ற முருகன் தமிழர்களின் தொன்மை வழி பாராட்டுக்குரியவனாக விளங்குகிறான்.

## இந்திரன்

தேவர் உலகில் அரசன் இந்திரன். இவனது நகரம் அமராவதி என்னும் பொன்னகர். இவனது உலகில் மந்தாரம், சந்தானம், தேவதாரம், கற்பகம், பாரிசாதம் என்னும் ஐவகை மரங்கள் உள்ளன. காமதேனு என்னும் பசுவும் இவ்விந்திர உலகில் உண்டு. இந்திரன் பற்றிய குறிப்பினைத் தொல்காப்பியம்,

**“ வேந்தன் மேய தீம்புனல் உலகமும்”[162]**

எனக் குறிப்பிடுகின்றது. தீம்புனல் உலகின் (மருதநிலம்) தலைவனான இந்திரனுக்கு வேந்தன் என்றும் அரசன் என்றும் பெயர் உண்டு. நிலையான மன்னர் ஆட்சி நிறுவப்பட்ட நிலம் மருதம். சிறந்த அரசாட்சி முறைக்கு வேந்தர் தேவைப்பட்டார். எனவே வேந்தன் இறைவனாகக் கருதப்பட்டான்.

## தேவர் தலைவன்

இந்திரனுக்கு அசுரவயிரி, விருத்திராரி, வலன் அரி, ஆகண்டலன், காமன், கோசிகன், கோபதி, கோமன், கௌசிகன், சுநாசி, சுனாசீரன், தருமன்,. பாகசாதனன், புரந்தன், புருகூதன், போகி, மகவாணன், வாசவன், அமரர்கோன், அயிராணி, கேள்வன், ஆயிரங்கண்ணன், இமையவர் வேந்தன், சதக்கிருது, புரந்தன் புனிதன், பொன்னகர்க்கினவன், பகவான், மருத்துவன் மால், முதிலூர்தி, வச்சரபாணி, வலாரி, வாசவன் விண் முழுதாளி, வெள்ளை வாரணன், வேள்வி நாயகன் என்கின்ற பெயர்கள் உண்டு.

அசுரரை வென்றமையால் அசுரவயிரி என்கின்ற பெயரினையும், விருத்திராசுரன் என்கிற பெயர்களைப் பெறுகிறான். வலன் என்கின்ற அரக்கர்களைக் கொன்றமையால் விரித்திராரி விலாரி என்கின்ற பெயர்களையும் யாகங்களில் மிகுதியாக அழைக்கப்படுவதால் புருகூதன் என்கிற பெயரினையும் இன்பம் நுகர்பவன் என்பதால் போகி என்ற பெயரினையும் வசுக்களின் தலைவன் என்பதால் வாசவன் என்கின்ற பெயரினையும் காரணத்தின் அடிப்படையில் பெற்றிருக்கிறான்.

**“ அமரா பதிகாத்து அமரனின் பெற்றுத்**

**தமரில் தந்து நகை சால் பிறப்பு”**[163]

**“ தேவர் கோமான் காவன் மாநகர்”**[163]

என வரும் பாடல் வரிகள் இந்திரனின் அமராவதி நகரினையும் அந்நகர்க்குத் தலைவன் என்பதனையும் கூறுகின்றன. மேலும்,

**“ அமரர் கோன்”**[165]

**“ தேவர் கோமான்”**[166]

**“ விண்ணவர் கோமான்”**[167]

**“ அமரர் தலைவனை வணங்குதும் யாம்”**[168]

என்னும் வரிகளும் அமரர் தலைவன் இந்திரன் என நிறுவுகின்றன.

**“ வச்சிரத் தடக்கை நெடியோன் கோயினுள்”** [169]

என்னும் புறநானூற்றுப் பாடல் வரி இந்திரனுக்குக் கோயில் இருந்ததைக் குறிப்பிடுகின்றது. வேதகாலக் கடவுளாகவும் காணப்படும் இந்திரன் தமிழ் வழிபாட்டில் நிலவியலுக்குரியவனாகக் காணப்படுதல் நோக்கத்தக்கதாகும்.

## ஆயிரங்கண்ணன்

இந்திரன் தன் ஐம்புலன் ஆசைக்கு அடிமையானான். அகலிகையைக் கூடிவிட கௌதமரின் சாபத்திற்கு ஆளாகியவன். இந்தப் புராண நிகழ்ச்சி திருப்பரங் குன்றத்தில் ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளதை காணும் மக்கள்,

> " **இந்திரன் பூரை இவன் அகலிகை இவண்**
>
> **சென்ற கவுதமன் சினன் உறக்கல் உரு**
>
> **ஒன்றிய படிஇது என்று**"[170]

எனக் கூறி உரையாடுவதைக் காண முடிகின்றது. மேலும்,

> " **வச்சி ரத்தோன் ஆயிரங் கண்ணேய்க்கும்** "[171]
>
> " **ஐயிரு நூற்று மெய்ந் நயனத்தவன்**"[172]
>
> " **ஆயிரம் கண்ணோன்**"[173]
>
> " **காமங் கள்ளாட்கு இடைமயக் குற்றன**
>
> **தேவர்க்கு ஆயினுஞ் சிலவோ செப்பின்**
>
> **மாதவன் மடந்தைக்கு வருந்துயர் எய்தி**
>
> **ஆயிரம் செங்கண் அமரர் கோன் பெற்றது.**"[174]

ஆகிய பாடல்வரிகள் புராணச் செய்திகளுக்கு வலுச்சேர்க்கின்றன.

இந்திரன் கொண்டிருக்கும் பதவியினை அடைவது மிக கடினமான செயல் ஆகும். பதவியினைப் பெற விரும்புவர் நூறு அசுவமேத யாகங்களைச் செய்து முடித்திருக்க வேண்டும். ஒரு குதிரையை திசைகள் தோறும் அனுப்பி திசைதோறும் உள்ள அரசர்கள் வென்ற பின்பே அசுவமேத யாகம் செய்தல் வேண்டும். இவ்வகையில் இந்திரன் நூறு யாகங்கள் செய்தான். அதனால்

சதமகன் என்கின்ற பெயரினையும் கொண்டான். இவன் செய்த யாகச் செயலை,

**“ நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டத்து நூறு பல்**

**வேள்வி முற்றிய வென்று அடு கொற்றத்து**

**ஈர் இரண்டு ஏந்திய மருப்பின் எழில் நுடைத்**

**தாழ் பெருந் தடக்கை.........”**[175]

என அடிகள் உணர்த்துகின்றன.

## இந்திரன் வாகனம்

இந்திரனுடைய வாகனம் நான்கு தந்தங்களைக் கொண்ட வெள்ளை யானையாகும். இதனை ஐராவதம் என்றும் கூறுவர்.

**“ ஈரிண்டு ஏந்திய மருப்பின் எழில் நடைத்**

**தாழ்பெருந் தடக்கை உயர்ந்த யானை**

**எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்”**[176]

என்னும் திருமுருகாற்றுப் படை வரிகள் ஐராவத இயல்பினையும் அது இந்திரனுக்கு உரிமை உடையதையும் இயம்புகின்றன. புராணங்களிலும், இலக்கியங்களிலும் இது குறித்த செய்திகள் பரவலாகக் காணப்படுகின்றன.

இதனை,

**“ பெருமால் களிற்றுப் பெயர்வோன்”**[177]

**“ வால் வெண் களிற்றரசு”**[178]

என எடுத்தியம்புவதைக் காணலாம்.

## கொடி

இந்திரனது ஊர்தியாய் ஐராவதம் மட்டுமின்றி மேகமும் விளங்குகிறது. இவனுக்கு உரிய கொடி இடியாகும். ஐராவத யானையும் கொடியாக அமையும். இவனது குதிரை உச்சயிற்சிரவம் எனப்படுகிறது. இந்திர விழா நிகழ்வின் போது ஐராவதம் எழுதிய கொடியினை ஏற்றுவர். ஐராவதம் ஊர்தியாகவும், கொடியாகவும் திகழ்கிறது. இவ்வுண்மையினை,

**“ தங்கிய கொள்கைத் தருநிலைக் கோட்டத்து**

**மங்கல நெடுங்கொடி வானுற எடுத்து”**[179]

என வரும் வரிகளால் அறியலாம்.

## இந்திரன் தோற்றம்

வானுலக அதிபதியான இந்திரன் வச்சிராயுதத்தைக் கையில் ஏந்தியவன். நெடியோன் என்ற பெயரினையும் கொண்டவன்.[180] தேவமைந்தரும் மகளிரும் புடைசூழ ஆகாய கங்கைகளில் நீராடி இன்பமாகப் பொழுது போக்குபவன் இந்திரன் திருமாலைப் போலக் கருநிறம் கொண்டவன்.[181] குணதிசைக் காவலனாக விளங்குபவன். இந்திரனன்றி பிறர் யாரும் அணிய இயலாத பூணாரம் அணிந்தவன் என்பதனை,

**“ தந்திர கரணம் என்னுவி ராயின்**

**இந்திரன் மார்பத்து ஆரமும் எய்துவர்”**[182]

என வரும் சிலப்பதிகார வரிகள் உணர்த்துகின்றது.

## இந்திர வில்

இது பல வண்ணடங்களைக் கொண்டது. இதனை ‘குறைவில்’[183] என பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது. இவ்வில்லிற்கு நாண் இல்லாமையால் இப்பெயர் பெற்றது எனலாம்.

**“யஜீர் வேத தாருண முதற் பிரசினத்துள்ள ஐந்தாம் பகுதியில் இந்திரவில உண்டான வரலாறு கூறியவிடத்தில் அது முதலில் உருத்திரன் வில் என்றும் உருத்திரன் அக்கினியும் அவ்வில்லை வளைத்துத் தரையில் ஊன்றி நின்று இந்திரனும் பலமானும் (வாயுவும்) தன்னை எதிர்க்க வல்லார் இல்லை என்று வஞ்சினம் கூறியதாகக் கேட்டு, இந்திரன் பொறுக்காது கரையான் ஆகி அவ்வில்லை அறுத்தான். அது கிளம்பி தலையோடு வானில் போய் நின்றது என்று பின்பு தேபரவர்க்கியம் என்னும் வேள்வியை இயற்றி இந்திரனைத் தலைமை உடையவன் ஆக்கினான் என்றும் கூறப்பட்டுள்ளது.”**[184]

என புலவர் அ. மாணிக்கனார் விளக்கம் தருகின்றார். இந்திர வில்லினைப் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில்,

**“ சிலைத்தார் முரசங் கறங்க”**[185]

**“ தேர் செல்வு அழுங்கத் திருவில் கோலி**

**ஆர்கலி எழிலி சோர் தொடங்கின்றே”**[186]

**“ வரை சேர்புவில் கிடந்தன்ன “** [187]

**“ உரைகால் மாறிய ஓங்குயர் நனந்தலை**

**அகலிரு வானத்துக் குறைவில ஏய்ப்ப”**[188]

எனக் காணப்படுகின்றன. மேற்கு திசைக்கு வருணன் வடதிசைக் காவலனாக குபேரன் தென் திசைக் காவலனாக யமன் இருப்பது போல் இந்திரன் கிழக்குத் திசைக்கு காவலன் ஆவான். தென் கிழக்குத் திசைக்கு அக்னி காவலன் ஆகவும், தெற்கு திசைக்கு எமன் காவலனாகவும், வடமேற்குத்

திசைக்கு வாயு காவலனாகவும் வடகிழக்குத் திசைக்கு ஈசானன் காவலனாகவும் இருப்பதைக் காண முடிகின்றது.

## இந்திர விகாரம்

இந்திரனால் நிறுவப் பெற்ற அரங்கு இந்திர விகாரம் எனப்படும். இந்திரனால் நிறுவப்பட்ட இவ்வரங்குகள் பூம்புகாரில் ஏழு இருந்தன. இதில் முந்நூறு சாரணர் இருந்து பௌத்த ஆகத்தின் பொருளை வழங்கினர் என்பதை சிலம்பு, மேகலை ஆகிய மருவிய கால இலக்கியங்கள் கூறுகின்றன. இதனை,

**“ இந்திர விகாரம் ஏழுடன் புக்கு அங்கு**

**அந்த சாரிகள் ஆறைம் பதின்மர்”** [189]

**“ பணையைத் தோங்கிய பாசிலைப்போதி**

**அணிதிகழ் நீழல் அறவோன் திருமொழி**

**அந்தர சாரிகள் அறைந்தனர் சாற்றும்**

**இந்திர விகாரம் என எழில் பெற்று”** [191]

எனும் பாடல் வரிகள் சான்றுதந்து நிறுவுகின்றன.

## வருணன்

கடலும் கடல் சார்ந்த நிலமும் நெய்தல் எனப்பட்டது. அந்நிலத்தில் வாழ்ந்தவர்கள் வருணன் என்னும் தெய்வத்தை வழிப்பட்டனர். இதனை,

**“ வருணன் மேய பெருமணல் உலகமும்”** [192]

என்னும் தொல்காப்பிய நூற்பாவால் அறிய இயலுகிறது. பாவாணர் வருணனை **“ வாரணன்”** [193] என்று கூறுகிறார்.

“கடற்கரையில் வாழ்ந்தவர்களின் வாழ்வு நீரில் நிலைத்திருந்தது அவர்கள் நீர்க்கடவுளை வழிப்பட்டனர். அதுவே நாராதயணன் நாரா + அயனன் = நாராயணன்.

நாரா = நீர் கடலில் நீண்ட பரப்பைக் குறிக்க நெடியோன் என்றனர். வருணன் என்பதன் பொருளும் நெடியோன் என்பதாகும். வார் நெடுமையைக் குறிக்கும். நீளமான தோர் பொருள் வார் எனப்படுகின்றது. பண்டைத் திராவிடர் பண்பாட்டு மண்டலங்களில் கிடைத்த தொல்பொருள் சான்றுகளின்படி வருணன் திராவிடர்களின் வழிபாட்டினையும் நீர்த் தொடர்பானவருமாகும். பின்னர் வைதீக சமயத்தில் இணைத்துள்ளனர். பிற்காலத்தில் நாராயணன் வழிபாடு திருமால் வழிபாட்டின் துணை வழிபாடாக விளங்கியது. இது வைதீக சமயத்தால் வெறுக்கப்பட்டதாகும். இருக்கு வேதத்தில் வருணன் ( வருணன்- நெடியோன்) அசுரனாக காட்டப்பட்டு இருப்பதால் வருணன் ( வாரணன் ) திராவிடர்களின் கடல் தெய்வம் என்பது தெளிவு.” [194] என்கின்றார்.

ஆரிய வேதத்தில் குறிப்பிடப்படும் வர்ணனுக்கும் இலக்கியங்களில் காணப்படும் வருணனுக்கும் வேறுபாடுகள் மிகையாகக் காணப்படுகின்றன. வேதத்தில் காணப்படும் வருணன் வானத்து இறைவனாகக் காணப்படுகிறான். தமிழர் வணங்கிய வருணன் கடல் தெய்வமாக காணப்படுகின்றான்.

சங்க கால மக்கள் தாம் வணங்கிய கடவுள்க்கு உருவம் அமைக்காமல் அத்தெய்வங்களின் அடையாளச் சின்னங்களைக் கொண்டே வணங்கி உள்ளனர். இவ்வகையில் வருணன் வணக்கத்திற்குச் சுறாமீன் கொம்பை நட்டு வணங்கியும் உள்ளனர்.

**“ சினைச் சுறாவின் கோடு நட்டு**

**முனைச் சேர்த்திய வல்லணங்கினன்”**[195]

எனப் பட்டினப்பாலை கூறுகின்றது.

பலயாக சாலைகளை நிறுவிய முதுகுடுமிப் பெருவழுதியின் முன்னோனான பாண்டிய மன்னன் ப:.றுளி ஆறு கடலில் மூழுகும் காலத்திற்கு முன்பு

வாழ்ந்தவன். இவன் முந்நீர்விழா ( கடல்விழா ) செய்து கடல் தெய்வமான வருணனை வணங்கியுள்ளான். இதனை,

**" எங்கோ வாழிய குடுமி தங்கோச்**

**செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க்குத்**

**முந்நீர் விழவின் நெடியோன்**

**நன்னீர்ப் ப.்.றுளி மணலினும் பலவே."**[196]

என்ற புறப்பாடல் நிறுவுகின்றது. எனவே தொல்காப்பியத்தில் குறிப்பிடப்படும் வருணன் தமிழர்க்குரிய கடவுளே என்பது புலப்படுகின்றது. மழைபெய்ய வருணனுக்கு மக்கள் வழிபாடு செய்ததினை,

**"அணங்கொடு நின்றது மலை, வான் கொள்க எனக்**

**கடவுள் ஓங்கு வரை பேண்மார், வேட்டு எழுத்து**

**கிளையொடு மகிழும் குன்றாடல்."**[197]

வருணன் மழைக்கு அதிபதியாய் உள்ளான். என்பதை இப்பாடல் வழி அறிய முடிகின்றது.

## கொற்றவை

திராவிட இனத்தில் முதலில் தோன்றிய தாய் வழிபாடு கொற்றவை வழிபாடு ஆகும். செழிப்பிற்கும், வனத்திற்கும், வீரத்திற்கும் காரணமான தெய்வமாக கொற்றவை திகழ்கின்றாள். கொற்றவைக்குத் துர்க்கை என்ற பெயரும் உண்டு. துர்க்கை என்ற பெயருக்கு ஆபத்துக்களை நீக்குபவள் என்று பொருள். மேலும் ஆறலைக் கள்வர்களுக்குக் கொற்றம் தருபவள். வெற்றி தருபவள் என்கின்ற பெயர்களும் அவளுக்கு உண்டு.

**" மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த**

**கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே"** [198]

என்ற நூற்பா கொற்றவை வெற்றி தருபவளாக உள்ளதைப் புலப்படுத்துகின்றது. இளம்பூரணர்,

**"குறிஞ்சித்திணைக்கு முருகவேளே அன்றிக் கொற்றவையும் தெய்வம் என்பது பெற்றாம்."**[199]

எனக் குறிப்பிடுகின்றார். இக்கொற்றவை நிலைக்கு எடுத்துக் காட்டை தர முயலும் இளம்பூரணர்,

**"ஆளி மணிக் கொடிப் பைங்கிளிப் பால்கலைக்**

**ஆரண் முருங்க ஆகோன் கருதின் அடையார்**

**முரண் முருங்கத் தான் முந்நூறும்"**[200]

எனக் குறிப்பிடுகின்றார்.

**" காடமர் செல்வி"**[201]"

**" பழையோள் "**[202]

**" காடுகெழு செல்வி"**[203]

**" சூலி"**[204]

பாய்கலப்பாவை எனவும் இக்கொற்றவை காணப்படுகிறாள். பழந்தமிழரால் வணங்கப்பட்டக் கொற்றவை அயிரை மலையில் இருந்ததாகப் பதிற்றுப்பத்து கூறியுள்ளது. இந்தக் கொற்றவைச் சேரர்க்குரிய குலதெய்வமாகப் போற்றப்பட்டுள்ளது. இதனை,

**“ நிறம் படு குருதி புறம் படினல்லது**

**முடை யெதிர் கொள்ளா வஞ்சுவடு மரபிற்**

**கடவுளயிரை நிலை இக்”**[205]

எனக் காண முடிகின்றது.

**“சங்க இலக்கியத்தில் கொற்றவை பற்றிய பாடல்கள் பாலை நிலத் தொடர்புடையனவாக இருக்கின்றன. கடற்கரை வரையுள்ள பிறவிடங்களிலும் கொற்றவை வழிபாட்டிருந்தது என்பதற்கு ஆதாரம் உள்ளது. கடற்கரையில் கொற்றவையைக் கடல்கெழு செல்வி என்று வழிபட்டனர்.”**[206]

நானிலத் தெய்வங்கள் பெற்ற நிலையான இடத்தினை கொற்றவை ஒரு நிலத்துக்கு மட்டும் உரியவனாக இடம் பெறவில்லை. நான்கு நிலத்துக்கும் காணப்படுகின்றாள். பாலை நிலம் நிலையானது இல்லை என்பதாலும் முல்லையும், குறிஞ்சியும் வெம்மை காலத்தில் கொள்ளும் சிறிது மாற்றமே, பாலை என்பதாலும் நானிலங்களிலும் இருந்ததை தொல்காப்பியர் வழி அறிய முடிகின்றது. இதனை,

**“ முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து**

**நல்லியல் இழந்து நடுந்துயர் உறுத்துப்**

**பாலை என்பதோர் படிவம் கொள்ளும்.”**[207]

என்னும் வரிகள் இதனை நிறுவுகின்றன. சங்கப் பாடல்களில் முருகன் காடுகிழான் (கொற்றவை) மகளாகவே காணப்படுகின்றாள். முருகன் சேய் என அழைக்கப்படுதல் செம்மை என்பதனை நிறம் என்று கொள்வதைப் போல், மகன் என்ற முறை பெயரும் பொருத்தமாக அமைகின்றது.

**“ காடு கெழு நெடுவேள்”**[208]

**“ அழைக்கப்படும் முருகன் கொற்றவையின் சேய்”**[209]

என்பன சான்றுகளாக அமைகின்றன.

## கொற்றவைக்கு வழங்கப்படும் பெயர்கள்

பாலை நிலக்கிழத்தியான இவளுக்குத் துர்க்கை, அந்தரி, அம்பணத்தி, அயிராணி, ஆரியை, ஐயை, ஓவப்பணி, லத்தி, கவுரி, காத்தியாயனி, கார்த்திகை, சண்டிகை, நாரணி, விமலை, சூலி, குமரி, நீலி, என்கின்ற பெயர்கள் வழங்கப்படுகின்றன. கொற்றவைக்கு வழங்கப்படும் பெயர்களை,

**" அமரி, குமரி கவுரி சமரி**

**சூலி நீலி மாவைற்கு இளங்கிளை**

**ஐயை செய்யவன் வெய்யவள் தடக்கைப்**

**பாய்கலைப் பாலை பெருந்தொடிப் பாவை**

**ஆய்கலைப் பாலை அருங்கலிப் பாலை**

**ஆடியல் கொள்கை அந்தரி கோலம்"**[210]

எனச் சிலப்பதிகாரம் பட்டியலிட்டுக் கூறுகின்றது.

காட்டில் உறைபவள்; காடுகள். ஏழு கன்னியர்கள் (சப்த மாதர்கள்) சிவசக்தியின் தங்கைகளாய் பேதங்களாய் அமைந்தவர்கள் பிராமணி, நாராயணி, மகேஸ்வரி, கவுமாரி, வராகி, இந்திராணி, உருத்திராணி என்னும் இந்த ஏழு பேரில் உருத்திரனின் அழிப்பாற்றலைப் பெற்ற உருத்திராணியே காளியாகக் காணப்படுகிறாள். எழுவரோடு யோகேஸ்வரியும் சேர்ந்து எட்டு கன்னியர் என்பாரும் உளர். பெரும்பாலான ஊர்களில் வட எல்லையில் காளிக்கு கோயில் அமைகின்றது.

**"கொற்றவை, காளி எனப் பெருஞ்சக்தியின் ஒருவகை வடிவமே வன துர்க்கையாகும்."**[211] என்னும் அறிஞர் கூற்று இருப்பினும் காளியும், கொற்றவையும் ஒன்றானவர் அல்லர். இவ்விருவரும் வேறானவர் என்பதை கீழ்காணும் சிலப்பதிகார வரிகள் விளக்குகின்றன.

**" அடர்த்தெழு குருதி அடங்காப் பசுந்துணிப்**

**பிடர்த்தலை பீட மேறிய மடக்கொடி**

**வெற்றிவேற் றடக்கை கொற்றவை யல்லல்**

**அறுவர்க்கிளை நங்கை இறைவனை**

**ஆடல் கொண்டருளிய அணங்கு சுருடைக்**

**குாகை முகந்த காளி தாருகன்**

**பேருரங் கிழிந்த பெண்ணு மல்லள்"**[212]

தலைவிரி கோலமாய் ஒற்றை சிலம்புடன் அரண்மனை வாயில் வந்து நிற்கும் கண்ணகியை மன்னனுக்கு அறிவிக்கும் காவலன் முதலில் கொற்றவை அல்லள் எனக் கூறுகின்றான். மேலும் காளியும் அல்லள் எனக் கூறுவதால் கொற்றவையும் காளியும் வேறுபாடு ஆனவர் என்பதை அறிய முடிகின்றது.

## கொற்றவை திருக்கோலம்

கார்காலத்தில் தை நீராடல் ஆடிய கன்னிப் பெண்கள் பலவகையான மலர்களை காதில் சூடி மகிழ்ந்திருந்தனர். அவர்களில் ஒருத்தி கொற்றவை போலத் தோன்ற வேண்டும் என்பதற்காக ஒப்பனைச் செய்து கொண்டாள் என்பதனை,

**" குவளைக் குழைக் காதின் கோலச் செவியின்**

**இவள் செரீஇ நான்கு விழிபடைத்தாள் என்று**

**நெற்றி விழியா நிறை திலகம் இட்டாளே**

**கொற்றவை கோலம் கொண்டு."**[213]

என்னும் பரிபாடல் வழி காணலாம். சிலப்பதிகாரத்தில் வரும் வேட்டுவ வரியில் துர்க்கையானவள் எருமைத் தலையின் மீதும், காளையின் மீதும், சிங்கத்தின் மீதும் காட்சி தருபவளாகத் தோன்றுகின்றாள். வானோர்கள் வணங்கவும் வரிவாள் ஏந்தி நிற்கின்றனா். கங்கை முடி கொண்டானின் ஒரு பாகத்தைக் கொண்டு தோன்றும் இவளை,

**“ ஆனைத்தோல் போர்த்தப் புலியினுரியுடுத்திக்**

**கானத் தெருமை கருந்தலை மேல் நின்றாயால்**

**வானோர் வணங்க மறைமேல் மறையாகி**

**மங்கை உருவாய் மறையேத்தவே நிற்பாய்.”**[214]

என்னும் இப்பாடல் வரிகள் மூலம் கொற்றவையின் தோற்றத்தை அறியலாம்.

சிவபெருமானுக்குரிய தோற்றம் இவளுக்கும் கூறப்படுகின்றது. திருமாலைப் போன்ற நீண்ட உருவம் கொண்டு சங்கு சக்கரத்தையும் ஏந்தி நிற்கின்றாள். நீண்ட வாளினையும் ஏந்தி நிற்கின்றாள். காளி போன்று சிங்க வாகனத்தையும் கொண்டு இருக்கின்றாள். காளி போன்றே கடுமையான நிறத்தினைக் கொண்டவள். வடதிசை நோக்கி நின்ற வண்ணம் காட்சி தருகின்றாள்.

கொற்றவை உறையும் இடங்களாக அயிரை மலை, விந்தமலை என இரண்டினையும் காண முடிகின்றது. அயிரை என்பது கொற்றவை உறையும் ஒரு மலையாகும்.

**“ நிறம்படு குருதி புறம்படின் அல்லது**

**கேடு இலவாக பெரும! நின் புகழே”**[215]

என்னும் வரிகள் எடுத்தியம்புகின்றன. மேலும் விந்தாடவி என்னும் காட்டில் உயர்ந்து நிற்கும் மலையில் வாழும் துர்க்கையாகவும் கொற்றவை காணப்படுகின்றாள். மேலும்,

**“கடவுட் பெயரிய காள மொடுகல் உயர்ந்து”** [216]

என வரும் பாடல் வரிகள் காணப்படும் ‘கடவுள்’ என்னும் சொல் மலையில் உறையும் கொற்றவையினைக் குறித்தே நிற்கின்றது. பண்டைய பெரு மக்கள் பாலை நிலத்திற்குரிய பாலைப்பண் பாடி கொற்றவையை மகிழ்வித்து வணங்கி வாழ்ந்தனர் என்பதையும் அறிய முடிகின்றது.

## சிவன்

தமிழர்களின் வழிபாடுகளில் சிவவழிபாடு மிகத் தொன்மை வாய்ந்ததாகும். சிந்துவெளிச் சிவனும் சங்க இலக்கியத்தில் காணப்படும் சிவனது சிறப்பு அடையாளங்களும் ஒன்றாகவே உள்ளன. சங்க இலக்கியத்தில் காணப்படும் சிவன் வேதகால குறிப்பிலிருந்து முற்றிலும் வேறுபடுகின்றான். முக்கண் பெற்று முத்தொழில் புரிந்து தமிழரின் சிவனாகவே காணப்படுகின்றான்.

## தொன்மை

சிவன் உலக உயிர்கள் யாவற்றிற்கும் பழமையானவன். சிவன் உமை திருமணத்தின் போது தென்திசை உயர்ந்த நிலையை நீங்கிப் பொதிய மலையில் இருந்தவர் அகத்தியர்; இறைவனோடு ஒப்ப இருந்தமையால் அகத்தியரும் கடவுள் எனக் குறிக்கப் பெறுகிறார். எனவே புராண இதிகாச காலங்களுக்கு முற்பட்டவன் சிவன் என்பதை மதுரைக் காஞ்சி உணர்த்துகின்றது.

**“ அமர்கடக்கும் வியன் தானைத்**

**தென்னவன் பெயரிய துன்னருந் துப்பின்**

**தொன்முது கடவுட் பின்னர் மேய**

**வரைத்தாழ் அருவிப் பொருப்பிற் பொருந.”**[217]

மேலும்,

**“ நீரும் நிலனும் தீயும் வளியும்**

**மாசு விசும்பொடு ஐந்துடன் இயற்றிய**

**மழுவான் நெடியோன் தலைவனாக.”**[218]

ஐம்பூதங்களையும் படைத்தவன். ஏனைய தெய்வங்களுக்கு மட்டுமல்லாது இயற்கைக்கு முன்னும் தோன்றியவன் என்பதால் இவனின் தொன்மையும் முதன்மையும் எளிதில் புலப்படுகின்றது.

## சிவனுக்கு வழங்கப்படும் பெயர்கள்

சிவன் என்னும் பெயர் தொல்காப்பியத்திலோ, சங்கப் பாடல்களிலோ காணப்படவில்லை. ஆனால் பல்வேறு சிறப்புப் பெயர்களால் அழைக்கப் பெறுவதைக் காண முடிகின்றது.

எட்டுத் தொகை, பத்துப்பாட்டு நூல்களில் முதுமுதல்வன், இறைவன், தொல்முதுகடவுள், இமையவன், முக்கட் செல்வர், முக்கணான், முக்கண்ணான், நெட்டிருவுங் கூந்தற் கடவுளர், தாழ்சடை அந்தணன், திரிபுரம் எரித்த விரிசடைக்கடவுள், கறைமிடற்று அண்ணல், நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன், மாதொருபாதியன் மழுவாள் நெடியோன், ஆலமர் கடவுள், ஆலமர் செல்வன், மழைதலை வைத்தவர், அரும்பெறல் ஆதிரையான், பைங்கண் பார்ப்பன், ஏற்று ஊர்தியான், புங்கம் ஊர்பவன், புதுத்திங்கட் கண்ணியான், காலக்கடவுள், கணிச்சியோன் போன்ற தொடர்கள் சிவன் குறித்து வருவனவாகத் தெரிகின்றன. சிவனின் உருவ அமைப்பின் அடிப்படையிலும் நிகழ்வுகளின் அடிப்படையிலும் சிவனை அடையாளப் படுத்தும் சில சொற்களை சங்கப் பாடல்களில் காண முடிகின்றன.

## திருவுருவம்

சிவ பெருமானின் திரு உருவக் காட்சியானது முழுமையுமாக சங்க இலக்கிய கடவுள் வாழ்த்துப் பாக்களில் காண முடிகின்றது. உமையொரு பாகனாகத் திகழும் சிவனின் காட்சியானது ஐங்குறுநூற்றில்,

**“ நீலமேனி வாலிழை யாகத்து**

**ஒருவன் இருதாள் நிழற்கீழ்**

**மூவகை உலகும் முகிழ்ந்தன முறையே”**[219]

எனக் காண முடிகின்றது. சிவனது திருவுருக் காட்சியினை அகநானூற்றுக் கடவுள் வாழ்த்துப் பாடல் போற்றிக் கூறும் பொழுது,

**“ கார் விரி கொன்றை பொன்தேர் புதுமலர்**

**தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்**

**மார்பின் ஃதே மைஇன் நுண்ஞாண்**

**நுதலது இமையா நாட்டாய்**

**தாவில் தான் நிழல் தவிர்ந்தன்றால் உலகுக “**[220]

மூன்று உலகமும் சிவனின் திருவடிக் கீழ் தங்கியுள்ளதாகும். செவ்வானம் போன்ற மேனி கொண்ட சிவன் மூன்றாம் பிறையை தலையில் சூடியவன். அவனது சடைபோன்ற பிறையும் ஒளிர்கிறது. கொன்றைத்தாரும். கண்ணியும் அணிந்துள்ளான் கையில் கணிச்சியும் மழுவினையும் முத்தலைச் சூலமும் கொண்டு உள்ளான் என சிவனது திருக்கோலம் பற்றிக் கூறப்படுகின்றது.

## நிறம்

'சிவன்', 'சிவம்' என்னும் சொற்கள் செம்மை என்னும் சொல்லை அடியாகப் பிறந்தது. எனவே சிவந்த நிறங் கொண்டவன் சிவன் என்பது புலனாகின்றது.

**" முக்கண்ணான் உருவே போல் முரண்மிகு குரலும்"** [221]

**" அரும் பெறல் ஆதிரையான் அணிபெற"**[222]

**" பெருந்தண் சண்பகம் போல"**[223]

என்னும் வரிகள் எடுத்தியம்புகின்றன.

## திருச்சடை

சிவனின் திருச்சடை பெரும் அழகுடையது. இவனது திருமேனி போன்றே திருமுடியும் நெருப்பை ஒத்துக் காணப்படும். இச்சடையினில் கங்கையினைக் கொண்டுள்ளதால் ஈரச் சடையினாகத் தோன்றுகின்றான்.

**" ஏற்று வலன் உயரிய எரிமருள் அவிர்சடை"**[224]

**" மிக்கொளிர் தாழ்சடை மேலரும் பிறைநுதல்"**[225]

**" ஈர்ஞ்சடை அந்தணர் "**[226]

என்னும் வரிகளால் அறியலாம்.

## நுதல்விழி

சிவன் இயற்கையில் உள்ள ஞாயிறு, திங்கள், நெருப்பு என்னும் இம்மூன்றையும் தமது திரு நுதல் விழிகளாகப் பெற்றவன்.

**" முக்கட் செல்வர் நகர்வலம் செயற்கே**

**இறைஞ்சுக பெரும நின் சென்னி"** [227]

என்னும் புறநானூற்றுப் பாடல்வரி மூன்று கண்களில் மூன்றாவது நெற்றிக்கண்ணையும் சிறப்பிக்கின்றது. இவை மட்டுமின்றி இறைவனின் நுதல்விழி நாட்டத்தினை,

**" நுதல் விழி நாட்டத்"**[228]

எனச் சிலப்பதிகாரமும்,

**" கடந்தடு முன்பொடு முக்கண்ணன்"**[229]

பாலைக்கலியும்,

**" முக்கண்ணான் உருவே போல்"** [230]

முல்லைக் கலியும் எடுத்தியம்புகின்றன.

## நீலமணி மிடறு

சிவன் நஞ்சை உண்டமையால் 'கறை', 'மிடறு' என்றும் 'மணிமிடறு' என்றும் சிறப்பிக்கப்படுகின்றான். மேலும் மலைபடுகடாம்,

**" நீரகம் பனிக்கும் அஞ்சு வரு கடுந்திறல்**
**பேரிசை நவிரம் மேஎ உறையும்**
**காரி உண்டிக் கடவுளாது இயற்கை"**[232]

பெரும் புகழ் கொண்ட நவிரமலையில் உறைந்த காரியுண்டிக் கடவுளைக் (நஞ்சுண்டான் ) குறிப்பிடுகின்றது.

## ஊர்தியும் கொடியும்

சிவபெருமான் ஆனேறு பொறித்த உருவக் கொடியினைக் கொண்டவன். பலரும் புகழ்தேற்றும் திண்ணிய தோள்களை உடையவன். உமையினை

ஒரு கூறாகக் கொண்டும் திகழ்கின்றான். அவனது ஊர்தியும் கொடியுமாக வெண்காளை விளங்குகிறது. பாலைக்கலியானது,

**“ ஆனேற்றுக் கொடியோன் போல் எதிரிய இவைமும்”**[233]

எனக் குறிப்பிடுகின்றது. இவையன்றி,

**“ உருவ வேற்று ஊர்தியான் ஒள்ளணிநக் கண்ண “**[234]

**“ ஆனேறு ஊர்ந்தோன் அருவில் தோன்றி”**[235]

என்னும் பாடல்வரிகளும் சான்று தந்து உதவுகின்றன.

## சைவம்

தமிழகத்தில் விளங்கும் சைவ சமயம் சைவ சித்தாந்தம் என்னும் பெயரில் உணரப் பெறுகிறது. சைவ சித்தாந்த நூல்கள் சிவனை அடைவதற்குரிய நெறியை விளக்கிக் காட்டுகின்றன. கடவுளை நாடிச் செல்லும் நெறிகள் பலவற்றினும் தலை சிறந்ததாய் அமைவது முதற் சைவநெறி என சேக்கிழார் குறிப்பிடுகின்றார். திருமூலர் இறைவனோடு கலந்தலாகிய இந்நெறியினை ‘திருநெறி’ எனவும் கூறுகிறார்.

சைவம் என்பது சிவம் என்னும் செந்தமிழ் சொல்லடியாய் பிறந்து சிவனொடு தொடர்புடைமை என்னும் பொருளில் வழங்குவது. சிவனைப் பற்றிய நிலையையும் சைவ நூல்களையும் சிவனடி சேர்தற்குரிய நெறியையும் அச்சொல் குறிக்கும். சித்தாந்தம் என்பது சித்த அந்தம் என்ற திருசொற்களால் ஆகி முடிபின் முடிபு என்பது பொருள் பெறும். சைவ நூற்களின் முடிந்த முடியைக் கூறும் நூல்களைச் சைவ சித்தாந்தம் என்பர்.[236]

சைவம் அல்லாத சமயங்களையும் சைவ சமயத்தில் காணப்படும் உட்பிரிவுகளையும் எளிதில் விளக்கிக் கொள்ள சித்தாந்தம் என்னும் பெயர் உதவுகிறது. சித்தாந்தம் அல்லாத கொள்கையுடைய சமயங்களை நான்கு வகையுள் அடக்குவர். அவை 1.புறப்புறச்சமயம், 2.புறச்சமயம்,

3.அகப்புறச்சமயம், 4.அகச்சமயம் என்பனவாகும். உலகாயுதம், சமணம், பௌத்தம், சித்தாந்தத்தோடு முரண் கொண்ட புறப்புறச்சமயங்கள் ஆகும்.

சமயங்கள் வேதம், கடவுள் இவையிடத்து நம்பிக்கையில்லாதவையாகும். நியாயம், மீமாம்சம், ஏகான்ம வாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் என்னும் இவை வேதத்தைப் பிரமாணமாகக் கொள்ளினும் சில ஆகமங்களைப் பிரமாணமாகக் கொள்ளாத இவற்றைப் புறச்சமயம் என்பர். சிவத்தைப் பரம்பொருள் எனக் கொண்டு, சித்தாந்தத்துள் கூறிய சில பொருள்களின் உண்மையை ஏற்றுக் கொள்ளாதவை அகப்புறச் சமயங்களாகும். அவை பாசுபதம், மாவிரதம், காளம் (காபாலம்) வாமம், பைரவம் (வைரவம்) ஐக்கிய வாதம் என்பனவாகும். அகச்சமயம் என்பது பல வகையான சைவ சமயமாகும். இவை சித்தாந்தத்துள் கூறப்பெறும் எல்லாப் பொருள்களையும் ஏற்றுக் கொண்டு காணப்படும், அவை பாஷாணவாத சைவம், பேதாவாத சைவம், சிவசமவாத சைவம், சிவாத்துவித சைவம் என்பனவாகும்.

சைவ சமயத்திற்கு மூலமான முதன்மையான நூல்கள் சில ஆகமங்கள் இருபத்தெட்டாகும். இதில் காமாகம் மிக முக்கியமாகத் திகழ்கின்றது. வேதமும் ஆகமும் இறைவனது திருவாக்கு என திருமூலர் கருதுவார்.

**“தென்னிந்தியாவில் தமிழ் மொழியில் சங்ககாலத்து நூல்களாகிய பழையதும் இன்றுமுள்ளனவாகிய இலக்கியங்களில் சிவனாரைப் பற்றியும் அவருக்குச் செய்யப்படும் வழிபாடு பற்றியும் குறிப்புகளாக உள்ளன. சைவ சமயத்தின் சிறந்த காலமாவது அறுபத்து மூன்று அடியாரென்றும் அல்லது நாயன்மாரென்றும் அழைக்கப்படும். திருத்தொண்டத் தொகையில் வகைப்படுத்தப்பெற்ற அடியார்கள் வாழ்ந்த சிவபெருமானுக்கு அன்பு செய்யும் முறைமையைக் காட்டிய காலமேயாகும்”**[237] என சர்வ பள்ளி இராதாகிருஷ்ணன் குறிப்பிடுகின்றார்.

சைவ சித்தாந்தத்திற்கு குறிப்பிடும் முப்பொருள் உண்மைகள் பதி ( இறைவன் ), பசு ( உயிர் ) பாசம் ( கட்டு ) என்பதாகும். சித்தாந்தத்தில் இறைவன் உயர்ந்த உண்மைப் பொருளாகும்.

இறைவனின் அவதாரம் என்ற கொள்கையைச் சித்தாந்தம் ஏற்பதில்லை, பிற கடவுளர்கள், தேவர்கள், பிறப்பு, இறப்பு, இன்ப துன்பங்கள் இவற்றிற்கு ஆட்படுவர். சிவன் இவற்றிலிருந்து வேறானவன், சிவன் கர்மம் உடையவன் அல்லன். கருமம் என்பது அவதரித்தலுக்கே உரியதாகும். பிறப்பும் இறப்பும் கருமத்தின் காரணமாக அமைவதாகும்.

பதிக்கும், பசுவிற்கும் உள்ள ஒருமைப்பாடு உடலுக்கும் உயிர்க்கும் உள்ளது போலாகும். உயிரின் முக்தி நிலை நான்கு நெறிகளால் அடைய முடியும் என்கிறது. நெறிகளாவன சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பனவாகும். தாச, சற்புத்திர சக சன்மார்க்கங்களால் இறைவனை அடைபவர் இறைவனை நெருங்க மட்டும் முடியும்.

சிவஞான போதம் உட்படத் தமிழில் உள்ள மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்காகும். அவற்றுள் திருவுந்தியாரும், திருக்களிற்றுப்படியாறும், தவிர ஏனையவை யாவும் சிவ ஞான போதத்திற்கு விளக்கமாகப் பின்னால் எழுந்தனவாகும். கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில் தான் சிவஞான போதம் தோன்றியது என்றாலும் அதற்கு முன்பே சித்தாந்தம் என்னும் வழக்கு இருந்துள்ளது. சங்க நூல்களில், நாயன்மார்களின் பாடல்களிலும் திருமூலரின் திருமந்திரத்திலும் சித்தாந்தக் கோட்பாடுகள் விரவிக் கிடக்கின்றன. திருமந்திரத்தில்,

**“ கற்பனை கற்றுக் கலைமன்னு மெய்யோக**

**முற்புத ஞான முறை நண்ணியே**

**தோற்பத மேவித் துரிசற்று மேலான**

**துற்பரங் கண்டுனோர் சைவ சித்தாந்தரே”** [238]

என்று 'சைவ சித்தாந்தம்' என்னும் பெயரையே குறிப்பிட்டு உள்ளார். பதி, பசு, பாசம் என்னும் மூன்றில் உலகம் ஒன்றே காணப்படுவது, இதன் வழியே தான் ஏனைய இரண்டும் அறியப்படும், உலகம் காரியம் இதனை உண்டாக்கியவன் கடவுளாகிய கருத்தா என்னும் சிவ ஞான போதக்கருத்தினைத் திருமூலர்,

**" குசவனைப் போலெங்கள் கோன்நந்தி வேண்டின்**

**ஆசைவில் உலகம் அதுஇது வாமே"** [239]

என்று கூறுவார். பதியினைப் போலவே பசு, பாசம் இரண்டும் அநாதியென்பதனைப்,

**" பதி பசு பாசம் எனப் பகவர் மூன்றில்**

**புதியினைப் போற்பசு பாசம் அநாதி"** [240]

என்கின்றார். உயிர்களின் வினையாகிய கன்ம மலத்தைப் பக்குவப்படுத்தவும், அறியாமையாகிய ஆணவத்தைப் போக்கவும் இறைவன் உயிர்கள் பொருட்டு அழிக்கிறான். மீண்டும் படைக்கிறான். இங்ஙனம் முத்தொழிலையும் அவன் செய்வதனை அப்பர்

**" தோற்றம் நிலையிறுதிப் பொருளாய்**

**வந்த மருந்தவன் காண்"** [241]

என்கிறார். இறைவன் அருவாய் அனைவரையும் இயக்குகிறான். உருவற்ற உயிர் உருவுள்ள உடலை இயக்குதல் போல உருவமற்ற கடவுள் உருவுள்ள பொருள்களை இயக்குகிறான். எல்லாப் பொருளினும் ஊடுருவி ஒன்றாகவும் பலவாகவும் உள்ளான் என்பதனை,

**" பரத்திலே ஒன்றாய் உள்ளாய்ப் புறமாகி**

**வாத்தினுள் மாயவனாய் அயனாகித்**

**தரத்தினுள் தான்பல தன்மையனாகி**

**சுரத்தினுள் நின்று கழிவு செய்தோனை''** [242]

என்கிறார் திருமூலர் இறைவன் தானாய், வேறாய், உடனாகி நிற்பவன் என்பதனை,

**" ஈறாய் முதல் ஒன்றாய் இருபெண்ணான் குணமூன்றாய்**

**முறா மறை நான்காய் வருபூதம் அவை ஐந்தாய்**

**ஆறாச்சுவை ஏழோசையொடெட்டுத் திசை தானாய்**

**வேறாய் உடன் ஆனாள் இடம் வீழிம்மிழலைமே''** [243]

என்றார் சம்பந்தர். இதனையே சிவஞான போதமும்,

**" அவையே தானே யாயிரு வினையிற்**

**போக்கு வரவு புரிய வானையி**

**வீக்க மின்றி நிற்கு மன்றே''** [244]

என்கின்றார். ஆன்மாக்கள் எண்ணற்றவை என்ற சைவ சித்தாந்தக் கொள்கையை,

**" உரை சேரும் எண்பத்து நான்கு நூறாயிரம் யோனி பேதம்**

**நுரை சேரப் படைத்த வற்றின் உயிர்க்குயிராய்**

**அங்கங்கே நின்றாள்''** [245]

என்னும் சம்பந்தர் வாக்கால் உணரலாம். இதே கருத்தை வாங்கி சிவஞான சித்தியார்,

**“ அண்டசம் சுவேதசங்கள் உற்பிச்சம் சாராயு சத்தோ**

**டேண்டரு நாலெண்பத்து நான்குநூறாயிரத்தால்**

**உண்டு பன் யோளி யெல்லாம்”** [246]

என்கிறது. எனவே சங்க இலக்கியங்களிலே இடையிடையே காணப்படும் சித்தாந்தக் கருத்துக்கள், நான்காம் நூற்றாண்டுக்கும் பன்னிரண்டாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தவையாகிய திருமுறைகள் எனப்படும் தோத்திர நூல்களில் அனுபூதிமான்களுடைய அனுபவ வாக்காக இடம்பெற்றுப் பதின்மூன்றாம் நூற்றாண்டில் தமிழிலே முதன் முறையாக தத்துவ சாஸ்திர நூல்களாக வெளிப்பட்டன எனக்காண முடிகின்றது.

## அன்புநெறி

சைவம் உலகு உணர்த்தியது அன்பு நெறியே. அன்பு சிவம் என்பது சைவத்தின் உயிர் நாடிக் கொள்கை,

**“ அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்**

**அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்**

**அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்**

**அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே”** [247]

என்கிறார் திருமூலர். பிறர்துன்பம் கண்டு இரங்கி உதவிட முந்துவதே சமயநெறி. மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்று வலியுறுத்தினர். மேலும்,

**“ படமாடும் கோயில் பரமர்க் கொன் றீயில்**

**நடமாடும் கோயில் நம்பர்க்கா காதே**

**நடமாடும் கோயில் நம்பர்க் கொன்றீயில்**

**படமாடும் கோயில் பரமர்க்கங்காகும்''** [248]

என்கிறார் திருமூலரும்.

**" இரப்பவர்க் கீய வைத்தார் ஈரவர்க்கருளும் வைத்தார்**

**கரப்பவர் தங்கட் கெல்லாம் சுடுநாகங்கள் வைத்தார்''** [249]

என்கிறார். அப்பர் வஞ்சனையும், வன்சொல்லும் கூடாது என்று வலியுறுத்தினர்.மேலும்,

**" வஞ்சமின்றி வணங்கு மின் வைகலும்**

**வெஞ் சொலின்றி விளங்கு மின் வீடுற''** [250]

என்கிறார் அப்பர்.

உயர்ந்த குறிக்கோள் ஒன்றைக் கொண்டு அதற்காக எதனையும் தியாகம் செய்ய முன்வரும் உறுதிப்பாட்டை வலியுறுத்துவதே சைவம் சுருக்கமாகக் கூறினால் சைவ சமயம் தமிழருடைய அடிப்படைப் பண்பாட்டைக் காத்ததோடு தமிழகக் கலைகளையும் வளர்த்து தமிழர் நாகரிகத்தையும் வளப்படுத்தி வாழ வைத்துள்ளது எனலாம்.

உயிர் இறைவனது தன்மையினை தன்னுடையதால் பெறலாம். ஆனால் இறைவனாக முடியாது என்பது சைவ சமயத்தின் கொள்கையாகும்.

## காஷ்மீர சைவம்

அறுபத்து நான்கு ஒருமைக் கொள்கை உடைய சிவ ஆகமங்களிலிருந்து தோன்றிய சமயம் காஷ்மீர சைவம். இது வேதத்தை ஏற்றுக் கொள்வதில்லை, சுதந்திர இச்சையையே அடிப்படையான நூல் பொருளால் மேற்கொள்வதாய் சுதந்தியாதவாதம் எனவும் அழைக்கப்படும்.

எல்லாத் தோற்றமும் அடிப்படையான நாற்பொருளின் அடிப்படை என்பதால் இதனை ஆபாசவாதம் என்று கூறுவர். இறைவன் ஒருவன் என்ற ஒருமைக் கொள்கையினை உருவாக்கியவர். பெரும்பான்மை காஷ்மீரத்தில் இருப்பதால் இச்சமயம் காஷ்மீரச் சைவம் எனப்பட்டது. வாசுகுப்தர் ஆகமக் கொள்கைகளைச் சாத்திர முறையால் விளக்கியவர் ஆவார். காலத்தபட்டர் என்பவர் இவரது மாணவர். இவர் தன் ஆசிரியரின் "ஸ்வந்தகாரிகையை எழுதினார். காஷ்மீர சைவர்களின் ஒரு பிரிவினராக இருந்த **"சாக்ததவைய்"** வாகத்தையும் பத்ருஹரி கூறிய பைசந்தி விளக்கத்தையும் மறுத்து உண்மையை உணர்த்தி நின்றார்.

காஷ்மீரம் பௌத்தத்தின் ஆதிக்கத்தில் இருந்த வேளையில் உத்பாலாச்சாரியார் ஒருமைக்கொள்கையை நிலை நிறுத்தினார். அபிநவ குப்தர் ஆற்றிய உரைகள் சில ஆகமங்களில் காணப்படும் அறுபத்து நான்கு தத்துவங்களையும் ஒருமைக் கொள்கையோடு தொடர்புபடுத்தியது.

**" காஷ்மீர சைவம் ஓர் அனுபூதி அனுபவ நிலையுடையது. அது உண்மை பொருள் வரம்பில்லாத முழுமுதற்பொருள் எனும் கருத்துடையது"**[251] எனக் கூறுவதிலிருந்து அனுபூதி அனுபவ நிலை என்பது உண்மைப் பொருள் தனக்கு மேல் ஒன்றும் இல்லாத உறுதி பொருளைக் குறிப்பதாகும். கண்களால் காணவும், நினைத்துப் பார்க்கவும் இயலாது ஒன்று எனக் காண முடிகின்றது. அனுபவத்தால் அறியப்படும் பொருள், புலன்கடந்து எங்கும் நிறைந்து நிற்கும் பொருள். இதன் உண்மையினை அறிய தெய்வீக சாதனப் பயிற்சியாளர் மட்டுமே அறிய முடியும் என்கிறது. கடவுளிடத்திலிருந்து உயிரை வேறுபடுத்தவும், சிறுமைப்படுத்தவும் மலங்களிலிருந்து உயிரை விடுவிக்கவும் தெய்வீக அறிதல் சாதனம் துணைநிற்கிறது என விளம்புகின்றது.

## வீர சைவம்

வீர சைவத்தை லிங்காயுதம் என்று கூறுவர். இச்சமயத்தார் உடம்பில் பரம்பொருளின் அடையாளமாக இலிங்கத்தைத் தரிப்பர். ஆசாரம், சாஸ்திரங்கள் நெறியினைக் கொண்டதாகும். உயிரைத் தெய்வத் தன்மையாக்குவது இதன் கொள்கையாகும்.

வீரசைவத்தை நிறுவியவர்கள் ஐந்து ஆச்சாரியர்கள் என்ற மரபு உண்டு. இவர்கள் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்டவர். இவ்வாச்சார்யார்களில் சிலர் வாசவர் காலத்தவர் என்பர். வசவர் சமண அரசனுக்கு பிரதம மந்திரியாக இருந்தபோதும் வீர சைவசமயத்தை தோற்றுவித்தார் என அறியலாகிறது.

சைவரால் வீர சைவம் ஒரு சமயமாகப் பிறந்தது. அது சிவாநுபவ மண்டபத்தால் விரைவுடன் இயங்கியது. அம்மண்டபம் சமயாநுபவத்திற்கு இல்லமாயும், சமய சமூக நிலைக் கழகமாகவும் விளங்கியது. இவ்வுலகில் ஒவ்வொரு மனிதனும் தன்னிலையறிதல் வேண்டி கி.பி.1160 ம் வருடத்தில் சைவர் இக்கழகத்தை நிறுவினர் என அறிய முடிகின்றது.

வீர சைவ சமயத்தினருக்கு வடிவமின்றி மூல முதற் பொருளே எல்லா உண்மைப் பொருள்களையும் ஒற்றுமைப்படுத்தற்கு உறுதி செய்யும் தத்துவமாகியது. பரம் பொருளுக்கும் அறிவுக்கும் உள்ள தொடர்பினை தலம என்னும் கருத்துடன தொடங்குகிறார். உண்மையான அக நோக்கத்தால் அறிவின் வழி மூலப்பொருள் நிலையினையும் உணர்தல் வீர சைவ நெறியாகும். இலிங்கம் என்பது வெளிவருவது இதன் அடிப்படையில் பரம்பொருளிடத்து உலக உயிர்கள் யாவும் ஒடுங்குகின்றன. அதனின்று மீண்டும் தோன்றுகின்றன என வீரசைவம் தமது கொள்கையினை உறுதி செய்கின்றது.

## காமன்

காம இச்சை உள்ளத்திலிருந்து தோன்றுவது எனவே காமனின் பிறப்பிடம் உள்ளமாகும். இச்சையினைத் தோற்றுவிக்கும் கடவுளாக இக்காமன் கருதப்படுகின்றான் மதன், மதனன், மன்மதன் என்கின்ற பெயர்களால் அழைக்க படுகின்றான் உயிர்களிடத்து மோகத்தைக் தோற்றுவிக்கும் ஆற்றலால் மோகன் என்றும் அழைக்கப்படுகின்றான்.

## உருவம் இல்லாதவன்

மன்மதன் ஈசனை அணுகித் தனது மணம் மிக்க மலர்க்கணைகள் ஐந்தையும் சிவபெருமான் மீது பிரயோகிக்க ஈசன் அதனை அறிந்து தனது நெற்றிக் கண்ணைத் திறந்து மன்மதனை எரித்திட அவன் சாம்பலானான். அது கண்ட தேவர்கள் மேலும் இறைவனைப் பிரார்த்தித்துத் தங்கள் துயரத்தைக் கூறி முறையிட்டதோடு காமனையும், உயிர்ப்பிக்க வேண்டினர், கருணைக் கடலாகிய சிவபெருமான் மறுத்து தேவர்களை அனுப்பிவிட்டார்.

அப்போது காமனை இழந்த அவன் மனைவி ரதிதேவி தவறை மன்னித்து உயிர்பித்து அருள வேண்டி பிரார்த்தித்தாள். ஈசனும் கௌரி, கல்யாணத்தின் போது மன்மதனை அளிப்பதாகக் கூறிடவும் அவளும் இறைவன் கருணையைப் போற்றினாள், மேலும் உருவமில்லாத காமனை சிலப்பதிகாரம்,

**"உருவிலான் ஒரு பெருங்கரும்புவில்"** [252]

எனக் கூறுகின்றது. மேலும்,

**" உருவிலாலின் ஒரு பெருஞ்சேனை"** [253]

என்று கூறுகின்றது.

## கொடி, படை

காமனுக்குரிய கொடி மீன் கொடியாகும். இதனை,

**"மீனேற்றுக் கொடியோன்"** [254]

எனவும்,

**" மகர வெல்கொடி மைந்தன் சேனை"** [255]

எனவும், சிலப்பதிகாரம் கூறுகின்றது. மேலும் காமனுக்குரிய கொடியினை,

**" மீனேற்றுக் கொடியோன் போல் மிஞிறு ஆர்க்கும் காஞ்சிளம்"** [256]

என்று சுறாமீனைக் கொடியாகக் கொண்ட மன்மதனை கலித்தொகை எடுத்தியம்புகின்றது. இவையன்றி,

**"குறியறிந்தேன் காமன் கொடி எழுதி என்றும்"**[257]

கூறுகிறது**.**

காமன் பொழிலையே பாசறையாக கொண்டவன். அவனுக்குரிய படை வெண்படையேயாகும். கரும்பு வில்லில் வண்டினத்தை நாணாகக் கோர்த்து மலர் அம்புகளை எய்யும் தன்மையுடையவன். இவ்வுண்மையினை,

**" - - - - - - - - - அரிபடு ஜவிரை மாண்பகழி**

**அரத்தின் வாய் போன்ம் போன்ம் போன்ம்"** [258]

**" வேலாற்று மொய்ட்பனின் வரைமலர் அம்பினோன்**

**போலாற்று முன்பிற் புனைகழல் மைந்தரொடு"** [259]

என்னும் பரிபாடல் எடுத்தியம்புகின்றது.

**“சலப்படை யான் இரவில் தாக்கியது எல்லாம்**

**புலப்பட...................................”** [260]

**“ ஆர்த்ததும் அயில் அம்பு நிறைநாழி**

\- \- - - - - - - - - - - - - - - - - - - - - - - -

**கார்ததும்பும் நீர்ததும் புவன சுணை**

**ஏர்ததும் புவன பூவனி செறிவு”** [261]

என்னும் பாடல் வரிகள் தனித்து உள்ளவர்களை வருத்தும் வஞ்சனை மலர்க்கணையாக தாமரைப்பூ, மாம்பூ, அசோகம், முல்லை, குவளை என ஐந்து அம்புகளைக் கொண்டவன் காமன் என்கிறது. இவனது முரசம் கடல்: வெண்கொற்றக்குடை சந்திரன்: இவனது பட்டத்து யானை இருள்: இவனது குதிரை கிளி. அடையாள சின்னம் குயில். இவனது போர் வாள் தாழம்பூ. பவனிவரும் தேர் தென்றல் தேரில் உள்ள கொடி மீன் என இவற்றினை அறிய முடிகின்றது.

## நெடியோன் மைந்தன் :

காமன் திருமாலின் மகன் என்றும் திருமகள் மைந்தன் என்றும் பூமகள் மைந்தன் எனவும் போற்றப்படுகிறான். திருமால் போன்ற கருநிறம் கொண்டவன் காமன். இதனை,

**“ நெடியோன் மகன் நயந்து தந்தாங்கு அனைய**

**வுடிய வடிந்த வனப்பின் என் நெஞ்சம்”** [262]

என்று கலித்தொகை கூறுகிறது. காமனின் தம்பி சாமன் ஆவான்.

**“ - - - - - - - - - - - - - - - - - சுவர்களை**

**சாமனார் தம்முன் செலவு காண்”** [264]

என்னும் வரிகளால் இவ்வுண்மையினை உணர்த்துகிறது.

## நான்முகன்

உலகில் படைக்கும் தொழிலைக் கொண்டவன் நான்முகன். இவன் பிரம்மன் என்றும் அழைக்கப்படுகின்றான். இவன் படைக்கும் தொழில் புரிவதை

**“ பல்வயின் உயிரெல்லாம் படைத்தான் “** [265]

**“ ………………………………….. பொதுவர்**

**உருகெழு மாநிலம் இயற்றுவான்**

**விரிதிரை நீக்குவான் வியன் குறிப்பு ஓத்தனர் “** [266]

**“ ஓர் இல் நெய்தல் கறங்க ஓர்இல்**

**ஈர்ந்தார் முழுவின் பாறித துப்பப்**

**…………………………………….**

**படைத்தோன் மன்ற அப்பண்பிலானன்**

**இன்னா தம்ம இல் உலகம் “** [251]

என்னும் சங்கப் பாடல் வரிகள் மூலம் அறியலாம்.

## திருமால் மகன்

நான்கு முகங்கள், எட்டு கண்கள், எட்டு தோள்கள் கொண்ட நான்முகன் திருமாலின் உந்தித் தாமரையில் தோன்றியவன் என்பதனை,

**" நீல்நிற உருவின் நெடியோன் கொப்பூழ்**

**நான்முக ஒருவற் பயந்த பல்லிதழ்த்**

**தாமரைப்பொருட்டிற் காண் வரத் தோன்றி"** [268]

என பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது.

**" மாநிலம் இயலா முதன்முறை அமையத்து**

**நாம வெள்ளத்து நடுவண தோன்றிய**

**வாய்மொழி மகனொடு மலர்ந்த**

**தாமரைப் பொருட்டு நின் நேமி நிழலே"** [269]

என்று நான்முகன் தோற்றம் பற்றி பரிபாடலும் குறிப்பிடுகின்றது.

**" புலமும் பூவனும் நாற்றமும் நீ"** [270]

**" தாமரைப் பூவினுட் பிறந்தோன் தாதையும்**

**நீ என மொழியுமாம் ....................."** [271]

என்கின்ற பாடல் வரிகளும் தாமரையிலிருந்து பிறந்தவன் பிரமன் என்பதற்குச் சான்றுகளாக அமைகின்றன.

## மறை காவலன்

நான்கு மறைகளை அருளியவன் சிவன் அம்மறைகளை ஓதி காத்து வருபவன் நான்முகன். எனவே ஆதி அந்தணன் முதியவன் என்பதை,

**" ஆதி அந்தணன் அறிந்து பரி கொளுவ"** [272]

**" தொடங்கற்கண் தோன்றிய முதியவன் முதலாக "** [273]

**" வாய்மொழி மகன் என்றும்**

**முறநில மியலா முதன்மறை அமயத்து**

**நாடி வெள்ள நடுவண் தோன்றிய**

**வாய்மொழி மகனொடு மலர்ந்த**

**தாமரை ........................."** [274]

என நான்முகன் அழைக்கப்படுகின்றான்.

## உமை

சிவபெருமானின் இடப்பாகத்தே பொருந்தி இருப்பவள். அறத்தின் செல்வி. அறம் வளர்த்த செல்வி என்னும் பெயர்களும் இவளுக்கு உண்டு. இறைவன் முதுமுதல்வன் என்பதினால் இறைவியான உமை பழையோள் எனவும் அழைக்கப்படுகின்றாள். இவ்வுண்மையினை,

**" இழையணி சிறப்பிற் பழையோன் குழலி"** [275]

என்ற திருமுருகாற்றுப்படை நிறுவுகின்றது. இவன் மலையரசனின் மகன் என்பதால் உமையின் மகனான முருகன்,

**" மலைமகள் மகனே ..................."** [276]

என அழைக்கப்படுவதை அறிய முடிகின்றது.

முத்தொழில் இயற்றும் இறைவன் அகிலங்கள் அனைத்தையும் அழிக்க எண்ணி ஆடும் " ஊழிக்கூத்து ஆடும் போது அருகே உருவான உமை , இறைவனது அழித்தல் நடனத்திற்குப் பாவை, சீர், தூக்கு என்னும் தாள அறுதிகளை வழங்குவாள் என்பதை,

**" கொடிபுரை நுசப்பினாள் கொண்ட சீர் தருவாளோ"**[277]

**"" வண்டரற்றுங் கூந்தலால் வளர்த்தூக்குத் தருவாளோ"** [278]

**" முலையணிந்த முறுவலாள் முதற்பாணி தருவாளோ"** [279]

என்ற வரிகள் விளக்கி உரைகின்றன.

## திருமகள்

செல்வங்களைத் தருபவள் இவள். பாற்கடலை தேவரும் அசுரரும் இணைந்து கடைந்த போது அமுதத்துடன் தோன்றியவள் இலக்குமி, செல்வி, திரு, திருமகள், பொன், பொன்னி என்றெல்லாம் அழைக்கப்படுகிறாள். மன்மதனின் தாய் என்பதனால் 'மதன்றாய்', ' மலரம்பன் தாய்' என்பதனால் 'மதன்றாய்', 'மலரம்பன் தாய்' எனவும் பண்டைய வழக்கில் காணப்படுகின்றாள்.

## திருமால் மார்பில் இடம் கொண்டவள்

இருநிலம் கடந்தவன் மால், திருமகளான இலக்குமி, திருமால் மார்பில் உடையவள். இதனை,

**" திருமறு மார்பநீ அருளல் வேண்டும்"** [280]

**" செய்யோள் சேர்ந்தநின் மாசில் அகலம்"** [281]

**" இருநிலம் கடந்த திருமாறு மார்பின்"** [282]

**" திருமவர் மார்பன் கிடந்த வண்ணம்"** [283]

ஆகிய பாடல் வரிகள் எடுத்து இயம்புகின்றன.

## வெற்றி திருமகள்

சோழ வள நாட்டில் காடாக உள்ள இடங்களைத் திருத்தி மக்கள் வாழும் பகுதியாக மாற்றியவன் திருமாவளவன். திருமகள் நிலை பெற்றுத் தங்கும் பெருஞ்செல்வம் உடைய உறையூரின் மதிலில் மறைந்து அம்பு

எய்யும் அம்புக்கட்டுக்களை தொடுத்தவன். அப்படிப்பட்ட மதில்களில் வெற்றி தரும் திருமகள் தங்கும் வாயில் நிலைகள் இருந்தன. இதனை,

**“ திருநிலை இய பெருமன் எயில்”** [284]

**“ திருவுடை மன்னரைக்காணின் திருமாலைக் கண்டேனே”** [285]

என நம்மாழ்வார் குறிப்பிடும் திரு என்பதன் பொருளும்,

**“ திருவீழ் மார்பில் தென்னவர் கோவே”** [286]

என இளங்கோவடிகள் குறிப்பிடும் திரு என்னும் பொருளும் செல்வம் வளம் கொண்ட திருமகளைக் குறித்தே ஆளப்பட்டுள்ளன என்பது தெளிவாகிறது.

## கணபதி வழிபாடு

சங்க இலக்கியங்களில் கணபதி பற்றியக் குறிப்பு எங்கும் இடம் பெறவில்லை. பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றான ஐந்திணை எழுபதில் கடவுள் வாழ்த்தில் முதன்முதலாக ஒரு கணபதி வாழ்த்துப் பாடல் இடம்பெற்றுள்ளது. முதலாம் இராஜேந்திர சோழன் ( 1012 – 1044 ) கங்கை வரைப் படையெடுத்து வெற்றி பெற்றான். இதனால் அந்த எல்லை வரை இருந்த குறுநில மன்னர்கள் சோழனுக்கு வரி செலுத்தியுள்ளனர். முதலாம் இராஜேந்திரனுக்குப் பிறகு முதலாம் குலோத்துங்க சோழன் முடி சூடிக் கொண்டான். அதே காலகட்டத்தில் கலிங்க நாட்டை அனந்த வர்மன் சோடகங்கன் ( கி.பி.12 நூற்றாண்டு ) ஆட்சி செய்தான். அவன் முன்னோர்கள் சோழ நாட்டுக்குக் கட்டி வந்த வரியைக் கட்ட மறுக்கிறான். இதனால் கோபம் அடைந்த குலோத்துங்க சோழன் தன் படைத்தளபதி கருணாகரத் தொண்டைமான் தலைமையில் படை அனுப்பி கலிங்க மன்னனைத் தோற்கடித்தான், வெற்றிக்குப் பிறகு அங்கிருந்து கொண்டு வந்த கலைப்பொருள்களில் ஒரு விநாயகர் சிலையையும் கொண்டு வந்து தொண்டைமானின் ஊரான திருச்செங்காட்டாங்குடியில் நிலை நிறுத்தினார். இதன் பிறகு தென்னிந்தியாவில் கணபதி வழிபாடு நடைபெற்று வருகின்றது.

## தொகுப்புரை

சங்க இலக்கியத்தில் கடவுள்கள் என்னும் இவ்வியலில் ஆய்தறிந்த செய்திகள் இயற்கை வழிபாடு தோன்றிய காலத்திலேயே கடவுள் குறித்த ஏற்புக் கருத்துக்களும் மறுப்பு கருத்துக்களும் தோன்றிவிட்டதைக் காண முடிகின்றது. ஐம்புலன்களுடன் தொடர்புபடுத்தப்பட்டு புலனறிவால் இறைவனைக் காணும் முயற்சி மக்களால் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றது.

இயற்கை கடந்த ஆற்றல்களாகக் காணப்படும் இன்றைக்கும் வானுலகில் சஞ்சரிப்பதாய் நம்பி வருகின்றோம். இயற்கை வழிபாட்டில் காணப்படும் சூரியன், திங்கள் என்பன தமிழ் மக்கள் வாழ்வியல் பண்பாட்டோடு இரண்டறக் கலந்த முறையை உய்த்துணரப்படுகின்றது.

நிலவியல் தெய்வங்களும் பெரும் கடவுளர்களும் என்னும் முல்லை நிலத் தெய்வமான திருமால் நிரை மேய்த்தலுக்கு நீரைத் தரும் தலைவனாக காணப்படுகிறான். எனவே நீண்ட நீர்நிலைகளான கடல் ‘நெடியோன்’ என்பதற்கு காரணமாக அமைகின்றது. திருமால் முல்லை நிலத்திற்குரியனவனாகக் கருதப்பட்டாலும் திருமால் நில எல்லைகளைக் கடந்து திருவேங்கடம், அழகர்மலை என்னும் குறிஞ்சி நிலங்களிலும் வணங்கப்படுகின்றான்.

குறிஞ்சி நிலக் கடவுளான முருக வழிபாடு தொடக்கத்தில் வேல் என்னும் அடையாளக்குறி வைத்து வணங்கப்பட்டுள்ளதைக் காண முடிகின்றது. காலப்போக்கில் பெருந் தெய்வ ஆக்கங்களால் நிலைத்த உருவவழிபாட்டுக்கு உரியவனாக முருகன் காணப்படுகின்றான். தமிழ்ச் சங்கத்தில் அங்கத்தினனாக இருந்தமையாலும் தந்தையான சிவனுக்கு உபதேசம் செய்தமையாலும் தமிழ்கடவுள் என அழைக்கப்படுவதை அறிய முடிகின்றது. முருகனுக்கு குறிஞ்சி நிலம் மட்டுமல்லாமல் நெய்தல் நிலமான திருச்செந்தூரிலும் உறைவிடம் கொண்டு அருள்பாலிக்கும் இறைவனாகக் காணப்படுகின்றான். வேந்தன் என்னும் தமிழ்த்தெய்வம் ஆரிய கலப்பிற்குப்

பிறகு இந்திரன் என்கின்ற பெயரினைப் பெற்றுள்ளான். மருத நிலம் வேந்து முறை ஆட்சிக்கு அடிகோலிய நிலம் என்பதால் வேந்தன் என்னும் மன்னனே பின்னர் கடவுளாகக் கருதப்படுகின்றான் என்பதனை ஆய்வு புலப்படுத்துகின்றது.

வருணன் ஆரியக் கடவுள் எனத் துணிய இயலவில்லை. வேதகால வருணன் தேவர்களின் தலைவனாக வானத்து அதிபதியாகக் காணப்படுகின்றான். தமிழர் வணங்கிய வருணன் கடல் தெய்வமாகக் காணப்படுகின்றான். கொற்றவை வழிபாடு தாய்த் தெய்வ வழிபாட்டின் தொடக்கமாகக் காண முடிகின்றது. குறிஞ்சி நிலத்திற்கு முருகனன்றி கொற்றவையும் கடவுளாகக் கருதப்படுகின்றாள்.

தமிழர்களின் வழிபாடுகளில் சிவவழிபாடு மிகவும் தொன்மையானதாகும். சிந்து வெளியில் காணப்படும் சிவனும், சங்க இலக்கிய சிவனும் ஒன்றாகவே காணப்படுகின்றனர். தமிழர் வணங்கும் வளமைக்குரியவன். வேதகால சிவன் உருத்திரன் என அழைக்கப்பட்டான். இவன் அழிவிற்குரியவன். பிற்காலத்தில் இருவரும் ஒருவராய் இணைந்து காணப்படுகின்றனர்.

காமன் குறித்த செய்திகள் யாவும் புராணம் தாங்கிய நிலையே காணப்படுகின்றன. காமன் மறைகாவலனாகவும், திருமால் மகனாகவும், காணப்படுகின்றான். உமை சிவனின் துணைவியாகக் காணப்படுகின்றாள். உக்கிர நிலையில் காணப்படும் கொற்றவையே அமைதி நிலையில் உமையாகத் தோன்றுகிறாள். திருமகள் திருமால் மார்பில் உறைபவள். செல்வம் தரும் தாயாகக் காணப்படுகின்றாள் என்பதை அறிய முடிகிறது.

# சான்றெண் விளக்கம்


1. செ.வைத்தியலிங்கம், தமிழ் பண்பாட்டு வரலாறு ( தொகுதி 2 ) ப.164
2. அரங்க.சுப்பையா. இலக்கியத் திறனாய்வு ப.155
3. செ.வைத்தியலிங்கம். தமிழ் பண்பாட்டு வரலாறு ( தொகுதி 2 ) ப.164
4. குறள் : 271
5. பரிபாடல். பா:3:4
6. மேலது. பா.3:66
7. மேலது. பா.3.77-80
8. மேலது. பா.13.18.23
9. பதிற்று. பா.24:15:16
10. மதுரை. அடி.453-454
11. புறம். பா.2
12. சாமி.சிதம்பரனார் பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும் ப.26
13. குறள். 1075
14. தொல். பொருள் நூ.1:4
15. மேலது. இளம்பூரணர். உரை.நூ.1:9
16. மேலது. நூ.27
17. மேலது.புறத்.நூ.23
18. தொல். பொருள். புறத்.நூ.627
19. தொல், புறத். நூ.2.1-8

20. சாமி. சிதம்பரனார். பழந்தமிழர் வாழ்வும், வளர்ச்சியும்.ப.26-27

21. சாமி.சிதம்பரனார், பழந்தழிழர் அரசியல், ப-45

22. தொல், பொருள், நூ. 117

23. மலைபடு. அடி.389

24. க.கைலாசபதி, பண்டைய தமிழர் வாழ்வும்வழிபாடும், ப-55-56

25. அகம், பா-67

26. மேலது, பா-270-2

27. காமாட்சி சீனிவாசன், குறள் கூறும் சமயம், ப-13

28. தமிழ் கலைக்களஞ்சியம், ப-682

29. புறம், பா-187,

30. தொல். பொருள், அகத், நூ-5

31. மேலது, நூ-5

32. கலி, பா-107:32

33. தொல், பொருள், புறத், நூ-5

34. வே.தி,செல்லம், தமிழக வரலாறும் பண்பாடும், ப-135

35. பரி, பா.83

36. கலி, பா. 104

37. முல்லை, அடி-3

38. மதுரைக், அடி-590

39. மேலது, அடி-591

40. பெரும்பாண், அடி-402

41. மேலது, அடி- 29-30

42. அகம், பா-260

43. முருகு, பா -125

44. சிலம்பு. நாடுகாண் காதை, அடிகள். 35-42

45. பா.பா, பா:3:81-83.

46. மேலது, பா:13:26-27, ப-72

47. புறம், பா-58

48. பரிபா, பா-56

49. புறம், பா-59

50. பரிபா, பா,1-59

51. மேகலை, காதை, 18:65

52. புறம், பா:174

53. பரிபா, பா, 15:50

54. மேலது, 3-73

55. சிலம்பு, காதை, 18-47

56. பரிபா, பா: 81-83

57. நச்சினார்க்கினியர், முருகு, 48:151, ப-67

58. பரிபா,பா 314-7

59. மேலது, பா 14:17

60, இரா.சீனிவாசன், சங்க இலக்கியத்தில் உவமை, ப-92

61. மதுரைக், அடி, 456-458

62. பெரும்பாண், அடி,391

63. பரிபா,பா-46-47

64. பெரும்பாண், அடி. 372-373

65. செ.வைத்தியலிங்கன், தமிழ்பண்பாட்டு வரலாறு, ப-690

66. பரிபா, பா:4:12-20

67. மதுரைக், அடி-763

68. பெரும்பாண், அடி,402

69. மேலது, அடி,389-391

70 முல்லை, அடி.3

71. பரிபா, பா-3, 25-26

72. புறம், பா-378

73. அகம், பா-70

74. சிலம்பு, பா, 47-48

75. அகம், பா, 175

76. பரிபா, பா:1:52-53

77. மேலது, பா: 1:58

78. நெய்தற்கலி, பா.10

79. பெரும்பாண், அடி. 389-391

80. பரிபா, பா,4: 25-35

81. சர்வ பள்ளி ராதா கிருஷ்ணன், கீழை மேலை நாடுகளில் மெய்ப்பொருளியல் வரலாறு, ப-559

82. திரு.வி.கல்யாணசுந்தரனார், முருகன் ( அ ) அழகு, ப-1

83. தொல், பொருள், அகத், நூ-5

84. முருகு, அடி-217

85. பரிபா, பா, 5:13

86. சிலம்பு, காதை, 24:13

87. மருதக்கலி, பா-18

88. முருகு, அடி-259

89. மேலது, அடி-235

90. மேலது. அடி-256

91. பரிபா, பா-9:7

92. மேலது, பா-8, 127-128

93. பரிபா, ப-24

94. கிருஷ்ணமாச்சாரியார், பதினெண் புராணங்கள், ப-127

95. மேலது, ப-128

96. செ. வைத்தியலிங்கன், தமிழ் பண்பாட்டு வரலாறு, பக்-813-816

98. பரிபா, பா.5, 27-54

99. கலி, பா, 81:9

100. மேலது, பா,31:14

101. பரிபா, அடி-9

102. முருகு,அடி-109

103. கலி, பா,105-17

104. முருகு, அடி, 91-103

105. மேலது, ப.29-30

106. பரிபா, பா.14:21

107 சிலம்பு, காதை 2-49

108. பரிபா, பா-8:67

109. புறம், பா-56

110. பரிபா, பா. 14:59

111. முருகு அடி. 81-82

112. மேலது, அடி. 82

113. மேலது, அ-247

114. பரிபா, பா-5-2

115. புறம், பா-96

116. சிலம்பு, காதை, 24-15

117. மேலது, பா.24:15

118. தொல், பொருள், மரபு, நூ. 465

119. பரிபா,பா-5:61-64

120. மேலது.பா,18:14

121. மேலது, பா, 8:19

122. முருகு, அடி-151

123. மேலது, அடி. 210-211

124. மேலது, அடி-219

125. பரிபா, பா-17-48

126. முருகு, அடி. 38

127. அகம், பா-149

128. முருகு, அடி,122

129. புறம், பா-56

130. சிலம்பு, கா, 24:9

131,குறிஞ்சி, பா,208-209

132. பரிபா, பா, 17:9-14

133. அகம், பா-216

134. மேலது, பா-149

135. பரிபா, பா, 8:1-4

136. குறிஞ்சி, பா, 208-209

137. பாலைக்கலி, பா-27

138. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப-221

139. முருகு, அடி, 70-711

140. ரா. சேதுப்பிள்ளை, தமிழ் இன்பம், ப-46

141. அகம், பா-366

142. புறம், பா-55

143. முருகு, அடி, 119-225

144. அகம், பா-2-4

145. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப-5

146. அகம், பா-2-4

147. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப-203

148. முருகு, அடிகள்-125-151

149. முனைவர் இரா. மோகன், சங்க இலக்கியம், தொகுதி, 1 , ப-58

150. முருகு, அடி, 177:187

151. ஐங்குறுநூறு, பா-253

152. கலி, பா, 40:11

153. முருகு, அடி, 79

154. மேலது, அடி-86

155. முருகு, அடி, 206:2017

156. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப-21

157. மேலது, அடி-211

158. முருகு, அடி, 223:226

159. பாடநூற்குழு, தமிழ் நாட்டு வரலாறு, ப-301

160. சிலம்பு, இந்திரவிழா, அ-170

161. திருப்புகழ், பா-133

162. தொல். பொருள், அகத். நூ-5

163. சிலம்பு, காதை, 6:16

164. மேகலை, பா-28:166

165. மேலது, பா 18 -19

166. சிலம்பு, காதை, 5-:66

167. மேலது, காதை 5:240

168. மேலது, காதை 6 :27

169. புறம், பா:241

170. பரிபா, பா.19, 50-53

171. முல்லை, அடி-5

172. பரிபா, பா-99

173. சிலம்பு, காதை, 6:20

174. பரிபா, பா: 18:88-91

175. முருகு, அடி-1:155-158

176. மேலது, அடி-157-159

177. சிலம்பு, 25:16

178. மேலது, பா:5:143

179. மேலது, பா-5:14:146

180. ஔவை. சு.துரைசாமிபிள்ளை, புறநானூறு உரை, ப-216

181. மேலது, ப-216

182. சிலம்பு, காதை-13, அ-18181

183. பெரும்பாண், 292

184. அ.மாணிக்கனார்,(உ.ஆ) பத்துப்பாட்டு, ப-522

185. புறம், பா-36

186. ஐங்குறு, பா-425

187. நெடுநல், இ-105

188. பெரும்பாண், அ-291-292

189. சிலம்பு, காதை-10-11-14

190. சிலம்பு, காதை-27: 92-93

191. மேகலை, 28, 69-70

192. தொல், பொருள், அகத், நூ-119

193. அ.தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.201

194. வே.தி.செல்லம், தமிழக வரலாறும் பண்பாடும், ப-135

195. பட்டினப், அ-86-87

196. புறம், பா-9

197. நற், பா-165

198. தொல், பொருள், புறத்,நூ-4

199. இளம்பூரணார் (உ.ஆ) தொல்,பொருள், நூ-101

200. மேலது, மேற்கோள், புறப்பொருள்வெண்பாமாலை, நூ-173

201. அகம், பா-345

202. முருகு, அடி. 259

203. மேகலை, பா 6:53

204. குறுந், பா -218

205 பதிற்று 79: 16-18

206. வே.தி.செல்வம்.தமிழக வரவாறும் பண்பாடும் , ப – 137

207. தொல்.பொருள்.நூ.10

208. அகம்.பா.382

209. மேலது.பா.266

210. சிலம்பு காதை – 1:66-70

211. செ.வைத்தியலிங்கன், தமிழ் பண்பாட்டு வரலாறு. ப.360

212. சிலம்பு வழக்குரை காதை.20 அடி 34-40

213. பரிபா.பா.11.97-100

214. சிலம்பு. வேட்டுவவரி.அடி.8.

215. பதிற்று.பா.79:18.19

216. மேலது.பா-88:2

217. மதுரை. அடி.39.42

218. மேலது.அடி.453 – 55

219. ஐங்குறு.பா – 453-55

220. அகம்.பா.74

221. முல்லைக்.பா-4

222. நெய்தற்கலி. பா-33

223. புறம்.பா.56

224. மருதக்கலி.பா.1

225. குறிஞ்சிக்கலி.பா.2

226. மருதக்கலி.பா.8

227. புறம்.பா.6:18

228. சிலம்பு.காதை:14:7

229. பாலைக்கலி.பா-1

230. முல்லைக்கலி,பா-3

231. புறம்.பா.55

232. மலைபடு.அடி.81-83

233. பாலைக்கலி.பா.25

234. நெய்தற் கலி.பா.33

235. சிலம்பு, வரம் தரும் காதை.30-41

236. கா.சுப்ரமணியப்பிள்ளை,சைவ சித்தாந்த வரலாறு.ப.1

237. சர்வ பள்ளி இராதாகிருஷ்ணன்,கீழை மேலை நாடுகளில் மெய்ப்பொருளியியல்வரலாறு, ப-683

238. திருமந்திரம், ப-14.22

239. மேலது. பா-1121

240. மேலது, பா-443

241. மேலது, பா-2412

242. திருஞான சம்பந்தர், தேவாரம், பா-979

243. திருமந்திரம், ப-211

244. சிவஞான போதம், சூ, -2

245. சம்பந்தர், தேவாரம், பா, 14-19

246. சிவஞான சித்தியார், பா-2

247. திருமந்திரம், பா-270

248. மேலது, பா-7270

249. மேலது, பா-1857

250. திருநாவுக்கரசர், தேவாரம், பா-383

251. சர்வ பள்ளி, இராதா கிருஷ்ணன், கீழை மேலை நாடுகளில் மெய்பொருளியல் வரலாறு, ப-705

252. சிலம்பு, புகார், மனையறம், பா-44

253. சிலம்பு, புகார், இந்திரவிழா, பா-224

254. சிலம்பு, இந்திரவிழா, பா-210

255. சிலம்பு, வேனிற், பா-10

256. கலி, பா-26

257. கலி, பா--84:24

258. பரிபா, பா 19:48-49

259. மேலது.பா.22,26-27

260. மேலது.பா.6,57-58

261. மேலது.பா.18:30-33

262. கலி.பா.8:9

263. கலி.பா.26:4

264. மேலது.பா.106,117-119

265. கலி.பா.129:2

266. மேலது.பா-106,117-119

267. புறம்.பா.194

268. பெரும்பாண்.அடி-402-404

269. பரிபா.பா.3:9.94

270. பரிபா.பா.1:46

271. மேலது.பா.3:13-14

272. மேலது.பா.5:22

273. கலி.பா.2.1

274. பரிபா.பா.3:91-94

275.முருகு.அடி.259

276. மேலது.பா.257

277. கலி.கடவுள் வாழ்த்து.ப.1

278. மேலது.பா-10

279. கலி. கடவுள் வாழ்த்து-பா.13

280. பரிபா.பா.1:36

281. பரிபா.2:31

282. பெரும்.பாண்.அடி.29

283. சிலம்பு காதை.11:40

284. பட்டினப்.பா-291

285. திருவாய் மொழி நான்காம் பத்து.30-47

286. சிலம்பு காதை:20:23.

# முடிவுரை

- பண்டைய தமிழர்களின் வாழ்க்கை முறையினையும், பண்பாட்டுக் கூறுகளையும் என்றைக்கும் அனைவரும் அறிந்து கொள்ளும் வகையில் சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன என்பதை அறிய முடிகிறது.
- சங்க இலக்கியம் தொகுப்பும், புராணக் கருத்தக்களும் என்னும் இவ்வியலில் ஆய்ந்தறிந்த செய்திகளான தமிழின் பழமையினை அறியும் பொழுது இதிகாசக் காலங்களுக்கு முற்பட்டதாய் இருந்திருக்கிறது.
- சங்க இலக்கியங்களைத் தனியொருவர் முயற்சியினால் இன்றி பல புலவர்கள் சேர்ந்து அப்பணியினை மேற்கொண்டனர் என்பது தெளிவாக தெரிகின்றது.
- புராண மரபுக்கதைகளை பிற தொகை நூல்களை விட மிகுதியாகப் பெற்று வரும் செய்திகளை கலித்தொகையில் குறிப்பிடப்பட்டு உள்ளன.
- தமிழரது மணமுறை, கடவுள் வழிபாட்டு முறைகள், இல்லற இன்பம், ஏறு தழுவுதல் போன்ற தமிழர்க்கே உரிய செய்திகளைப் பற்றி காண முடிகிறது.
- கலித்தொகைப் பாடல்கள் மட்டுமே திணைப்பெயர் வழக்கினை ஒட்டி பாலைக்கலி, முல்லைக்கலி, குறிஞ்சிக்கலி, மருதக்கலி, நெய்தற்கலி என அமைந்துள்ளது சிறப்பான ஒன்றாகக் கருத முடிகிறது.
- கலித்தொகையும், பரிபாடலும் சங்க இலக்கியக் காலத்திற்கு பிற்பட்டதெனக் கருத முடிகிறது. மற்ற இலக்கியத்தைக் காட்டிலும் பாடுபொருள் வேறுபட்டுக் காணப்படுவதும் இதற்குச் சான்றாக விளங்குகிறது.
- கலித்தொகைப் பாடல்கள் உரையாடல், நாடக வடிவிலேயே அமைந்துள்ள நிலையை எடுத்துரைக்கின்றன.

- சங்க காலத்தில் ஆடவர் முன்னிலையில் பெண்கள் பேசக்கூடாது என்ற நிலையில் இருந்து மரபை மாற்றி கலித்தொகைப் பாடல்களில் தலைவனொடு சொல்லெதிர் சாற்றும் அளவிற்கு உயர்ந்த தலைவியை இந்நூலில் காண முடிகிறது.

- கலிப்பாவை இசைப்பாட்டு என மு.சண்முகப்பிள்ளை கூறியுள்ளது பொருத்தமுடையதாக உள்ளது.

- கலித்தொகையில் முல்லைக்கலியில் புராண இதிகாச கருத்துக்களான வீமனின் வஞ்சினம், உருத்திரனின் வீரம், துரோணரை கொன்ற சிகண்டிகை, கண்ணன் கம்சனை அழித்தல் போன்ற புராணக் கருத்துக்கள் ஆராய்ந்து கூறப்பட்டுள்ளது.

- பாலைக்கலி அரக்கு மாளிகைக்குத் தீயிட்டது பற்றிய புராணக் கருத்துக்களை எடுத்தியம்புகிறது.

- குறிஞ்சிக்கலியில் இராவணன் கைலை மலையைப் பெயர்த்த செய்தி, துரியோதனனின் தொடையினை பீமன் அறுக்கும் செய்தி பற்றி குறிப்பிடப்பட்டு உள்ளது.

- கலித்தொகையில் திலோத்தமைக்கதை, சூரபதுமன் போர் பற்றி அறிய முடிகிறது.

- சங்க இலக்கியங்களில் புறநானூறு இடம்பெறுவதும் அதன் பெருமைகளையும், பழமையையும் பற்றிக் கூறுவதோடு அவை வரலாற்றுக் களஞ்சியமாகவும், பண்பாட்டு ஆவணமாகவும் இருக்கிறது என்பதை அறியலாம்.

- ஒருவனது உயர்வு அவன் ஈட்டும் பொருளில்லாது அவனுடைய ஒழுக்கத்திலே தான் உள்ளது என்பதை வெளிப்படுத்துகிறது.

- சங்க கால வேந்தர்கள் வீரத்தில் மட்டுமல்லாது கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கியமையைப் புறநானூறுப் புலப்படுத்துகிறது. மண்ணில்

வாழும் மனிதர்கள் எத்தனை இடர்பாடுகள் ஏற்பட்டாலும் கல்வி கற்காமல் இருக்கக் கூடாது என்ற உண்மையை வலியுறுத்துகிறது.

- அக்காலப் புலவர்கள் அரசர்களைப் புகழ்ந்து பாடுபவர்களாக இல்லாமல் தவறு கண்டபோது இடித்துரைப்பவர்களாகவும், தன்மானம் மிக்கவர்களாகவும் வாழ்ந்துள்ளனர் என்பதைப் புறநானூறு மனித உயர்வின் வாழ்வியல் நெறிகளைச் சுட்டிக் காட்டுகிறது.
- பண்டையத் தமிழர்கள் முதன்முதலில் மேற்கொண்ட கடவுள் இயற்கையாகத் திகழ்கிறது. பின்பு உழைப்பின் மேன்மைக்கென கையாண்ட கருவிகளைத் தாங்கிய கடவுளர்களை ஏற்றுக் கொண்டு வாழ்ந்தனர்.
- தம்மால் ஏற்றுக் கொள்ளப்பட்ட இறை மதிப்புகளை வழியினர்க்கும் உணர்த்தும் வகையில் கடவுள் பெயரினை தம் குழந்தைகளுக்கு இட்டுள்ளதை ஆய்வு வழி அறிய சங்க இலக்கியங்கள் இடமளிக்கின்றன. பண்டைய மக்களிடம் கடவுள் நம்பிக்கைகளும், அதற்கான சடங்குகளும் விழாக்களும் நீங்காது இடம் கொள்ளும் என்பதில் ஐயமில்லை.
- சங்க இலக்கியங்களில் காலந்தோறும் கடவுள் குறித்த கருத்துக்கள், சிந்தனைகள் மேம்பட்டு வருவதை ஆய்வின் வழி அறிய முடிகின்றது.
- பத்துப்பாட்டில் உள்ள திருமுருகாற்றுப்படை முருகன் வழிபாட்டையும், அவனுக்கு அளிக்கப் பெறும் பல பொருள்களைப் பற்றிக் கூறும் போது, ஆடு, கோழி, போன்ற உயிர்ப் பலிகளையும் முருகன் பெற்றதை அறிய முடிகின்றது. இன்றைக்குக் கார்த்திகேயன் என்ற பெயரில் ஆரிய கலப்பில் இப்பலி வழங்கப்படுவதில்லை என்பது புலப்படுகின்றது.
- சிறுபாணாற்றுப்படையில் காணப்படும் திருமால் வணக்கம் பெருந்தெய்வத் தன்மைக்கு மாறியதைக் குறிப்பிடுகின்றது. இதில் இயற்கை வழிபாட்டின் கூறாக உள்ள மர நிழலில் காணப்படும் முருகன் தமிழ் கடவுளாகக் தெரிய வருகின்றது.

- ❖ நெடுநல்வாடை, இல்லத்தில் உறையும் இல்லுறை தெய்வ வழிபாடும், கடவுள் மரம், கடவுள் குன்றம் ஆகியன பற்றிய செய்திகளைத் தந்து இயற்கை வழிபாட்டை நிலைநிறுத்துவனவாக உள்ளதை ஆய்வு உணர்த்துகின்றது.
- ❖ மலைபடுகடாம் சிவன் பற்றிய குறிப்பினையும், நாக வழிபாட்டையும் அணங்குகள் பற்றியும் கூறுகின்றது. நில எல்லையில் அடங்காத சிவன் முக்கண்ணனாக இடம் பெறுகிறது என்பதை அறிய முடிகிறது.
- ❖ நற்றிணை மற்றும் புறநானூறு, மரம், மலை இவற்றில் உறையும் தெய்வங்களைக் குறிப்பிடுகின்றது.
- ❖ நகரங்களிலும் சிற்றூர்களிலும், முச்சந்தியிலும், காவல் தெய்வமாய் உறைவதாய் நம்பினர். இன்றைக்கும் ஊர் எல்லைகளில் காவல் தெய்வமாய் சிலையாக நிறுத்தப்பட்டு வழிபடுவதை ஒப்பிட்டு ஆராயப்படுகிறது.
- ❖ இயற்கை வழிபாட்டுக் கூறுகளை இன்றைய தமிழச் சமூகம் பின்பற்றி வருதலை அன்றாட வாழ்வில் நாம் கண் கூடாகக் காண்கிறோம். சிறு மண்ணலான உருண்டைகள், சாண வடிவங்கள், செங்கல், அருகம்புல், குங்குமம் போன்றவை இறை குறித்த உடனடி அடையாளங்களாகப் பயன்பட்டு வருவதை ஒப்பிட்டு அறியமுடிகின்றது.
- ❖ மக்களுக்கு ஏற்படும் துன்பங்களைக் கடவுள்களின் பெயரிட்டு நீக்கும் மனப்பக்குவம் உளவியல் ரீதியாக உணர முடிகின்றது.